# குன்றக்குடி அடிகளார்

# நூல்வரிசை

தொகுதி - 9

## சமய இலக்கியம்

# குன்றக்குடி அடிகளார்
# நூல்வரிசை

15 தொகுதிகள்
6000 பக்கங்கள்

## தொகுதி 9

## சமய இலக்கியம் 600 008

முதன்மைப் பதிப்பாசிரியர்
தவத்திரு பொன்னம்பல அடிகளார்

விற்பனை உரிமை :

**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : டிசம்பர், 2001
திருவள்ளுவர் ஆண்டு : 2032

மணிவாசகர் வெளியீட்டு எண் : 892

**விலை : ரூ. 75-00**

பதிப்பாசிரியர் குழு :
தமிழாகரர் தெ. முருகசாமி
நா. சுப்பிரமணியம்
குன்றக்குடி பெரியபெருமாள்
க. கதிரேசன்
மரு. பரமகுரு

செயலர் :
பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன்

கிடைக்குமிடம் :
**மணிவாசகர் நூலகம்**
12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608 001.
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.
9, சிவப்பிரகாசம் தெரு, தி.நகர், சென்னை - 600 017.
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625 001.
15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641 001.
28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620 002.

தொலைபேசி :

| | | |
|---|---|---|
| சிதம்பரம் | : | 30069 |
| சென்னை | : | 5361039 |
| தி. நகர் | : | 4357832 |
| மதுரை | : | 622853 |
| கோயமுத்தூர் | : | 397155 |
| திருச்சி | : | 706450 |

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை 600 021.
தொலைபேசி : 5954528



தமிழ் மாமுனிவர்

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

1925 - 1995

தமிழ்மாமுனிவர் அருள்நெறித் தந்தை

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## வாழ்க்கைக் குறிப்புகள்

| ஆண்டு | நிகழ்வுகள் |
|---|---|
| 1925 | • தோற்றம் |
| | • பூர்வாசிரமம் : தந்தையார் : திரு. சீனிவாசம் பிள்ளை<br>தாயார் : திருமதி. சொர்ணத்தாச்சி |
| | • பிள்ளைத் திருநாமம் : அரங்கநாதன் |
| | • தோற்றம் பெற்ற ஊர் : தஞ்சை மாவட்டம் திருவாளப்புத்தூர் அருகேயுள்ள நடுத்திட்டுக் கிராமம். |
| 1931 - | • சிதம்பரம் அண்ணாமலை நகரில் வாசம். |
| 1936 | • 'சொல்லின் செல்வர்' ரா.பி. சேதுப்பிள்ளை, நாவலர் நாட்டார், சுவாமி விபுலானந்தர் ஆகியோர் தொடர்பு. |
| 1937-<br>1942 | • தமையனார் திரு. கோபாலகிருஷ்ண பிள்ளை வீட்டில் கடியாபட்டியில் வாழ்தல். |
| | • பள்ளியிறுதித் தேர்வு எழுதுதல். |
| | • 1942 விடுதலைப் போராட்டத்தில் ஈடுபாடு. |
| | • 'வினோபா பாவே படிப்பகம்' தொடங்கி நடத்துதல். |
| 1945 | • தருமபுரம் ஆதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் கயிலைக் குருமணி அவர்களிடம் கந்தசாமித் தம்பிரான் என தீட்சாநாமத்துடன் தம்பிரானாதல். |
| | • தருமபுரம் தமிழ்க் கல்லூரியில் பயிலுதல். |
| 1947 -<br>1948 | • சீர்காழிக் கட்டளைத் தம்பிரான் - திருஞான சம்பந்தர் திருமடம் தூய்மைப் பணி; திருமுறை வகுப்பு, விழா நடத்துதல். |
| 1949 | • குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் இளவரசு பட்டம் ஏற்பு. திருநாமம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள். |
| 1951 | • காரைக்குடிக் கம்பன் விழாவில் 'புதரிடைமலர்' என்ற தலைப்பில், அறிஞர்களின் நெஞ்சம் கவர்ந்த சொற்பொழிவு. |
| 1952 | • **குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் 45ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளல்.** |

- அருள்நெறித் திருக்கூட்டம் தோற்றம்.
- 'மணிமொழி' என்னும் பெயரில் இயக்கப் பத்திரிகை வெளியிடல்.

1953
- ஆதீனத்தின் அருளாட்சியிலுள்ள பிரான்மலைத் திருக்கோயில் சித்திரைத் திருவிழாவின்போது (சங்க கால வள்ளல் பாரி வாழ்ந்திருந்த மலையில்) வள்ளல் பாரி விழாத் தொடங்குதல்.
- பல்லக்கில் பட்டணப் பிரவேசம் வருதலைத் தவிர்த்தல்.
- இலங்கைப் பயணம் - இரண்டு வாரம் சுற்றுப் பயணம்.

1954
- இராசாசி தலைமையில் தேவகோட்டையில் அருள்நெறித் திருக்கூட்ட மாநாடு.
- திராவிடர் கழகத் தலைவர் பெரியார் சந்திப்பு.
- தாய்லாந்து, இந்தோசீனா, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் (3 திங்கள்)

1955
- அருள்நெறித் திருப்பணி மன்றம் தொடங்குதல்.
- 'தமிழ்நாடு' நாளிதழ் தவத்திரு குன்றக்குடி அடிகளார் என்ற பெயரை அறிமுகப்படுத்துதல்.

1956
- அறிஞர் அண்ணா குன்றக்குடி திருமடத்திற்கு வருகை.
- ஆச்சார்ய வினோபா பாவே திருமடத்திற்கு வருகை.

1958
- குன்றக்குடியில் உயர்நிலைப்பள்ளி தொடங்குதல்.

1959
- ஆ. தெக்கூரில் பள்ளிச் சீரமைப்பு மாநாடு நடத்துதல்; பாரதப் பிரதமர் நேரு மாநாட்டிற்கு வருகை.

1960
- மத்திய அரசு சேமநலக் குழு உறுப்பினராதல்.

1962
- சீனப்போரின்போது தங்க உருத்திராட்ச மாலையைத் திருவொற்றியூர்க் கூட்டத்தில் ஏலம் விட்டு ரூ. 4000 தருதல்.
- மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோயிலில் திருமுறைத் தமிழ் அருச்சனை தொடங்குதல்.

1965
- இந்தி எதிர்ப்புப் போராட்டம்; அரசு வழக்கு தொடர்தல்.

1966
- தமிழ்நாடு தெய்வீகப் பேரவைத் தோற்றம்.

1967
- திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் தோற்றம்.
- திருக்கோயில் கருவறைக்குள் சீலமுடைய அனைவரும் சாதி வேறுபாடின்றி திருமுறை நெறிப்படி - போதொடு நீர் சுமந்தேத்தி வழிபாடு செய்வதெனத் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் தீர்மானம் நிறைவேற்றுதல்.

1968
- இரண்டாம் உலகத் தமிழ்மாநாடு - 'திருக்குறள் உரைக்கோவை' நிகழ்ச்சி தொடக்கவுரை நிகழ்த்தல்

- திருக்குறள் இந்திய நாட்டின் தேசிய நூலாக வேண்டுமென்று இம்மாநாட்டில் வலியுறுத்தல்.

- இலங்கைப் பயணம். இரண்டு வாரங்கள், இலங்கை யாழ்ப்பாணத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் திருக்கோயில் நுழைவுக்காக உண்ணா நோன்பிருத்தல்.
- கீழவெண்மணித் தீவைப்பு நடந்த இடத்தைப் பார்வையிட்டுப் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூறுதல்; புத்தாடை வழங்குதல்.

1969
- பாபநாசம் பொதிகையடி திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி ஏற்பு;
- கலைஞர் மு. கருணாநிதி பாரி விழாவிற்கு வருகை
- கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் விருப்பத்தின் வழி தமிழ்நாடு சட்டமன்ற மேலவை பொறுப்பேற்றல்
- தமிழ்நாடு தெய்விகப் பேரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறல்.

1970
- சட்டமன்ற மேலவையில் இந்து அறநிலையத் திருத்த மசோதா - சாதி வேறுபாடின்றி அனைவரையும் அர்ச்சகராக நியமனம் செய்தல் பற்றிப் பேசுதல்.

1971
- தமிழ்நாடு சமாதானக் குழுத் தலைவராதல்.
- சோவியத் பயணம்; 22 நாள் சுற்றுப் பயணம்.

1972
- பாபநாசம் பொதிகையடி திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி, திருவள்ளுவர் கலைக் கல்லூரியாக உருவாதல்.
- சென்னை, மயிலாப்பூர் திருவள்ளுவர் திருக்கோயில் திருப்பணிக்குழுத் தலைவராக நியமனம்; வள்ளுவர் கோட்டம் திருப்பணித் தலைவராக நியமனம்.
- குன்றக்குடித் தருமைக் கயிலைக் குருமணி உயர்நிலைப் பள்ளிக்குப் புதிய இடத்தில் கட்டடம் கட்டித் திறத்தல்.

1973
- திருக்குறள் பேரவைத் தோற்றம்.
- திருச்சியில் தமிழ்நாடு தெய்விகப் பேரவை இரண்டாவது மாநில மாநாடு நடத்துதல்.
- "கோயிலைத் தழுவிய குடிகளும் குடிகளைத் தழுவிய கோயிலும்" என்ற முழக்கம் நாட்டளவில் வைக்கப்பெற்றது.
- குன்றக்குடி கிராமத்தைத் தன்னிறைவுக் கிராமமாக ஆக்கும் திட்டம் உருவானது.

1975
- நாகர்கோவிலில் தமிழ்நாடு தெய்விகப் பேரவை மூன்றாவது மாநில மாநாடு நடைபெறல்.

- சென்னைப் பல்கலைக் கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஏ.பி.சி. வீரபாகு சைவசித்தாந்த அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.
- இராமநாதபுரம் இனக் கலவரம் - அமைதிப்பணி.

1982
- குமரி மாவட்டம் மண்டைக்காடு கலவரம் - அமைதிப் பணியாற்றல்.
- மண்டைக்காடு அமைதிப்பணி பற்றிச் சட்ட மன்றத்தில் முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். பாராட்டுதல்.
- திருவருட்பேரவை தொடங்குதல்.
- மலேசியா, கொரியா, ஹாங்காங், ஜப்பான், செஞ்சீனா முதலிய நாடுகளில் சுற்றுப்பயணம்.
- புளியங்குடி இனக்கலவரம் - அமைதிப்பணி.

1984
- பாரதத் தலைமை அமைச்சர் திருமதி. இந்திராகாந்தி அவர்கள் குன்றக்குடிக் கிராமத் திட்டக்குழுவின் பணிகளைப் பாராட்டல்.

1985
- நடுவணரசு திட்ட ஆணைக்குழுப் பிரதிநிதிகள் குன்றக்குடி வருகை; கிராம வளர்ச்சிப் பணிகளைப் பார்வையிட்டுப் பாராட்டுதல்.
- பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் வளர்ச்சிப் பணிக்குத் திட்டக்குழு அமைத்தல்.
- மணிவிழா

1986
- தமிழ்நாடு அரசின் முதல் திருவள்ளுவர் விருது பெறுதல்
- இந்திய அரசு திட்டக்குழு குன்றக்குடித் திட்டப் பணியைப் பாராட்டி "Kundrakudi Pattern" என்று அறிவித்தது.

1989
- இவர் எழுதிய 'ஆலயங்கள் சமுதாய மையங்கள்' என்னும் நூல் தமிழ்நாடு அரசின் முதற்பரிசு பெற்றது.
- அண்ணாமலைப் பல்கலைக்கழகம் கௌரவ டாக்டர் (D.Litt) பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

1991
- இந்திய அரசின் அறிவியல் செய்தி பரப்பும் தேசியக்குழு, தேசிய விருது வழங்கிச் சிறப்பித்தது.
- இலண்டன், அமெரிக்கா சுற்றுப்பயணம்.
- அரபு நாடுகள் பயணம்.

1993
- மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' விருது வழங்கிச் சிறப்பித்தது.

1995
- இறைநிலை யடைதல்.



# அடிகளாரின் சமய, இலக்கியப் பணிகள்

பதிப்புச்செம்மல் **ச. மெய்யப்பன்**
நிறுவனர் : **மெய்யப்பன் தமிழாய்வகம்**

தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழ்கூறு நல்லுலகில் சமய மறுமலர்ச்சிக்கு வழிகண்டவர். அடிகளார் பூர்வாசிரமத்தில் செட்டிநாட்டில் எங்கள் ஊராகிய இராமச்சந்திரபுரத்தில் உயர்நிலைக் கல்வி பயின்றார்கள். எங்கள் தந்தையார் குங்கிலியம் பழ. சண்முகனார் அவர்களும், அடிகளாரின் அண்ணன் அவர்களும் விநோபா பாவே வாசகசாலையைத் தொடங்கினர். அடிநாள் தொட்டு அடிகளாரை நான் நன்கறிவேன். அடிகளார் திருவண்ணாமலை ஆதீனத்தில் பொறுப்பேற்ற பின்னர் சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினார்கள். முதன்முதலில் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும் அடிகளார் அவர்களும் நாங்கள் நடத்திய தமிழர் திருநாள் திருக்குறள் விழாவில் ஒரே மேடையில் பேசினர். அப்பொழுது ஆத்திகமும் நாத்திகமும் ஒரே மேடையில் சந்திக்கின்றன என்ற செய்தியை வியப்புடன் நாளிதழ்கள் வெளியிட்டன.

50, 60களில் அடிகளார் தமிழ்மேடைக்குத் தம் பேச்சால் புதிய வலிமை சேர்த்தார்கள். தமிழகம் முழுவதும் அடிக்கடி பயணம் செய்யும் நான் அடிகளாரின் நூற்றுக்கு மேற்பட்ட பொழிவுகளைச் செவிமடுக்கும் நல்வாய்ப்பைப் பெற்றேன். அடிகளார் நூல் பலவற்றைப் படிக்கும் பேறும் பெற்றேன். அப்பொழுதெல்லாம் அடிகளார் சிந்தனைகள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துப் பார்க்க வேண்டும் என்ற வேணவா என்னுள்ளத்தில் முகிழ்த்தது. அது இன்று கைகூடுகிறது.

தமிழ் மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழ்நாடு செய்த தவப்பயனால் 1925இல் தோன்றி 70 ஆண்டு காலம் தமிழகத்திற்குப் பல்வேறு பணிகள் வாயிலாகக் கடமை ஆற்றிய நாட்டுத் துறவியாவார்.

தவத்திரு அடிகளாரைப் புரட்சித்துறவி என்றும், மிகச் சிறந்த சொற்பொழிவாளர் என்றும் நாடு கருதும்.

அடிகளார் எழுத்துக்கள் அனைத்தையும் நூல்வரிசையாகத் தொகுக்கும் போது ஒவ்வொரு தொகுதியிலும் 400 பக்கங்களுக்குக் குறையாமல் 15 தொகுதிகளாக மொத்தம் சற்றொப்ப 6000 பக்கங்கள் அளவில் விரிந்தன. தம் 50 ஆண்டுப் பொது வாழ்வில் அடிகளார் எழுதிய 60 நூல்களையும் பதிப்பாசிரியர் குழு 5 தலைப்புக்களில் வகைப்படுத்தியது. நூற்றொகுதி அனைத்தையும் ஒருசேர வைத்து நோக்கும்போது அடிகளார் மிகச் சிறந்த நூலாசிரியராகச் சிறப்பதை நாம் உணர்கிறோம்.

1999 டிசம்பர் திங்களில் முதல் தொகுதி முகிழ்த்தது. 2001 நவம்பரில் தொகுதிகளின் அச்சுப் பணி முடிந்தது. திருக்குறள் பற்றி மட்டும் அடிகளார் கட்டுரைகள் 4 தொகுதிகளாகச் சற்றொப்ப 1600 பக்க அளவில் விரிந்துள்ளது.

தருமபுரம் ஆதீனம், பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க அடிகள் ஆகியோர் அளித்துள்ள அணிந்துரைகளில் அடிகளாரின் இறையுணர்வையும், பக்திவழி நாட்டுக்கு ஆற்றிய பங்களிப்பையும், சைவத்திற்கும், தமிழுக்கும் அடிகள் ஆற்றிய அளவிடற்கரிய பணிகளையும் போற்றியுள்ளனர்.

தமிழ்நாட்டின் மிகச் சிறந்த திறனாய்வாளர்களான சிலம்பொலி செல்லப்பர், வா.செ. குழந்தைசாமி, தமிழண்ணல், வை. இரத்தினசபாபதி, ஔவை நடராஜன், சிற்பி பாலசுப்பிரமணியன், ச.வே. சுப்பிரமணியம், கு. சுந்தரமூர்த்தி முதலியோர் அடிகளார் நூல்வரிசையை ஆராய்ந்து, தேர்ந்து, தெளிந்து அடிகளாரின் சிந்தனை வளத்தையும், சமூக உணர்வினையும், பல்துறை அறிவினையும், மனித நேயத்தையும், தமிழாற்றலையும், அழுத்தமாக எடுத்துக் கூறும் பெற்றியினையும் தங்கள் அணிந்துரைகளில் சான்றுகளுடன் விளக்கி உள்ளனர்.

பொதுவாக 15 தொகுதிகளிலும் அடிகளாரின் ஆளுமை வெளிப்பட்டாலும், மூல இழையாகச் செல்வது தமிழ்ச் சமூகத்திற்குரிய விழுமங்கள், உன்னதங்கள், உயர்வுகள், சிறப்புக்களே. பழந்தமிழ் இலக்கியமாகிய பத்துப்பாட்டு, எட்டுத் தொகையில் தொடங்கி பாரதி பாடல்வரை தமிழரின் தனி அடையாளங்களின் வேர்களை அவை இனங்காட்டுவன. அயல் வழக்கினைத் தமிழ் வழக்கு வென்ற திறத்தினை அடிகளார் அழுத்தம் திருத்தமாக ஆவணமாக்கி விடுவார்.

சமயக் கட்டுரைகள் பொதிந்துள்ள இத்தொகுதிகள் வாழ்முதலாகிய இறைவனைப் பற்றிய அடிகளாரின் சிந்தனைப் பதிவுகளைக் கொண்டன. இந்தப்புலம் அடிகளாரின் ஆன்மா விரும்பும் விருப்பமான நிலம். அவர்கள் நாளும் பயணம் செய்யும் ஞானபூமி. ஆதலால் சமயம்பற்றி அடிகள் கொண்ட அனைத்துக் கருத்துக்களின் கருவூலமாக இத்தொகுதிகள் திகழ்கின்றன. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல, கோயிலைத் தழுவிய குடிகளும், குடிகளைத் தழுவிய கோயிலும் என்னும் கொள்கை உருவாக்கம் அடிகளாரின் தனிக்கொடை.

தமிழ் இலக்கியம் சமயம் சார்ந்த இலக்கியம். சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும் எனப் பகுத்தாலும் இலக்கிய நிலப்பரப்பில், பங்களிப்பில் சைவமும் தமிழும்தான் தனிச்சிறப்பு பெறுகிறது.

அடிகளார் சிவநெறியினைச் சிரத்திலும் சிந்தையிலும் வைத்துப் போற்றிக் கூறிய, எழுதிய கருத்துக்கள் சைவ சமயத்திற்குப் புத்துணர்வையும், புத்தொளியையும் நல்குவன. புரட்சித் துறவியாகிய அடிகளாரின் புதிய பார்வை திருமுறைகளை மறுமைக்கு மட்டுமின்றி இம்மைக்கும் வழிகாட்டும் என நிறுவுவன. மனிதனை மேம்படுத்தும் எண்ணங்களை, சீரிய செவ்வறங்களைக் கூறுவன திருமுறைகள்.

அடிகளார் அப்பரடிகளிடம் கொண்ட அன்பு அளவிடற் கரியது. நாவுக்கரசர் காட்டிய நல்லறங்களை நாளும் சொல்லி மகிழ்பவர். எட்டாந் திருமுறை ஆகிய திருவாசகத்தை எண்ணி எண்ணி எப்போதும் இறும்பூது எய்துபவர். சேக்கிழார் இயற்றிய 12ஆம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தை நிகழ்கால சமூக வாழ்க்கையோடு இயைத்துக்காட்டி, சைவ சமயம் என்பது தமிழர் வாழ்க்கை நெறி என்பதை ஒல்லும் வகையெலாம் உணர்த்தியவர்.

கோயிற் பண்பாடு என்னும் கோட்பாட்டை விளக்குவதில் அடிகளார் முதல் வரிசையர். சைவ சமய, தோத்திர, சாத்திர சரித்திரக் கருத்துக்களில் ஆழங்கால் பட்டவர். புரந்துபட்ட தமிழ்நூற் பயிற்சியும் வாழ்வியல் அனுபவங்களும் இத் தொகுதிகளில் ஒளி வீசுகின்றன.

இறைவன், பிறவித்துன்பம், வினைக் கொள்கை, ஊழ் உண்மை, ஓதி உணர்தல், புலனடக்கம், மெய்ப்பொருளை உணர்தல், விண்ணும் மண்ணும், வீட்டுலகம் முதலியன பற்றி அடிகளார் கூறிச் செல்லும் கருத்துக்கள் ஆழ்ந்த சிந்தனைகளின் வெளிப்பாடு.

அடிகளார் தெளிவுற அறிந்திடுதல், தெளிவுற மொழிந்திடுதல் என்ற இரு நிலையிலும் சிறப்பாக விளங்கியவர் என்பதனை இத்தொகுதிகள் பறைசாற்றுகின்றன. இலக்கியக் கட்டுரைகளாயினும் சரி, சமயக் கட்டுரைகளாயினும் சரி அடிகள் மனித குல மேம்பாடு ஒன்றிற்கே உயர்வளிப்பவர் என்பது விளங்கும்.

இந்நூல் வரிசையால் அடிகளாரிடம் தமிழ் முனிவர் திரு.வி.க.வின் சமுதாயப் பார்வையும், சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் அவர்களின் சமுதாய அரசியற் பார்வையும் இலங்கியதை அறியலாம். தமிழ் தேசியம் வேர்கொள்ள அடிகளார் ஆற்றிய பணி தமிழர் வரலாற்றில் பதிவு செய்யப் பெற்று விட்டது.

அருள் நெறித் திருக்கூட்டம், தெய்வீகப் பேரவை, திருக்குறட பேரவை, திருவருட் பேரவை முதலிய அமைப்புக்களைத் தோற்றுவித்து, தமிழ் இனம், நாடு முன்னேறப் பல்லாற்றானும் பணிசெய்தவர்.

உலகின் பெரும் பகுதியினைப் பலமுறை வலம் வந்தவராதலால் இவர் தம் எழுத்தும் பேச்சும் சமூக உணர்வுடன் சிறந்து விளங்கின. பயணத்திற்குப் பயணம் இவரது அனுபவ அறிவு செழுமை பெற்றதை இந்நூல்வரிசை பரிணாம முறைப்படி உணர்த்துகிறது. சமுதாய உய்வுக்கு அடிகள் உரைத்த பொன்மொழிகளின் படிமுறை வளர்ச்சியை, வாழ்வியல் அறங்கள் பற்றிய அடிகளாரின் நோக்கும் போக்கும் மாற்றம் பெற்ற திறத்தினை இவ்வரிசை நூல்கள் உயிரோவிய மாக்குகின்றன. தமிழகத் துறவிகள் வரலாற்றில் அடிகளாரைப் போல அனைத்துலகையும் வலம் வந்தவர் வேறு எவரும் இலர்.

பரிபாடலின் பக்திநெறி பற்றிப் பேசினாலும், பாரதியின் பக்திமைபற்றிப் பேசினாலும் பக்திநெறியில் அடிகளின் பார்வை புதியது. 'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம். பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்' என்கிற கோட்பாட்டை, 'நாமார்க்கும் குடி அல்லோம்' என்னும் நாவுக்கரசரின் குரலோடு இணைத்து சுதந்திரக் குரலாக எடுத்துரைப்பார். விடுதலை வேள்விக்கு வித்திட்டவர் என வீறார்ந்த மரபை விளக்கிக் கூறுவார்.

கடவுட் பற்றும், கவிதைப் பற்றும், கட்சிசாரா நாட்டுப் பற்றும் அடிகளார் எழுத்துக்களில் எங்கும் பரக்கக் காணலாம்.

பாரதியாரை ப. ஜீவானந்தம் ஆரவாரமாக, உணர்ச்சி பொங்கச் சொல்லிக் கூத்தாடுவார், அடிகளாரோ ஆரவாரமின்றி ஆழ்ந்த அமைதியோடு அழகு தமிழில் ஆற்றொழுக்காக எடுத்துரைப்பார். இவர் எழுத்து நடை திரு.வி.கவைப் போல, பேச்சு நடை தழுவியது. சிறிய தொடர்கள் சிந்தனையைத் தூண்டுபவை.

ஒட்டுமொத்தமாக எழுத்துக்கள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துப் பார்க்கிறபோது அடிகளாரின் அறிவாற்றலும், எழுத்தாற்றலும், தமிழாற்றலும் நம்மை வியப்படையச் செய்கின்றன. ஒரு நொடியும் வீணாக்காது தமிழினம் உய்ய அடிகள் ஆற்றிய அரும் பணிகளின் ஆழத்தையும், அகலத்தையும் விரிவையும் இந்நூல் வரிசைகள் விளக்குகின்றன. உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரை தருமபுர ஆதீனம்
26ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய ஆசியுரை.

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகைஅடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி.

*-உமாபதி சிவாசாரியார்.*

**நாயனார்:**

சுந்தரர் அருளிய திருத்தொண்டத்தொகையும், நம்பியாண்டார் நம்பிகள் அருளிய அதன் வகையாகிய திருத்தொண்டர் திருஅந்தாதியும், சேக்கிழார் அருளிய அதன் விரிவாகிய திருத்தொண்டர் புராணமும் தென்தமிழ்ப் பயனாகத் தமிழர்கட்குக் கிடைத்த பெறுதற்கரிய பெருஞ் செல்வமாகும்.

குரு, லிங்க, சங்கமம் என்னும் முத்திற வழிபாடு சைவத்தின் தனிச் சிறப்பாகும். குரு இறைவனை அடைய வழிகாட்டுபவர். இலிங்கம் வழிபடுவோர்க்கு வளம் வழங்குபவர். சங்கமம் குரு காட்டும் வழியில் சென்று வழிபட்டு வளம்பெறுவோராவர். இத்தகு சைவ நெறியில் தமிழ்நாட்டில் வாழ்ந்து வழிகாட்டியவர்களே நாயன்மார்கள். நாயனார் என்ற சொல் இறைவனைக் குறிப்பது. நாய் என்பது உயிரைக் குறிப்பது. நாயன் என்பது அவ்வுயிரை அடிமையாக உடைய இறைவனைக் குறிப்பது. உயிர்கள் பல, இறைவன் ஒருவனே. நாய்களை அடிமையாக உடையவன் நாயனார்.

"நாயன் நீரே நான் உமக்கிங்கடியேனாகில் நீர் எனக்குத்
தாயின் நல்லதோழருமாம் தம்பிரானா ரேயாகில்
ஆய அறிவும் இழந்தழிவேன் அயர்வுநோக்கி அவ்வளவும்
போய் இவ்விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாரும் என"

என்னும் சுந்தரர் வரலாற்றுப் பெரியபுராணப் பாடலால் நாயனார் என்ற சொல்லின் பொருள் இனிது விளங்கும். இதற்கு மேலும் ஒரு விளக்கம் காண்போம்:

**தம்பிரான்:**

தம்பிரான் என்ற சொல் சிவபிரானைக் குறிக்கும். தம் என்ற சொல் ஆன்மாவைக் குறிக்கும். பிரான் என்ற சொல் ஆன்மாக்களின் தலைவனாகிய சிவபிரானைக் குறிக்கின்றது. இதுவும் காரணப்பெயர். பிரியமானவன் பிரான் என்றாயிற்று. தலைவனாவான் உயிர்களிடத்துப் பிரியமாயிருப்பவனே யாவான். இவ்வினிய பெயரை ஆதீனங்களில் உள்ள அடியவர்கட்குப் பெயராக அமைத்துள்ளனர். பெருமானுக்குரிய பெயரை உபசாரமாக அடியவர்கட்கு அமைத்து வழங்கி வருகின்றனர். இதுபோல்தான் நாயனார் என்ற சிவபிரானின் திருப்பெயரும் அவனது அடியவர்களாகிய அறுபத்து மூவருக்கும் வழங்கி வருகின்றது.

**முத்திற வழிபாடு:**

நாயன்மார் அறுபத்து மூவருள், குரு வழிபாடு செய்து அருள் பெற்றோர், பன்னிருவர். இலிங்க வழிபாடு செய்து அருள்பெற்றோர் முப்பத்திருவர். சங்கம வழிபாட்டால் அருள் பெற்றோர் பத்தொன்பதின்மர் என்று மூன்று வகையாக அறுபத்துமூவரையும் பெரியபுராணத்தில் தெளிவுபடுத்தப் பெற்றுள்ளது.

**குறிக்கோள்**

இந்நாயன்மார்கள் மக்கள் எப்படி வாழவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து வழிகாட்டியவர்கள். பெரியபுராணம் மக்கட்கு அறிவிப்பதில் முக்கியமான செய்தி,

மக்கள் ஒவ்வொருவரும் குறிக்கோளுடன் வாழவேண்டும் என்பதே. குறிக்கோள் இல்லாத வாழ்க்கை, கொழு கொம்பில்லாத கொடியின் வாழ்வைப்போன்றதாகும். இதனை அப்பர் அடிகள்,

'பாலனாய்க் கழிந்தநாளும் பனிமலர்க்கோதைமார்தம்
மேலனாக் கழிந்தநாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துளானே'

என்னும் பாடலால் தெளிய விளக்கியுள்ளார். குறிக்கோள் என்பது இளமையிலேயே பின்பற்றவேண்டியது என்பதும் இப்பாடலால் நாம் நன்கு உணர்கிறோம். குறிக்கோளை உயிர் மூச்சாகக்கொண்டு நடையிடுகிறது பெரியபுராணம்.

**முப்பெரும் புராணங்கள்:**

தமிழகத்தில் பெரிதும் வழக்கத்தில் இருந்துவரும் புராணங்கள் மூன்று, அவை பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கந்தபுராணம் என்பன. இவற்றுள் பெரியபுராணம், இறைவனை அரிதில் அடைந்த அடியவர்களின் வரலாறு பற்றியும், குறிக்கோளால் அவ்வருமைப்பேற்றைச் சாதித்த வன்மைபற்றியும் வளமுறக்காட்டுவது. திருவிளையாடற்புராணம், இறைவனை எளிமையில் எய்தலாம் என்பதையும், அதற்குப் பக்திமையே பயன்தரும் பாதை என்பதையும் பண்புடன் பகர்கிறது. கந்தபுராணம் நன்றிகொன்றவர்கள் இறைவனை அடைவது கடுமையானது என்பதைக் கழறுவது. இம்முப்புராணங்களுள், பெரியபுராணம் சூரியகுலத்தோன்றல்களாகிய சோழர்களை நெறிப்படுத்தத் தோன்றியது. சூரிய வெப்பம் தாங்கற்கரியது. ஆயினும் சாதனைக்குரியதே. திருவிளையாடற்புராணம், சந்திரகுலப்பாண்டியர்களை எளிமையில் நெறிப்படுத்திய வரலாறுகளைத் தெளிவுபடுத்துவது. கந்தபுராணமோ சிவபரம்பொருளின் அக்கினிக் கண்ணில் தோன்றியருளிய முருகப்பெருமானின் கருமையான போர்முறையால்

நன்றிகொன்ற சூரபத்மாதியர்களை நெறிப்படுத்திய செந்நெறி வரலாற்றைப் புலப்படுத்துவது.

**தமிழ்க்காப்பியப் புராணம்:**

இம்முப்புராணங்களுள், திருவிளையாடற் புராணமும், கந்த புராணமும் வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றவை. பெரியபுராணமோ சேக்கிழார் பெருமானால் தில்லை அம்பலக்கூத்தன் திருவருளால் 'உலகெல்லாம்' என அடிஎடுத்துக்கொடுக்க தமிழிலே எழுந்த காப்பியப் புராணமாகும். மேலும் பெரியபுராணம் அகத்திய பக்த விலாசம் என்றும், உபமன்ய பக்த விலாசம் என்றும் வடமொழியில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ள சிறப்பினவாகும்.

**புராணப்பொருள்:**

புராணம் என்றால் பழைய வரலாறு என்பது பொருளாகும். சிவபெருமானுக்கே புராணர் என்ற பெயரும் உண்டு. "அகனமர்ந்த அன்பினராய், அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி, ஞானம்புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத்துள்ளுறையும் புராணர்கோயில்" என்னும் ஞானசம்பந்தப்பெருமான் அருளிய திருவீழிமிழலைத் தேவாரத்தால் இதைத் தெளிய உணரலாம்.

மேலும் புராணம் என்பது புராதனம் என்பதன் திரிபே என்பர். இன்றைய செய்தியே நாளைய வரலாறு என்பது இற்றைநாள் வழக்கு. இதைப்போலவே முந்திய செய்தியே பிந்திய வரலாறு என்பதும் கொள்ளத்தக்கதே. புராணம் என்பதை புரா - நவம் எனப் பிரிப்பர். புரா என்பது புராதனம் என்பதில் முதல் சொல்லாகிய பழைமையைக் குறிப்பது. நவம் என்பது புதுமையைக் குறிப்பது. பழைமைக்குப் பழைமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் இருப்பவனே புராணன் என்ற சொல்லின் புனிதப்பொருள் என்பதைப் புரிந்துகொள்ளலாம். பூரணம் - நிறைவு, பூரணன் என்ற

சொல்லே புராணம் எனத் திரிந்து வந்துள்ளது என்பாரும், பூரணப்பொருளைப்பற்றிப் பேசுவதால் புராணம் எனப்பெயர் பெற்றது என்பாரும் உளர்.

இறைவன், பழைமைக்குப் பழைமையாய், புதுமைக் கெல்லாம் புதுமையாய்ப் பொலிபவன் என்பதை மணிவாசகர் எடுத்துக்காட்டாலும் இனிது உணரலாம்.

"முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப்புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே"

என்னும் திருஎம்பாவைப் பாடலே இக்கருத்தை இனிது உணர்த்தும்.

**எழுபத்திருவர்:**

இப்பெரியபுராணத்துள் எழுபத்திருவர் பேசப்படு கின்றனர். சுந்தரரால் அறிவிக்கப்பெறும் தனி நாயன்மார்கள் அறுபதின்மரேயாவர். சுந்தரர் இறுதியாகத் தன்னை அறிவிக்கும்போது தான் சடையனார்க்கும் இசைஞானி யார்க்கும் புதல்வன் என்று அறிவித்து இவர் அறிவித்த அடியவர்களைக்கேட்டு உவப்பவர்கள், ஆரூரர்ப் பெருமானின் அன்பர்களாவார்கள் என்று அறிவித்த அளவிலேயே நிறைவு செய்துள்ளார். இருப்பினும் பின்னே வந்த நம்பியாண்டார் நம்பிகள் முதலிய சான்றோர்கள் நமக்கு நாயன்மார்களைக் காட்டிக்கொடுத்த இம்மூவரையும் நாயன்மார்களே என அழைத்து நாயன்மார்களை அறுபத்து மூவராகப் போற்றினர்.

சைவம் ஒரு முழுமைச் சமயம் என்பதற்கேற்ப, முன்னே வந்த பெரியவர்களையும், பின்னே வருகின்ற பெரியவர் களையும் போற்றும் வகையில் செந்நெறி நின்றோரையும், நிற்போர்களையும் ஒன்பது வகைப்படுத்தி இத்திறத்தார் எல்லோரும் நாயன்மார்களே என்று உயரிய கொள்கைவழி நின்று ஒன்பது தொகுப்பினரையும் தொகை அடியார்கள் ஒன்பதின்மர் என்று குறித்துப்போற்றினர். 60+3+9 ஆக 72 பேர் நாயன்மார்களாகப் போற்றப் பெறுகின்றனர்.

**தியாகேசரே முதலடியார்:**

முதலில் 'தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடி எடுத்துக்கொடுத்தது திருவாரூர் தியாகேசப்பெருமானேயாவார். அடுத்துவரும் திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன் என்பது முதலாகத்தான் சுந்தரர் பாடினார். அறுபதின்மர் தனி அடியார்கள், ஒன்பதின்மர் தொகை அடியார்கள் ஆவர். தில்லைவாழ் அந்தணர்கள், பொய்யடிமையில்லாத புலவர், பக்தராய்ப் பணிவார்கள்; முதலாக ஒன்பதின்மர். இவர்கள் ஒருவரல்லர். தொகை அடியார்களின் பண்பாடு யார் யாருக்கு உள்ளதோ அவர்கள் எல்லாம் அத்தொகுப்பிலே சேர்ந்தோராவர். இப்பெரியபுராணத்திற்கு முதல் நூல் சுந்தரர் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகை, வழிநூல் நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்த திருத்தொண்டர் திருவந்தாதி. இவ்விரு நூல்களையும் துணையாகக்கொண்டே தில்லைக்கூத்தன் திருவருள் "உலகெலாம்" என அடியெடுத்துக் கொடுத்ததுடன் உள் நின்றும் உணர்த்த எழுந்ததே திருத்தொண்டர் புராணம் என்னும் இப்பெரியபுராணமாகும்.

**திருத்தொண்டர்புராணம்:**

இவ்வரிய பெரியபுராணத்திற்குச் சேக்கிழார் பெருமான் சூட்டிய பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதாகும். இதனைச் சேக்கிழார் வாக்காலேயே அறியலாம். அப் பாடல் காண்க.

'இங்கிதன் நாமங்கூறின் இவ்வுலகத்து முன்னாள்
தங்கிருள் இரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப்புறஇருள் போக்குகின்ற
செங்கதிரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம்'

திருவள்ளுவர் வாக்கே திருத்தொண்டர்புராணத்தைப் பெரியபுராணமாக்கியது.

*'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்'*

என்னும் அருங்குறட்பாவை மனத்தகத்தே கொண்ட மாண்புடையோரால் இத்திருத்தொண்டர்புராணம் பெரிய புராணம் என்றே அன்றுமுதல் போற்றப்பட்டு வருகிறது. சைவ தோத்திரத் திருமுறைகள் 12 என்பதை உணர்த்துவதுபோல் தோன்றிய பெரிய புராணம், பன்னிரண்டாம் நூற்றாண்டில் பன்னிரண்டாம் திருமுறை யாகப் போற்றப்பெற்று நிறைவு செய்கிறது.

**அறுபத்து மூவர் குலவரிசை:**

அந்தணர் பன்னிருவர், ஆதிசைவர் அறுவர், முடிஅரசர் அறுவர், குறுநில மன்னர் ஐவர், வேளாளர் பதின்மூவர், மரபுதெரியாதோர் அறுவர், ஏனையோர் குலத்துக்கு ஒருவராக பதின்மர். அவர்களாவார்: ஏகாலியர், குயவர், சாலியர், சான்றார், செக்கார், நுளையர், பாணர், புலையர், மாமாத்திரப் பிராமணர், வேடர். எனவே எல்லாச் சாதியரும், குலத்தவரும் நாயன்மார்களில் இடம்பெற்றுள்ளனர். ஆதலின் இந்நூல் எல்லோரையும் தழுவி எல்லோருக்கும் இறையருள் பெறுவதற்கு வாய்ப்புண்டு என்பதைத் தெளிவாக உணர்த்துவதைக் காணலாம்.

**அறுபத்து மூவர் நாட்டு வரிசை:**

சோழநாட்டினர் முப்பத்தொருவர், தொண்டை நாட்டினர் எழுவர், பாண்டி நாட்டினர் நால்வர், மலைநாட்டினர் இருவர், நடுநாட்டினர் எண்மர், கோநாட்டினர் ஒருவர், மழநாட்டினர் ஒருவர், நாடு குறிக்கப்படாதவர் ஒன்பதின்மர். பழம்பெரும் தமிழ்நாட்டில் கர்நாடகா தவிர ஏனைய நாடுகளில் நாயன்மார்கள் தோன்றி நாட்டின் பண்பாட்டை வளர்த்து விளக்கியுள்ளனர்.

**உரைகண்டோர்:**

இப்பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணத்திற்கு உரை எழுதினோர் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தம்பிரான்களுள் ஒருவராகிய தவத்திரு ஆறுமுகத் தம்பிரான், கோவை சிவக்கவிமணி திரு.சி.கே. சுப்பிரமணிய முதலியார்

முதலியோர் பதவுரை, பொழிப்புரை, விரிவுரைகள் கண்டுள்ளனர். அவையெல்லாம் நமக்கு ஒளிவளர் விளக்காக உதவிசெய்து வருகின்றன.

**அடிகளின் அருளுரை:**

இந்நிலையில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 45ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்த திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள், (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) உரைநடையில் பெரிய புராணத்திற்கு அருளுரை சொற்பொழிவு வாயிலாக விளக்கம் தந்திருக்கிறார்கள்.

ஒருநூலைப்பற்றிப் பல கோணங்களில் பார்ப்பது உலக வழக்கு. அவற்றுள் சமய நோக்கு, சமுதாய நோக்கு, இலக்கிய நோக்கு, வரலாற்று நோக்கு, தத்துவநோக்கு முதலியனவாக விரியும்.

**சமுதாய நோக்கு:**

இவற்றுள் தவத்திரு அடிகளார் நோக்கு பெரும்பாலும் சமுதாய நோக்கிலேயே அமைந்துள்ளது என்பதை இந்நூலில் பரக்கக் காணலாம்.

உதாரணத்திற்கு ஒன்று சொல்லலாம். கம்யூனிசம், நமது சைவத்துடன் எல்லா வகையிலும் ஒத்து வருகிறது. ஆனால் கடவுள் என்ற ஒன்றை மட்டும் ஒத்துக் கொள்ளவில்லை என்பதே அது. தவத்திரு அடிகளார் பல மேடைகளில் அருளுரையாற்றிய போதெல்லாம் கடவுட்கொள்கையில்லாத வாழ்வு, உயிரில்லாத உடம்புபோன்றது, ஊற்றில்லாத ஓடை போன்றது, அடிப்படை இல்லாத கட்டிடம் போன்றது என்று பலமுறை அருளியிருந்தும் இப்படி கம்யூனிசத்தையும் சைவத்தையும் இணைத்து இதில் எழுதியிருக்கிறார்கள் என்றால் அது எல்லோரையும் இணைத்துச் சமுதாயத்தைப் படிப்படியாகத் திருத்தவேண்டும் என்னும் நோக்கங் கொண்டதாகவே அமைகிறது.

**குருபூசை எப்படிக் கொண்டாடவேண்டும்:**

"பெரியபுராணச் சொற்பொழிவுகள்" என்னும் இந்நூல், தவத்திரு அடிகளாரின் பெரியபுராணம் பற்றிய பதின்மூன்று அருளுரைகளில் தொகுப்பேயாகும். ஆதலின் இதில் பொதுவாக சைவத்தின் பொதுத் தன்மையும், நாயன்மார் களின் வாழ்வினால் மக்கட்கு உணர்த்தப்படும் பொது அறங்களுமே பேசப்பட்டுள்ளன. மேலும் "சைவசித்தாந்தம்" கூறும் இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மையை உணர்த்தும் உன்னத சமயம் என்பதைப் பல இடங்களில் வற்புறுத்தியுள்ளது. பூரணம் - நிறைவு. நிறைவுடைய பொருளிலிருந்து குறைவுடையபொருள் தோன்றாது. குறைவுடைய பொருளிலிருந்து நிறைவு தோன்றலாம் என்று கூறி பூரணமான கடவுளிலிருந்து அறிவில்லாத உலகமோ, அறிவித்தால் அறியும் உயிர்களோ தோன்ற இயலாது என்ற அறிவியல் சார்ந்த உண்மையை அறிவித்துள்ளது மகிழ்ச்சிக் குரியதாகும்.

மேலும், நாயன்மார்களின் வாழ்வியலை நாம் எப்படி யெல்லாம் பயன்படுத்தி வளம் உறலாம் என்பதைப் பட்டியல் இட்டுக் காட்டியுள்ளமை பயன்தரும் செயலாகவே விளங்குகிறது. திருநாவுக்கரசர் குருபூசையை, உழவாரப்பணி செய்து கொண்டாடுக. கண்ணப்பர் குருபூசையை, பார்வைக் குறையுடையோருக்குக் கண்ணாடிகள் வழங்கிக் கொண்டாடுக. திருநீலகண்ட நாயனார் குருபூசையை ஏழை எளியவர்கட்கு உண்கலம் கொடுத்து, உணவும் அளித்துக் கொண்டாடுக. இயற்பகை நாயனார் குருபூசையை ஏழை எளியவர்கட்குத் திருமணம் செய்து வாழ்த்திடுக. தண்டியடிகள் நாயனாரின் குருபூசையை திருக்குளம் தூர்வாருதல் செய்து எல்லோருக்கும் தூநீர் கிடைக்கத் தூய பணி செய்க, என்று அவரவர் தொண்டுகளை ஒட்டிய பணிகளைச் செய்துயர்க என இனிய எளிய அறம்

புகட்டுகிறது. இதுபோன்று எளிய இனிய அறங்களை நாயன்மார்கள் எப்படியெல்லாம் செய்துள்ளனர் என்பதைப் பலவகையாலும் எடுத்துக்காட்டி இனிதே நிறைகிறது, இந்நூல். இந் நல்லறங்களை மக்கட்கு எடுத்து இயம்பியதோடு நில்லாமல் தங்கள் ஆதீன அருளாட்சியில் உள்ள ஆலயங்களில் செயல்படுத்தவும் திட்டமிட்டு நடத்திக் காட்டியுள்ளமை போற்றுதற்குரிய செயலாகும்.

**செந்தமிழ்க் காவலர்:**

பேராசிரியர், பதிப்புச்செம்மல் திரு. மெய்யப்பன் மணிவாசகர் பதிப்பகத்தின் வாயிலாக எண்ணற்ற தமிழ்நூல்களை வெளியிட்டு, தமிழ்த்தாய்க்கு அணி சேர்த்து, தமிழ்மொழியை வளர்த்தும் காத்தும் வருகிறார். இதுகுறித்தே நிகழாண்டு ஆவணிமூலத் திருநாளில் செந்தமிழ்ச் சொக்கன் திருவருள் இவருக்கு "செந்தமிழ்க்காவலர்" என்னும் விருதளித்துப் பாராட்டியுள்ளது. இவர் தவத்திரு அடிகளாரின் அருளுரைகளைத் தொகுத்து பலநூல்கள் வெளியிட்டு வருகிறார். அவ்வரிசையில் "பெரியபுராணச் சொற் பொழிவுகள்" என்னும் இவ்வினிய நூலும் இடம்பெற்றுத் திகழ்கிறது. இவர்தொண்டு தொடர்ந்து சிறப்புறுவதாக. இவரும், இவர் தொண்டும் இந்நூலும் மக்களிடையே பரவிப் பயன்தர ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியா ரவர் வான்புகழ்
நின்றதெங்கும் நிலவி உலகெலாம்.

*நாயன்மார் திருக்கூட்டம்*
*நாளும் வளர்ந்தோங்குக.*

# முன்னுரை

## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

இருபதாம் நூற்றாண்டின் அப்பரடிகள், காவி உடுத்திய கார்ல் மார்க்ஸ், அருள்நெறித் தந்தை என அனைவராலும் அன்பொழுகப் பாராட்டப்பெற்ற குருமகாசந்நிதானம் ஆற்றிய அற்புதச் சொற்பொழிவுகள் சமய இலக்கியம் என்று முகிழ்த்திருப்பது மிகுந்த மனநிறைவைத் தருகின்றது. சமயம் மனிதனைச் சமைப்பதற்கே; பண்படுத்துவதற்கே! சமயம் வாழ்க்கை நெறி; வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் நெறி. சமய உலகம் சமூகத்தை விட்டு விலகிச் சென்ற பொழுதுதான் - ஏழாம் நூற்றாண்டில் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தப் பெருமானாலும், நாவுக்கரசர் பெருமானாலும் ஏற்றப்பட்ட ஞானவேள்வி சுடர்விட்டுப் பிரகாசித்து, பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழார் காலத்தில் உச்சக் கட்டமாகப் பொங்கிப் பரிணமித்தது. இடையில் சமய உலகில் ஒரு தொய்வு ஏற்பட்டது.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சமய உலகில் மிகப்பெரிய மறுமலர்ச்சியை உருவாக்கியவர்கள் அருள்நெறித் தந்தை குருமகாசந்நிதானம் தவத்திரு அடிகளார் பெருமான். இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகம் முழுவதும் "அடிகளார்" என்ற சொல் அவர்கள் ஒருவரைத்தான் குறித்தது. சமயத்தையும் சமுதாயத்தையும் ஒருங்கிணைக்கின்ற உறவுப் பாலமாக விளங்கினார்கள். சமூகத்தை விட்டுச் சமயம் விலகிச் சென்ற பொழுது சடங்கும் ஆரவாரத் தன்மையும் நிறைந்திருந்த சமயத்தை மக்களுக்குரியதாக மாற்றிக் காட்டினார்கள்.

சமய இலக்கியத்தை ஓதி உணர்வதோடு அல்லாமல் வாழ்வில் நடைமுறைப்படுத்தினார்கள். நாட்குறிப்பேடு போல் சமய இலக்கிய நாட்குறிப்பேடு ஒன்று பேணப்பட்டது. அதில் அறுபத்து மூன்று நாயன்மார் ஒவ்வொருவரின் நாள் குறிக்கப்பட்டிருக்கும். உதாரணமாக, கண்ணப்பநாயனாரின் நாளன்று கண்ணொளி வழங்க உதவி செய்தல் என்ற திட்டங்கள் செயற்படுத்தப்படும். நாயன்மார்களின் அடிச்சுவட்டில் அவர்களின் தொண்டு வாழ்வியல் மீண்டும் நடைமுறைக்குக் கொணரத் திட்டம் செயற்பட்டது. சமயத்தை இயக்கமாக, வாழ்வியலாக மாற்றுகின்ற முயற்சியில் சிறப்பாகச் செயற் படுத்தினார்கள். உழவாரக் கருவி ஏந்தித் தமிழகம் முழுவதும்

உலாவந்தார்கள். உழவாரக் கருவி திருக்கோயில்களில் முளைத்த முட்புதர்களை மட்டும் களையவில்லை, சமுதாயத்தில் முளைத்திருந்த முட்புதர்களையும் களைந்தது.

சமய இலக்கியம் வெறும் தத்துவ நூல் அல்ல, அனுதினமும் சமயத்தை வாழ்வில் நடைமுறைப் படுத்திய அனுபவசாரம், 'அப்பர் விருந்து' என்ற நூலில் முழங்காலுக்கு மேல் வேட்டி உடுத்தி, உருத்திராக்க மாலை அணிந்த பழைமையான தோற்றத்திற்குரிய அப்பர் பெருமானின் புதுமைச் சிந்தனையைப் புதிய கோணத்தில் சமய உலகுக்கு அடையாளம் காட்டியுள்ளார்கள்! என்னே புதுமை. இதோ, பானைச் சோற்றுக்குப் பதச் சோறுபோல், அப்பர் பெருமான் பாடலுக்குப் புதிய விளக்கம்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே!"

என்று அப்பர் பெருமான் பாடுகின்றார்! இந்தப் பாடலுக்குப் புதிய விளக்கம்! குற்றமற்ற வீணையின் இனிய கீதத்தை எல்லோரும் கேட்டு மகிழலாம். தேவையான நிபந்தனை நம் காதுகளுக்குக் கேட்கின்ற சக்தி வேண்டும், மாலைக் காலத்து அழகிய நிலவை எல்லோரும் பார்த்து மகிழலாம். அதற்குத் தேவையான நிபந்தனை நம் பார்வையில் குறைபாடு இல்லாது இருக்க வேண்டும். வீசுகின்ற தென்றல் காற்று எல்லோருக்கும் பொதுவானது, ஆண்டவனுக்கும் பொதுவானது; அடிமைக்கும் பொதுவானது, அதைப் போலவே பரம்பொருள் எல்லோருக்கும் பொதுவானது, வல்லார்க்கும் மாட்டார்க்கும் வாய்ப்பளிக்கும் வாய்ப்பாக, எல்லோருக்கும் பொதுமைப் பொருளாக இறையின்பத்தை அடையாளம் காட்டினார்.

அருள்நெறித் தந்தையின் சமயம் பற்றிய புதிய சிந்தனை எந்நாளும் எண்ணி இன்புறத்தக்கது, உடல் வாழ்வு தன்னலம் பற்றியது; உயிர் வாழ்வு பொது நலம் பற்றியது, சராசரி மனித வாழ்க்கையை உயிர்ப்புள்ளதாக்கி முழுமையாக்கும் உணர்வின் தேவையிலே தோன்றியது சமயம், இதனை நிறுவிய மகாசந்நிதானம் "பொதுவில் ஆடுபவன் நிழலின் பொதுமையைக் காணாமல், தீமையை அகற்றாமல் நன்மையைச் சாதிக்காமல், துன்பத்தைத் துடைக்காமல், இன்பத்தைப் படைக்காமல் கிழடுதட்டிச் செயலிழந்து போன நமது சமய அமைப்புகள் குறையுடைய நடைமுறைகளே!" என்று சமய உலகை

மாபெரும் புனருத்தாரணம் செய்ய வேண்டும் என்று அறைகூவுகின்றார்கள். சமயம் மனிதத்தை மேம்படுத்த! சமயம் மனித வாழ்வுக்கே! சமயம் மனிதத்தைப் புனிதமாக்க என்ற உயர்நிலையில் சமய உலகப் பாதைக்கு நம்மை அழைத்துச் செல்லும் அருள்நெறித் தந்தையின் பாதையில் பயணம் செய்ய, சமய இலக்கியம் வாழும் மானிடத்திற்கு அற்புத வழிகாட்டியாகும்.

இவ் அரிய நூல் ஆக்கத்தைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்குத் தொகுப்பு நூலாக வெளியிடும் மணிவாசகர் பதிப்பக ச. மெய்யப்பன் அவர்களுக்கு நெஞ்சு நிறை நன்றிகள்! இந்நூல் தொகுப்புக்குப் பெரிதும் பாடுபட்ட நம் ஆதீனக் கவிஞர் மரு. பரமகுரு, பலவகைகளில் இந்நூல் தொகுக்கும் களத்தில் கடமையாற்றிய இராமசாமி தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வர் தெ. முருகசாமி ஆகியோருக்குப் பெரும் நன்றியறிதலுடன் கூடிய பாராட்டுக்கள்! இந்நூலுக்கு அரியதொரு அணிந்துரை வழங்கியுள்ள **தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

முன்னைப் பழமைக்கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் நமது சமய உலகப் பாதையில் பயணம் செய்ய 'சமய இலக்கியம்' வழிகாட்டும் என்று நம்புகின்றோம். 'சமய இலக்கியம்' இயக்கமாக மாறினால் அதுவே சமய உலகத்தின் மாபெரும் புனருத் தாரணம் ஆகும். 'சமய இலக்கியம்' புதிய மறுமலர்ச்சிக்கு வழிகாட்டும் என்று இறையருளைப் போற்றிப் பிரார்த்திப்போம்!

# உள்ளுறை

# 1

# பெரியபுராணச் சொற்பொழிவுகள்

## தலைமைப் பேருரை*

### தமிழகமும் சமயமும்

'தமிழினம் காலத்தால் மூத்த இனம்; கருத்தாலும் மூத்த இனம்; இற்றைக்குப் பலநூறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, இன்பவுணர்வாகிய அகத்திணையியலிலும் பொருள் அறங்களின் உணர்வாகிய புறத்திணையியலிலும் செழுமையுற வளர்ந்த இனம். இதனைச் செப்பமுற வளர்ந்த தமிழ் மொழியின் இயல்பும் சிந்தனையிற் சிறந்த தமிழிலக்கியங்களும் முழுமையுற வளர்ந்த தமிழகச் சமய அமைப்பும் விளக்குவனவாம்.

தமிழ், வளர்ந்த மொழி; தனித்து இயங்க வல்ல நிறைநலஞ்சான்ற குறைவிலா மறைமொழி; இலக்கியத்தின் அனுபவத்திறன் தந்த பயனாக இலக்கண வரம்பு பெற்ற மொழி; எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமன்றி, அம்மொழியினைப் பேசும் மக்களின் வாழ்க்கைக்கும் பொருளிலக்கணம் கண்ட மொழி; மனிதனின் வாழ்க்கையை மையமாகக்

* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பெரிய புராணச் சொற்பொழிவுகள்.

ரு-IX-2.

கொண்ட இலக்கியங்கள் பல கண்டமொழி; உயிர்த் தொடர்பான காதல் பற்றிய இலக்கியமும் இலக்கணமும் எளிமையும் இனிமையும் இயையப் படைத்த மொழி; வையத்துள் வாழ்வாங்கு வாழும் நெறியினைக் காட்டும் வள்ளுவமறை படைத்த மொழி; ஊன் கரைத்து உயிர் வளர்த்து உள்ளொளி பெருக்கும் திருவாசகத்தைப் பெற்ற திருமொழி; தொண்டர்நாதனைத் தூது கொண்ட தொன்மொழி; முதலையுண்ட பிள்ளையைப் பாரினில் தந்த மொழி; எலும்பைப் பெண்ணாக்கிய இறையருள் நிறைந்த இன்ப மொழி. இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய உலக இனங்களின் வரலாற்றையும் தமிழின வரலாற்றையும் ஒப்புநோக்கினால், தமிழினத்தின் மூத்து முதிர்ந்த வளர்ச்சி, தெளிவாகத் தெரியும். வாழ்க்கை அருமையானது; வாழ்வது ஒரு கலை; வாழ்க்கைக்கு நெறியும் முறையும் உண்டு; வாழ்க்கை இலட்சிய நோக்குடையது; குறிக்கோளில்லாத வாழ்க்கை கூடைச் சாம்பலுக்கே; குறிக்கோளுடன் கூடிய வாழ்க்கையே குவலயம் போற்றும் வாழ்க்கை என்று வாழ்க்கைக்கொரு சிறப்பான குறிக்கோளைச் சமயநெறி வழியாகத் தந்து மனித வாழ்க்கையை வளப்படுத்திய மொழியும் தமிழே!

## சிவநெறியின் மாண்பு

தமிழர்கள் வரலாற்றறிவுக்கு எட்டாத காலந்தொட்டே சமயநெறியைக் கண்டும், அந்நெறியில் நின்று ஒழுகியும் வந்துள்ளனர். தமிழகச் சமயநெறி செயற்கை வடிவம் கொண்டதன்று. சிறந்த வாழ்வின் படிமுறை வளர்ச்சியில் வளர்ந்து முழுமைநலம் பெற்ற பெருநெறியாகும். தமிழகச் சமயம், செம்பொருட்டுணிவெனப்படும். "சித்தாந்தம்" என்று பெயர்பெறும். அஃதாவது, சிந்தனையின் எல்லை கண்ட முடிபு-முடிந்த முடிபு என்பது அதன் பொருளாகும். இன்று உலக அரங்கில் சமய நெறிக்கு மாறுபாடாக எழுந்துள்ள

கடவுள் நம்பிக்கையற்ற கம்யூனிசத்தை ஈடுகொடுக்கக்கூடிய உண்மைத் தகுதி, தத்துவச் செழுமை தமிழகச் சமயநெறிக்கே உண்டு. கம்யூனிசக் கொள்கைக்கும் நமது சமய நெறிக்கும் இருக்கின்ற ஒரே வேறுபாடு கடவுள் நம்பிக்கை ஒன்றுதான். ஆனாலும் மனித உலகம்-அவற்றின் அமைப்பு-சமநிலைச் சமுதாயம் ஆகிய துறைகளில் கம்யூனிசத்திற்கும் நம்முடைய சமயநெறிக்கும் முரண்பாடுகள் இல்லை என்பதை அறிவிக்க மகிழ்கின்றோம். கடவுள் மறுப்புக் கொள்கையினால் எழுப்பப்படும் வினாக்கள் அனைத்தையும் இயல்பிலேயே வாழ்க்கையின் அனுபவப்படிகளில் ஆராய்ந்து தெளித்து முடிவெடுக்கப்பெற்ற-வளர்ந்த ஒருநெறி தமிழகச் சமயநெறி. "சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினுள் சிவமுமாகி" என்று திருமுறை சிறப்பிக்கும் திருநெறி. தமிழகச் சமய நெறி, கற்பனையிற் கருக்கொண்டதன்று; சிந்தனையிற் செழித்து வளர்ந்த செந்நெறி. தமிழகச் சமயம் சிந்தனையில் முன்னுக்குப்பின் முரணில்லை. அது நம்பிக்கைக்கும் நல் வாழ்க்கைக்கும் ஏற்றது; ஐயத்திற்கிடமின்றித் தெளிவுற அமைந்த அருள்நெறியாகும். சிவம் பெயர் மட்டுமன்று. அதுவே இன்பம், மெய்யுணர்வு, திருவடி ஞானம், உலகம் எல்லாமே!

தமிழகச் சமயநெறியை வாழையடி வாழையாகப் பலர் போற்றி வளர்த்தும், வளர்த்தாங்கு ஒழுகியும் திருவருளால் சிறப்புறச் செய்திருக்கின்றனர். சங்க கால இலக்கியங்கள் கடவுள் நெறிபற்றி நிரல்பட நிறையப் பேசவில்லை. அருமையாகவே ஆங்காங்குப் பேசுகின்றன. எனினும், அவற்றிலிருக்கிற அளத்தற்கரிய ஆழமும் அகலமும் நினைந்து நினைந்து மகிழத்தக்கன.

"நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே"

(புறம். 91)

என்று ஔவையார் பாடுகிறார். சிவநெறிகாட்டும் செம்பொருள்-தமிழர் தம் வழிபடு கடவுள், பிறப்பையும் இறப்பையும் கடந்த பொருள் என்பதை எவ்வளவு நுட்பமாக விளக்குகின்றார்! இளங்கோவடிகள் இந்த அடிகளுக்கு உரைகூறி விளக்குவார் போல,

> "விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
> உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்"
>
> (சிலப். 12. வேட்டுவவரி)

என்று அருளியிருப்பது அறிந்து இன்புறத் தக்கது. மேலும், "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று கூறி எந்நெறிக்கு மில்லாத தனித்தமிழர் நன்னெறியுண்மையினை நயம்பெற நாட்டுகின்றார்.

அடுத்து, சமயநெறிகளில் மிகவும் சிக்கலான செய்தி, உயிர்களைப்பற்றியதேயாம். தமிழகச் சமயநெறியாகிய சிவநெறியைத் தவிர, மற்றைச் சமயங்களெல்லாம் உயிர் பற்றிக் கொண்டுள்ள கொள்கைகள் வளர்ந்துவரும் அறிவியலுக்கும் உலகியலுக்கும் இசைந்தனவாக இல்லை. பெரும்பான்மையான சமயங்கள், கடவுள் உயிர்களைத் தன்னினின்றும் படைத்தான் என்று கூறுகின்றன. உயிர்கள் இயற்கையில் குறையுடையன. கடவுள் நிறை பொருள். ஒரு நிறையிலிருந்து குறை தோன்றமுடியாது. குறையிலிருந்து வளர்நிறை தோன்றலாம். அதுவே, பரிணாம வளர்ச்சி; உலகியல் நியதியுங்கூட. ஆனால், குறைவிலா நிறைவாகவும், கோதிலா அமுதாகவும் உள்ள கடவுட் பரம்பொருளினின்று தோன்றப்பெற்ற பொருள்கள் குறையுடையனவாக இருத்தல் முடியாது; இருத்தலுங் கூடாது. இதைவிடப் பேராபத்து, உயிர்களே பரம்பொருளின் பிரதிபலிப்புகள் என்றும், பரம்பொருளின் பகுதியென்றும் கூறும் கொள்கை! அக்கொள்கையினர் ஒரு குடத்திலுள்ள நீர் பரம்பொரு ளென்றும் அதில் ஒரு திவலை உயிர் என்றும் எடுத்துக்

காட்டுகிறார்கள். குடத்திற்குள்ளிருக்கும் நீருக்கும் அதிலிருந்து பிரிந்த ஒரு திவலைக்கும் சுவையில் மாறுபாடு இருத்தற் கில்லை. கடவுளின் நிறைவையும் உயிர்களின் குறைகளையும் ஒப்பு நோக்கிப் பார்க்கும்பொழுது, "அதுவே இது" என்று கூறுவது பயனற்ற கொள்கையாகும். ஆனால், அறிவுக்கு ஒரு சிறிதும் பொருந்தாத இந்தக் கொள்கைதான் இன்று, எடுப்பாரின் உலகியலாற்றல் காரணமாகச் சமூகத்தில் பெருகிக் காணப்படுகிறது. தமிழ்நெறி, உயிர்கள் படைக்கப் பட்டனவல்ல. அவை இறைவனைப் போல என்றும் உள்ள உள்பொருள் என்ற கொள்கையுடையது. சங்க இலக்கியங்கள் உயிரை "மன்னுயிர்" என்றே பேசுகின்றன. "மன்னுயிர்" என்றால் நிலை பெற்ற அழிவில்லாத என்றுமுள்ள உயிர் என்பது பொருள். அஃதாவது, உயிர்களுக்குத் தோற்றமு மில்லை; அழிவுமில்லை; சார்ந்ததன் வண்ணமாந் தன்மை யுடையன. உயிர்கள் இயல்பிலேயே சிற்றறிவுடையன. ஆனாலும், இயல்பான அவ் அறிவு, இருள்மலத்தொடக்கின் காரணமாக விளக்கமின்றி அறியாமையாய்க் கிடந்தன. ஆனால் அந்த அறியாமை நிலையானதன்று. உயிர்கள் இறைவனோடு தொடர்பு கொள்ளும்பொழுது, அறியாமை அடங்கி அறிவு விளக்கமுற்று உய்திபெறுகின்றன. ஆக இறை, உயிர், தளை என்ற மூன்று நிலையான உள்பொருள்களை மையமாகக் கொண்டு தமிழகச் சமயநெறியின் தத்துவம் வளர்ந்திருக்கிறது. இந்தத் தத்துவப்பார்வை வளர்ந்து வரும் மார்க்சியத்தைக் கூட ஈடுகொடுக்கும் தகுதியுடையதாக இருக் கிறது என்பதை அறிவிக்க உண்மையிலேயே அளவிலாப் பெருமைப்படுகிறோம்.

## திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும்

இங்ஙனம் சங்க இலக்கியங்களைத் தொடர்ந்து வந்த திருமுறைக்காலம் சமயநெறியின் பொற்காலமாகும். இல்லை, தமிழகத்தின் பொற்காலமாகும். இல்லை, மனித உலகத்திற்கே

பொற்காலம் எனலாம். ஏழாம் நூற்றாண்டில் ஞாயிறும் திங்களுமென இரண்டு ஞானஒளிக் கதிர்கள் தமிழகவானில் நடமாடின. ஞாயிறனைய ஞானசம்பந்தரும், திங்களனைய திருநாவுக்கரசரும் அவதரித்து, மனித உலகத்தின் நாகரிகத்தைக் காத்தமையை எங்ஙனம் வாழ்த்துவது! திரு வருளால் ஞானசம்பந்தர் தோன்றியிராது போனால், இசையும் கலையும் ஏது? உயிர்களை அன்பில் தோய்த்து வளர்க்கும் காதல் மனையற வாழ்க்கை ஏது? உலக உயிர்களின் வரலாற்றுத் தொடர்ச்சிக்குத் தொண்டுசெய்யும் தாய்க்குலத்தின் பெருமை ஏது? இயற்கையோடியைந்த வாழ்வு ஏது? இன்பம் ஏது? இவையனைத்தையும் மறைத்து வாழ்க்கையை வறண்ட பாலைவன மாக்கும் புறநெறிகள் தலையெடுத்தபோது ஞானத்தின் திருவுருவமாக எழுந் தருளிய திருஞானசம்பந்தர் அயல்வழக்கை வென்று, தமிழ் வழக்கை நிலைபெறச் செய்து மன்னுயிர்க்கு வாழ்வளித்தார்.

மனிதகுலத்தின் உரிமையை முடக்கி அடிமை கொண்ட முடியரசை, உலகினர் அஞ்சியடங்கி உச்சிமேற் கொண்டு பாராட்டிக் கொண்டிருந்தபோது அப்பரடிகள்,

"நமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே
குறுகி னோமே"

என்று முழங்கி முடியாட்சிக் கொள்கைக்கு எதிராக வீரக்குரல் கொடுத்தார். உலக நாடுகளில், "அரசனது ஆணை தெய்வத்தின் ஆணை" என்ற கொள்கை நிலவியபொழுது

அப்பரடிகள், அரசின் ஆணையைத் துச்சமெனத் தூர எறிந்தார்! ஆள்கிறவன் - ஆளப்படுகிறவன் என்ற வேற்றுமையைக் களைய முதன்முதலில் வித்திட்டவர் அப்பரடிகளே! அதற்குப்பிறகுதான் அமெரிக்க விடுதலைப் புரட்சி. பிரஞ்சுப் புரட்சி! மனித உலகத்தின் உரிமை விளக்கை முதன்முதலில் ஏற்றித் தந்தவர் அப்பரடிகளேயாம். தமிழ்மறை அருளிச்செய்த திருமூலர், "ஒன்றே குலமும்; ஒருவனே தேவனும்" என்றார். ஆயினும், தமிழ் நெறிக்கு ஒவ்வாத சாதி வேற்றுமைகள் எப்படியோ தமிழகத்தில் கால் கொண்டன. அதனால், எண்ணத்தொலையாத சாதிகள் தோன்றி வீட்டிலும் வீதியிலும் வளர்ந்து வெறுப்பை வளர்த்துப் பகை நெருப்பை மூட்டின. இந்தத் தீமை வீதி யோடு நிற்கவில்லை. எல்லா உலகுக்கும் ஆதியாய், பொது வாய், நடுவாய், எங்கணும் நிறைந்திருந்து அருள் வழங்கும் அம்மையப்பன் ஆலயத்துக்குள்ளும் புகுந்து புல்லுருவியென வளர்ந்தது; இறைவன் பெயராலும் சாதிகள் வளர்க்கப் பெற்றன; அரண்செய்யப் பெற்றன. இறைவனுக்குப் பூசனை பண்ணும் உரிமை-திருவமுது படைக்கும் உரிமை அகனமர்ந்த அன்பினராகித் தொழும்பாய் அடிமை பூண்ட அடியார்க் கல்லாமற் பிறப்பின்பாற்பட்ட ஒரு சாதியின்பாற் படுத்தப் பெற்றன. அதன் காரணமாகப் "போதொடு நீர்சுமந் தேத்தி" வழிபடும் புண்ணிய சீலர்கள் அருகிப்போயினர். இந்தக் கொடுமையை அருள்பழுத்த நெஞ்சினராகிய அப்ப ரடிகளும் தாங்க முடியாமல் சாதி வேற்றுமைகளைப் பொய் புனைந்து கட்டிய புரை தீராச் சாத்திரங்களைக் காட்டி நிலைநிறுத்த முயல்பவர்களைச் "சழக்கர்காள்!" என்று சாடுகின்றார். சழக்கர் - முறைகேடர்.

> "சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
> கோத்தி ரமுங்குல முங்கொண் டென்செய்வீர்
> பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
> மாத்தி ரைக்குள் அருளு மாற்பேறரே."
>
> –5. 60–3

சாதி வேற்றுமையை அடுத்து மனிதகுலத்தின் நல் வாழ்வுக்கெதிராக நிற்கும் பகை, வளம்-வறுமை என்ற வேறு பாடுகள். ஒரு சாதாரண மாளிகையைக் கூடச் சமதளத்தில் தான் கட்டமுடிகிறது. மேடு பள்ளமற்ற சாலைதான் பயணத்திற்கு இன்பம் தருகிறது. அது போலச் சமநிலைச் சமுதாயத்தில்தான் அன்பு தழீஇய உறவு வளர முடியும்; இன்ப ஒழுக்கத்தைக் காண இயலும். ஆதலால் அப்பரடிகள் வளம்-வறுமை என்ற வேறுபாட்டை ஈதற்பேரறத்தின் மூலம் நீக்கிச் சமநிலைச் சமுதாயங் காணத் துடித்தார். இல்லாதவர் களுக்குக் கொடுப்பதற்குத்தான் செல்வம் வழங்கப் பெற்றது. இறைவன் திருவருள், தேவைப் படுகிறவர்களுக்குக் கொடுப்ப வர்களுக்குத்தாம் உண்டு. வழங்கி வாழ்வித்து வாழாத வன்கணாளர்களுக்கு நரகம்தான் கிடைக்கும். அரக்கருக்கும் மன்னித்தருள்பாலிக்கும் அண்ணல், ஈயாது இவறிக் கூட்டுப வர்களுக்கு நரகமே நல்கும் என்று அப்பரடிகள் கூறுகிறார். இந்தக் கொள்கையைத்தான் அண்மைக்காலத்தில் "தர்ம கர்த்தாக்கொள்கை" என்று அரசியல் பொருளியல் வல்லு நர்கள் குறிப்பிட்டார்கள். அண்ணல் காந்தியடிகளின் கொள்கை, தர்மகர்த்தாக் கொள்கையேயாகும். இந்த இனிய அரிய கொள்கையை ஏழாம் நூற்றாண்டிலேயே அப்பரடிகள்.

"இரப்பவர்க் கீயவைத்தார் ஈபவர்க் கருளும்
வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர்க் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம்
வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தார் ஐயன்ஐ யாறனாரே."

–4. 38–10

என்று பாடினார்.

## சேக்கிழார்

ஏழாம் நூற்றாண்டு, தமிழகச் சமயத்தின் மறு மலர்ச்சிக் காலம் என்று கூறவேண்டும். ஏழாம் நூற்றாண்டில் தொடங்கிய இந்த மாறிலா மறுமலர்ச்சி யியக்கம் பன்னிரண் டாம் நூற்றாண்டில் சேக்கிழார் பெருமானால் பேணிப் பெரிதும் வளர்க்கப் பெற்று நிலை நிறுத்தப் பெற்றது. முன்னர்க் குறிப்பிட்டது போலத் தமிழகத்தில் ஆரவாரமின்றி அமைதியாக அருளொழுக்கம் பூண்டு திருத்தொண்டு செய்தவர்கள் காலத்திற்குக் காலம் இருந்து வந்துள்ளனர். இந்தத் திருத்தொண்டியக்கம், புறச்சமயத் தாக்குதல்களினால் ஏழாம் நூற்றாண்டில் வீறுபெற்று எழுந்தது. ஏழாம் நூற்றாண்டில் எழுந்த இந்தச் சமயப் புத்துணர்ச்சி–எழுச்சி பத்திவழிப்பட்ட திருத்தொண்டியக்கமாகவும், சமூக நல் வாழ்வுக்குரிய நற்பணியியக்கமாகவும் வளர்ந்து வடிவம் பெற்றது. அந்தப் பத்தியியக்கத்தில் ஈடுபடும் தொண்டர்கள் நாடெங்கும் பல்கிப் பெருகினர். ஆயினும், திருத்தொண்டர் களின் வரலாறொன்று முழுமையாக இல்லை. அதனால், பத்தியின் பயனையும் திருத்தொண்டின் சிறப்பையும் எளிதில் மக்கள் அறிந்து அவ்வழி நின்று ஒழுகுதற்குரிய வாய்ப்பு அருகிப் போயிற்று. புனைகதை வடிவிலமைந்து புகுந்த பிற சமயக் காப்பியங்கள் தமிழ் நாட்டில் தலையெடுக்கத் தொடங்கின. இந்தக் காலக் கட்டத்தில்தான் சேக்கிழார் தோன்றிச் செந்தமிழுக்கும் சிவநெறிக்கும் அரண் செய்தார். தமிழக வரலாற்றில் வேளாளப் பெருங்குடி மக்கள் சிறப்பான இடத்தைப் பெற்று வந்திருக்கின்றனர். தமிழக வேளாளப் பெருங்குடி மக்கள் தாளாண்மையிலும் வேளாண்மையிலும் சிறந்து விளங்கியதோடன்றி அரசவைகளில் அமைச்சர் களாகவும், அறங் கூறுவோர்களாகவும், பெரும்படைத் தலை வர்களாகவும், உற்றுழியுதவும் படை வைப்பினராகவும், பேரரசர்களுக்கு முடிசூட்டும் பொழுது அந்த அணி மணி

முடியினை எழிலுற எடுத்துக் கொடுப்பவர்களாகவும், மகட் கொடை நல்கும் மாண்பினராகவும் இருந்திருக்கின்றனர். இவர்களைத் திருஞான சம்பந்தர் தமது திருமுறையில் பாடிச் சிறப்பித்துள்ளார்.

"வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான்
தன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் தொல்கோயில்
வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையான்
மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே" –2. 42.3

என்பதூஉம்,

"நன்மையான் நாரணனும் நான்முகனும் காண்பரிய
தொன்மையான் தோற்றங்கே டில்லாதான்
தொல்கோயில்
இன்மையாற் சென்றிரந்தோர்க் கில்லையென்னா
தீந்துவைக்கும்
தன்மையார் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே"
–2. 42.6

என்பதூஉம் திருஞானசம்பந்தர் திருப்பாடல்களாம்.

இங்ஙனம் வழிவழிச் சிறந்த விழுத்திணை வேளாண் மரபில் – சேக்கிழார் குடியில், சேக்கிழார் அவதரித்தார். சேக்கிழார் குடியில் தோன்றி, விளங்கிய புகழ் படைத்ததால் அந்தக் குடியின் பெயரே, இவர் பெயராகச் சிறப்புற வழங்குவதாயிற்று. இவருடைய இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது. இவர் வாழ்ந்த காலத்தைக் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. ஆயினும், முதுபெரும் புலவர் க. வெள்ளை வாரணனார், சேக்கிழார் காலம் இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தின் பிற் பகுதியும், இரண்டாம் இராசராசனின் மைந்தனாகிய மூன்றாம்

குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தின் முற்பகுதியும் (இரண்டாம் குலோத்துங்கன் காலம் கி.பி. 1133–1150, மூன்றாம் குலோத்துங்கன் காலம் கி.பி. 1170–1218) என்று நுண்ணிதின் ஆராய்ந்து கூறியிருப்பதே சரியானதெனக் கருதலாம்.

## சேக்கிழாரின் சிறப்புக்கள்

சேக்கிழார், பிறந்த குடிக்கேற்ப இளமையிலேயே கல்வி, கேள்விகளிற் சிறந்து நுண்மாண் நுழைபுலம் உடையவராய் விளங்கினார். சேக்கிழாரின் அமைச்சுப் பொறுப்பால் சோழப் பேரரசு, புகழ் பெற்றது; அதுமட்டுமன்றிச் சிவ புண்ணியப் பேரரசாகத் திருவருட் சார்புடைய அருட் பேரரசாக விளங்கி இன்பம் பெருக்கிற்று. சேக்கிழார், கல்வியில் வல்லவராக இருந்தது போலவே, தேர்ந்து தெளியும் அறிவும் பெற்றிருந்தார்; சிவ நெறியில் சிந்தை கலந்த ஈடுபாடு கொண்டிருந்தார்; அருள் பழுத்த மனத்தராக விளங்கினார்; பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப்பாடும் கவியரசாக விளங்கினார். சேக்கிழாரின் நெஞ்சம், திருவருளில் தோய்ந்த நெஞ்சமாதலால், அவர் வாழ்வும் வளநிறை வாக்கும் அருளியலுக்கு ஆக்கந் தருவனவாக அமைந்தன.

## சேக்கிழாரைப் பாராட்டியோர்

சேக்கிழாரடிகள், அவர்தம் பெரிய புராணத்தை இனிதே தொடங்கி முடிக்க அம்பலத் தாடுவான் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்துச் சிறப்பித் தமையை வாழ்த்த வார்த்தைகளில்லை! அநபாயசோழனின் பேரரசு, அருளரசாகிய சேக்கிழார் பெருமானை அரசுக்குரிய மரியாதைகள் செய்தது. இல்லை, அரசனே அணிபெறு யானைமீதமர்த்தித் தான் பின்னிருந்து துணைக்கையால் இணைக்கவரி வீசிச் சிறப்பித்தான்! சேக்கிழாருக்குப் பிறகு வந்த அனைத்துக் கவிஞர்களும் சேக்கிழாரைச் சிந்தை குளிர வாழ்த்தியிருக்கிறார்கள். உமாபதி சிவம் திருத்தொண்டர்

புராண வரலாறு செய்து அதில் சேக்கிழாரை வாழ்த்தியுள்ளார். மாதவச் சிவஞான முனிவர், திருத்தொண்டத் தொகை நூலை விரித்துச் சொல்ல வல்லவர் சேக்கிழாரே என்று போற்றிப் பரவுகின்றார்.

*"தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி*
*வாக்கி னாற்சொல்ல வல்லபி ரானெங்கள்*
*பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்*
*சேக்கி ழானடி சென்னி யிருத்துவாம்"*

—காஞ்சிப் புராணம். சிறப்புப் பாயிரம். 17

*"திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத்*
*திணைவளமும் தெரித்துக் காட்ட*
*மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க்*
*குலக்கவியே வல்லான் அல்லாற்*
*கருத்தொண்டர் எம்போல்வா ரெவ்வாறு*
*தெரிந்துரைப்பார் கலந்தார்க் கின்பம்*
*அருத்தொண்ட ரணியிலவை யொன்றோடொன்*
*றியைந்தனவும் ஆங்காங் குண்டால்"*

—காஞ்சிப்புராணம். திருநாடு. 128

என்று பாடுகிறார்.

*"........................................................ சங்கரன்தாள் தமது*
*சிரங்கொள்திருத் தொண்டர்புரா ணத்தைஅள விடநஞ்*
*சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே"*

என்பது திருத்தொண்டர் புராண வரலாற்று (51)ப் பாட்டு. சேக்கிழாரைப் போற்றிப் பாராட்டாமையைத் திருப்பெருந் துறைப் புராண ஆசிரியர், "கடும் பிழை" என்று கூறுகிறார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, சேக்கிழார் பிள்ளைத் தமிழ் பாடிப் பரவித் துதித்துள்ளார். கவிச்சக்கர வர்த்தி கம்பன் போன்றோர், சேக்கிழாரின் செஞ்சொற்

களையும் அடிகளையும் அப்படியே எடுத்தாண்டு போற்றிப் பெருமைப் படுத்தியுள்ளனர்.

## பெரியபுராணம்

சேக்கிழார், திருத்தொண்டர் சீர்பரவும் செஞ்சொற் காப்பியத்தை "எடுக்கும் மாக்கதை" என்று பாடத் தொடங்கி னார். சேக்கிழார், தமது நூலுக்குப் பெரிய புராணம் என்று பெயர் சூட்டவில்லை. ஆனால், பெரியோர் வரலாற்றைக் கூறுவதாலும், ஓதுவோருக்குப் பேசரிய பெருமை சேர்ப்ப தாலும், பிறவாயாக்கைப் பெரியோன் பெருமையை - அப் பெரியோன் அடியார்க்கு எளியனாக எழுந்தருளிய அருமை யில் எளிய பெருமையை எடுத்து விளக்குவதனாலும், முன்னும் பின்னும் இதனை யொத்த பெருநூல் தோன்றாமை யாலும் பெரியபுராணம் என்று பாராட்டப் பெறுகிறது. தமிழில் புராணங்கள் பலவுண்டு. அவற்றில் சிறப்புடையன வும் உண்டு; சிறப்பில்லாதனவும் உண்டு. ஆனால், அந்த வரிசையில் பெரியபுராணம் வைத்து எண்ணத் தக்கதன்று. புராணம் என்று உலக வழக்கில் கூறினாலும் பெரியபுராணம் புனைந்துரைக்கப் பட்டதன்று. அஃதொரு வரலாற்று நூல்; வாழ்வாங்கு வாழ்ந்த சான்றோர்களின் சரிதநூல்; பத்திச் சுவை நலம் பாரிக்கும் பெருநூல்; இன்ப அன்பினை இடை யறாது விளைவிக்கும் இன்தமிழ் மறைநூல்; "திசை யனைத்தின் பெருமை யெல்லாம் தென் திசையே வென்றேற"ச் செய்த திருநூல்; "அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல"த் தோன்றிய அரிய பெரிய அருள்நிறை விறல்நூல்; தமிழ் மொழியின், "இசை முழுதும் மெய்யறிவும்" கொண்டு விளங்கும் முழுமுதல்நூல். சேக்கிழாரின் செஞ்சொற் காப்பியம் தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் தமிழினத்திற்கும் தனிப்பேரரணாக அமைந்த தோடன்றி ஆக்கமும் வழங்கியது. ஆதலால், சேக்கிழார் தந்த பெரியபுராணத்தினை ஆரக்கற்றுத் துய்க்கவேண்டும்; நாள்

தோறும் பெரியபுராணத்தை ஓதும் பழக்கம் மேற்கொண்டால் மலம் மடங்கும்; மனம் கரையும்; அருள் முகிழ்க்கும்; சங்கரன்தாள் சார்பு கிடைக்கும்.

## பெரியபுராணம்—வரலாறு

சேக்கிழார், திருத்தொண்டத்தொகையை முதல் நூலாகக் கொண்டு அந்நூலினின்றும் தொடங்கித் திருமுறைகள், திருக்கோவிற் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், சீர்சால் சாசனங்கள் ஆகியவற்றிலிருந்து அகச்சான்றும், செவி வழிச் செய்திகளாலமைந்த புறச்சான்றும் தேடி முறையான-குறைவிலா நிறைவுசேர் வரலாற்று நூலாகத் தமது பெரிய புராணத்தைச் செய்து தந்துள்ளார். பெரியபுராணத்தில் பேசப்பெறாத செய்தியில்லை; பத்தியென்ற ஆதாரசுருதியை அடிப்படையாகக் கொண்டு மனித குலத்திற்குத் தேவையான அனைத்துச் செய்திகளும் பேசப்பெற்றுள்ளன. சேக்கிழார் பெருமான் சிந்தையின் நிறைவையே அளவுகோலாகக் கொண்டு, "திரு நின்ற செம்மையுடையோர்" வரலாற்றை வகைபட விரித்துச் செய்துள்ளார். சமுதாயத்தின் அனைத்து மட்டத்திலும் அரனடிக்கு அன்புபூண்டு விளங்கிய அனைத்துப் பெருமக்களின் வரலாற்றையும் எந்தவித வேறுபாடுமின்றி இயல்புற எடுத்துக் கூறியிருக்கிறார்.

பெரியபுராணம் கடவுளைப்பற்றிப் பாடவில்லை; அதுபோலவே மனிதரைப்பற்றியும் பாடவில்லை! அடியார்க் கெளியராக விளங்கிய கடவுளையும், கடவுளுக்குத் தொழும்புபூண்டு கடவுளைத் தமது திருவுள்ளத்தில் எழுந்தருளச் செய்துகொண்ட அடியார்பெருமக்களைப் பற்றியுமே சேக்கிழார் பாடினார். அஃதாவது, அடியார் வழிபட்ட கடவுளையும், கடவுள் வழிப்பட்ட அடியார்களையுமே பாடினார். கயிலாயத்தின் உச்சியிலுள்ள இறைவனைப் பாடாமல் ஆரூர்த் திருவீதியில் நடந்த அண்டர் நாயகனையும், அருள்நிறை தில்லையில் அம்மை காண ஐந்தொழிற்

கூத்தியற்றும் அம்பலவாணரையுமே பாடினார்; அரண்மனை வசித்தோரைப் பாடவில்லை; அவர்களில் அரனடிக்கு ஆளானோரையே பாடினார்.

பெரியபுராணத்தில் பாடப்பெற்றுள்ள பெருமக்கள் வாழ்வாங்கு வாழ்ந்து வெற்றிபெற்ற நற்றவச் சான்றோர்கள். பெரியபுராணத்தில் வருகின்ற அடியார்களுக்குப் பத்தி யுண்டு. ஆனால், பத்தியென்ற ஒரு தகுதி கருதியே சேக்கிழார் பாடிவிடவில்லை. சீலத்திலும் நோன்பிலும் செறிவிலும் அறிவிலும் ஆராஅன்பிலும் அருளிலும் சிறந்து விளங்கிப் பத்திமையும் கொண்டு ஒழுகியவர்களைத்தாம் சேக்கிழார் பாடினார். வாழ்க்கையைக் குறிக்கோளுடையதாகக் கொண்டு குறிக்கோளையடையும் உறுதியும் பூண்ட - இன்பத் துன்பங்களைப் பொருட்படுத்தாது இலட்சியப் பயணம் செய்த தவச் செல்வர்களைத்தாம் சேக்கிழார் சிந்தை குளிர, உளம் குளிர வாழ்த்துகின்றார். பத்திமைப்பாங்கில் நின்றவர் களும் திருத்தொண்டின் நெறியில் நின்றவர்களுமே போற்றப் பட்டிருக்கிறார்கள். “மாதேவர்க்கு ஏகாந்தராக” ஒழுகித் தங்கள் வாழ்க்கையை உயர்த்திக் கொண்டவர்களாகிய அடியார் பெருமக்களின் வாழ்க்கையை எந்த வேறுபாடும் கருதாது திருத்தொண்டின் தகுதி ஒன்றையே தகுதியாகக் கருதிப் பெரியபுராணத்தைப் பாடியிருப்பதொன்றே அஃதோர் உலகப் பொதுநூல் என்பதற்குச் சான்றாகும்.

## பெரியபுராணத்தில்—ஆடவர்

பெரியபுராணத்தில் பாடிச் சிறப்பிக்கப் பெற்றுள்ள பெருமக்கள் நிறைநலம் பெற்று விளங்கியவர்கள். ஒரோ வழி, குறைநலம்போலத் தோற்றினாலும் அக்குறை தடிப்புடைய தாக இருந்ததில்லை. அதுமட்டுமின்றி இறை சார்பான வாழ்க்கைக்கு அக்குறை தடை செய்ததாகவும் இல்லை. திருநீலகண்ட நாயனார், வழிபாட்டில் ஈடுபாடு கொண்டவர்; “பொய் கடிந்த அறத்தில்” வாழ்ந்தவர்;

"மெய்யடியார்களுக்கு வேண்டும் பணிசெய்யும்" நெறியில் நின்றொழுகியவர்; "வையகம் போற்றும்படி மனையறம்" மேற் கொண்டு வாழ்ந்தவர்; "சைவமெய்த்திருவின் சார்பே" சார்பெனக் கொண்டொழுகியவர்; ஆயினும் "இளமை மீதூர இன்பத்துறையினில் எளியரானார்." ஆனாலும், கற்பும் பொற்பும், கடவுட் பற்றும், கணவரையும் திருத்தும் கடமை யும் உரிமையும், தகை சான்ற சொற்காக்கும் தன்மையினு நீங்காத அவர் தம் மனைவியின் ஆணைக்குப் பின்பு, எந்த இன்பத் துறையில் எளியராக முன்பு விளங்கினாரோ, அந்த இன்பத் துறையை முற்றிலும் மறந்து, மனையில் தங்கியொழுக அவரால் முடிந்ததென்றால் அவர் தம் குறை, குறையாகவே தெரிவதற்கில்லை.

வாழ்க்கை, பெரும்பாலும் இயற்கையோடியைந்தது. இயற்கையோடியைந்த இனிய செயல்களைக் கூடப் பலர் செய்ய முடியாமல் அல்லற்படுகிறார்கள்! இவறிக் கூட்டுதல் செயற்கைப் பண்பே. ஈத்துவத்தல் இயற்கைப் பண்பே. துன்பம் விளைத்தல் செயற்கைப் பண்பே. துன்பகற்றி இன்பம் விளைத்தல் இயற்கைப் பண்பே. நன்றிமறத்தல் செயற்கைப் பண்பே. நாளும் நன்றியறிதல் இயற்கைப் பண்பே. ஆயினும், இங்குக் கூறிய இயற்கைப் பண்புகள் மன்பதையுலகில் விளங்கித் தோன்றுதல் அருமையாகவே இருக்கிறது. செயற்கைப் பண்புகளே விஞ்சி, எங்கும் துன்பத் தொடக்குகளையே பார்க்கிறோம். ஆனால், இயல்புக்கு மாறான எவரும் செய்ய இயலாத அதீத ஒழுங்குகளையும் ஏற்றுக்கொண்ட அடியார்களையும் பெரியபுராணத்தில் பார்க்கிறோம்.

இயற்பகை நாயனார் வரலாறு, இதற்கோர் எடுத்துக் காட்டு. ஈதலைக் கடமையாகக் கொண்டாலும் அதற்கோர் உலகியல் வரையறை உண்டு. அதுவே உலகத்தியற்கை. ஆனால், இயற்பகையார் வரையறைக்குட்படாத ஈதற் பெருங்கொள்கையை வாழ்க்கையின் நோன்பாகக் கொண்டார். இதனை,

"........................................................................ யாரேனும்
வேண்டும் யாவையும் இல்லைஎன் னாதே
இக்கடற்படி நிகழுமுன் கொடுக்கும்
இயல்பின் நின்றவர் உலகியற் பகையார்" (2)

என்ற அடிகளால் அறியலாம். எம்பெருமான், அடியார்கள் அன்பினை உலகோர் உணர அளந்து காட்டி அவருள் நின்று அனுபவிப்பவர். அங்ஙனம் அவர் அளக்கும் பொழுதெல் லாம் அன்பு, ஆரா அன்பாக முறுகி வளர்கிறது. எம்பெருமான் தூர்த்த வடிவத்தில் வந்து இயற்பகையாரை அணுகி, "இரக்க வந்தனம்" என்றார். இவ்வாறு ஒருவர்வந்து இரப்பின் அது கேட்ட யாரும், "நியாயமாகத் தகுதியுடை யதைக் கேள். இயன்றால் தருவேன்" என்று கூறுவதே எதிர்பார்க்கக் கூடியது. ஆனால், இயற்பகையாரோ,

"யாதும் ஒன்றும்என் பக்க லுண்டாகில்
அன்னதெம்பிரான் அடியவர் உடைமை
ஐயம் இல்லைநீர் அருள்செய்யும்" (7)

என்று கூறுகிறார். இந்த ஒரு பதிலில் ஒன்றுக்கு மூன்றாக, உறுதிச் சொற்களை அடுக்கித் தமது, இல்லையெனாது ஈயும் ஒழுக்கத்தை உறுதி செய்கிறார் இயற்பகையார். இங்கே இயற்பகை நாயனாரின் ஈதற்குரிய வரையறை இரக்கப்படும் பொருள் அவர்பால் இருக்கவேண்டும் என்பது ஒன்றேயாம். அதுவும்கூட இயற்பகையார் கொடுக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அப்பொருள் இரக்கப்பட்டவுடன் உடைமையின்மீது தமக்குரிய உரிமையை விலக்கிக் கொண்டு, இரப்பவரின்-அடியவரின் உடைமையாக்கி விடுகிறார். வந்த தூர்த்தர், கேட்கக்கூடாத ஒன்றைக் கேட்டுவிட்டார். கேட்ட தில் வேண்டுமானால் குறையிருக்கலாம். அதுவுங்கூடக் கேட்ட சொல்லளவில்தான் குறை; சிந்தையிற் குறையில்லை; செயலிற் குறையில்லை! ஏதாவது ஒன்று குறையா, நிறையா என்பதையறியச் செயல்மட்டும் அளவன்று, அச்செயலின்

நோக்கம் பற்றியும் ஆராய்தல் வேண்டும். இன்றைய தீங்கியல் சட்டம் கூட, ஒருசெயல் தீங்கெண்ணத்துடன் (Malice) அல்லது நேர்மையற்ற நோக்கத்துடன் (Improper motive) செய்தால்தான் குற்றம் என்று கருதுகிறது. வந்தவர் கேட்பதற்கு முன்பேயே திட்டமிடுவதையும் அத்திட்டத்தின் நோக்கத்தையும் சேக்கிழார் காட்டியுள்ளார். அதன்படி மனைவியைக் கேட்டதில் கேட்டார்க்கு நேர்மையற்ற நோக்கமோ, தீங்கெண்ணமோ இல்லையென்பது வெளிப் படை. இரந்து கேட்டதன் நோக்கத்தை,

"தொண்டர்மறாத வண்ணமும் காட்டுவான் வந்தார்"

(4)

என்று சேக்கிழார் அவ்வாய்மை தோன்றப் பாடுகின்றார். இயற்பகையாரின் மனைவியை வந்தவர் இரந்து கேட்டதன் நோக்கம் இயற்பகையாரின் இல்லையெனாது கொடுக்கும் திறத்தை அறிந்துகொள்ளக் கூட அன்று, உலகிற்கு அவர்தம் கொள்கையின் உறுதிப்பாட்டைக் காட்டவேயாகும். அஃதாவது, இயற்பகையாரின் கொடைத்திறத்தினை உலகிற்கு உணர்த்தவேயாம். இச்செயல் முடிந்தவுடன் அஃதாவது இயற்பகையார் மறுக்காமல் அவருடைய மனைவியைத் தந்தவுடன் இச்சோதனை முடிந்துவிடுகிறது. அங்கே வேறு தவறான பொருள் கற்பிக்க இடமில்லை; ஏதுவு மில்லை. ஆனால், சிலர் இந்த அருமைப்பாட்டினை அறிய முடியாமல் இந்தப் பண்பினைத் துய்த்துணரும் தூய அனுபவமில்லாமல் தவறாக எழுதியும் பேசியும் வருகி றார்கள்! இயற்பகையார் கொடுத்த வாக்குறுதியின்படி மனைவியைக் கொடுக்கின்றார். சிலமணித்துளிகளிலேயே இறைவன் மறைகின்றான்! உலகு உணர்கிறது, இயற்பகையார் கொடைத்திறத்தை!

இங்ஙனம், சேக்கிழார் எடுத்துக்காட்டும் நாயகர்கள் குறிக்கோளுடையவர்கள். அக்குறிக்கோளை நெஞ்சில்

நடுக்கமின்றி, இன்பம் விழையாது இடும்பை இயல்பெனக் கொண்டு ஏற்றுத் தம்குறிக்கோளினையும் அதனைச் சாரத்திருவருளையும் அடைந்தனுபவித்தார்கள்.

## பெரியபுராணத்தில் மகளிர்

சேக்கிழார் படித்துய்யப் படைத்துக் காட்டும் மங்கையர் திலகங்கள் "பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்ற வினாவுக்கு விளக்கங் கூற வந்த பாத்திரங்களாவர். நமது இன, சமய வரலாற்றில் மங்கையர் பெற்றிருக்கும் சிறப்பு, பெருஞ்சிறப்பாகும். ஆடவர் தடம்புரண்டாலும் அவர்கள் தடம்புரளாது நெறியில் நின்றொழுகி வாய்மை வரலாற்றை வளப்படுத்தியிருக்கிறார்கள். சிலம்பில், கற்புக் கரசி கண்ணகி, மங்கை நல்லாள் மாதவி ஆகியோர் நிறை நெறியில் நின்று ஒழுகியவர்கள். கோவலன் ஒருதடவைக் கிருதடவை நெறிபிறழ்ந்தான். முறைபிறழாப் பேரரசுக்குப் பேர் போன பாண்டியப் பேரரசனும் அரசியல்நெறி பிழைத் தான். கூன்பாண்டியன் மாறவர்கன் அரிகேசரி தொன்று தொட்டுத் திருவருளால் தன் நாட்டில் நின்று நிலவியதும், தான் நின்றொழுகிப் பேணிக்காக்கவேண்டியதுமான பெரு நெறியை மறந்து "கொல்லாமை மறைந்துறையும் சமண்சமயம் குறுகினான்." ஆனால், வளவர்கோன் பாவையராகிய மங்கையர்க்கரசியார் மாறவில்லை. மாறாத தோடன்றிப் பாண்டிய நாட்டைச் சிவநெறியில் மீட்டும் முன்போல் நிலை நிறுத்தும் வரலாற்றுப்புகழ் மிக்க சாதனையையும் செய்து முடித்தார். அதனாலன்றோ சேக்கிழார் "மங்கையர்க்குத் தனி யரசி எங்கள் தெய்வம்" என்று வாழ்த்துகிறார். பரமதத்தன் தனது வாழ்க்கையிற் பங்கேற்ற அருமை மனைவி புனிதவதி யார்க்கு ஒரு கனி வேண்டும் என்ற உணர்வின்றிக் கனிகள் இரண்டையும் கலத்திலிடப் பணித்தான். ஆனால் தவக் கொழுந்து புனிதவதியார் தாம் துய்க்கும் வேட்கையின்றி விருந்தும் கொழுநனும் துய்க்கவே விரும்பினார். ஏன்? ஏழாம்

நூற்றாண்டில் தமிழகவானில் இருள் கடிந்தெழுந்த ஞாயிறாக உலாவிய தமிழாளியர், தமிழ்த்தலைவர் திருத்தொண்டின் நெறிக்காவலர், எவ்வுயிர்க்கும் இரக்கம் இதயத்தே இயல் பாகவே கொண்டவர், முடியாட்சியை மறுத்திட்ட முதற் புரட்சிவீரர், பழுதிலாத் துறவறம் பூண்டவர், முன்னமே சிவத்தினைப் பிரியாத சிந்தை பெற்றவராக விளங்கிய நந்தம் குலமுதல்வர் மறையாசிரியர், வழித்துணை மாமருந்து அப்பரடிகளே கூடத் தொடக்கத்தில் தடம்புரண்டார்; தவமார் சிவநெறியகன்று அவமுறுஞ் சமண்நெறி நின்றார். அப்பருக்குத் தமக்கையாராகவும் அதிகையப்பருக்கு அணுக்கத் தொண்டராகவும், தவத்திற்கொரு கொழுகொம் பாகவும் தூண்டு தவவிளக்காகவும் திருவாளன் திருநீற்றின் திருநிறையாற்றலை விளக்க வந்தருளிய தந்நிகரில் தண்ணிலா வாகவும், தமிழினவரலாற்றை–தமிழகச் சமய வரலாற்றைத் தொய்வுவிழாமல் தூக்கி நிறுத்திய வரலாற்றுச் சிற்பியாகவும் விளங்கி, உயிர்க்குரிய நெறிபேணித் தந்தமையால் தமிழினத் திற்கு அன்னையினும் மேம்பட்ட அன்னையென நினைந்து நினைந்து வாழ்த்தி வணங்குதற்குரிய அன்னை, திலகவதியார் தடம்புரளவில்லை. இங்ஙனம், நாம் கூறுவதால் ஆடவருலகம் வருந்த வேண்டியதில்லை. நமது வரலாறு இப்படித்தான் அமைந்திருக்கிறது! இனிவரும் வரலாற்றிலாவது ஆடவர் தடம் புரளாமல் தகுதிப்பாட்டுடன் நெறிநின்றொழுகிப் புகழ் சேர்க்க வேண்டும். எந்த இனத்தின் வரலாற்றுக்கும் தூய்மை மாறாத் தாய்மையுலகம் சிறப்புற்றிருப்பது பெருமைக்குரியதே யாம்.

## பெரியபுராணத்தில் மக்கட்பேறு

> *"மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்*
> *நன்கலம் நன்மக்கட் பேறு"* (60)

என்பது குறள். மக்கட்பேறு உலகியற்கை. ஆனால், நன்மக்கட் பேறு இயல்பாக அமைவதன்று; குடும்பத் தலைவனும்

தலைவியும் நோன்பிருந்து பெற வேண்டிய ஒன்று. திருஞான சம்பந்தரை ஈன்று புறந்தந்த குடும்பத்தின் பெருமையை என்னென்று கூறிவாழ்த்துவது? வீட்டுக்குப் பிள்ளை தேடுவோர் பலர். ஆனால், சிவபாத இருதயர் நாட்டுக்குப் பிள்ளை வேண்டினார். ஞாலமுய்ய நாமுய்ய நாளும் சைவ நன்னெறியின் சீலமுய்ய மகப்பேறு வேண்டினார். இதனைச் சேக்கிழார்,

"........... பரசமய நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றும் தவம்
புரிந்தார்" —12. சம்பந்தர்–19

என்று புகழ் பொருந்தக் குறிப்பிடுகிறார். இங்ஙனம், திருத்தோணிபுரத்திலிருந்த ஈசனை ஊற்றெழும் அன்பால் வழிபட்ட தாயின் மணிவயிற்றில் திருஞானசம்பந்தர் தோன்றினார். அருளியல் தவம் செய்து பெற்ற குழந்தை யாதலால், ஞான மதலையாக இருந்தது. மூன்று வயதில் அழுகிறது! உடலுறவாகிய சீகாழித் தந்தை தாயரை நினைந்து அழவில்லை. உயிர்க்குத் தாயும் தாதையுமாகிய மங்கை பங்கனை நினைந்து அழுகிறது! வேதங்கள், "ஐயா!" எனத் தேடியலையும் பரம்பொருளை விரலாற் சுட்டிக் காட்டிக் குறிகளும் அடையாளமும் நின்றதோர் கோலமும் குறித்துணர்த்தி நம்மையாட்கொண்டது அந்தக் குழந்தை!

சேக்கிழார், பொறுத்தாற்றும் பண்பை வாழ்த்துகிறார்! ஆனால், அதே திருவாயினால் ஒறுத்தாற்றும் பண்பாம் வெகுளியையும் வாழ்த்துகிறார். ஆனால், சேக்கிழாரிடத்தில் முரண்பாடில்லை. வெகுளாமை ஓதிய திருவள்ளுவரும், வெகுண்டு ஓதிய இடங்கள் உண்டு. வெகுளல் இடம் பொறுத்து நன்றாகவும் தீதாகவும் அமைகிறது. தற்சார்பான நலன்கள் கருதி வெகுளல் தீது. சமுதாயப் பொது நீதி–பொது நியதி கருதி வெகுளல் நன்று. மெய்ப்பொருள் நாயனாரின் பொறுத்தாற்றும் பண்பைச் சேக்கிழார் வாழ்த்துகின்றார்.

மெய்ப்பொருள் நாயனாருக்கு வந்த தீங்கு அவருக்கேயாம். ஆங்கு, அவருடைய பொறுத்தாற்றும் பண்பே அறம். சண்டீச ரின் வெகுளியைச் சேக்கிழார் வாழ்த்துகிறார். சண்டீசர் வரலாற்றில் சண்டீசருக்குத் தீங்கு வரவில்லை. சண்டீசரின் தந்தை அவரைத் திட்டி மொத்தியபோது பொறுத்தாற்றும் பண்பே மேற்கொண்டார். ஆனால், கல் தோன்றி மண் தோன்றாக் காலம் தொட்டு முன்னைப் பழைமைக்குப் பழமையாய், எல்லார்க்கும் முன்னே முளைத்ததாய், தமிழக வரலாற்றின் மையமாக-தமிழினத்தின் வழிபாட்டுச் சின்னமாய் விளங்கிவந்த சிவலிங்கத் திருமேனியைத் தீண்டிச் சிதைக்க முனைந்தமையைச் சண்டீசரால் தாங்கிக் கொள்ள முடிய வில்லை. அதனால் வெகுண்டு, பெற்ற தாதையின் தாளைத் தடிந்தார். தனி மனிதர்கள் வரலாம், போகலாம். ஆனால், ஒரு நாட்டின் வழிவழி வளர்ந்து வரும் நாகரிகம் தனி மனிதரினும் விழுமியது; பெரியது. தனி மனிதர் தம்மை இழந்தாவது அந்த நாகரிகத்தினைக் காப்பாற்ற வேண்டும். இதுவே, வாழ்வாங்கு வாழ்பவரின் சீலம். இன்றோ, நம்மில் பலருக்கு 'நாமே' தான் பூதாகாரமாக வளர்ந்திருக்கிறது. 'நம்'முடைய ஏற்றமும் இழிவுமே முதனிலைப் படுத்தப்படு கின்றன. வழிவழி வளர்ந்துள்ள நெறிமுறைகளில்-நாகரிகப் பண்பில் நமக்கு ஊற்றமில்லை. அவற்றைப் பேணி அரண் செய்து காக்க வேண்டுமென்ற பெருவிருப்பமில்லை. ஆனால், ஆண்டின் இளையராகிய சண்டீசருக்கிருந்த நெறிமுறைப் பிடிப்பை நாம் அனைவரும் பின்பற்றி ஒழுகவேண்டும்.

சேக்கிழார் காப்பியத்தில் ஆண்டில் இளையருண்டு. ஆனால், ஞானத்தில் இளையர் யாருமிலர். அப்பூதியடிகளின் அருமந்த புதல்வன் மூத்த திருநாவுக்கரசை-அவன்றன் பண்பை எங்ஙனம் எடுத்துக் கூறுவது? அப்பரடிகளுக்கு அமுது படைக்க இலை அரிந்து வரும்படி ஆணை தருகிறார் அன்னை அத்தர். வேடிக்கை பார்க்கும் வயதுடைய சிறுவன் விரைந்து ஓடுகிறான். அவர்தம் ஆணைக்காக ஓடாமல், அவ்

ஆணை தனக்குக் கிடைத்தமை குறித்து அளப்பிலா மகிழ்வெய்துகின்றான். "நல்ல தாய்தந்தை ஏவ நானிது செயப் பெற்றேன்" என்று மூத்த திருநாவுக்கரசு பேசுவதாகச் சேக்கிழார் அருளிச் செய்திருப்பது நினைந்து நினைந்து இன்புறத் தக்கது. நச்சரவம் தீண்டிய பிறகும், அப்பரடிகள் அமுது செய்தல் காலந் தாழ்க்கலாகாது என்று கருதி, நஞ்சின் வேகத்தோடு போராடி ஓடிவந்த மூத்த திருநாவுக்கரசின் இனிய பண்புகளை எண்ணும்பொழுது பண்டு பழுத்த முதுமை முழுத்தவத்தையுடைய உயிர் ஒன்று இன்று இவ்விளமையுடலில் உலாவியதோ என்று எண்ணத் தோன்றுகிறது!

## பெரியபுராணத்தில் பணிஆள்

வாழ்க்கையை இன்பமாக்கத் தேவைகள் பலப்பல. அவற்றில் இன்றியமையாதது. பணியாள் அமைதல். கருத்திற் கிசைந்த ஆற்றலுடைய பணியாட்கள் அமைதல் அருமை யிலும் அருமை. நல்ல பணியாட்கள் கிடைக்காதவர்கள் இளமையிலேயே கிழட்டுத்தன்மையடைகிறார்கள்! பணி கொள்வோரின் இளமைக்கும் எழுச்சிக்கும் இன்பத்திற்கும் பணியாட்களே பொறுப்பு. காலத்தின் தேவையறிந்து செய்வோர் சிறந்த பணியாட்கள். குறிப்பறிந்து செய்பவர்கள் பரவாயில்லை! சொல்லிச் செய்பவர்களும் ஓரளவு நல்லவர்களே! சொல்லியும் செய்யாதவர்கள் சொர்க்கத்தின் கதவை அடைப்பவர்கள்! சிலர், குறிப்பில் உணர்ந்து தெளி வாக விடைதருவர், பலரிடமிருந்து கேட்டுக் கேட்டுத்தான் பதில்பெற வேண்டும். அப்படியே பதில் கூறினாலும் தெளிவாகக் கூறமாட்டார்கள். இவர்களெல்லாம் பணியாட் களெனப் பயனின்றி உலவிப் பிணியைத் தருபவர்கள்!

சேக்கிழார், அப்பூதியடிகளுக்கு வாய்த்த பணியாளை அறிமுகப்படுத்துகிறார். அப்பணியாள் அப்பூதியடிகளின் தண்ணீர்ப்பந்தலில் வருகின்றவர்களுக்குத் தண்ணீர்

வழங்கும் பணியாள். அவரை அணுகினார் அப்பரடிகள். "அப்பரடிகள் பெயரால் இத் தண்ணீர்ப் பந்தல் அமைத்தது யார்?" என்று கேட்கிறார். அப்பூதியடிகளின் பணியாள் தெளிவாக விடை தருகிறார். அந்த விடையில் அப்பரடிகளின் பெருமை, அப்பூதியடிகளின் சிறப்பு, அப்பூதியடிகள் ஆற்றிய பிற அறங்கள் அனைத்தும் விளக்கமாகக் கிடைக்கின்றன. அடுத்து அப்பரடிகள் "அவர் எவ்விடத்தார்?" என்று வினவுகின்றார். அதற்கு எளிமையாக இன்றையப் பணியாளாக இருப்பின் "இந்த ஊர்தான்" என்று கூறுவர். ஆனால், அப்பூதியடிகளின் பணியாள், அந்த வினாவுக்குக் கூறிய விடை அடுத்து வினாக் கேட்க முடியாதவண்ணம் விளக்கமாக அமைந்திருக்கிறது. இத்தகு பணியாட்களைப் பெற நாம் தவம் செய்தோமில்லை; என்ற ஏக்கம் வருகிறது! அந்தப் பணியாள் தந்த விடை.

*"துன்றியநூல் மார்பருமித் தொல்பதியார்,*
*மனையின்கண்*
*சென்றனர், இப் பொழுது, அதுவுஞ் சேய்த்தன்று*
*நணித்து"*

என்பது. இங்ஙனம் சிறந்த பணியாட்களின் இயல்புகளைச் சேக்கிழார் செப்பும் முறைமை அறிந்து பாராட்டுதலுக் குரியது; பயன் பெறுதற்கும் உரியது.

## பெரியபுராணத்தில் நட்பு

ஒருவர் வாழ்க்கை சிறப்புற ஓர்ந்துணரும் ஒப்பில்லா நட்பு இன்றியமையாதது. காதலிலும் நட்பே விழுமியது, காதலின்றி வாழலாம். ஆனால், நட்பின்றி வாழமுடியாது. நட்பு, மிகமிகத் தூய்மையானது. சேக்கிழார், நட்பின் இலக்கணத்தைத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றார். நட்பு என்பதும் தோழமை என்பதும் ஒரு பொருள் குறிக்கும் சொற்களேயாம். சுந்தரர், சிவபெருமானையே வலிய வந்து

பொருந்திய வளமார் தோழராகப் பெற்றார்; வாழ்க்கை பெற்றார். ஆனால், சிவபெருமானோ யாதும் பெற்றாரல்லர். தோழமை என்பது வாணிகமன்று. ஒன்றைப் பெறுதற்காகவே நட்புக் காட்டுவது, நட்பாகாது; தோழமையுமாகாது. அது தொல்லையைத் தரக்கூடிய சதியாகும். சுந்தரர், சிவபெருமானைத் தோழமையாகப் பெற்றது, ஒன்றைப் பெற்றுவிட வேண்டும் என்று திட்டமிட்டுச் செய்ததன்று. தோழமை கனிந்தது! நட்பு வளர்ந்தது! சுந்தரருக்குத் தேவைகள் தோன்றின. அப்போது தேவையை நிறைவேற்றக் கூடிய பேராற்றல் தம்முடைய தோழனுக்கு இருந்ததால், கேட்டுப் பெற்றார். சுந்தரர் விரும்பிய வெல்லாம் தந்தருளித் தோழமை காட்டினான் சிவபெருமான்! கழுது கண் படுக்கும் பானாளிரவில் காரிகைபால் தோழனுக்காகத் தூது சென்ற கண்ணுதற் பெருமானின் தோழமைப் பண்பை என்னென்று கூறுவது! சுந்தரர் வரலாறு முழுதும் நட்பின் இயல்புகளைச் சேக்கிழார் விரித்துப் பேசியுள்ளார். அதனைப் படித்து உணர்தலே நல்லது.

## பெரியபுராணம் காட்டும் மனையறம்

பெரியபுராணம், தவத்திற் சிறந்த சீலர்களின் வரலாற்றைத்தான் பேசுகிறது. ஆனால், இங்குத் தவமென்பது, தமிழகத்தில் காலத்தால் பின்னே வந்த இயற்கையோடியை பில்லாத தவமன்று; துய்ப்புணர்வுக்குரிய பொருள்களிலிருந்து அகன்று நின்று. "அவா அறுத்தேம்" என்பது பொய்யுரையே யாம். பொருளுடையவராக இருந்தும் அதனிடத்துப் பற்றின்றிப் பலருக்கும் பகுத்துப் பயன்பட வாழ்தலே சீலத்தில் சிறந்த தவநெறியாகும். தண்ணீரில் கிடக்கும் தாமரை தான் தண்ணீர் ஒட்டாமல் வளர்கிறது. தாமரையிலைமேல் தண்ணீர் கிடந்தாலும் தண்ணீர் அகற்றப்படும் பொழுது, அந்த இலைக்கு வடுக்களோ அல்லது வற்றாத பசையெனப்படும் ஈரமோ ஏற்படுவதில்லை.

மாறாகத் தண்ணீர் கிடந்த சுவடுகூடத் தெரிவதற்கில்லை. அப்பரடிகள், யாதும் சுவடு படாமல் ஐயாறடைந்தேன் என்று கூறுகிறார்.

> "மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான்
> மகளொடும் பாடிப்
> போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின்
> புகுவேன்
> யாதுஞ் சுவடு படாமல் ஐயாறடை கின்றபோது
> காதன் மடப்பிடி யோடுங் களிறுவருவன கண்டேன்
> கண்டே னவர்திருப் பாதம் கண்டறி யாதன
> கண்டேன்"

என்பது அப்பர் திருப்பாடல். இங்குச் சுவடு என்பது உயிர்ச் சுவடுகளாகும். உயிரின் விருப்பும் வெறுப்பும், பற்றும் பாசமும் உயிரில் பதிந்து, அதுவே ஊழாக உருவம் பெற்றுப் பின்னைப் பிறப்பை வழங்குகிறது. ஆதலால், சிறந்த சமய வாழ்க்கையென்பது உயிரில் தன்னலச் சுவடுகள் அழுந்திப் பதியா வண்ணம் தற்காத்துத் திருவருட் பதிவும், திருத் தொண்டுணர்வின் சுவடும் பெறவாழும், பெருவாழ்வாகும். அப்பரடிகள். அங்ஙனம் வாழ்ந்த, உலக வரலாறு கண்டறியாத ஒரு நிறை நலம் சான்ற, ஞானி. அவர்தம் சிந்தையில் சிவத்தின் பதிவைத் தவிர வேறு பதிவில்லை. அவர்தம் திருமேனியிலும் சிவத்தின் உடைமையென்பதை வெளிப்படுத்தச் சூலமும் இடபமும் பொருந்திய இலச்சினை களையும் கொண்டு திகழ்ந்தார். புறத்துங் காட்டப்படுவது போன்று சிவபெருமான் திருவருளால் கயிலைக் குளத்தில் மூழ்கித் திருவையாற்றுக் குளத்தில் எழுங்கால் இடை நிலங்களில் அப்பரடிகளின் திருவடிச் சுவடு சிறிதும் பதியாத பாங்கமைந்தது.

ஆதலால், தவம் என்று தமிழ்ச் சான்றோர் கருதியது, உடற் பழக்கத்திற் கியைந்த தவச் செயல்களையல்ல. "தவமும்

தவமுடையார்க் காகும்" என்ற வள்ளுவமுங்கூட, உடலாற் செய்யும் தவநெறிச் செயல், உள்ளத்தால் தவமுடையார்க்கே யாகும் என்ற கருத்தில் கூறப்பட்டதாகும். அஃதன்றி,

> *"நீர்பலகால் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்*
> *சோர்சடை தாழச் சுடரோம்பி–ஊரடையார்*
> *கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்*
> *வானகத் துய்க்கும் வழி"* (புறப்பொருள் வெண்பாமாலை)

என்று இலக்கணம் கூறினாரேனும், அது தமிழக வழக்கில் மிகுதியும் இல்லை. தவம் பயிலுதற் கேற்ற இடம், வீடன்று காடு என்ற கருத்து தமிழர்க்கில்லை. மனையகன்று வாழ்வோரே மாதவம் இயற்ற முடியும் என்ற நம்பிக்கை தமிழர்க்கில்லை. சிவபெருமான் தவநிறை செல்வி சங்கிலியா ரிடம் சுந்தரரை மணக்கத் தூதுசென்று கேட்கும்பொழுது, சுந்தரரைச் சங்கிலியாருக்கு அறிமுகப்படுத்திக் கூறும் பொழுது,

> *"சால என்பால் அன்புடையான்*
> *மேருவரையின் மேம்பட்ட தவத்தான்"* (239)

என்று சேக்கிழார் அருளிச் செய்துள்ள அருமை அறிந்து இன்புறத்தக்கது. எந்த ஒன்றும் இன்புறுதல் என்ற அடிப்படையில் செய்தால் அவமாகவும், இன்புறுத்தல் என்ற அடிப்படையில் செய்தால் தவமாகவும் ஆகும். சுந்தரர், இறைவனைப் பொன் கேட்டுப் பெற்றார்; நறுமணங்கமழ் சாந்து கேட்டுப் பெற்றார்; நங்கையர் இருவரை அவன் மூலமே கேட்டுப் பெற்றார். ஆயினும், யோக நெறி நின்றார் என்றே மரபுவழி மாறாது கூறும். சேக்கிழாரும்,

> *"தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான்*
> *திருவருளால்*
> *மின்னாருங் கொடிமருங்குல் பரவையெனும்*
> *மெல்லியல்தன்*

*பொன்னாரும் முலையோங்கல் புணர்குவடே சார்வாகப்*
*பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் மேவினார்"*

(181)

என்றருளிச் செய்துள்ளார். ஆதலால், தவம் அடிப்படைத் தளமாகிய மனையறத்திலும் நிகழ்த்த முடியும் என்ற நம்பிக்கையைத் தோற்றுவிப்பதே பெரியபுராணம்.

திருநீலகண்ட நாயனார் அவர்தம் அருமை மனைவியுடன் நிகழ்த்திய மனையறம் பேரறம் மட்டுமன்று; பெருமைக்குரிய பெருந் தவமுமாகும். கணவன் மனைவியரிடையே உளங் கலந்த உறவு தேவை. அவர்களது உறவு முறையில் சிக்கல்கள் தோன்றலாம். ஆனால், அந்தச் சிக்கல்களை அவர்களே தீர்த்துக் கொள்ள வேண்டும். மற்றவர் நுழைவுக்கு இடமில்லை. அங்ஙனம் அமையும் மனை வாழ்க்கையே பொறப்புடைய புனித வாழ்க்கை! அதனாலன்றோ, வாழ்க்கைத் துணை நலம் வகுத்து வள்ளுவம்,

*"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்"* (56)

என்று பேசியது. திருநீல கண்டரும் சரி, அவருடைய மனைவியாரும் சரி, அவர்களுக்கிடையே ஏற்பட்ட சிக்கலை முறிவுக்குக் காரணமாக்காமலும் உணர்ச்சி வழிப்பட்ட உறவுக்குத் தடையாக இல்லாமலும் அயலறியா வண்ணம் வாழ்ந்த முறை வியந்து பாராட்டுதற்குரியது.

வேளாண் பெருங்குடியில் தோன்றிய இளையான்குடி மாறனார் முறையாக மனையறம் நிகழ்த்தியவர்; குறைவறச் செல்வம் பெற்றவர்; செல்வத்தின் பயனை, அடியார் பெருமக்களுக்கு மண்டுகாதலொடு அமுது செய்வித்து அனுபவித்தவர். அவர்தம் அருமைப் பத்தினி இந்தப் பணியில் இளையான்குடி மாறனாருக்கு இணைபிரியாத் துணையென நின்றார். இளையான்குடிமாறனாரின் வளம்

சுருங்கிற்று. ஆனால், அவர்மனம் சுருங்கவில்லை. நஞ்சனைய நல்குரவு வந்து பற்றியது. நல்குரவால் நடுக்கமுறுவர் பலர். ஆனால், நமது மாறனார் நடுக்கமுற்றாரில்லை. உடைமைகளை விற்றும், கடன்பட்டும் தாமெடுத்த தொண்டினைத் தொடர்ந்து செய்தார். ஒருநாள், மழையில் நனைந்த சிவனடியார் ஒருவர், நள்ளிரவில் நாயனார் வீடு வந்தார். நாயனார், அடியாரை வரவேற்று ஈரவுடைமாற்றி இருக்கச் செய்து, அவர்தம் முகம்பார்த்துப் பின் அருமை வாழ்க்கைத் துணைவியின் முகம்பார்த்து,

*"தீர வேபசித்தார் செய்வதென்?"* (10)

என்றார். மாறனாருக்கேற்ற மனைவியானதால், தமது பட்டினி உணர்ந்தாரில்லை. அண்டர் நாயகனடியார்க்கு அமுது செய்வித்தல் வேண்டும். அதற்கேற்ற ஆலோசனையை அணங்கு, அண்ணல் மாறனாருக்கு எடுத்துக் கூறுகிறார். வாழ்க்கையின் துணைமட்டுமில்லாமல் வழி நடத்தவும் செய்கின்ற ஆற்றலிருந்தமையை அறிதல் வேண்டும். அன்று மாறனார் வயலில் விதை பாவப் பெற்றது அம்மையார் நினைவுக்கு வருகிறது. அதை அரித்துக் கொண்டுவந்தால் வறுத்துக் குற்றிச் சமைத்து உணவாக்கலாம் என்ற அறிவொடுபட்ட ஆலோசனையை உறுதியுடனும் துணிவுடனும் அம்மையார் அன்பொடு கூறுகிறார். வித்தடுதலை யாரும் விரும்பி ஏற்பதில்லை. வித்தடுவதால் முதலுக்கு இழப்பு; பின்னேயுண்டாம் ஆக்கத்திற்கும் பேரிழப்பு. ஆயினும், கேடும் ஆக்கமும் கெட்ட திருவிற் சிறந்த நங்கை இந்த உறுதியை உளமுற ஏற்றுக்கொண்டது, வியக்கத்தக்கதன்று. கணவர் கழனிக்குச் சென்று நெல் அரித்துக்கொண்டு வந்து கொடுத்ததை, வாயிலினின்று வாங்கி, வீட்டலகு விறகால் வறுத்துக் குற்றிச் சோறாக்கிக் கறியமுது சமைக்கக் கொல்லைப் புறத்திலிருந்த கீரையைக் கணவரைத் தூண்டிப் பறிக்கச்செய்து, ஒரு கீரையைக் கொண்டு பல்வகைக் கறியமைத்து விருந்தமைத்த மாறனார்

மனைவியின் திறத்தினை என்னென்று கூறிவாழ்த்துவது! இங்ஙனம், சேக்கிழார் சிறந்த மனையறத்தின் இயல்பை எடுத்துக் கூறுகிறார்.

## பெரிய புராணத்தில் சமூகத் தகுதிப்பாடு

பெரிய புராணம் ஒரு புரட்சிக் காப்பியம்; சமுதாய நூல். சேக்கிழார் காலத்தில் தமிழகத்தில் தமிழினத்திற்கு உரிமையல்லாத சாதிவேற்றுமைகள் கால்கொண்டு விட்டன. சேக்கிழார் சாதிவேற்றுமைகளைக் கடிந்து ஒதுக்காமல் ஒன்றிலொன்று உளங்கலந்து உயர்வற உயர்ந்த ஒழுக்கத்தாற் கலக்கச்செய்து, சாதிவேற்றுமையை அகற்றுகிறார். பெரிய புராணத்தில் தமிழகத்தின் பல்வேறு குலத்தைச் சார்ந்த அடியார்கள் பேசப்பெற்றுள்ளனர். திருஞான சம்பந்தருக்கும் யாழ்ப்பாணருக்கும் இடையிலுண்டான உறவைப் பாராட்டிப் பாடுகின்றார். அந்தணரிற் சிறந்த அப்பூதியடிகளுக்கு, அப்பரடிகள்பால் ஏற்பட்ட உறவை, இல்லை, பத்திமையைச் சேக்கிழார் பாடுவதே பாட்டு! ஆதிசைவ மரபினில் தோன்றி, அரசரிடத்தில் வளர்ந்து கணிகையர் குலத்துப் பரவையாரை அகத்திணைக் களவு முறையாற் காதல்மணம் செய்த, வேளாண்குடிமரபுச் சங்கிலியாரையும் அகத்திணைக் கற்பு முறையான் மணந்த சுந்தரர் வரலாற்றைச் சுந்தரத் தமிழில் சேக்கிழார் எடுத்துக்கூறிச் சாதிகுல வேற்றுமைகளை அகற்றும் அரிய பணியைச் செய்ததுபோல் செய்தவர் யார்? ஆதலால், சேக்கிழாரின் பெரியபுராணமே சாதிகளைக் கடிந்தெழுந்த முதல் வரலாற்று நூல்! தத்துவத்தால் மட்டுமன்று; நடைமுறையில் சாதிவேற்றுமைகளை மறந்து ஒருகுல உணர்வோடு நின்றொழுகியவர் வரலாற்றையே சேக்கிழார் பாடியுள்ளார். சேக்கிழார்முன் மனுநீதிச்சோழனும் திருக்குறிப்புத் தொண்டரும் ஒருதன்மையராகக் காட்சியளிக்கப் பெற்று வாழ்த்தப்படுதலினும் மிக்க புரட்சி ஏது?

அதுமட்டுமின்றிப் பெரியபுராணம், தொழில்காரணமாக அடியார்க்குரிய தகுதியை மரியாதையைத் தரமறுப்பதை மறுக்கிறது. இன்று, எங்கும் சமூகத் தகுதிப்பாடு (Social Status) பற்றிப் பேசப் பெறுகிறது. ஆனால், அதனை வழங்குவதற்கு யாரும் முன்வரவில்லை. சேக்கிழாரின் கலிக்கம்பநாயனார் இந்தச் சமூகத் தகுதிப்பாட்டினை உணர்ந்தவர்; வழங்கியவர். அங்ஙனம், வழங்கத் தடையாக இருந்த தம் மனைவியின் கையைத் தாமே தடிந்து தண்டித்தவர். கலிக்கம்பர் வீட்டில் முன்னர்ப் பணியாளாக இருந்த ஒருவர், பணியிலிருந்து விலகியபிறகு, சிவனடியாராக வாழ்க்கையைத் தொடங்கிக் கலிக்கம்பர் வீட்டுக்கு வருகிறார். கலிக்கம்பர், அடியார்களை அமுது செய்ய அழைத்துச் செல்வதற்குமுன், தம் மனைவி தண்ணீர் வார்க்கத் தாமே அடியார் திருப்பாதங்களைக் கழுவித் தூய்மைசெய்து அழைத்துச் செல்லுதல் வழக்கம். அங்ஙனம் ஒருநாள் அடியார்களின் திருப்பாதம் விளக்கிக் கொண்டிருந்தபோது முன்சொன்ன சிவனடியார் வந்துவிட்டார். கலிக்கம்பரின் மனைவிக்கு உயர்வுணர்ச்சி ஏற்பட்டுத் தங்கைகளால் தண்ணீர் வார்ப்பது தடைப்பட்டது. கலிக்கம்பர், மனைவியின் கரத்தைத் தடிந்து தாமே திருப்பாதங்களில் தண்ணீர் வார்த்துக் கழுவுகின்றார். ஆதலால், அவரவர் ஒழுக்கத்திற்கியைந்த சமூகத் தகுதிப்பாட்டைத் தொழில் முதலிய வேறுபாடுகள் காணாமல் வழங்க வேண்டும் என்பது சேக்கிழாரின் திருவுள்ளம்.

காடவர்கோமான் கட்டிய கற்றளிக் கோயிலிலும் திருநின்றவூர்ப் பூசலார் நாயனார் எடுத்த மனக்கோயில் அற்புதமானது–அண்டர் நாயகன் தங்குதற்குரியது என்று எடுத்துப் பாடுவதன் மூலம் சேக்கிழார் பதவி. செல்வம் முதலியவற்றாலுள்ள வேற்றுமைகளை விலக்கிப் போற்றற் குரியது உளம் நிறை அருளொழுக்கமே என்று உறுதியாகக் கூறுகிறார்.

## பெரியபுராணத்தில் பொருளாதாரத் தகுதிப்பாடு

*செல்வம், எல்லாருக்கும் கிடைக்கவேண்டும். ஒரு சிலரே எடுத்துக்கொள்ளலாகாது. இதனைச் சேக்கிழார் நயம்பட எடுத்துரைக்கின்றார். குண்டையூர்க்கிழவர் வேண்டு கோளின்படி இறையளித்த நெல்மலையைப் பரவையார் விருப்பத்தை நிறைவேற்றச் சுந்தரர் வேண்டுகோளுக் கிணங்கிப் பூதத்தின் வாயிலாக ஆரூரில் நெல்மலை குவித்தான் கோளிலியப்பன். ஆரூர்த்தெருவில் மலையெனக் குவிந்த நெல்லை ஆரூரிலுள்ளார் அனைவரும் அவரவர் மனைக்கு முன்னுள்ளதை அவரவரே எடுத்துக் கொள்ளும் படி பரவைநாச்சியார் பறையறைந்து கேட்டுக் கொண்டது, பொருளியற் புரட்சிதானே! இன்றும் இந்தியப் பொருளா தாரத்தில் உள்ள குறை, விநியோக முறையில் உள்ள தவறுதானே! சேக்கிழார் காட்டும் பரவை நாச்சியாரின் பெரும் பண்பு நமது நாட்டில் அனைவருக்கும் வந்து விட்டால் களவு குறையாதா? காவல் நீங்காதா? பகைமை மாறாதா? பண்பு வளராதா? அன்பு கூர்ந்து சிந்தனை செய்யுங்கள்!*

## பெரியபுராணத்தில் அரசியல்

*பெரியபுராணம் அரசியல் நூலாகவும் விளங்குகிறது. அஃது அரசனின் நெறிமுறை பற்றியும் பேசுகிறது. சேக்கிழார் அநபாய சோழனின் பேரரசைப் பாராட்டிப் பாடியுள்ளார். அநபாய சோழனின் அரசு, பேரரசு என்பதை "வையம் பொதுக் கடிந்து" என்று கூறிப் புகழ்கிறார். வையம், அநபாய சோழனின் அரவணைப்பில் இனிதே உளது என்று பாடுகிறார். அநபாய சோழனின் கொற்றக்குடை, குடி மக்களுக்குக் குளிர் நிழல் தரும் குடையென்று வாழ்த்துவதன் மூலம், அரசு பேரரசாக, இனியதாகத், தண்ணளியுடையதாக அமைய வேண்டும் என்பதை உணர்த்துகின்றார்.*

*"நற்றமிழ் வரைப்பின் ஓங்கு நாம்புகழ்*
*திருநா டென்றும்*
*பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந்*
*தினிது காக்கும்*
*கொற்றவன் அநபா யன்பொற் குடைநிழற்*
*குளிர்வ தென்றால்*
*மற்றதன் பெருமை நம்மால் வரம்புற*
*விளம்ப லாமோ!"*

–62. திருநாடு–35

என்பது சேக்கிழார் பாடல்.

மேலும், அரசின் நெறிமுறை பற்றி மனுநீதிச் சோழன் வரலாற்றில் விரித்துப் பேசுகிறார். அரசநீதி என்பது உயிர் வேறுபாடின்றி, ஒத்த நீதியே வழங்குவதாகும். அரசநீதி என்பது அனைத்துயிர்களையும் அணைத்துத் துன்புறாமற் காப்பதாகும். இதனை,

*"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்*
*தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்*
*ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்*
*ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ?"*

(36)

என்று சேக்கிழார் பாடுகிறார். இதுவே நீதியும் நியதியுமாகும். வளர்ந்த யுகம் என்று கருதத்தக்க இந்த நூற்றாண்டில் கூட ஒரே குற்றத்திற்கு ஏழைக்கொரு தண்டனை! செல்வர்க்கொரு தண்டனை! பிராணிகளைக் கொன்ற யாருக்கும் இன்று மரண தண்டனை வழங்கும் சட்டமில்லை. மனிதனைக் கொல்லும் மனிதனுக்குரிய மரண தண்டனையைக் கூட நிறுத்த வேண்டுமென்ற கிளர்ச்சியிருந்து வருகிறது. ஆனால், சேக்கிழாரின் மனுநீதிச் சோழன் ஒரு பசுவின் கன்று இறப்பதற்கு-நேரிடையாகக் கூட அன்று-மகனின் தேரூர்ந்த

நிகழ்ச்சி துணையாக இருந்தது என்பதற்காகத் தம் அருமந்த மகனின் உயிரையே வழங்கிய நீதியின் சிறப்பை என்னென்போம்! தண்டனை வழங்குதலின் நோக்கமே ஓரிழப்பை ஈடு செய்வதற்குத்தான்! இறந்த பசுவின் கன்றுக்கு இனிய மைந்தனின் நல்லுயிர்! கன்றையிழந்து வருந்திய பசுவுக் கீடாகத் தன் மைந்தனை இழந்து தான் துன்புறுதல்! இந்தப் பெரிய புராண நியதி எங்கே? நம்முடைய வாழ்க்கை எங்கே?

ஒருவர் ஒன்றன் மீது உரிமை கொண்டாடுதல் அவ்வளவு எளிதன்று. அந்த உரிமையைச் சோழப் பேரரசால் ஊர்தோறும் திருக்கோயிலின்கண் அமைக்கப் பெற்ற பஞ்சாயத்தின் முன் சாட்சியங்களுடன் எடுத்துக் கூறிப் பஞ்சாயத்தின் தீர்ப்பின் மூலம் உரிமையடைய வேண்டும். இறைவனே, "சுந்தரர் தமது ஆள்" என்ற வழக்கைத் திருவெண்ணெய் நல்லூர்க்கோயிலிலமைந்திருந்த பஞ்சாயத் தார் முன்னேயே எடுத்துக் கூறுகிறார். அந்த வழக்காடிய படலத்தைச் சேக்கிழார் பாடியிருப்பது அவருடைய அறநெறிச் சார்பான அமைச்சியலை நன்கு வெளிப்படுத்து கிறது. ஓர் உரிமையை நிலை நாட்டுதற்கு அடியிற் கண்டவாறு 'ஆட்சியில் ஆவணத்தில் அன்றி மற்றயலார் தங்கள், காட்சியில்" வேண்டுமென்பது சேக்கிழாரின் கொள்கை.

## பெரியபுராணத்தில் சமயம்

பெரியபுராணம் ஓர் உயர்ந்த சமய நூல்; உலகப் பொதுச் சமயநூல். சமய நெறிகளின் பெயர்களும் வழிபடும் பொருளின் பெயரும்-பெறும் கோலமும் மாறுபட்டாலும் சமய நெறியின் அடிப்படை இயல்பு, மாறி விளங்க வழியில்லை. கடவுளை நம்புதல், ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்ப அன்பே தவமாதல், திருத் தொண்டில் இன்பமார்தல் ஆகியவை அனைத்துலகச் சமயத்திற்கும் பொதுவான கொள்கை. இத்தகு சமய நெறியில்

வாழ்ந்த, இல்லை, தவம் செய்த தவஞானச் செல்வர்களின் வரலாற்றை எடுத்துக் கூறுவதால், இஃது உலகப் பொதுச் சமய நூலாகும். எனினும், சேக்கிழாரின் சிந்தைச் சார்பு சிவநெறியிலேயாம். சிவநெறியின் அடிப்படைக் கொள்கை களைச் சேக்கிழார் விளக்கியே பெரியபுராணம் செய் துள்ளார்.

இதனைச் சாக்கிய நாயனார் வரலாற்றால் நாம் உணர முடிகிறது. சாக்கிய நாயனார், முன்னை நல்லூழின்மையின் காரணமாகச் சிவநெறியிற் பிறக்கவில்லை. ஆயினும், பின்னைப் பெருந்தவத்தால் சிவநெறியே மெய்ந்நெறி யென்பதை உணர்ந்துவிடுகிறார். சிவநெறியின் சிறந்த கொள்கையுள் வினைகளைச் செய்கின்ற உயிர்கள் உண்டு; செய்வினையுண்டு; செய்வினையின் பயனுண்டு; அந்தப் பயனை உயிர்களுக்குக் கூட்டுவிக்கும் பரம் பொருளுமுண்டு. இந்த நான்கு வகையாக அமைந்து விளங்கும் மெய்ந்நெறியாகும் சிவநெறி என்பது சேக்கிழார் கருத்து. இதனைச் சாக்கிய நாயனார் வாயிலாகக் கூறுகிறார் சேக்கிழார்.

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும்
கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்
எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவன்என் றருளாலே
உணர்ந்தறிந்தார்" (5)

என்பது பெரியபுராணம். ஆதலால், சேக்கிழார் சமயப்பொது நோக்குடையராகத் திகழ்ந்தாலும் சித்தாந்தச் சிவநெறியில் நிலைத்த ஈடுபாடுடையவர்.

சமய நெறியிலும் சேக்கிழார், சடங்குகளை வெறுத்த வரல்லர். ஆனால், சடங்குகளே சமயம் என்ற கருத்துச்

சேக்கிழாருக்கு உடன்பாடுடையதன்று. இதனைக் கண்ணப்ப நாயனார் வரலாற்றில், சேக்கிழார் வெளிப்படுத்துகிறார். சிவகோசரியார் ஆகமச் சடங்கின் திருவுருவம். கண்ணப்பர் அன்பின் திருவுருவம். கண்ணப்பருடைய தூய அன்பில்தான் காளத்தியப்பன் ஈடுபடுகிறான். காளத்தியப்பன், கண்ணப் பரைக் காட்டி உண்மை வழிபாடு இதுவே யெனச் சிவகோசரியாரைத் தெருட்டுகின்றான்.

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும்
அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
அவனுடைய நிலைஇவ்வா றறிநீஎன்
றருள்செய்தார்" (157)

என்று சேக்கிழார் அந் நிகழ்ச்சியைப் பாடுகின்றார். ஆதலால், சேக்கிழாரின் சமயம் பத்திச் சமயமேயாகும்; தொண்டின் நெறியேயாகும்.

## பெரியபுராணத்தில் மக்கள் தொண்டு

சேக்கிழார் அருளித் தந்துள்ள பெரியபுராணத்தில் பேசப்பெற்றுள்ள அனைத்து அடியார்களும் சிவஞானிகள்; கடவுளைக் கண்டு காதலாகிக் கசிந்து வழிபட்டவர்கள்; அந்த ஆராஇன்பத்தில் திளைத்தவர்கள். அவர்கள் கடவுளைக் கண்டு - பரம்பொருளுடன் உறவுகொண்டு சிவானுபவத்தில் திளைத்து வாழ்ந்தாலும், வாழும் இந்த மனித சமுதாயத்தை மறக்கவில்லை; மறக்க எண்ணவில்லை. நீரும் நிலனும்போல மனித சமுதாயத்தின் இன்பத்துன்ப உணர்வோடு பின்னிக் கிடந்தார்கள். அவர்களுக்குத் தற்சார்பான விழைவு இல்லை - விருப்பமில்லை. ஆனாலும், சமுதாயத்தின் இருதயத் துடிப்புக்களை அவர்கள் எதிரொலித்தார்கள்.

திருஞானசம்பந்தர் ஞானத்தின் திருவுரு; எம்பெருமானை விரலாற் சுட்டிக் காட்டும் பெருமை பெற்றவர்; ஞானப்பால் அருந்தியவர்; யாதொரு துன்பச் சுவடும் அறியாதவர். ஆனாலும், திருமருகல் திருத்தலத்தில் பெண்ணுரிமைக் கடமைக் கற்பொழுக்கால் வலியக் கூடி வந்த காதலனை இழந்து அல்லற்பட்ட செட்டிப் பெண்ணின் துன்பத்தை அப்படியே, இல்லை! ஒரு மாற்றுக் கூடுதலாகவே திருஞானசம்பந்தர் பிரதிபலிப்பது அவருடைய சமூக உணர்வுக்கோர் எடுத்துக்காட்டு. அப்பெண்ணின் கணவனை எழுப்பிக்கொடுத்து அவள் முகத்தில் மகிழ்ச்சியைக் கண்ட பின்புதான் திருக்கோயிலை நண்ணுகிறார் திருஞானசம்பந்தர்.

சுந்தரர், இறைவனாலேயே தடுத்தாட் கொள்ளப் பெற்றவர்; அழகுச் சொக்கனை அன்புத் தோழமையாகப் பெற்றவர். கூடியும் ஊடியும், ஏசியும் பேசியும் பெருமானோடு உறவுகொண்டவர். ஆயினும், இந்தச் சமுதாயத்தின் துன்ப உணர்ச்சிகளை ஏற்று, அவர் வருந்தியது போல யாரும் வருந்த வில்லை. ஆரூரர், அவிநாசிக்குச் செல்லுகிறார். ஆங்கு ஒரு வீட்டில் மங்கலஒலி கேட்கிறது! அதற்கு எதிர் வீட்டில் அழுகுரல் கேட்கிறது! அவிநாசிக்கு வந்த ஆரூரர், அவிநாசியப்பனைக் காணப்போகவில்லை. வாழ்வோருக்கே வாழ்த்துக் கூறும் இயல்பிற் சிக்கி மங்கலமுழக்கொலியுள்ள வீட்டுக்கும் போகவில்லை. தொழுதகைத் துன்பம் துடைப்பானின் தோழரல்லவா? அழுகுரல் கேட்ட வீட்டு முன்னேயே நின்றார். குலம் விளக்க வந்த விளக்கை–ஈன்று புறந்தந்த இனியமகனை, இழந்த பெற்றோர் வந்து வணங்கினர். அவர்தம் துன்பத்தைக் கண்டு நெஞ்சு நடுங்கினார்: அனலிடைப்பட்ட புழுவெனத் துடித்தார்; அவிநாசியப்பரை ஆற்றாமையோடு வேண்டினார்; மூவா முதல்வனை, முதலையுண்ட பாலனைத் தருமாறு முத்தமிழ் விரகர் பாடிப்பரவி வேண்டி நின்றார். பிறவாயாக்கைப் பெரியோன் கருணையால் பிள்ளையை மீட்டுப் பெற்றோரி

டம் கொடுத்து அவர்தம் மகிழ்வுகண்டு அவிநாசியப்பர் அடியிணை போற்றச் சென்றார். இத்தகு, நடமாடும் ஞானத் திருவுருவங்கள் மனித சமுதாயத்தின்பால் காட்டிய பரிவு, நம்மனோர் வாழ்க்கையில் வேண்டாமா? இந்தப் பரிவுணர்ச்சி நம்மிடம் இல்லாமையின் காரணமாகத்தான், நம்முடைய சமூகம் இன்று நிராதரவாக-அனாதையாகக் கிடக்கிறது. சமூகத்தை அணைத்து, அவர்களுடைய உணர்ச்சிகளைப் பிரதிபலித்து வளர்த்துப் பாதுகாக்காத சமயம் காலப் போக்கில் வரலாற்றிலேதான் இடம்பெறும்; வையகத்து வாழ்க்கையில் இடம்பெறுதல் அரிது! இதனை நம்முடைய தலைவர்கள் திருவுள்ளம் பற்றவேண்டும் என்பது நமது பிரார்த்தனை!

## திருக்கோயில் வழிபாடு

சேக்கிழார் பெருமான், திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபாடுடையவர். அவரே முறையாகத் திருக்கோயில் வழிபாடு செய்யும் வழக்கமுடையவராக இருந்தார் என்பது, சேக்கிழார் புராணம் உணர்த்தும் உண்மை. திருநாகேச்சுரம் திருக்கோயிலில் முறையாக வழிபடும் வழக்கமுடைய சேக்கிழார், குன்றத்தூரிலும் அதுபோன்றதொரு திருக் கோயில் எடுப்பித்தார் என்று வரலாறு கூறுகிறது. திருஞான சம்பந்தரும், அப்பரடிகளும், மற்ற அடியார்களும் திருக்கோயி லில் வழிபட்ட முறைமையை உணர்ச்சி ததும்பச் சேக்கிழார் எடுத்துக் கூறுகின்ற முறை இப்பொழுது படித்தாலும் அந்தக் காட்சி நம் கண்முன்னே வருகிறது.

திருக்கோயில்களில் வழிவழித் தமிழினத்தைச் சேர்ந்த ஆதிசைவர்கள் நாள்வழி பாட்டைச் செய்யும் உரிமை பெற்றிருந்தனர். திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திரு மேனியில் எம்பெருமானைத் திருவோலக்கம் செய்தற்குரிய மூன்றுகால வழிபாட்டினை, ஆதிசைவர்களே செய்து வந்தனர். இதனைத் திருத்தொண்டத் தொகையும் உணர்த்து கிறது. சேக்கிழாரும் எடுத்து விளக்கியுள்ளார். ஆனால், திருக்

கோயில் வழிபாட்டுக்கு வரும் பக்தர்கள் இறைவனுக்குப் பூவும் நீருமிட்டு வழிபாடு செய்து கொள்ளுதலைச் சேக்கிழார் எடுத்துக்காட்டுகின்றார். அன்னை காவிரிப்பேராறு, அன்ற லர்ந்த மலர்களை அள்ளிக்கொண்டுவந்து, கரை யோரத்தின் பாலுள்ள கோயில்களில் ஒதுக்குகிறது. இதனைப் பார்த்த சேக்கிழார், திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள பெருமா னுக்கு அடியார்கள் பூவும் நீரும் கொண்டு அருச்சிப்பது போலிருக்கிறது, என்று பாடுகிறார். ஆதலால், விரும்பும் அடியார்கள் பூவும் நீரும் கொண்டு இறைவனை அருச்சிப்பது சேக்கிழாருக்கு உடன்பாடான செய்தி! அதனால்தான் கண்ணப்பர் வரலாற்றில் சேக்கிழார் நின்று ருகிப்பாடுகிறார். கண்ணப்பருடைய அன்பு வழிபாட்டில் சேக்கிழாருக்கு உடன்பாடும் ஈடுபாடும் இருந்தமையால்தான், அந்த வரலாற்றை அவ்வளவு உருக்கமாகப் பாடமுடிந்தது.

அடுத்து, திருக்கோயிலில் திருமுறைத் தமிழால் அருச்சிக்கும் முறையைச் சேக்கிழாரே நமக்கு நினை வூட்டுகிறார். சுந்தரர் வரலாற்றில் தூமறை பாடுவோனாகிய சிவபெருமான் "அருச்சனை பாட்டே யாகும்" என்று அழகுத்தமிழில் ஆரூரரைப் பாடவேண்டியதைச் சேக்கிழார் எடுத்து விளக்குகிறார். நமது குலம் செய்த மாதவத்தால் கிடைத்த தேவாரப் பாடல்களால் இறைவனைப் பாடுவதே அருச்சனை. தேவாரப் பாடல்களை ஓதி மலர்களை இடுதலே வழிபாடு. இதுவே சேக்கிழாரின் தெள்ளிய முடிபு. சேக்கிழார் காட்டிய செந்நெறியை நாம் அனைவரும் கடைப்பிடித் தொழுகவேண்டும். இது நமது கடமை. இதுவே நமக்குரிய நற்றவம்!

## பெரியபுராணமும்—திருமுறைகளும்

சேக்கிழார் திருமுறைகளில் நிறைந்த ஈடுபாடு கொண் டிருந்தார். அவற்றை முறையாக அவர் ஓதியுமிருக்கிறார். சேக்கிழார், திருமுறைப் பாடல்களைச் சிறப்பாகத் தேவாரத்

திருமுறைப் பாடல்களைப் பயபத்தியுடன் ஓதித் தெளிந்திருக்கிறார். சமயாசாரியார் மூவரும் தேவாரங்களை அருளிச் செய்த சந்தர்ப்பங்களைச் சேக்கிழார் எடுத்துக் கூறும் பொழுது பக்தியுணர்வின் மெய்ப்பாட்டுடன் கூறுகிறார். நம்மை அந்தந்தக் காலத்திற்கே அழைத்துச் சென்று விடுகிறார். மதுரையில் திருஞான சம்பந்தர் அருளிச் செய்த திருப்பாசுரத் திருப்பாட்டுப் பன்னிரண்டுக்கும் சேக்கிழார் இருபத்துநான்கு திருப்பாட்டுக்களால் தரும் விளக்கம் எவ்வளவு சிறப்பாக இருக்கிறது!

சேக்கிழார் திருமுறைப்பாடல்களைத் திருவருள் வெளிப்பாடாகவே கருதினார். திருமுறை ஆசிரியர்களை நிறைமொழி மாந்தரென நினைந்து நினைந்து வாழ்த்துகிறார். அவர்கள் அருளிய பாடல்களை மறைமொழிகளாக - மந்திர மொழிகளாகச் சேக்கிழார் ஏத்திப்போற்றுகிறார். திருமுறைகள் நிகழ்த்திய அற்புதங்களைச் சேக்கிழார் எடுத்து விளக்குவதன்மூலம், திருமுறைகளே வேண்டுவ அனைத்தும் சாதிக்க வல்லன என்ற நம்பிக்கையை நமக்கு வழங்குகிறார். இறைவனைத் திருமுறைத் தமிழால் அருச்சித்து வழிபடுவதும், திருமுறைநெறியில் நின்று ஒழுகுவதும் சேக்கிழாருக்கு நாம் செய்யும் நன்றிக் கடப்பாடாகும்.

திருமுறைகள், திருவருளின்பத்தை மட்டுமே நல்குவன வல்ல; இந்த வையத்து வாழ்வையும் வளமாக்கும். வறுமையில் அல்லற் படுவோர், “இடரினும் தளரினும்” என்று தொடங்கும் பதிகத்தை முறையே யோதி முன்னுவ அனைத்தும் பெறலாம். நாளால், கோளால் நலிவுறுவோர் “வேயுறு தோளி பங்கன்” என்று தொடங்கும் பதிகத்தை நெஞ்சில் நிறையுணர்வுடன் ஓதினால் வெற்றி பெறலாம். முன்னைத் தீவினை வருத்த வருந்துவோர் “அவ்வினைக் கிவ்வினை” என்று தொடங்கும் திருப்பதிகத்தினை ஓதினால் வினைத் துன்பம் நீங்கி இன்புறுவர். உண்டு மகிழ முடியாமல் வயிற்றுத் தொல்லையால் வேதனைப்படுவோர், “கூற்றாயின

வாறு" என்று தொடங்கும் பதிகத்தைப் பல்காலும் பயில் வதன் மூலம் நோய் நீங்கி வாழலாம். உடற் காய்ச்சலால் ஊனுடல் வருந்துவோர் "மந்திரமாவது நீறு" என்று தொடங்கும் பதிகத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு பாங்குற ஓதினால் உய்தி பெறலாம். போகங்கள் பல பெற்றுத் துய்க்க வேண்டுமா? "பத்தூர் புக்கு இரந்துண்டு" என்று தொடங்கும் என்னும் பதிகத்தை நெஞ்சில் நினைந்துருகி ஓதிப்போகங்கள் பல பெற்றுத் துய்க்கலாம். பெரிய புராணம் திருமுறைகளுக்கு விளக்கம் காணவே எழுந்ததென்று சொன்னால் மிகை யன்று.

## பெரியபுராணத்தில் இலக்கிய இன்பம்

சேக்கிழார், தவத்திற் சிறந்த தவஞான முனிவர்களின் வரலாற்றைப் பாடினாலும் சிறந்த இலக்கிய இன்பம் பொதுளவும் பாடியுள்ளார். சிறு நிகழ்ச்சிகளில் கூட மிக ஆழ்ந்த சமயத் தத்துவங்களை இனிய எளிய உவமைகளில் சேக்கிழார் விளக்கும் ஆற்றல் அவருக்கே உரியது. இளையான் குடிமாற நாயனார், சிவனடியார்க்கு அமுது செய்விக்க – கறி சமைக்கக் கொல்லைப் புறத்திற் சென்று கீரைதான் பிடுங்கு கின்றார். இஃதொரு சாதாரணமான நிகழ்ச்சி. ஆயினும், சேக்கிழாரின் திருவருளில் தோய்ந்த சிந்தை, இந்த நிகழ்ச்சியை அடியிற் கண்டவாறு பாடுகிறது.

> "குழிநிரம் பாதபுன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்
> பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு
> நல்க."

இந்த வரிகளில் மண்டிக் கிடக்கும் தத்துவச் செறிவும் இலக்கிய இன்பமும் கற்று இன்புறத்தக்கது. சேக்கிழார், இளையான்குடி மாறனாரின் பாச நீக்க நிகழ்ச்சிக்கு உவமையாகச் சொல்வதால் அதற்கேற்றவாறு சொற்களைப் பெய்கிறார். "குழி நிரம்பாத புன்செய்க் குறும்பயிர்" என்றார்.

குழி நிரம்பாத புன்செய்ப் பயிர் எப்படிச் சிறிதாகவும், பறித்தற்கு எளிதாகவும் இருக்குமோ, அதுபோல இளையான் குடிமாறனாரின் பாசப்பகை மிகமிக எளியது; அதுவும் பிறப்பின் சார்பால் விளைந்தது; அடியார்க்கு அமுது செய்விக்கும் அசைவில் ஆசையால் உருவானது. ஒரு பயிரை வேருடன் பிடுங்க வேண்டுமானால் அந்தப் பயிர் வளர்ந்துள்ள நிலம் நனைக்கப் பெற்று மண் நெகிழ்ந்து அவ்வழி பயிருக்கும் நிலத்திற்கு முள்ள பிடிப்புத் தளர்ந்திருத்தல் அவசியம். இளையான்குடி மாறனாரின் மனம் அன்பினில் நனைந்து தொண்டு நெறியில் நெகிழ்ந்து மிச்ச சொச்ச மில்லாமல் முற்றாகப் பாசப் பகை நீக்கத் துக்குத் தகுதியாக இருந்தது என்பதே உணரப்படுகிறது. பாச நீக்கத்திற்குரிய முயற்சிகள் ஒவ்வொன்றாகச் செய்தலென்பது இயலாது. முற்றாகப் பாசத்தை நீக்க முழுமுயற்சி செய்தலே சீரிய தவ வாழ்க்கை என்பதும் பெறப்படுகிறது.

அடுத்து, மிகவுயர்ந்த தத்துவங்களை – மிகத்தரமான இலக்கிய உத்தியில் பாடும் சேக்கிழார் இங்கு மங்குமாக நாம் சிரித்து மகிழவும், பாடியுள்ளார். இயற்பகை நாயனார் வரலாற்றில் இயற்பகையாரின் மனைவியைக் கேட்கவந்த சிவபெருமான், தம் வேடம் மறைத்துத் தூர்த்த வேடம் கொண்டுவந்தார்.

"ஆய நுண்பொரு ளாகியும் வெளியே
அம்ப லத்துள்நின் றாடுவார் உம்பர்
நாய கிக்குமஃ தறிய வோபிரியா
நங்கைதா னறியாமையோ அறியோம்
தூய நீறுபொன் மேனியில் விளங்கத்
தூர்த்த வேடமும் தோன்றவே தியராய்
மாய வண்ணமே கொண்டுதந் தொண்டர்
மறாத வண்ணமும் காட்டுவான் வந்தார்."

(4)

இங்ஙனம் சிவபெருமான் தூர்த்த வேடம் கொண்டமையைச் சேக்கிழார், உடனுறையும் உமையறியா வண்ணம் தூர்த்த வேடம் கொண்டதாகக் கூறுகிறார். இதில் நகைச்சுவையும் இருக்கிறது; பெண்ணியலார் இயல்பும் வெளிப்படுகிறது.

அடுத்து, சுந்தரருக்கும் பரவையாருக்கும் ஏற்பட்ட பிணக்கைச் சமாதானம் செய்து வைக்கச் சிவபெருமான் தூது போகிறார். சிவபெருமானைத் தூது அனுப்பிவிட்டுச் சுந்தரர், காதல் மீக்கூரக் காத்து நிற்கின்றார். சிவபெருமான் பரவை யாரைச் சந்தித்துச் சமாதானம் செய்து விட்டுத் திரும்பி வரும் நடையைச் சேக்கிழார் வாக்கில் படிக்கும் பொழுது, நம்மையறியாமல் சிவபெருமான்மீது இரக்கம் ஏற்படுகிறது! "ஐயோ, பாவம்!" என்று கருத வேண்டியதிருக்கிறது. "அன்னவர் முன்னும் பின்னும் மருங்கும் அணைவெய்த மின்னிடையார்பால் அன்பரை உய்க்கும் விரைவோடும் சென்னியில் நீடுங் கங்கை ததும்பத் திருவாரூர் மன்னவனா ராம் மறையவனார்பால் வந்துற்றார்" என்று சேக்கிழார் அருமையாகப் பாடுகிறார். ஆயினும், கிண்டிக் கிளறி வேக வைத்த சோறு சுவையுடையதாகி மகிழ்ச்சி தருதல் போல, அடியார்கள் உள்ளத்தில் அன்பினைக் கிண்டிக் கிளறி ஆரத் துய்த்து இறைவன் மகிழ்கின்றான். அந்தத் துய்ப்பே அடியார்களுக்கு அருளின் ஆக்கமாகிறது.

## பெரியபுராணத்தைப் போற்றும் முறை

பெரியபுராணம், வாழ்ந்து வாகை சூடிய பிறவியின் பயனையடைந்த சான்றோர்களின் வரலாற்று நூலாகும். பெரியபுராணத்தில் வரும் நிகழ்ச்சிகள் அனைத்தும் நிகழ்ந்தவை. ஏன்? இன்றும் முயன்றால் நிகழக்கூடியவை. ஆனால் நம்முடைய சமய வாழ்க்கை ஊற்றெழுச்சி யுடைய தாக இல்லை; உள்ளக் கிளர்ச்சியுடையதாக இல்லை. பொறி களில் சமயத் தோற்றம் காணப்படுகிறதே தவிரப் புலன்களில் சமய ஒழுக்கம் இல்லை. இந்தக் குறை எங்கிருக்கிறது,

எங்கில்லை என்பதை நாம் பகுத்துக் காட்ட விரும்பவில்லை. இன்றைக்குப் பெரிய புராணம், நம்முடைய வாழ்க்கை வீழ்ச்சியினால் வியப்புறத்தக்க வெறும் அற்புதமாகத் தெரிகிறது. ஏன்? நாம் பெரிய புராணத்தை ஓதுகின்றோம்; எழுத்து, சொல், பொருளுணர்ச்சியோடு தான் ஓதுகின்றோம். பொருளின் பயனுணர்வு நம்மிடத்தில் இல்லையென்று கூறினால் அன்பு கூர்ந்து சினவாது பொறுத்தாற்றுமின்!

ஏழாம் நூற்றாண்டில் திருக்கோயில்களில் திருத் தொண்டுகளாக இருந்தவை-அடியார்களால் தொண்டுள்ளம் கொண்டு செய்யப் பெற்ற தொண்டுகள் அனைத்தும் இன்று தொழில்மயமாகி விட்டன. ஊதியத் தகராறில் முப்போதும் திருமேனி தீண்டுவார் பரம்பரையில் தோன்றியவர்கள் பூசனை செய்ய மறுக்கிறார்கள். எல்லாவற்றையும் பூசனையின் மூலம் பெற்றது போக, இன்று பூசிப்போரே பூவுலகோரைப் பின் நின்று பேரம்பேசி இரக்கின்றனர். நம்முடைய ஆன்மீக வீழ்ச்சி பயங்கரமானது. ஆரவாரம் மிக்க சடங்குகளே நடை பெறுகின்றன. அகனமர்ந்த காதல் மிக்க வழிபாடு அருகிப் போயிற்று. நம் அடியார்களும் இறைவனும் இதுதான் வாழ்க்கை நெறி என்று சுட்டி யுணர்த்திய நெறியை, நாம் உளமாரப் பின்பற்றவில்லை. இன்று திருத்தொண்டு ஏது? அல்லது எது? திருத்தொண்டர் யார்? நாடு தழுவிய திருவருட் பேரியக்கம் நடந்த தமிழகத்தில் அந்தத் திருவருட் புனல் வற்றாது முற்றாது வளம் கொழிக்க வேண்டுமென்ற நினைப்பில் அமைந்த திருக்கோயில்கள், திருமடங்கள் தேவைக்கேற்றவாறு இயங்கவில்லை. ஆங்கெல்லாம் உயிர்ப்புள்ள இயக்கங்களைக் காணோம். முன்னோர் வரலாற்றைச் சேக்கிழார் நமக்கு எடுத்துத் தந்தது, படித்து மகிழ்வதற்கு மட்டுமன்று; வாழ்ந்து பயன்கொள்ளவுமாகும். தமிழகத்தின் சமய இயக்கம், நாயன்மார்கள் நிகழ்த்திய தொண்டுகளைத் தொடர்ந்து செய்திருக்குமானால் இன்றிருக்கும் அவலநிலை தினையளவுகூடத் தோன்றியிருக்காது.

அப்பரடிகள் காலத்தில், திருக்கோயிலில் திருவலகிடுதல் ஒப்பற்ற திருத்தொண்டாக இருந்தது. அப்பரடிகளே உழவாரத்தொண்டு செய்திருக்கிறார். ஏன்? தில்லைநகரில் திருவருட் சுற்றுத் திருவீதியையே தூய்மை செய்திருக்கிறார். இன்று திருக்கோயிலில் திருவலகு திருத்தொண்டாகச் செய்வோரை ஒரு தடவையேனும் உங்களால் பார்க்க முடியுமா? அவர்கள் அகநலமும் புறநலமும் கெட்டுத் திருவலகுப் பணியைத் தொண்டாகச் செய்யாமல் வயிற்றுப் பிழைப்பாகச் செய்து வருகிறார்கள். அநேகமாக இதே நிலையில்தான் மற்றைத் தொண்டுகளும் இருக்கின்றன. அடியார்களுக்குப்பிறகு, அவர்கள் செய்த தொண்டினை நாம் வழிவழிச் செய்யத் தவறிவிட்டோம். அந்தத் தொண்டின் நெறி ஒல்லும் வகையாலெல்லாம் உயிர்ப்பிக்கப் பெற வேண்டும். அடியார்கள் செய்த தொண்டினைச் செய்கின்ற இயக்கங்கள் பெருகி வளர வேண்டும். அந்த அடியார்களிலும் பலர், மனித உருவில் நடமாடியவர்களுக்குத்தான் தொண்டு செய்தார்கள். பின்பு தான் மனித உருவிலேயே கடவுள் வந்து அதை ஏற்றுக் கொண்டார். மனிதர்களுக்கு மட்டுமல்ல, மனிதர்களிலும் எளியவர்களுக்கே தொண்டு செய்தனர். சேக்கிழாரடிகளின் பெரியபுராணத்தில் அடியார்களோடு உறவு கொள்ளச் சிவபெருமான் எழுந்தருளிய போதெல்லாம் பெரும்பாலும் மனித உருவில் வந்ததைத்தான் பாடுகின்றார். மனித உருவிலும் எளிய உருவமே படைத்துக் காட்டினார். இன்று எளியோருக்குச் சமய அமைப்பில் ஏற்ற இடமில்லை. அஃது உயர் சாதியினர் - உயர்செல்வத்தினரோடு "கூட்டுப் பேரம்" நடத்துகிறது; அல்லது கூட்டுத்தொழில் நடத்துகிறது! இவையெல்லாம் பெரிய புராணத்தைப் போற்றும் முறையல்ல. எல்லா உயிர்களிடத்திலும் அன்பு காட்டவேண்டும்; பத்திமையால் பலகாலும் கும்பிட வேண்டும். அதுவே பெரியபுராணத்தைப் போற்றும் முறை அல்லது சேக்கிழாரை வழிபடும் முறை.

## கழகத்தின் பெருமையும்–வாழ்த்தும்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக்கழகம் ஒரு பதிப்புக்கழகம் மட்டுமன்று; பைந்தமிழ்ப் பாசறையாகும்; வணிகநோக்குடையது மட்டுமன்று, வண்மைத் தமிழ்வளர்க்கும் நோக்குடையதுமாகும். தமிழ்ப் பாசறை மட்டுமன்று; தமிழினத்திற்கோர் அரணுமாகும். அரண்மட்டுமன்று. அருள் நெறிவளர்க்கும் திருவோலக்க மாகும். இக்கழகம், தமிழும் சிவமும்போல் தழைத்து வளர்ந்திருக்கிறது; பொன்னார் மேனியன் புண்ணியத்தால் பொன்விழாக் கண்டிருக்கிறது. கழகத்தின் இயற்கைக் காவலராகிய தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை செந்தமிழன்பர்; சித்தாந்தச் சமய நெறியில் ஊற்றங் கொண்டவர். பல்லாற்றானும் தொழில் திறன் மிக்கவர். இக்கழகம், பொன்விழாவைச் சேக்கிழார் விழாவாகக் கொண்டாடுகிறது. தொண்டில் வளர்ந்த கழகம், தொண்டர் சீர் பரவுவதில் வியப்பில்லை. சேக்கிழார் வாழ்த்தியது போல் கழகம் இக்காசினியில் நின்று நிலவிடுக!

*"என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்*<br>*ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட*<br>*மன்று ளாரடி யாரவர் வான்புகழ்*<br>*நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்!"*

–12. வெள்ளானை–53

*"சேக்கிழார் பெம்மான் திருவருளால் தோன்றிலரேல்*<br>*ஆக்கமிகு நன்னெறியும் அஞ்செழுத்தும்–நோக்குடைய*<br>*செந்தமிழ்வெண் ணீறும் திருமுறையும் சீரமைவும்*<br>*மைந்தரிலா வாழ்வாகும் மற்று.*

திருச்சிற்றம்பலம்

## 2

# திருமுறைகளின் மாண்பு

வரலாற்று வழியிலே கண்ணோட்டத்தைச் செலுத்து கின்றபோது, காலத்தால்-கருத்தால்-நாகரிக முதிர்ச்சியால் மூத்த பழமையுடைய இனமாக மிளிர்கிறது நமது தமிழினம். அத்தகைய இனத்தின் தனிச் சொத்துக்களாக, உலக இனங் களின் நலனில் நாட்டம் கொண்ட தத்துவங்களாக ஒளிர் கின்றன திருமுறைகள். திருமுறைகளைப் பயில்வதனாலே சமய அறிவு பெறுவதோடு, காலப் போக்கில் சமய உணர்வை-அனுபவத்தை நாம் பெறுகிறோம்; வாழ்க்கையில் இன்பத்தை அடைய அவாவுறும் நாம் திருமுறைநெறிகளால் பேரின்பப் பேற்றினையும் அடைகின்றோம். கடவுளை எங்கோ தூரத்தில் வைத்து வணங்கிய நிலைமாறி மிக மிக அண்மையில் எம்பிரானை அழைக்க-காண-வாழ்த்த-வணங்கத் திருமுறைகள் வாய்ப்பளிக்கின்றன.

திருமுறைக் கடலிலே ஆழக் குளிக்கின்றபோது, சமுதாய நன்மைக்காக-மனிதஇன மேம்பாட்டிற்காகப் பாடு பட்டுழைக்க வேண்டுமென்ற வேட்கையுண்டாகின்றது. நாடு உய்யவந்த நாவுக்கரசரது திருவார் தேவாரத் திருப்பதிகங் களினாலே தீதகற்றி திறமையும் திண்மையும் நிரம்பி, உள்ள உறுதியையும் பிறர்க்காக உழைத்துப் பேரின்பமடையும்

மனோபாவத்தையும் பெற முடிகிறது. மனிதகுல வாழ்வுக்கும் வளத்துக்கும் அயராது சிந்தித்த சிந்தனைச் செம்மல்களில்-பேராசிரியர்களில் அப்பரடிகள் தொண்ணூறு விழுக்காடு சமுதாய மலர்ச்சிக்காகப் பாடுபட்டிருக்கிறார்.

தமிழ்ச் சமூகத்தின் மொழிவழி நாகரிகத்தையும் அவர் பேணிக் காக்கப் பெருந் தொண்டாற்றியமை மறக்க முடியாதது. சமணத்தின் நுழைவினால் சைவ சமயமும் தமிழும் குன்றிக் குற்றுயிராகிக் காலப் போக்கில் மறைந்தொழிய ஏதுவாகுமெனக் கருதியே, சமணர்களால் உண்டான இன்னல்களை எல்லாம் எதிர்த்துப் போராடினார்; இசையைத் துய்க்கத் தெரியாத-அனுபவிக்கத் தெரியாத அன்றையச் சமணர்கள், மலரை மணக்காதே என்பதுபோல் இசையைப் பொழியாதே என்பதுபோல் இசையைச் சுவைக்காதே, எனத் தடை போட்டார்கள். தடைவரினும் படைவரினும் தளராது தன்னம்பிக்கையால்-உள வலிமையால் இன்னிசை பொழிந்து இசைத் தமிழ் வளர்த்தார் அப்பரடிகள்.

பிறர் நலம் பேணுகின்ற உள்ளத்தினரான அப்பரடிகள் அல்லும் பகலும் அறவாழி அந்தணன் தாளை இறைஞ்சி இறைஞ்சி அவனது ஆன்மாக்களிடத்து அன்புகாட்டி அரும்பாடுபட்டார்.

> "தொண்டலாது உயிர்க்கு ஊதியமில்லை"
> "என் கடன் பணி செய்து கிடப்பதே"

என்பன போன்ற வரிகள் அப்பரடிகளின் தொண்டுள்ளத்தைத் தெளிவாக்கி நிற்பன. திருமுறைப் பாசுரங்களிலே என்னைப் பிணித்து உருக வைத்தவை மணிவாசகரின் திருவாசக மழையும், திருநாவுக்கரசரது தேவாரத் திருவமுத மழையுமேயாம். நாள்தோறும் நேரங் கிடைக்கின்ற போதெல்லாம் அப்பருடனும் அருண்மணி வாசகருடனும் பொழுதைப் போக்குவதில் பேரின்பமடைகின்றேன்.

பலர் இறைவனைக் காட்சிப் பொருளாக-கோயிற் பொருளாக-கற்பனைப் பொருளாகக் காண்கின்றார். ஆனால் திருமுறைச் செல்வர்களோ கருத்துப் பொருளாக-அனுபவப் பொருளாக-வாழ்வுப் பொருளாகக் கண்டார்கள். நமக்கும் அப்படியே காட்டுகின்றார்கள். புலன்வழித் தொண்டினால் கடவுள் நெறி கூட்டி, பொறிவழித் தொண்டினால் மக்கள் சேவையின் மாண்பினை உணர வைத்திருக்கிறார்கள். நாளும் இன்னிசையால் தமிழ் வளர்த்த ஞானசம்பந்தரின் தீந்தமிழ்க் கவிகள் கருத்தைக் கரைய வைத்துச் சமயச்சார்புடைய சிந்தனைக்கு வித்திடுகின்றன; ஆளுடைய பிள்ளை அருளிய எளிய இனிய தமிழ்ப் பனுவல்கள் அருள் வாழ்வுக்கு நம்மை யாற்றுப் படுத்துகின்றன. குறிக்கோளில்லாது கெட்டொழியும் நமக்கு நல்லதொரு கொள்கைப் பற்றை-இலட்சியத்தை-குறிக் கோளைத் திருமுறைகள் கொடுக்கின்றன; தமிழ் நெடுங் கணக்கிலேயுள்ள உயிரெழுத்துக்கள் பன்னிரெண்டினைப் போல் பழமை வாய்ந்த நீண்ட சமயவரலாற்றிலே பன்னிரு திருமுறைகளும் உயிர்போன்றவைகளாகத் திகழ்கின்றன.

துன்பங்களை இன்பங்கள் எனக் கருதும் அறியாமை யினால் மனிதன் அல்லலுறுகிறான்; வீதியிலே நடக்கின்றான்; ஏதோ சில எண்ணங்களினால் தன்னையும் தான் கடந்து செல்கின்ற சாலையையுமே மறக்கின்றான்; வழிபார்த்து நடக்காமையினால் கல்லில் மோதுகின்றான்; காலில் புண்ணுண்டாகி விடுகின்றது. "காலில் என்ன? கட்டுப் போட்டிருக்கிறாயே!" என்று யாராவது கேட்டால் "கல் இடித்து விட்டது" என்று கூறித் தன் குற்றத்தைக் கல்லின் மேல் சுமத்தி விடுகின்றான். அது போலத்தான் உயிர்கள் அறியாமையினாலேயே பலப்பல அல்லல்களுக்கு ஆளா கின்றன.

நங்கை ஒருத்தி ஆமைக்கறி சமைக்கிறாள். அடுப்பிலே தீ மூட்டி ஆமை போட்ட உலையை ஏற்றுகிறாள்! சற்றுச்

சூடானதும் ஆமையைப் பக்குவப்படுத்த எண்ணுகின்றாள். உலையிலே சிறு சூடு ஏறியதும் உள்ளிருந்த ஆமையின் உள்ளம் இன்பம் அடைகின்றது. சதா காலமும் குளிர் நீரிலே வாழ்ந்த ஆமைக்கு இளஞ்சூடு இதங்கொடுக்கின்றது-இன்ப மளிக்கிறது. உலைப்பானைக்குள் ஆமை மகிழ்ந்து ஓடியாடித் திளைக்கின்றது. அறியாமையின் கொடுமையை அந்த ஆமை சிறிது நேரத்தில் அனுபவிக்கத்தான் போகிறது. இளஞ்சூடு-கடுஞ்சூடானதும் இந்த உலகத்தையே இழக்கப்போகிறோமே என்று உணரும் ஆற்றல் அதற்கு அப்பொழுது இல்லை. காரணம் அந்த ஆமையின் அறியாமையே! அதுபோலவே தான் உயிரினங்கள் அனைத்தின் உள்ளமும் உணர்வும் இருக்கின்றன.

வாழ்க்கை என்ற அடுப்பு-அனுபவம் என்ற பானை-ஆர்வம் என்ற தண்ணீர்; உயிராகிய ஆமை; ஆசையென்ற தீ எரிகிறது. உலகியல் இன்பமாகிய இளஞ்சூடு உயிரை இதப்படுத்துகிறது. பாவம்! அறிவிலே தெளிவில்லாததால் உயிர் அல்லற்படுகிறது. இத்துன்பத்தினின்று நீங்கி எல்லை யில்லா இன்பம் பெற உதவும் சமயக் கோட்பாட்டின் தலையாய தொகுப்பே திருமுறைகள்.

திருமுறைகளிலுள்ள பாடல்கள் தெய்வமணங்கமழும் செய்யுட்களாகவும், தீந்தமிழ்ச் சுவை சொட்டும் தெய்வீகக் கனிகளாகவும் திகழ்கின்றன. பத்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடிய நமது நாயன்மார்களின் பாடல்கள், பரமன்பதம் நாடுவதற்கும், பரமன் விரும்பும் செயல்களைச் செய்வதற்கும் தூண்டுகோல்களாய்த் தோன்றுகின்றன. நாளுக்கு நாள் நாழிகைக்கு நாழிகை-அவகாசங் கிடைக்கும் போதெல்லாம் திருமுறைகளைப் படித்து அனுபவித்தால் இனிய பரிபூரண ஆனந்தத்தில் திளைக்கமுடியும் என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை. நெஞ்சைத் திறந்து நேசத்தைப் பெருக்கி அகத்தில் ஊற்றெடுக்கும் அன்பினை வெளிக் கொணர்ந்து அறமானவைகளைச் செய்து

அருட்செல்வர்களாக வாழ வைப்பவை திருமுறைகள். இறையருளால் இன்னல் களைந்து இன்பமடைந்து இறும் பூதடையச் செய்வதோடு சிவனைப் பற்றியும்-சிவனருள் ஆர்ந்த செல்வர்களைப் பற்றியும்-சிவத்தலங்களைப் பற்றியும் தெளியத் திருமுறைகள் உதவுகின்றன.

சைவத்திருமுறைகள் பன்னிரண்டும் சைவப் பெருமக் களுக்கு வாய்த்த தெய்வத் தமிழ் வேதமாகும். இறைவன் எல்லா உலகத்திலும் இருப்பவன்; அவனுக்குத் தென் னாட்டிலே அருமையான செல்வப் பெயருண்டு. அதுதான் சிவன் என்பது. "தென்னாடுடைய சிவனே போற்றி; எந்நாட்டவர்க்கு மிறைவா போற்றி" என்கின்றார் மணி வாசகர். தென்னாட்டிலே சிவனாகக் கருதப்படுகின்ற நமது கடவுள் நாம் வாழ நமக்கு இடையூறாய் இருப்பவைகளைத் தாமே எடுத்துக் கொண்டார். இதிலிருந்து இறைவனின் தாய்மை நிலையை எளிதில் உணர்ந்து கொள்ளலாம். பாம்பும், புலித்தோலும் பார்க்குமிடத்து எவர்க்கும் தேவையற்றவை. அவற்றினை அவரே எடுத்துக் கொண்டார். குழந்தையின் நன்மையையும் வளர்ச்சியையும் குறிக்கொண்டு காக்கும் ஓர் உத்தமமான தாய் பத்தியமாக இருப்பது போலவே ஆன்மாக்களைப் பொறுத்தவரை அண்ட சராசரம் அனைத்தையும் ஈன்று புறந்தரும் அன்னையாக ஆண்டவன் இருக்கின்றான். "தாயிற் சிறந்த தயாவான தத்துவனாகவும்", "பால் நினைந்தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிவுடையனாகவும்" இருப்பதை அனுபவத்திலே கண்டு மணிவாசகர் பாடியருளினார்.

இத்தகைய இறையின் இயல்புகளைத் தெளிவாக்கி உலகுக்கு ஒளிபரப்ப எழுந்த சாதனங்களே திருமுறைகள். ஐம்புல வேடர்களின் இயல்புகளைக் குறைத்து-மறைத்து மாண்பார் நிலைக்கு மாந்தரை உயர்த்த உதவுவன நமது சைவத்திருமுறைகள்.

# 3

# நாயன்மார்கள் காட்டும் வழி

சமயவரலாறுகளைப் பலர் பலவிதமாகப் பார்க்கிறார்கள். வாழ்வுக்கு நெறியைக் காட்ட வேண்டிய சமய அமைப்புகள் தளர்ந்ததாலும், சோம்பியதாலும் ஒருவித மயக்கம் உண்டாகியிருக்கிறது. ஆண்டவன் அருள்பாடும் இன்றைய ஆத்திகர்கள் சிலரிடமிருந்து சமயத்தைக் காப்பாற்றவேண்டிய கட்டம் வந்திருக்கிறது. சமயத்தைப் பற்றிய ஐயப்பாடு நமது சமுதாயத்தில் எப்படி எழுந்தது என்பதைச் சிந்திக்க வேண்டும். சமயச் சார்புடைய புராணங்கள் எத்தகைய நோக்கத்தோடு தோன்றின என்பதையும் எண்ண வேண்டும். இத்தகைய சிந்தனைகளினாலும்- எண்ணங்களினாலும் முடிவான கருத்தொன்று பிறக்க வழியுண்டு. அந்த முடிவான கருத்தின் வழி சமயச் சார்புடைய சமுதாயத்தைப் படைக்க உழைக்கவேண்டும்.

சமுதாயப் பசியை-நாட்டுச் சிக்கல்களை எண்ணிய படியே புராணங்களை அணுகவேண்டும். நாம் பெரிய புராணத்தை அத்தகைய எண்ணங்களோடுதான் பார்க்கிறோம். பெரிய புராண அடிகளை ஆழச் சிந்தித்தால் மனித விடுதலைப் போராட்டம் நன்கு புலனாகும்; மண்ணகத்தை விண்ணகமாக்க எழுந்த காவியமே திருத்தொண்டர்

புராணம். அரசியல் வரலாற்றையும் சமுதாய வரலாற்றையும் நாம் அதில் காண முடிகிறது. மனித வாழ்வின் எல்லாத் துறைகளையும் அலசி ஆராய்ந்து செய்திகளை வெளியிட்ட வாழ்வு நூல் பெரிய புராணம். பெருமான், அர்ச்சனை பூசைகளை ஏற்றுக் கொண்டிருப்பவர் அல்லர். அவர் அடியார்க்கு வேலையாளானவர்-தூதுவரானவர். இரவோடு இரவாகத் தன் தோழனுக்காக ஒரு பெண்ணிடம் தூது சென்றிருக்கிறார். இத்தகைய செய்திகள் பெரிய புராணம் வாழ்க்கையை ஒட்டியது - வாழ்வோடு பிணைந்தது என்பதைக் காட்டி நிற்கின்றன.

மனித இனத்தை வறுமையினின்றும் மீட்டு ஈடிலா இன்ப வாழ்வு வாழ வழிகாட்ட வேண்டுமென்ற ஒப்பில்லா உயர்ந்த எண்ணத்தைப் பெரிய புராணம் தருகின்றது. "வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமை தப்பி" என்கின்றது சித்தியார். வறுமை வாழ்வைச் சிதைத்து மாற்றம் செய்கின்றது. வறுமையால் வரும் சிறுமையை விலக்க வேண்டும். மன்றுளார் அடியார் வரலாறான பெரிய புராணம் உணர்ச்சி, குரோதம், ஆத்திரம் போன்றவைகளை விலக்கிவிட்டுப் படிக்கவேண்டிய ஒரு தெய்வ நூல். செழுமை யான நிலத்தில்தான் பயிர் நன்றாகச் செழித்து வளரும்; உள்ளத்தின் செழுமையில்தான் உண்மைத் தத்துவங்களின் வளர்ச்சி தங்கிக் கிடக்கின்றது.

மன்றுளார் அடியார் பொதுமக்களுக்கு உரியவர்கள்; பொதுவாழ்வைப் பற்றிச் சிந்தித்தவர்கள்; எப்பொழுதும் எம்பெருமானை எண்ணியபடி எவர்க்கும் இன்னல் களைபவர்கள்; மன்றத்துக்கு மக்களுக்கு மகிழ்ச்சி கொடுக்கவே தாங்கள் பிறந்திருப்பதாக எண்ணிச் செயல் பட்டவர்கள். இறைவனின் திருவடிகளே செல்வம் என்றெண்ணி வாழ்ந்தவர்கள். கேடும் ஆக்கமும் கெட்ட திருவினால் அவர்கள் நன்மையையும் தீமையையும் ஒன்றாகவே-ஒரேதன்மை உடையனவாகவே கருதினார்கள்;

ஓட்டையும் செம்பொன்னையும் ஒக்கவே நோக்கினார்கள்; வீடும் வேண்டாது, கூடும் அன்பினிற் கும்பிடுதலாகிய ஒரு செயல் கிடைத்தால் போதுமானது என்று அவர்களது நெஞ்சங்கள் ஏங்கின. ஆனந்த நடனமாடும் ஆண்டவனது குனித்த புருவத்தையும் பனித்த சடையையும் பவள மேனியையும் அம்மேனியில் திருநீறு அணிந்த காட்சியையும் பாதம் தூக்கி ஆடும் அற்புத அழகையும் காணவே-மானிடப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே என்றார்கள்.

இறைவனை எட்டத்தில் வைத்து ஏதோ வாழ்வோடு பிணைப்பில்லாத வாழ்த்துப் பொருளாக்கிக் கோவில் களிலும் குருக்கள்மாரின் சமீபத்திலும்தான் கடவுளை வணங்க வேண்டுமென்று கருதுநிற சமுதாயத்துக்கு நல்லதொரு விழிப்புணர்வை நமது நாயன்மார்கள் கொடுக் கிறார்கள். பொன்னும் மெய்ப்பொருளும் தந்து போகமும் திருவும் புணர்ப்பவராக நமது கடவுள் இருக்கிறார் என்ற எண்ணம் நம்மவர்களிடையே தோன்ற மன்றுளார் அடியார் பாடுபட்டுழைத்தார்கள். அவர்களது வாழ்க்கை முறை யிலேயே-தொண்டு தெய்வத்தன்மை வாய்ந்தது என்றும் -தொண்டல்லாது உயிர்க்கு ஊதியம் இல்லை என்றும் நாம் அறியக் கூடியதாயிருக்கின்றன.

தமிழர் வாழ்வு இசையோடு இணைந்தது. ஏழி சையாக-அவ்விசைகளின் பயனாக இறைவனைக் கண்ட வர்கள் தமிழர்கள். இயற்கையை வர்ணித்து அதன் வழி ஆண்டவனைக் கண்டு வணங்கிய இனமும் தமிழினந்தான். இத்தகைய தமிழர் நிலை சமணர்களது குறுக்கீட்டால் பிறழக் கூடாதெனக் கருதியே, ஞானச் சம்பந்தர் தமிழர் நாகரிகம் காக்கப் புறப்பட்டார். தமிழர் நாகரிகம் பேணப் படவேண்டி சம்பந்தர் சமணர்களோடு வாதிட்டார்- வென்றார். இந்த வாதத்தை சமயச் சண்டையாக எண்ணி விடுதல் தகாதது. சண்டை வேறு-பாதுகாக்க எடுக்கும் முயற்சி வேறு.

இயற்கையோடியைந்த வாழ்வைத் தொல்காப்பியம் கூறுகின்றது. தமிழர்கள் வாழ்வு இயற்கையோடியைந்தது. இந்த இயற்கை வாழ்வைச் சமணர்கள் மாற்றி அமைக்க எத்தனித்தனர். அப்போதுதான் அப்பரும் சம்பந்தரும் ஒரு நிலைமை மாற்றத்தைக் கொணர விழைந்தனர். பண்ணோடு இசை கேளாத சமணர்களின் போக்கை மாற்றியமைக்கும் பொறுப்பு சம்பந்தருக்குக் கிடைத்தது. சமணர்கள் மலரிடை மணம் நுகரார் என்றனர். அப்பரும் சம்பந்தரும் இதற்கொரு மாற்றத்தைத் தேட வேண்டியிருந்தது. சம்பந்தர் தாம் பாடும் தேவாரங்களில் இயற்கையைப் பற்றி எடுத்தியம்பினார். மேல் நாட்டுக் கவிஞர்கள்தான் இயற்கையை வர்ணித்துப் பாடல்கள் இயற்றியிருக்கிறார்கள் எனக் கருதுபவர்கள் சம்பந்தர் திருப் பாடல்களை ஒருமுறை படித்து இன்புறுவார்களாக.

சமண–புத்த சமயத்தவர்கள் பெண்மைக்கு மதிப்பளிக் காதவர்கள்–தெளிவாகச் சொன்னால் பெண்ணினத்தை வெறுத்தவர்கள். இந்நிலையிலேதான் ஞானசம்பந்தர் பெண்ணினத்தைப் போற்ற முற்பட்டு இறைவனைப் பெண்ணோடு தொடர்புபடுத்திப் பாடினார். முதலில் பாடி அருளிய தேவாரத்திலேயே “தோடுடைய செவியன்” எனப் பாடியிருக்கிறார். “பெண்ணினல்லாளொடும் பெருந்தகை யிருந்ததே!” என்றார். மாதொரு பாகனாக நமது மகேஸ் வரனைக் காட்டிப் பெண்ணைப் பெருமைக்குரிய வளாக்கினார் சம்பந்தர்.

சமுதாயம் கோவில் தொண்டைப் புறக்கணித்தபோது சேக்கிழார் கோவில்தொண்டை வலியுறுத்திப் பாடினார், மனையில் வாழ்ந்த மாதவர்களைப் பாடினார். திருவருளை ஏற்று மனைவாழ்வு வாழ வேண்டுமென்பதைக் காட்டவே சுந்தரர் மனைவாழ்வை வாழ்ந்து காட்டினார். சமணத்தைத் தடுத்து, தமிழ் நாகரிகத்தைக் காத்த மங்கையர்க்கரசியாரை மங்கையர்க்குத் தனியரசி எங்கள் குலதெய்வம் எனத் தொழுகிறார். வேறொருவரையும் சேக்கிழார் பெருமான்

தெய்வம் என விளம்பவில்லை; மங்கையர்க்கரசியையே கூறி யுள்ளார். இவ்வாறாக மன்றுளார் அடியார் பெருமையினைப் பெரியபுராணம் பேசுகிறது. அன்று சமணர்கள் செயலைச் சம்பந்தர் தடுத்திராது போனால் இன்று நாமெல்லாருமே கையில் கமண்டலம் ஏந்துபவர்களாய் இருந்திருப்போம். நமது நாகரிகத்தைக் காப்பாற்றிய நல்லவர்களை நமது குலதெய்வங்களாக நாம் போற்றவேண்டும்.

வேதம், ஆகமம் போன்றவற்றை ஆராய இப்பொழுது அவகாசம் இல்லை. காலவெள்ளம் ஒடுகிற ஒட்டத்தைப் பார்க்கிறபொழுது, நிம்மதியுடன் இருந்து நீண்டநேரம் அவற்றை ஆராய முடியவில்லை. ஆதலால் நம் நாயன் மார்கள் காட்டும் வழிச்சென்று சிறப்புறுவோம்.

அன்பினாலே அம்மையப்பனை அணுகி அணைத்துக் கொள்வோம். கண்ணப்பர் கூட மோகமாய் ஓடிச் சென்று தழுவி மோந்துகொண்டார். சாக்கிய நாயனார் எறிந்த கல்லைக்கூட இறைவன் ஏற்று அருள் புரிந்தார். திருப்பனந் தாளிலே தடாகைப் பிராட்டியார் கொண்டு சென்ற மாலையை இறைவன் குனிந்து ஏற்றுக்கொண்டார். குங்கு லியக்கலயநாயனார் குங்குலியத் தூபம் போட்டார். இவைகளிலிருந்து அன்பின் நெகிழ்ச்சியே ஆண்டவனுக்கு வேண்டப்படுகிறது என்பதை உணரமுடிகிறது. வழிபாட் டிற்குச் சாதி தடையாய் இருக்கக் கூடாது. பசித்தவன் சோறு பெற்றுப் பசி நீங்கி மகிழ்ச்சி நிறைவு கொள்ளவேண்டும். அதுபோலவே கோவிலுக்கு வருகிறவர்களும் அருள் வெள்ளத்தைப் பருகி, ஆன்மதாகம் நீங்கி நிறைவுபெற வேண்டும். அதற்கு மொழிச் சுவரோ, இனச்சுவரோ, சாதிச் சுவரோ தடையாயிருக்கக்கூடாது. அப்பர் சுவாமிகள் கூட "போதோடு நீர் சுமந்தேந்திப் புகுவார்; அவர்பின் புகுவேன்" என்கின்றார். அங்கு சாதி, குலம், பிறப்பு என்னும் சழக்குகளை அறுத்தெறிந்து ஆண்டவன் சந்நிதானத்தில் எல்லாரும் சமம் என்ற உணர்வினை உண்டாக்கவேண்டும்.

அவ்வுணர்வினை உண்டாக்கச் சைவர்களாகிய நாம் சமுதாயத்தில் இறங்கி உழைக்கவேண்டும்.

நல்லனவற்றை நினைப்பதிலும் சொல்வதிலும் பார்க்க அவற்றை நடைமுறையில் கொண்டுவர முயற்சிப்பதே மேலானது; அகத்திலே உள்ள தூய்மையும், அன்புப் பெருக்குமே ஆண்டவன் வழிபாட்டிற்கு உகந்தன. இக் காலத்தில் புறத் தூய்மையோடு நிறைவுகொள்கிறார்கள். நீறு பூசி உருத்திராக்கம் தரிப்பவர்கள் சிலரின் பக்கத்தில் நெருங்கினால் துர்நாற்றம் அடிக்கிறது. அகத்திலே தூய்மை இல்லாது-அன்பு இல்லாது திருநீற்றின் வெண்மை போன்ற உள்ளமில்லாது புறத்தை மட்டும் அலங்கரிப்பதில் என்ன பயன்?

நமது சமயம் புனிதத்தோடு தொடர்புடையது. அகமும் புறமும் ஒருசேரப் புனிதமடையாத தன்மையாலேதான் நமது சமயத்தவர் எண்ணிக்கை நாளடைவிற் குறைகிறது. காந்தத் தோடு கலந்திருக்கும் இரும்பும் காந்தமாகிறது. மின் சாரத்தைத் தொட்ட கம்பியிலே மின்சாரம் ஏறுகிறது. அது போலவே நாமும் இறைவனைத் தொட்டால்-நினைத்தால் அவன் அருள்கிட்டும். இறைவன் உருத்தெரியாக் காலத்தே உட்புகுந்து மன்னி இருக்கின்றான். வண்டுகள் மொட்டை ஊதி மலர வைக்கின்றன. அதுபோலவே அடியார்களது இதய மொட்டுக்களை ஊதி மலர வைக்க வேண்டும். திரு மடங்கள் அடியார்களது மனமொட்டு மலருமாறு ஊதவும்-ஓதவும் வேண்டும். கோவில் என்ற தாய் ஆன்மா என்ற குழந்தைக்குத் தெய்வ மணம் கமழச் செய்யவேண்டும். வேலி பெரிதல்ல பயிர்தான்-பெரிது; வரப்புப் பெரிதல்ல, பயிர் தான் பெரிது.

ஆகவே, ஆவியோடாக்கை புரை, புரை கனிய எம் பெருமானை நாம் வழிபட வேண்டும். நாம் ஆண்டவனை நோக்கிக் கைதொழுதால் அவன் நமது தொழுகையை

அறிந்து அருள்பாலிப்பான். திருமுறைக்காலத்துச் சைவ சமய நிலையை உருவாக்கப் பெரியபுராணம் ஒன்றே போதும். நமது சமய வாழ்வோ-சமய அனுபவமோ சேக்கிழார் அளவுக்கு இல்லை. சேக்கிழார் சுந்தரர் வாழ்வை உலக நடைமுறைப்படுத்தினார். இன்று கண்ணப்பர் காலமில்லை. ஆதலால் கண் தேவைப்படாது. தேவைப்படினும் கண் வங்கிகளில் பெற்றுக் கொள்ளலாம், கண்ணப்பர் குரு பூசை நாளன்று கண்பார்வை இழந்தவர்களுக்குக் கண்ணாடி வாங்கிக் கொடுக்கலாம். இயற்பகை நாயனார் குரு பூசையின் போது, வசதியில்லாமையினாலே திருமண மாகாதிருக்கும் ஏழைகள் நாலு பேருக்குக் கோவிலிலே திருமணம் செய்து வைத்தால் போதும். திருக்குறிப்புத் தொண்டர் திருநாளில் ஏழைக்கு உணவுப் பாத்திரம் கொடுக்கலாம்; ஏழை பணக்காரர் என்ற பாகுபாட்டினை மாற்றவேண்டும். பிட்டுக்கு மண் சுமந்தான் என்பதை மண்சுமந்தான் பிட்டுக்கு என்று மாற்றவேண்டும். இக்காலத்தவர் பிட்டுக்கு மண் சுமந்த கதையைப் படித்துவிட்டுப் பிட்டை உண்கிறார்களே யொழிய மண்சுமத்தலை நினைப்பதில்லை. எனவே தொண்டை முன்னும் உண்டியைப் பின்னுமாக மாற்றிக் கொள்ள வேண்டும். இன்று, கிணறு தோண்டல், வீதி அமைத்தல் ஆகிய சிரமமான முயற்சிகளை நாம் மேற் கொள்ளலாம். சுவாமியை வீதி வலமாக எழுந்தருளச் செய்து கொண்டுபோய் வைத்துப் பிட்டினைத் திருமுன் நிவேதித்துச் சிரமதானத்தின் பின்பு புனிதமான பிரசாதமாக உண்ண லாம். கற்பனைக்கு அப்பாலான வாழ்க்கை அனுபவந்தான் பெரிய புராணம். வான்முகில் வழாது பெய்து-நீர்வளம் பெருகி, மலிவளம் சுரந்து-அரசு அருள்நெறி வழிப்பட்டு இயங்கி-யாதொரு குறையுமின்றி உயிர்கள் வாழ்தலே சாலச் சிறந்ததாகும்.

# 4

# சுந்தரர் பெருமை

அடியார்கள் பலர் வாழ்ந்தார்கள். அற்புதங்கள் பல புரிந்தார்கள். வேதம் பாடும் இறைவனை இன் தமிழ்ப் பாக்களால் ஏவல் கொண்டார்கள். இதயங்கலந்த உறவும் இன்னிசைப் பொழிவும் மெய்யடியார்களின் மேன்மைக்கு உதவி புரிந்தன. சைவ நன்மக்களின் வாழ்க்கைக்கு மட்டுமல்லாமல் ஏனைய இனத்தவர்க்கும், மதத்தவர்க்கும் நமது அடியார் பயன்பட்டிருக்கிறார்கள். அவர்களது சிந்தனை ஆழியினின்றும் எடுக்கப்பெற்ற தத்துவ முத்துக்கள், நம்மை வாழ வைப்பதுடன்–வாழ்க்கை இன்னதுதான் என்று காட்டியும் நிற்கின்றன.

நமது நாயன்மார் வரலாற்றில் சுந்தரர் வரலாறு நாம் அறிந்திருக்கவேண்டிய ஒன்றாகும். இல்லறத்தில் வாழ்ந்து–இன்னல்களுக்கு இலக்காகி–இறைவனடி சேர்ந்த வரலாறு; அது தமிழர்களின் கருத்துடன் கலந்து நிற்கத்தக்கது. துன்பத்தின்போது சோர்ந்து வாழ்க்கையில் விரக்தி கொள்ப வர்களைத் தட்டியெழுப்பி, வாழ்க்கையில் பிடிப்பை உண்டாக்கவல்லது சுந்தரர் வரலாறு.

சுந்தரர் வாழ்க்கைக் கடலில் ஆழக்குளித்து முத் தெடுத்தவர். அவரது காலம் கருத்துக்காலம்–கருத்தாளரை

மதித்து நடந்த நாகரிகக் காலம். வழிவழியாக அந்த விழுமிய நாகரிகம் காப்பாற்றப்படாதது வருத்தத்தைத் தருகிறது. ஈன்று புறந்தருதலில் நம் தலைவர்கள் பின்நிற்கவில்லை. நாம்தான் பேணிக்காக்கத் தவறிவிட்டோம். தவற்றினை உணர்ந்து தக்கபடி செயல்பட்டால் இனியாவது நல்லகாலம் பிறக்கலாம். வையத்துள் வாழ்வாங்குவாழ வள்ளுவர் தந்த கருத்தினை நல்லபடி நடைமுறைக்குக் கொண்டுவர நாம் இன்னும் அதிக கவனம் எடுக்கவில்லை.

நம்மிடையே இருக்கும் கருத்துக்களைப்பற்றிச் சிந்திக் காமல் இறக்குமதிக் கருத்துக்களில் எண்ணத்தைத் திருப்பி விட்டிருக்கிறோம். வீட்டுத் தோட்டத்திலே கத்தரிக்காய் காய்த்துக் குலுங்கிக் கிடப்பதைக் கவனியாது- சந்தைக்குப் போகும் நிலைமைக்கு நாம் வந்திருக்கிறோம். சுந்தரர் காலம் வீட்டிலே காய்த்த கத்தரிக்காயைச் சமைத்துண்ட காலம். விரிந்த மனப்பான்மையோடு மற்றையோர் கருத்துக்களைப் பாராட்டி நம் கருத்தை வளர்க்க நாம் முனையவேண்டும். நம் நாட்டு நயத்தகு நாகரிகத்தின் சிறப்பினுக்கு, நமது கருத்துக்கள் பரவிய முறையினை எடுத்துக் காட்டலாம். மற்றைய நாடுகள் இரத்தம் சிந்தியே கருத்துக்களை வளர்த்தன-பரப்பின. தென்னாட்டிலே அப்படி யில்லை. கருத்துவழிப் போராட்டம் அதிகம் இருந்தது போலவே கனிவும் அவற்றுடன் இழையோடியிருந்தது.

புத்திக் கூர்மையும், தூய நோக்கமும் கொண்டவர் களது ஊக்கத்தினாலேயே புரட்சிகள் உண்டாகின்றன. கருத்துவழிப் புரட்சிக்கு நமது சமயக்குரவர்கள் பலகாலமும் முயன்றிருக்கிறார்கள். மணிவாசகர் இறைவனைக் காதலியாக வும் தன்னைக் காதலனாகவும் உருவகப்படுத்திக் கருத்துப் புரட்சி செய்தார். இப்படியே, ஆண்டவனை அப்பனாக, அம்மையாக, மாமனாக, மாமியாக, உருவகித்துப் புரட்சி செய்திருக்கிறார்கள். நமது சுந்தரரின் நிலை தனியானது. அவர் இறைவனைத் தோழனாக்கினார். மனம் விட்டுப்பேச

நண்பன் தேவை. எல்லா நண்பர்களிடத்தும் மனம் விட்டுப் பேசுதல் என்பது முடியாத காரியம். சிலர் புறத்தால்-முகத் தால் நண்பர்களாகவும், அகத்தால் பகைவர்களாகவுமே இருப்பார்கள். எவருக்கும் உயிர்க்குயிராக ஒரு நண்பன்தான் இருப்பான். இந்த விதிக்கு விலக்காக ஒருசிலர் இருக்கலாம்; ஆனால் எல்லாரும் இருக்க இயலாது; இருக்கவும் முடியாது. வாழ்க்கை அனுபவத்தில் உண்டாகும் அந்தரங்கங்களையும் அவலங்களையும் மனம்விட்டு உயிர்த்தோழனிடம் நாம் சொல்லுவது போலவே, சுந்தரர் இறைவனைத் தன் உயிர்த் தோழனாக்கித் தன் இன்னல்களை மனம்விட்டுச் சொன்னார்.

தோழமைக்கு இந்த இருபதாம் நூற்றாண்டில் அதிக சக்தி உண்டு. மேடையில் நின்று அவையைப் பார்த்து, அன்பர்களே! பெரியோர்களே! என்றோ சகோதர சகோதரி களே! என்றோ, சீமான்களே! செல்வர்களே! என்றோ விளித்தால் அவ்வளவு வரவேற்புக் கிடைப்பதில்லை. தோழர்களே! என்றவுடன் கட்டுக்கடங்காத மகிழ்ச்சி ஆர வாரத்தையும் கையொலியையும் காணமுடிகிறது. இத்தகைய சக்திவாய்ந்த தோழமை சுந்தரர் காலத்திலேயே, அதுவும் ஆண்டவனிடத்திலேயே உண்டாகிய தொன்றாகும்.

சுந்தரர் உள்ளத்தால் ஞானி; உடலால் உலகியலார். சுந்தரரின் வாழ்க்கை நகைச்சுவை நிரம்பியது. இரண்டு மனைவியரை மணந்தார். ஆற்றில் போட்டுக் குளத்தில் எடுத்தார். கலப்புத் திருமணம் செய்து சமுதாய வேறுபாடு களை ஒழித்தார். ஒருவனிடத்தில் மட்டுமே கடன்பட்டார். அதுவும் தன் தோழனான ஆண்டவனிடத்திலேயே தேவை களை வேண்டிப் பெற்றார். இப்படிப் பலப்பல உண்டு.

“தம்பிரான் தோழன்” என்ற பெருமையும் பெருநலமும் எய்திச் சைவப் பெருமக்கள் வாழவழிகண்டார் சுந்தரர். மாழை ஒண்கண் பரவையாரைத் திருவாரூரில் மணந்தார்.

குண்டையூர்கிழார் அன்பின் வேண்டுகோளால் ஊர் நிறைந்த நெல்லைத் தந்தவனைக் கொண்டே திருவாரூரில் தருவித்தார். இங்கு இறைவனை ஏவல்கொண்ட தன்மையை நினைக்குந்தோறும் "ஆளிலை எம்பெருமான் அவை அட்டித் தரப்பணியே!" என்ற அடியை எண்ணுந்தோறும் உள்ளம் உருகுகின்றது. செங்கல்லைச் செழும்பொன்னாக்கினார். அருள்நெறியை மறந்து, ஆன்ம ஆக்கத்தைத் துறந்து பொருள்நெறிப் போரில் போய்க்கொண்டிருக்கும் நமக்கு இச்செய்திகள் வியப்பைத்தான் தரும். ஆனால் சுந்தரரது அருட்பாக்களை-அவர் சிவனை வேண்டிப்பாடும் கசிவை உணர்ந்தோமானால் அவரது பாசுரங்களுக்கு மிகப்பெரு வலிமை இருந்தது-இருக்கிறது என்பதை ஒத்துக்கொள்வோம்.

திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து "பிரியேன்" என்று சத்தியம் செய்தார். ஆயினும் திருவாரூர் இறைவனிடம் காதல் மீதூர அச் சத்தியத்தை மறந்தார். ஆம்! மன்றுளாடியைப் பாடவேண்டி மறந்தார். ஊர் எல்லை தாண்டியதும் கண்களை இழந்தார். இங்கேதான் சுந்தரரின் செந்தமிழ் உச்ச நிலையை அடைகிறது. "மூன்று கண்ணுடையாய், என்கண் கொள்வது நீதியோ?" என்று கேட்டார். "மகத்திற் புக்கதோர் சனியெனக்கானாய்" என்று ஏசினார். "வாழ்ந்தும் போதீரே" என்று திட்டினார். இறைவன் கண்கொடுக்காமல் இருக்க முடியுமா?

ஊடலுற்ற பரவையார்பால், மூவருமறியா முக்கண்ணனைத் தூதுவிட்டார். அதனால், கலிக்காமரின் பகையைப் பெற்றார். இறைவனால் சந்து செய்துவைக்கப் பட்டார். திருப்புக்கொளியூர் அவினாசியிடம் முடியாத ஒன்றை முடிப்பித்தார்-முதலை உண்ட பாலனை அழைப்பித்தார். அரன் அடிசேர்ந்தார் பிறர் போன்றாரல்லர். இவ்வுடலுடனேயே வெள்ளை யானையில் வேண்டிய நண்பர் உடன்வர வெள்ளியங்கிரியை அடைந்தார்.

சுந்தரர் பெருமையைச் சொல்ல முடியாது. இறைவனின் திருவாயால் "மேருவரையின் மேம்பட்ட தவத்தான்' என்று புகழப்பட்டார். கல்வியில் மேம்பட்ட சுந்தரர் எல்லாவற்றுள்ளும் இனிய கடவுளை "கற்ற கல்வியினும் இனியான்" என்றும், "பண்டைத் தமிழ் ஒப்பாய்" என்றும் வாழ்த்தினார். என்னே அவர் செந்தமிழ் ஆர்வம்! அவர் ஆராய்ச்சித் திறம் இக்கால வரலாற்று ஆராய்ச்சியாளரையும் பிரமிக்கச் செய்கின்றது.

சுந்தரரது காலம் சமயத்துக்கு மதிப்பளித்த நல்ல காலம். ஆனால், சமயத் தொண்டர்கள் நலிந்து வாடிய காலம். இன்றோ சமயத் தொண்டர்கள் நன்றாகத்தான் இருக்கிறோம். ஆனால், சமயத்துக்குத்தான் நல்ல நிலை இல்லை. சூழ்நிலை இப்படி மாறியது வருந்தத்தக்கது. சூழலை மாற்ற-உருவாக்க மனிதனால் முடியும். ஆகவே பொன் கேட்டு, பெண் கேட்டு, கண் கேட்ட சுந்தரரின் காலத்துச் சமய நிலையை உண்டாக்க நாம் உழைப்போம்.

# 5

## முதலும் முடிவும்

ஒரு செல்வந்தர் செல்லமாக நாய் ஒன்றை வளர்த்தார். அதற்கு நாள்தோறும் பாலும் சோறும் பரிவுடன் ஊட்டுவார். பஞ்சணையில் படுக்கவைப்பார். இப்படி செல்லமாக வளர்த்தும் அந்த நாய்க்கு அந்த வாழ்க்கையில் விருப்ப மில்லை. தெருவெல்லாம் ஓடிச் சுற்றி அலைவதிலும் எச்சில் இலை பொறுக்கித் தின்பதிலுமே நாட்டம் கொண்டிருந்தது. அதுவே இன்ப வாழ்க்கை எனவும் கனவு கண்டுகொண் டிருந்தது. தன்னுடைய இன்ப வாழ்வுக்கு இடையூறாகத் தன்னை வளர்ப்பவர் இருக்கிறாரே என்று எண்ணிக் கவலைப்பட்டது. இதன் காரணமாக வளர்ப்பவரை ஏமாற்றி விட்டு வீதிப்புறம் ஓடிவந்துவிட்டது. ஓடிவந்த நாய் அயலில் உள்ள குப்பைமேட்டில் சென்று படுத்துப் புரண்டு இன்பத்தை அனுபவித்தது.

நாயின் வளர்ப்பாளர் நாயைக் காணாமல் பாசத்தின் மிகுதியால் தேடி அலைந்தார். கடைசியில் நாய் குப்பை மேட்டில் படுத்திருப்பதைக் கண்டுவிட்டாலும் அருகிற் சென்று ஆசையோடு கூப்பிட்டார். நாய் வருவதாக இல்லை. அதனிடம் "என்னைத் தெரியவில்லையா? நான்தானே உன்னைப் 'பாலும் சோறும் ஊட்டி வளர்த்தேன். என்னிடத்தில் வா"

என்றெல்லாம் தன்னை அறிமுகப்படுத்திக் கூப்பிட்டுப் பார்த்தார். நாய் வந்தபாடில்லை. வராததோடு மட்டுமின்றிச் செய்ந்நன்றி உணர்ச்சியைக் கூட அந்தநாய் காட்டிக் கொள்ளவில்லை. எனினும் வளர்த்தவருக்குப் பாசம் விட்டதா என்ன? அவர் நாயின் அருகிற் சென்று அந்த மண்ணோடு அந்த நாயை வாரியணைத்துத் தூக்கிக் கொண்டு செல்கிறார். இந்த நிகழ்ச்சியைப்போலவே ஆன் மாக்களின் வாழ்க்கையும் இருக்கிறது. ஆன்மா நாய், வளர்ப்ப வன் இறைவன், குப்பைமேடு வினைச்சேறு என்று தொடர்பு படுத்திச் சிந்தித்தால் தெளிவாக விளங்கும். உயிர்கள் அன்றாடம் கோடிக்கணக்கான வினைகளைச் செய்கின்றன. இல்லை செய்துகொண்டேயிருக்கின்றன. உயிர்களின் வாழ்வு வினைச்சூழலிலேயே சுழல்கின்றது.

இங்ஙனம் வினைவழிப்பட்டு அல்லல் வழிக்குச் செல்லும் ஆருயிரை அருள்வழிப்படுத்தத் தந்தையும், தாயு மாகிய ஈசன் திருவுளங்கொள்கின்றான். இந்தக் கருணை எண்ணத்தோடு இறைவன் வினைவழிப்பட்டுழலும் உயிர்கள் மாட்டு இறங்கி வருகிறான், உயிர்கள் விரும்பாமலேயே.

> **"ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
> **ஊக்கம் உடையான் உழை"**

என்றே வள்ளுவரும் கூறுகின்றார். புண்ணியம் பண்ணிய பெருமக்களிடம்தான் பணம் போகும் என்று அறிஞனும்-சமயத் தலைவரும் புகன்றதில்லை. இந்தக் கண் மூடிக் கொள்கை நாட்டை விட்டே தொலையவேண்டும்.

"இரப்பவர்க்கு ஈயவைத்தார்; ஈபவர்க்கு அருளும் வைத்தார்" என்றே திருநாவுக்கரசரும் செப்பியருளினார். ஆகவே,

"செல்வத்துப் பயனே ஈதல்" என்ற கொள்கை நாட்டில் பரவவேண்டும் என்று அருள் நெறி முழங்கியது.

கு. IX. 6.

செல்வம் படைத்தோரிடமிருந்து செல்வத்தை வழங்குமாறு உள்ளத்தைப் பண்படுத்தப் பாடுபடுகிறது அருள்நெறி. “பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாந் தலை” என்ற வள்ளுவரின் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட கருத்தை இன்று வாழ்க்கையில் வைத்துப் பேசுவது, அருள் நெறிதான். இங்ஙனம் இன்றையச் சமுதாயத்திற்கு அருள்நெறி, பாவத்திற்கும், வறுமைக்கும் தொடர்பு இல்லை என்பதையும், புண்ணியத்திற்குப் பெரும் செல்வத்திற்கும் தொடர்பில்லை என்பதையும் பறைசாற்றியதாகும். உழைத்தால் செல்வம் தானேவரும். சோம்பேறியாக இருந்தால் செல்வம் சேராது. சீரழிந்து போவான் என்று அருள்நெறி இன்றைய சமுதாயத்திற்குப் பொருளாதாரத்தின் உண்மைத் தத்து வத்தைக் கூறிப் பரவச் செய்கிறது.

# 6

# அப்பரும் சேக்கிழாரும்

சேக்கிழார் பெருமான் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டக் காவியம் பாடியவர். ஒரு வரலாற்றுக் காவியம் எழுதுவது எளிதன்று. அதிலும், உணர்ச்சியில் இம்மியளவும் குறையாமல் வடித்துத் தருவதென்பது அரிய பணி.

உளம் நிறைந்த பக்தி அனுபவத்தினாலும் அடியார்கள் மாட்சியில் மனங்கலந்த ஈடுபாடு கொண்டமையாலுமே சேக்கிழார் பெருமானால் காவியம் செய்ய முடிந்தது. சேக்கிழார் பெரியபுராணத்தை இயற்றித் தராதிருப்பரானால் தூய சிவநெறியின் வரலாறு கிடைக்காமலே போயிருக்கும்.

சிவநெறி வாழ்க்கையோடியைந்தது என்னும் பேருண்மையை உலகுக்கு உணர்த்துவதற்குப் பெரிய புராணமே நமக்குரிய சிறந்த சாதனமாகத் திகழ்கிறது.

அப்பரடிகள் வரலாற்றை அருந்தமிழ்ச் சேக்கிழார் அருள் உணர்வு பொங்கித் ததும்ப வழிய எடுத்து இயம்பும் முறை, எண்ணத்தக்கது.

திருத்தொண்டர்க்கொரு தலைவராக வந்து அவதரித்த திருநாவுக்கரசரைத் தொண்டின் திருவுருவாகவே சேக்கிழார் பெருமான் படைத்துக் காட்டுகின்றார்.

சேக்கிழார், அப்பரடிகள் காலத்திற்கு மிகமிகப் பிந்தியவர் ஆயினும், அப்பரடிகளை நினைந்து நினைந்து, தமது உள்ளக்கிழியில் உரு எழுதி ஓவாத் தமிழ் தந்துள்ள அருமை, நினைந்து நினைந்து இன்புறத்தக்கது. அப்பரடிகளின் திருமேனி, திருவுள்ளம் ஆகியவற்றைப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். அப்பரடிகள், திருநீறணிந்து மகிழ்வதைக் கடமையாகக் கொண்டவர். பழுதிலாத் துறவாலும், சீலம்நிறை வாழ்வாலும், தவத்தின் வலிமையாலும், திருவருள் நினைவாலும், பொன்னொளிர் மேனி பெற்றவர். அந்தப் பொன் மேனியில் திருநீறு மண்டி மணம் கமழ்கின்றது.

இறைவனின் திருவடிகளை அப்பரடிகள்தம் நெஞ்சு அண்ணித்துத் தொட்டுத் தடவிக் கொண்டிருக்கிறது: அப்பரடிகள் நெஞ்சத்தில் திருவடிகள் திருக்கோயில் கொண்டருளின. அப்பரடிகளின் நெஞ்சம், ஒன்றையே நினைக்கிறது. மறந்தும் பிறிதொன்றை நினைப்பதில்லை. அதுவே, எந்தை ஈசன் திருவடிகள்! நெஞ்சத்தில் திருவடியை நினைந்து நினைந்து இன்ப அன்பினில் திளைத்து மகிழ்வ தால் கண்களில் நீர் மல்குகின்றது. அன்பின் பெருக்கில் ஊற்றெடுப்பது கண்ணீரே! கண்கள் காதற் பெருக்கில் கண்ணீரை மழையெனப் பொழிகின்றன!

அப்பரடிகளின் செந்நா சிவத்தையே பாடிய செந்நா. அவர் வாயில் உதித்த சொற்கள் செஞ்சொற்கள். சிவத்தின் செவிக்கே அமுதமெனத்திகழ்ந்த சொற்கள். நன்றுடையானே நாவுக்கரசரெனப் பெயர் சூட்டியபேரரசு. அப்பரடிகள் திருவாயில் ஊற்றெடுத்த திருத்தமிழைச் செவிமடுப்பதற் கென்றே எம்பெருமானும் கயிலையை மாற்றிக்கொண்டார்!

இத்தகைய இனிய இயல்புகளையுடைய அப்பரடிகள் புலன்கள்மீது தனியரசு செலுத்திய அரசு எனவும், நற்றமிழ்க்கோர் நாவுக்கரசெனவும், சிவநெறிக்கோர் அருளரசு

எனவும் விளங்கியமையைச் சேக்கிழார் பெருமான் என்பு நெக்குருகப் பாடுகின்றார்.

"தூயவெண் ணீறு
துதைந்தபொன் மேனியும்
தாழ்வடமும்
நாயகன் சேவடி
தைவரு சிந்தையும்
நைந்துருகிப்
பாய்வது போல
அன்புநீர் பொழிகண்ணும்
பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயு
முடையார் புகுந்தனர்
வீதி யுள்ளே"

என்பது திருப்பாடல்.

# 7

# மங்கையர்க்கரசியார்

தமிழகம் வரலாற்றுப் புகழுடைய நாடாக விளங்கியது. தமிழகம் மொழி, கலை, இலக்கியம், சமயம் ஆகிய துறைகளில் செழித்து, வளர்ந்து விளங்கியது. தமிழகத்தை மூன்று பேரரசுகள் ஆண்டு வந்தன. அவை முறையே சேர, சோழ, பாண்டிய அரசுகள் என்ப. இந்தப் பேரரசுகளுக்கிடையில் சிற்றரசுகளும் இருந்து வந்தன. பொதுவாகப் பழந் தமிழகத்தின் வரலாறு சிறப்புடைய ஒன்றேயாம். தமிழக அரசுகள் மக்களின் தாய்மொழியாகிய தமிழை வளர்த்தன; கலை முதலியனவற்றையும் வளர்த்துப் பெருமைப்படுத்தின; சமயத்துறையில் நிறைந்த ஆர்வம் காட்டின; விண்ணளந்து காட்டி வினை மறைக்கும் எண்ணற்ற திருக்கோயில்கள் கண்டன; கல்லெல்லாம் கலையாக்கிப் பேசும் பொற்சித்திர மாக்கி இறைமையாக்கி அருள் நலம் காத்தன. திருக்கோயில் களைச் சமுதாய மையமாகக் கொண்டு மக்கள் நலப்பணி களும் நடைபெற்று வந்தன.

கல்வி கற்பிக்கும் அமைப்புகளாகவும், கல்விபயில் கூடங்களாகவும், உடற்பிணி நீக்கும் மருத்துவச் சாலை களாகவும் நீதி வழங்கும் முறை மன்றங்களாகவும், அற்றார்க்கு உதவும் அற நிலையங்களாகவும் தமிழகத் திருக்கோயில்கள் விளங்கின.

தமிழகத்தில் பண்டைக்காலத்தில் வழங்கிய சமயங்கள் இரண்டு. அவை முறையே சைவ, வைணவச் சமயங்கள் ஆகும். இவ்விரண்டு சமயங்களும் சான்றோர் வாழ்க்கையில் - முதிர்ந்த அறிவில் - அனுபவத்தில் - தத்துவத் தெளிவில் தோன்றியவை; நம்பிக்கைக்கும் நல்லெண்ணத்திற்கும் உரியவை; நல்வாழ்வுக்குத் துணை செய்பவை. இவ்விரண்டு சமய நெறிகளும் தமிழில் தோன்றி வளர்ந்தவை; தமிழால் வளர்ந்தவை. இச் சமயங்கள் தமிழை வளர்த்தும் பெருமை தேடிக்கொண்டன.

சைவம், தமிழ்நாட்டின் பழைமையான சமயம். சங்க கால இலக்கியங்களில் சைவசித்தாந்தத் தத்துவங்கள் ஊடுருவிக் கிடக்கின்றன. காப்பியங்களிலும் அப்படியே. பக்தி இலக்கிய காலமாகிய ஏழாம் நூற்றாண்டு முதல் நாயன் மார்களும், ஆழ்வார்களும் போட்டி போட்டுக் கொண்டு நாளும் தமிழில் பாடித் தமிழை வளர்த்தனர்.

தமிழர் சமயங்களாகிய சைவமும், வைணவமும் தமிழரின் வாழ்வியலில் முகிழ்த்த சமயங்கள். இச் சமயங்கள் தோன்றி வளர்ந்த தாயகம் தமிழகமே! இச்சமயங்களுக்குரிய மொழி தமிழேயாம். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி னார்கள் என்றால் செந்தமிழின் பயனாகிய சிவநெறியையும் பரப்பினர் என்பது கருத்து. தமிழ்நாட்டின் சமயங்களைச் "செழுந்தமிழ் வழக்கு" என்று சேக்கிழார் புகழ்ந்து பேசுவார்.

தமிழில் சமய வாழ்வு, இயற்கையோடிசைந்தது; எளிதானது. இதில் விரதங்களால் வருந்தும் செயல் முறைகள் இல்லை. புறச் சடங்குகளையே மையமாகக் கொள்ளாமல் நெஞ்சத்தை இடமாகக் கொள்வது.

"இமைப்பொழுதும் என்னெஞ்சில்
நீங்காதான் தாள்வாழ்க"

என்றும்,

"நெஞ்சம் உமக்கே யிடமாக வைத்தேன்
நினையாதொரு போதும் இருந்தறியேன்"

என்றும் வரும் திருமுறைகள் காண்க. திருக்கோயில் வழிபாடு. தமிழர் சமயங்களின் காரண காரியப் பயன்களாகும். அதே போழ்து அகநிலை வழிபாடும் வற்புறுத்தப் பெறுகிறது.

"உயிரா வணம்இருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டிவாழ்தி"

என்ற அடிகளைக் கற்கவும்; இவ்வாறு உருவெழுதிப் பழகவும்.

தமிழ்ச் சமய வாழ்விலும் சரி, பொது வாழ்விலும் சரி கலை முக்கிய பங்கு வகித்து வந்திருக்கிறது. திருக்கோயில்கள் சிற்பக் கலையின் பெட்டகமாகும். ஆடல் வல்லான் திருமேனி தத்துவம், சிற்பம் மெய்ப்பொருள் தேர்வு ஆகியவற்றின் விளக்கமாகும். திருக்கோயில் வழிபாட்டு நிகழ்ச்சிகளிலும் ஆடல், பாடல் ஆகியனவற்றிற்குப் போதிய இடம் உண்டு. இறைவன் சந்நிதியில் திருப்பதிகம் விண்ணப் பித்தல் - பண்ணிசைப்பாடல் ஓதுதல் வழக்கு. நடனம் ஆடுதல் ஆகியனவும் உண்டு. திருக்கோயில் அமைவினை,

"இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே"

(திருவாசகம்—திருப்பள்ளியெழுச்சி - 4)

என்ற பாடலில் காணலாம். நம்பியாரூரர்,

"ஏழிசையாய் இசைப்பயனாய்"

என்றார் இறைவனை!

தமிழர்தம் சமயவாழ்வில் ஆசைகளை நீக்குதல் உண்டு. ஆனால் துறத்தல் நியதியாக இல்லை. வளர்ச்சியில் துறவும் கூடும். தமிழர்தம் சமயங்கள் வாழ்க்கையை மதித்துப் போற்றின.

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்"

என்பது தேவாரம். தமிழர் சமயங்கள் பெண்களைப் பெருமைப்படுத்தின; மனையற; வாழ்வுக்கு ஏற்றம் கொடுத்தன. இருபெரும் சமய நெறிகளின் கடவுளர்களும் மனையறம் வழாது நடத்தியவர்கள், நடந்துகின்றவர்கள் என்பதே தமிழர் சமயக் கொள்கை. இங்ஙனம் செழித்து வளர்ந்த செந்தமிழையும் சிவநெறியையும் போற்றி வளர்த்த அரசுகளில் சோழ அரசும், பாண்டிய அரசும் என்றென்றும் நினைவிற்கொள்ள வேண்டிய அரசுகளாகும்.

சோழ அரசு, பேரரசாகப் புகழ்பெற்று விளங்கிய காலம் உண்டு. இராசராசன், இராசேந்திரன் ஆகிய அரசர்கள் பேரரசர்களாக விளங்கினர். இராசராசன் எடுத்த தஞ்சைப் பெரியகோயில் உலகப்புகழ் பெற்றது. அவன் மகன் இராசேந்திரன் கங்கைகொண்ட சோழபுரம் பெரிய கோயிலை எடுப்பித்தான். அயல் வழக்கினர் மறைத்து அழிக்க நினைத்த தமிழ் மறைப் பாடல்களை திருமுறைகளை மீட்டுத் தந்தான் இராசராச சோழன்.

இத்தகைய சோழப் பேரரசில் கீழப்பழையாறையைத் தலைநகராக்க் கொண்டு வாழ்ந்தவன் மணிமுடிச் சோழன். ஒருசில வரலாற்று ஆசிரியர்கள் கீழப்பழையாறை சோழ அரசர்கள் முடிசூட்டிக்கொள்ளும் இடமாக இருந்தது என்று கூறுகின்றனர். மணிமுடிச் சோழன் ஆண்ட காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு. இந்தக் காலத்தில் சோழப் பேரரசு

வலிமையுடையதாக இல்லை. சோழப் பேரரசின் உறையூர்ப் பகுதியைப் பாண்டியன் நின்றசீர் நெடுமாறன் பிடித்துக் கொண்ட பின்னர் பாண்டியர்க்கும் சோழர்க்கும் இடையே நட்புறவு வளர்ந்ததன் பயனாக மணிமுடிச் சோழனின் மகள் மங்கையர்க்கரசியை நின்றசீர் நெடுமாறன் திருமணம் செய்து கொண்டான். சோழ மாதேவி, பாண்டிமாதேவியாகப் பாண்டி மண்டலம் வந்தாள். மங்கையர்க்கரசியின் கணவன் பாண்டியன் அப்போது அலை அலையாக வந்த அயல் வழக்குகளில் மயங்கினான்; செழுந்தமிழ் வழக்கின் மரபுகளை மறந்தான். மங்கையர்க்கரசியார் மனம் பதறியது. வழி வழியாக வளர்ந்து வந்த வாழ்வியல் என்னாவது? சிந்தனை செய்தாள்; பாண்டியப் பேரரசின் அமைச்சர் குலச்சிறையாருடன் கலந்து ஆலோசனை செய்தாள். "ஞாலமுய்ய நாமுய்ய" திருஞான சம்பந்தரை அழைக்க ஒருப்பட்டாள்.

திருஞானசம்பந்தரும் பாண்டிய நாட்டுக்கு எழுந்தருளு கின்றார். பாண்டிய அரசைச் சூழ்ச்சியால் கையகப் படுத்திய அயல்வழக்கினர் திருஞானசம்பந்தரை எதிர்க்கின்றனர். ஏன், அவர் தங்கியிருந்த திருமடத்திற்கே தீயிடுகின்றனர். விவாதங்கள் வளர்கின்றன. பாண்டியன் சூலைநோய்க்கு ஆளாகின்றான். பாண்டியனைச் சூலை நோயிலிருந்து மீட்டு, திருஞானசம்பந்தரின் மந்திரத் தன்மை நிறைந்த திருநீற்றுப் பூச்சு வெற்றிகொண்டது. அனல்வாதம் புனல்வாதம் என்றெல்லாம் தொடர்கின்றன. எல்லாவற்றிலும் திருஞான சம்பந்தரே வெற்றிகொள்கின்றார். பாண்டிய நாடுற்ற இடர் நீங்கியது. செந்தமிழ் பிழைத்தது. செந்தமிழின் பயனாகிய சிவநெறி விளக்கமுற்றது. திருநீறு பிழைத்தது. தமிழுலகம் மகிழ்ந்தது. பாண்டிமாதேவி மங்கையர்க்கரசி தமிழக வரலாற்றைக் காப்பாற்றித் தந்த தெய்வம் ஆகிறாள். அதனால் சேக்கிழார்,

*"மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்*
*வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி*
*செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்*
*தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை*
*எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே*
*இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்*
*பொங்கொளிவெண் டிருநீறு பரப்பி னாரைப்*
*போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே!"*

என்று, பாராட்டிப் புகழ்ந்து போற்றுகின்றார். திருஞான சம்பந்தர் திருவாலவாய்ப் பதிக்கத்தில் மங்கையர்க்கரசி பாண்டிமாதேவியையும் அமைச்சர் குலச்சிறையாரையும் பாராட்டிப் பாடியுள்ளார்.

*"பன்னலம் புணரும் பாண்டி மாதேவி*
*குலச்சிறை யெனும்இவர் பணியும்*
*அந்நலம் பெறுநீ ராலவாய் ஈசன்*
*திருவடி யாங்கவை போற்றிக்*
*கன்னலம் பெரிய காழியுள் ஞான*
*சம்பந்தன் செந்தமி ழிவைகொண்டு*
*இன்னலம் பாட வல்லவர் இமையோர்*
*ஏத்தவீற் றிருப்பவர் இனிதே!"* —திருஞான சம்பந்தர்

பாண்டிமாதேவி மங்கையர்க்கரசி வாழ்வால் மலர்ந்தது தமிழகம். இன்று நாம் தமிழராக வாழ்வது மங்கை யர்க்கரசி அளித்த கொடையேயாம். இன்று பெண்கள் பெருமையோடு வாழ்வதற்கு மங்கையர்க்கரசியே வித்திட் டாள். மனையறம் விளங்கும் வீடுகள் மங்கையர்க்கரசியின் தவத்தின் பயனேயாம்! இன்று தமிழிசை பாடி மகிழும் வாய்ப்புக்கு அன்று வெற்றி பெற்றுத் தந்தது நமது குலதெய்வம் மங்கையர்க்கரசியே! மங்கையர்க்கரசியின் புகழ் போற்றுவோம்! பேணிக்காத்து மகிழ்வோம்!

# 8

# தமிழ் - ஒரு நாகரிகம்

## மூவேந்தர் ஆட்சி நலம்

தமிழகம் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர் ஆட்சியிலமைந்து புகழ்பெற்ற பெருமையுடையது. தமிழகத்தில் ஆட்சி செய்த இந்த மூன்று பேரரசுகளும் செந்தமிழுக்கும் சிவநெறிக்கும் எண்ணற்ற தொண்டுகளைச் செய்தன. தமிழரசுகள் செய்த பணிகள் காலத்தால் அழியாத கற்கோயில்களாகவும் சொற்கோயில்களாகவும் விளங்குகின்றன. பழந்தமிழக அரசுகள் சமயச் சார்பற்றவையாக விளங்கின; மொழிநலம் காத்துப் பேணின; ஆயினும், அவற்றுக்குப் பிறமொழிக் காழ்ப்பு இருந்ததில்லை. தமிழகத்தில் சாதி, குல அமைப்புகள் இருந்துள்ளன. ஆயினும் அவற்றினிடையே பிரிவினை இருந்ததில்லை; பகைமை இருந்ததில்லை. மக்கள் ஒருமைப்பாட்டு உணர்வுடன் கூடி உலகியலை நடத்தி வந்துள்ளனர்.

## பாண்டிய நாட்டின் பெருமை

இந்த மூன்று பேரரசுகளுக்குள்ளும் பாண்டிய நாட்டு அரசு தனிச்சிறப்புடையது. பாண்டிய நாட்டு அரசர்கள்

தமிழ்ச் சங்கங்கள் நிறுவித் தமிழை வளர்த்தனர்; தமிழ் நெறியை வளர்த்தனர். செந்தமிழ் வழக்கைப் போற்றிப் பாது காத்தனர். பாண்டிய அரசர்கள் குடிகளைத் தழுவிய அரசர்கள்; நீதி சார்ந்த அரசர்கள். பொற்கைப் பாண்டியன், ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் ஆகியோர் நீதிக்காகவே தம்மை இழந்தனர். இத்தகைய வரலாறுகள் உலக வரலாற்றில் யாண்டும் இல்லை. இவ்வாறு புகழ் பெற்ற பாண்டியப் பேரரசின் நாட்டு எல்லை அடியிற் கண்டவாறு கூறப்பெறுகிறது.

> "வெள்ளா றதுவடக்காம் மேற்குப் பெருவழியாம்
> தெள்ளார் புனற்கன்னி தெற்காகும் – உள்ளார
> ஆண்ட கடல்கிழக்காம் ஐம்பத் தறுகாதம்
> பாண்டிநாட் டெல்லைப் பதி".

இந்த நாட்டு எல்லையில் செந்தமிழ்க் கவிஞர்கள் எண்ணற்றவர்கள் வாழ்ந்துள்ளனர். உலகு போற்றும் உயர் அறவுரையாகிய "யாதும் ஊரே; யாவரும் கேளிர்" என்ற கவிதையினைத் தந்த கணியன் பூங்குன்றனார்தான் பாண்டி நாட்டை அணி செய்தவர். புலனழுக்கற்ற அந்தணாளன் கபிலன், பாண்டிய நாட்டில் பிறந்து தமிழகம் தழுவிய புகழுடையவர். நற்றமிழ்க் கீரனும் பாண்டிய நாட்டுக்கே உரியவர். நெஞ்சினை நெகிழ்வித்து, மனிதனை மனிதனாக வளர்க்கும் திருவாசகத்தைத் தந்த மாணிக்கவாசகரும் பாண்டியநாட்டுத் திருவாதவூரிலேயே பிறந்தவர். பாண்டிய நாட்டை ஆண்ட அரசர்களில் பலர் கவிஞர்களாகவும் இலக்கியப் படைப்பாளர்களாகவும் இருந்திருக்கிறார்கள். பாண்டியன் அறிவுடை நம்பி ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

## தமிழ் – ஒரு நாகரிகம்

வரலாறு ஒரே மாதிரியாகச் செல்வதில்லை. ஏற்றத் தாழ்வுகள் நிகழ்வது தவிர்க்க முடியாதது. தமிழ் ஒரு வளர்ந்த

*மொழி. பழங்காலத்தில் தமிழ் என்றால் அது மொழியை மட்டும் குறிப்பதில்லை. அம்மொழியைச் சார்ந்து வளர்ந்த பண்புகளையும் நாகரிகத்தையும் குறிக்கும் சொல்லாகவும் தமிழ் விளங்குகிறது. "தமிழ் தழீஇய சாயல்" என்ற கல்லாடத் தையும், "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்" என்ற சுந்தரர் தேவாரத்தையும், "செழுந்தமிழ் வழக்கு" என்ற சேக்கிழார் வாக்கையும் எண்ணுக. பாண்டியப் பேரரசு கண்ட தமிழ்ச் சங்கங்களில் ஆலவாய் அண்ணல் அண்டமெல்லாம் கண்ட நாயகன் தமிழாய்வுக்குத் தலைமைப் புலவனாய் அமர்ந்து தமிழாய்ந்ததை யாரறிவார்? சிவ பெருமான் மட்டுமல்ல, உமையம்மையும் முருகனும் சங்கத் தமிழ்ப் பலகையில் உடனிருந்து தமிழாய்வு செய்தனர். பாண்டியப் பேரரசில் பெருமான் விருப்புற்று எழுந் தருளினன். "பாண்டியநாடே பழம்பதியாக" என்று திருவாசகம் கூறும். பாண்டிய நாட்டை இடமாகக் கொண்டு இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்கள் எண்ணற்றவை. இவற்றுள் 64 திருவிளையாடல்கள் சிறப்பானவை.*

## மாறவர்மன் அரிகேசரி

*இத்தகு புகழ் பெற்ற பாண்டிய நாட்டு வேந்தனாக கி.பி. 640–இல் மாறவர்மன் அரிகேசரி என்பவன் அரியணை ஏறினான். இவனது ஆட்சி மிகுந்த உயர் நிலையை எய்தி யிருந்தது. சேரர்களை வென்று வாகை சூடினான். சோழப் பேரரசிற்குரிய உறையூரை ஒரு பகற்பொழுதில் வெற்றி கொண்டான். சோழப் பேரரசோடு இவன் நிகழ்த்திய போரின் முடிவு நட்பாயிற்று; உறவாக மலர்ந்தது. சோழ மன்னனின் மகள் மங்கையர்க்கரசியாரைத் திருமணம் செய்து கொண்டான். மாறவர்மன் அரிகேசரி தொடக்க காலத்தில் உயிரிரக்கக் கொள்கை அடிப்படையில் சமண சமயத்தால் ஈர்க்கப்பட்டுச் சமண சமயத்தைச் சார்ந்து*

ஒழுகினான். மாறவர்மன் அரிகேசரிக்கு, குலச்சிறையார் முதலமைச்சராக விளங்கினார்.

## குலச்சிறையார்

குலச்சிறையார் பாண்டிய நாட்டின் வடகிழக்கு எல்லையில் உள்ள மணமேற்குடி என்ற சிற்றூரில் பிறந்து வளர்ந்தவர்.

*"பன்னு தொல்புகழ்ப் பாண்டிநன் னாட்டிடைச்*
*செந்நெ லார்வயல் தீங்கரும் பின்அயல்*
*துன்னு பூகம் புறம்பணை சூழ்ந்தது*
*மன்னு வண்மையி னார்மண மேற்குடி*
*அப்பதிக்கு முதல்வர்மன் தொண்டர் தாம்*
*ஒப்பரும் "பெருநம்பி" என் றோதிய*
*செப்பரும் சீர்க்குலச் சிறையார்"*

என்று சேக்கிழார் பெருமானும்,

*"அருந்தமி ழாகரன் வாதில் அமணைக் கழுநுதிமேல்*
*இருந்தமிழ் நாட்டிடை ஏற்றுவித் தோன்எழில்*
*சங்கம்வைத்த*
*பெருந்தமிழ் மீனவன் தன்னதி காரி பிரசமல்கு*
*குருந்தவிழ் சாரல் மணமேற் குடியன் குலச்சிறையே"*

என்று நம்பியாண்டார் நம்பிகளும் பாடியிருப்பதால் அறிக. குலச்சிறையாரின் தந்தை தாய் பற்றிய சிறப்பான வரலாற்றுக் குறிப்பு ஏதும் கிடைக்கவில்லை. ஆதலால் குலச்சிறை நாயனாருக்கு வாய்த்த அமைச்சுப் பொறுப்பு வழிவழி வந்ததன்று; தகுதியின் பாற்பட்டது. நாட்டின் குடிமக்களில் தகுதியுடையோரை அமைச்சராகத் தேர்ந்தெடுப்பது என்ற பாண்டிய அரசின் மரபு நினைவுக்குரியது.

## மாண்பு நிறைந்த மணமேற்குடி

மணமேற்குடி, வடவெல்லையாக வெள்ளாற்றையும், அம்மாப் பட்டினத்தைத் தெற்கெல்லையாகவும், வங்கக் கடலைக் கிழக்கு எல்லையாகவும், நென்மலி, வெள்ளூர் ஆகிய ஊர்களை மேற்கெல்லையாகவும் கொண்டு விளங்கும் ஓர் அழகிய சிற்றூர்; வளம் பொருந்திய ஊர். மருத நில அமைப்பும், முல்லைநில அமைப்பும் நெய்தலும் சார்ந்த சிறப்புடைய சிற்றூர்; குருந்த மரங்கள் அடர்ந்து விளங்கும் அழகிய ஊர். இவ்வூரின் வரலாறு ஏழாம் நூற்றாண்டுக்கும் முந்திய பழமையுடையது. மணமேற்குடியில் வாழுநர் வழிவழி தமிழ் மரபுக்கேற்ற வள்ளன்மை மிக்கோராவர். இதனைச் சேக்கிழார்,

"மன்னுவண்மையினார் மணமேற்குடி" என்று பாராட்டுகின்றார். இத்தகு சிறப்புமிகு மணமேற்குடியில் குலச்சிறை நாயனார் தோன்றினார்; நாளும் நலமுற வளர்ந்து பாண்டிய நாட்டரசன் மாறவர்மன் அரிகேசரியின் முதன்மை அமைச்சுப் பொறுப்பேற்றார்.

## கடமைக்களம்

அரிகேசரி மாறவர்மன் சமண சமயச் சார்பு, அரசி மங்கையர்க்கரசியால் ஏற்றுக்கொள்ள இயலாத நிலை. குலச்சிறை நாயனார் நிலையும் அதுவே. ஏன்? சமண சமயத்தின் கொள்கை, கோட்பாடுகள் பல தமிழ் மரபுகளுக்கு இசைந்தன அல்ல. சமண சமயம் கடுந்துறவு நெறிச் சார்புடையது; பெண்மையை இழிவுபடுத்துவது; மனையறத்தை வெறுப்பது; பண்ணும் பாட்டும் ஏற்காதது. இயற்கையோடிசைந்து வாழ்தல், சமணத்திற்கு ஏற்புடையதன்று. வழிவழித் தமிழ் மரபுகளுக்கு மாறாகத் தமது அரசன் சமண சமயத்தைச் சார்ந்து ஒழுகுதல் முதலமைச்சர் குலச்சிறை நாயனாருக்கு நெஞ்சில் துயரத்தைத் தந்தது. அரசி

மங்கையர்க்கரசியாருக்கு ஆற்றொணாத் துன்பம். ஆயினும், இருவரும் கடமைகளின் வழி நின்றவர்கள். மாறுபாடுகள் கருதிக் கடமைகளைத் துறப்பவர் பண்பாடுடையவராகக் கருதப்பெறமாட்டார்கள். கடமைகளின், களத்தில் காலூன்றி நிற்பதன் மூலமே மாறுபாடுகளையும் கூடக் காலப் போக்கில் தவிர்க்க இயலும். இந்நெறியையே குலச்சிறை நாயனார் மேற்கொண்டொழுகினார். ஆன்றவிந்தடங்கிய அமைச்சர் அல்லவா? மங்கையர்க்கரசியாருடைய திருவுள்ளக் கருத்தைக் குலச்சிறை நாயனாரின் அமைச்சுத் திறன் முடித்து வைக்கிறது.

## திருஞானசம்பந்தரை அழைத்தல்

இதே காலத்தில் தமிழ் நாட்டில் இரண்டு ஞானத் தலைவர்கள் அவதரித்தருளி திருநெறிய தமிழை வளர்த்து வருகின்றனர். அவருள் திருநெறிய திருத்தொண்டின் நெறிக் காவலராக விளங்கியவர் தமிழாளியர் திருநாவுக்கரசர். மற்றொருவர் ஞாலமுய்ய சைவநன்னெறியின் சீலமுய்ய எழுந்தருளிய தமிழ்ஞான சம்பந்தர். இந்த இரண்டு ஞானத்தலைவர்கள் இந்த மண்ணில் நடந்ததால் தமிழ்நாடு எழுச்சியுற்றது; மறுமலர்ச்சி பெற்றது! எங்கும் தமிழ் முழக்கம்! சைவ சமய இயக்கம்! சமுதாய மாற்றங்கள் நிகழ்ந்தன! திருஞானசம்பந்தர் திருமறைக் காட்டில் எழுந்தருளி யிருந்தார். பாண்டிய நாட்டுக்கு நேர்ந்துள்ள இடரினை நீக்கி உய்யும் நெறி காட்டும்படி திருஞான சம்பந்தரை அழைக்க அமைச்சர் குலச்சிறை நாயனாரும் அரசி மங்கையர்க் கரசியாரும் ஒரு சேர எண்ணினர். திருஞான சம்பந்தரைப் பாண்டிய நாட்டுக்கு அழைக்கத் தூதுவர்கள் செல்கின்றனர். திருஞான சம்பந்தரும் இவர்களின் அழைப்பை ஏற்றுக் கொண்டு பாண்டிய நாட்டுக்கு எழுந்தருளுகின்றார். திருஞான சம்பந்தரைப் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரை நகரின் எல்லையில் குலச்சிறை நாயனார் எதிர்

கொண்டழைக்கிறார். திருஞான சம்பந்தரைச் சிந்தை குளிர, செவிகுளிரப் பாராட்டி வரவேற்கின்றார்.

*"சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும்*
*இனிஎதிர் காலத்தின் சிறப்பும்*
*இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால்*
*எற்றைக்கும் திருவருள் உடையேம்*
*நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்*
*நற்றமிழ் வேந்தனும் உய்ந்து*
*வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்*
*மேன்மையும் படைத்தனம்" என்பர்.*

(திருத்தொண்டர்புராணம். திருஞான சம்பந்த சுவாமிகள் புராணம்-659)

திருஞான சம்பந்தர் எழுந்தருளிய காட்சியைக் கண்ட மங்கையர்க்கரசியார் தலையன்பால் தாக்குண்டு அமுதப் பால் பொழிகின்றார். அதே போழ்து சமணர்களுடைய வன்மங்களின் முன்னே இந்தப் பால்மணம் மாறாத ஞானக்குழந்தை என் செய்யும் என்று தாயிற் சிறந்த தயை யுடன் கவலுகின்றார். இதனை உணர்ந்த திருஞான சம்பந்தர், அரசியாரைத் தேற்றி,

*"மானினேர் விழி மாதராய் வழுதிக்கு மாபெருந்*
*தேவிகேள்*
*பானல் வாயொரு பாலனீங்கிவ னென்று நீபரி*
*வெய்திடேல்*
*ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல*
*அல்லல்சேர்*
*ஈனர்கட்கெளி யேனலென் திருவாலவாயர*
*னிற்கவே"*

என்று பதிகம் எடுத்தோதித் தேற்றுகின்றார்.

## "பையவே சென்று பாண்டியற்காகவே"

திருஞானசம்பந்தர், மதுரையில் அமைக்கப் பெற்றிருந்த திருமடத்தில் தங்குகின்றார். திருஞான சம்பந்தரின் வருகை சமண முனிவர்களிடத்தில் கலக்கத்தை உண்டாக்கிவிட்டது. அச்சமும் பயமும் கொண்டவர்கள், அறிவை இழந்து விடுவர்; குறிக்கோளை இழந்து விடுவர்; நோன்பை இழந்துவிடுவர்; தவத்தை இழந்துவிடுவர்; நெறியல்லா நெறியில் தலைப்படுவர் என்பதற்கேற்பத் திருஞானசம்பந்தர் தங்கியிருந்த திரு மடத்திற்குத் தீ வைத்தனர். இதனைத் திருவுள்ளம் கொண்ட திருஞான சம்பந்தர் அருள் நெஞ்சத்தோடு,

"செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐய னேஅஞ்சல் என்றருள் செய்எனைப்
பொய்ய ராம்அம ணர்கொளு வும்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே"

(மூன்றாம் திருமுறை 51–1)

என்றார். திருஞான சம்பந்தரிடம் சமய வேறுபாடுகள் வழிப்பட்ட காழ்ப்பில்லை; பகைமையில்லை. அருள் குடிகொண்ட நெஞ்சினரான அவர், பாண்டிய நாடு நன் நெறியில் நிற்றல் வேண்டும்; பாண்டிய நாட்டு அரசன் மாறவர்மன் அரிகேசரியால் மங்கையர்க்கரசியார் மங்கல நாண் சிறக்க வாழ்தல் வேண்டும் என்பனவற்றையெல்லாம் திருவுள்ளத்திற் கொண்டு, "பையவே சென்று பாண்டியற்கு ஆகவே" என்றார். தீமை செய்தல் தவறு என்ற படிப்பினை யைக் காட்டுவதே இங்கு திருஞான சம்பந்தரின் நோக்கம். அதுவும் தீ வைத்தலாகிய தீவினை செய்தாரைத் தீ சென்றடைய ஆணையிடாமல் பாண்டியற்கு ஆகுக" என்றார். அரசின் குறையினால் தானே தீவினையாளர் தீவினை செய்ய இயல்கிறது. ஆதலால், ஒறுக்கத்தக்கவர் தீவினையாளர் அல்லர். தீவினைக்குத் துணை போன அரசே

என்ற பழந்தமிழ்க் கொள்கை வழி திருஞான சம்பந்தர் "பாண்டியற்கு ஆகுக" என்றார். 'கடிதோச்சிமெல்ல எறிக' என்ற நெறிப்படி "பையவே சென்று பாண்டியற்கு ஆகுக" என்றார்.

## மந்திரமாவது நீறு

திருஞானசம்பந்தரின் ஆணைவழி தீ, மாறவர்மன் அரிகேசரியை வெப்பு நோயாகப் பற்றிக் கொண்டது; உடல் வருந்தியது; எலும்பு உருகியது; முதுகு கூன் விழுந்தது. அரசன் தாங்கொணாத் துயரத்தில் ஆழ்ந்தான். மங்கையர்க் கரசியாரும் குலச்சிறை நாயனாரும் திருஞான சம்பந்தரை அழைத்து மருத்துவம் செய்விக்கலாம் என்று அரசனிடம் விண்ணப்பிக்கின்றனர். அரசனும் உடன்படுகின்றான். ஆனால் அருகிலிருந்த சமண முனிவர்கள் தங்களுடைய மந்திரத்தாலேயே நோயை மாற்றிவிட முடியும் என்று அரசனிடம் விண்ணப்பிக்கின்றனர். அரசன் அறச்சங்கடத் துக்காளாகி நடுநிலை உணர்வுடன் திருஞானசம்பந்தர் வலப்பாகத்திற்கும் சமண முனிவர்கள் இடப்பாகத்திற்கும் மருத்துவம் செய்யும் படி கேட்டுக்கொண்டான். திருஞான சம்பந்தர் "மந்திரமாவது நீறு" என்ற திருநீற்றுப் பதிகத்தை ஓதி மன்னவனின் வலப்பாகத்தில் திருவருள் சிந்தனையோடு திருநீற்றைச் சாத்துகின்றார், வெப்பம் தனிகிறது. சமணர்கள் சமணமந்திரங்களை ஓதி இடப் பாகத்தில் மயிற்பீலியால் தடவுகின்றனர். வெப்பு நோய் தணிந்தபாடில்லை. அரசன் திருஞானசம்பந்தரிடமே இடப்பாகத்திற்கும் திருநீறு சாத்திக் கொண்டு நோய் நீக்கம் பெறுகின்றான்.

## அனல் வாதம்–புனல் வாதம்

சமணர்களுக்கு உண்மையறியும் உணர்வு தலைப்பட வில்லை. சினமே மேலிட்டது. மூர்க்கத்தனத்தோடு வாதினை விரும்பினர். அவரவர் மந்திரம் எழுதிய ஏடுகளை நெருப்பி

விடுவது; எரியாத ஏடுதாங்கிய மந்திரமே மந்திரம், மறை மொழியே மறைமொழி; அதற்குரிய சமயமே சமயம் என்று உறுதி செய்தனர். திருஞான சம்பந்தர், "தளரிள வளரொளி" என்று தொடங்கும் பாடலின் ஏட்டைத் தீயிலிட்டார். சமண முனிவர்கள் தாம் பொருளெனக் கொண்ட மந்திரத்தை எழுதித் தீயில் இட்டனர். சமணர்கள் இட்ட மந்திர ஏடு எரிந்து சாம்பலாகிவிட்டது.

தோற்ற சமண முனிவர்களுக்கு உண்மையை ஒத்துக் கொள்ள மனம் வரவில்லை. மீண்டும் திருஞான சம்பந்தரை வாதுக்கு அழைக்கின்றனர். திருஞானசம்பந்தரும் உடன்படு கின்றார். கடைசியாக அவரவர் சமய மறைமொழி, மந்திர மொழியில் எழுதிப் போட்ட ஏடு வைகையாற்றின் வெள்ளப் போக்கில் செல்லாமல் அந்த வெள்ளத்தை எதிர்த்து வரவேண்டும் என்பது நிபந்தனை. இந்த வாதில் தோற்றால் தாங்கள் அனைவரும் கழுவேறுவதாகவும் சமணர்கள் மன்னர்முன் சூளுரை ஏற்றனர். திருஞானசம்பந்தரும் உடன்பட்டார். திருஞானசம்பந்தர்,

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

(மூன்றாம் திருமுறை–திருப்பாசுரம். பா–1)

என்று தொடங்கும் பதிகத்தை எழுதி வைகையாற்றில் இட்டனர். சமணர்கள் "அத்திநாத்தி" என்ற மந்திரத்தை எழுதி வைகையாற்றில் இட்டனர். திருஞான சம்பந்தரின் மறைமொழி தாங்கிய ஏடு வைகையாற்று வெள்ளத்தை எதிர்கொண்டு ஏறி வந்தது. சமணர்கள் இட்ட ஏடு வெள்ளத்தோடு போய்விட்டது. சமணர்கள் இரங்கத் தக்க நிலைக்கு ஆளாகித் தாமே எடுத்துக் கொண்ட சூளுரைக்கேற்பக் கழுவேறினர்.

## குலச்சிறையார் பெருமை

*தண்டமிழ்ப் பாண்டிய நாட்டில் தமிழ் நெறிக்கு வந்த இடர்ப்பாடு குலச்சிறை நாயனாரின் அமைச்சுச் சிறப்பால் நீங்கியது. வெப்பு நோயால் பாதிக்கப் பெற்றுக் கூன் விழுந்த மாறவர்மன் அரிகேசரி, நின்றசீர் நெடுமாறன் ஆனான். இத்தகு சிறந்த பணியால் குலச்சிறை நாயனார் திருஞான சம்பந்த சுவாமிகளாலும் சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் பாடப்பெறும் புண்ணியப்பேற்றினை அடைந்தார்.*

*திருஞானசம்பந்தர் திருவாலவாய்க்குரிய சிறப்பாகக் "குலச்சிறை குலாவி நின்றேத்தும் பெருமையுடையது" என்று சிறப்பித்துப் பாடுகின்றார்.*

*"வெற்றவே யடியாரடிமிசை வீழும்*
*விருப்பினன் வெள்ளைநீ றணியும்*
*கொற்றவன் றனக்கு மந்தி ரியாய*
*குலச்சிறை குலாவிநின் றேத்தும்*
*ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ*
*னுலகினி வியற்கையை யொழித்திட்*
*டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற*
*வாலவா யாவது மிதுவே"*

(மூன்றாம் திருமுறை திருவால—பா—2)

*சுந்தர மூர்த்தி நாயனார், 'பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்" என்று திருத்தொண்டத் தொகையில் பாடிப் பரவுகின்றனர். 'நம்பி' என்ற சொல் தலைவன் என்ற பொருளுடையது. "பெரு நம்பி" என்று பெருமைக்குரிய தலைவன் என்ற பொருள் தோன்றப் பாடிய அருமை நினைந்து இன்புறத்தக்கது.*

*புன்மை நிறைந்த பொய் நீங்கவும் தென்னர் நாடு திருநீற்றொளியில் தோயவும் திருஞானசம்பந்தரின்*

திருவடிகளைத் துணைகொண்டு தொண்டு செய்த குலச் சிறையார் என்று பாராட்டுகின்றார் சேக்கிழார்.

"புன்ன யத்தரு கந்தர்பொய் நீக்கவும்
தென்னர் நாடு திருநீறு போற்றவும்
மன்னு காழியர் வள்ளலார் பொன்னடி
சென்னி சேர்த்தி மகிழ்ந்த சிறப்பினார்.

(திருத்தொண்டர் புராணம்–குலச்சிறை–10)

என்பது காண்க.

குலச்சிறை நாயனார் சிவநெறியே சார்பாகக் கொண்டொழுகியவர். சிவநெறிச் சார்பு கருதி நன்மை தீமை கூடக் கருதாது சிவனடியாரை ஏற்றுப் பாராட்டும் இயல்பான ஒழுக்கம் உடையவர் குலச்சிறை நாயனார் என்பதனை,

"உலகர் கொள்ளும் நலத்தின ராயினும்
அலகில் தீமைய ராயினும் அம்புலி
இலகு செஞ்சடை யார்க்கடி யாரெனில்
தலமு றப்பணிந் தேத்தும் தகைமையார்"

(திருத்தொண்டர் புராணம். குலச்சிறை நாயனார்–5) என்று சேக்கிழார் பாராட்டுகின்றார்.

தமிழ்ப் பண்பாட்டில் மிகச் சிறந்தது விருந்து ஓம்புதலாகும். அடியார்களுக்குத் திருவமுது அளித்தலாகும். இந்த இனிய பண்பில் குலச்சிறை நாயனார் மிகச்சிறந்து விளங்கியுள்ளார். பண்புடையோர் பலர்கூடி வந்தாலும் நட்புணர்வு மீக்கூரத் திருவமுதளித்தார். உண்பதற்கென்றே யாரொருவர் வந்தாரானாலும் அவருக்கும் விருப்பம் மீதூர உணவூட்டும் நலத்திற் சிறந்தவர் குலச்சிறையார். இதனை சேக்கிழார்,

*"பண்பு மிக்கார் பலராய் அணையினும்*
*உண்ப வேண்டி ஒருவர் அணையினும்*
*எண்பெ ருக்கிய அன்பால் எதிர்கொண்டு*
*நண்பு கூர்ந்தமு தூட்டும் நலத்தினார்."*

(திருத்தொண்டர் புராணம் குலச்சிறை நாயனார்-6) என்று போற்றிப் புகழ்கின்றார்.

பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார் விரும்பிய நற்சைவக் காப்புத் தொண்டுக்கு மெய்த்தொண்டாராயிருந்து, காப்புச் செய்த பெருமையைச் சிந்தை களிகூரச் சேக்கிழார் வாழ்த்துகின்றார்.

*"ஆய செய்கைய ராயவர் ஆறணி*
*நாய னார்திருப் பாதம் நவின்றுள்ளார்;*
*பாய சீர்புனை பாண்டிமா தேவியார்*
*மேய தொண்டுக்கு மெய்த் தொண்டராயினார்."*

(திருத்தொண்டர் புராணம், குலச்சிறை நாயனார் புராணம்-9)

திருவிளையாடற் புராணம் குலச்சிறை நாயனாரை "மந்திரர் ஏறு" என்றும், "கோதறு குலத்தின் மிக்க குலச்சிறை" என்றும் பாராட்டுகின்றது. திருவிளையாடற் புராணம் குலச்சிறை நாயனாரும் மங்கையர்க்கரசியாரும் செய்த தொண்டினை,

*"வாலிதாகிய சைவவான் பயிரினை வளர்ப்பான்*
*வேலியாகி யோர் இருவரும்"*

என்று போற்றிப் பரவுகிறது.

## வாலிதாகிய சைவம்

திருவிளையாடற் புராண ஆசிரியர் சைவநெறியினை "வாலிதாகிய சைவம்" என்று சிறப்பித்துப் பேசுகிறார். ஏன்? சைவநெறிதான் நம்பிக்கைக்கும் நல்லெண்ணத்திற்கும்

உரியது; மானுடத்தின் சிந்தனை எல்லையில் முகிழ்ந்தது; அறிவியலுக்கு இசைந்த பெருநெறி. உலக இயக்கத்திற்கும் மூன்று பொருள்கள் அடிப்படையானவை என்று கொண்டு வாழ்க்கை நியதிகளை முறைப்படுத்திய நெறி சைவம். உயிர்களின் இன்ப துன்பங்களுக்கு உயிர்களே காரணம் என்ற உயர் கொள்கை சைவத்தின் சிறப்பு.

மண்ணின் நல்ல வண்ணம் வாழ வேண்டும் என்பது சைவத்தின் கொள்கை. புன்மை நிறைந்த சாதிச் சழக்குகளி லிருந்து விடுதலை பெற்றது சைவம். ஈந்து உவந்து வாழும் ஒப்பற்ற ஒப்புரவு நெறி சைவத்தின் கோட்பாடு. ஆரவாரச் சடங்குகளிலிருந்து விலகி இறைவனை மனக்கோயிலில் எழுந்தருளச் செய்து நினைந்து மகிழ்ந்து வாழும் நெறியே சைவநெறி. சைவத்தின் சீலம் பொருள்களினின்றும் விலகியதல்ல. பொருள்களின் ஊடே கடுகிய பற்றும் தற்சார்பின்மையே சைவத்தின் சீலம். இன்னோரன்ன சிறப்புக்களால் சைவம் வாலிதாயிற்று.

## தொண்டினைத் தொடர்வோமாக!

இத்தகு சிறப்புமிகு குலச்சிறை நாயனார் நின்ற நெறியினைப் போற்றும் வகையில் நாம் செந்தமிழையும் சிவ நெறியையும் இரண்டு கண்களெனப் போற்றி வாழ்வோமாக. செந்தமிழ் வழக்கு அயல்வழக்கின் துறை வென்று விளங்க, நாமும் குலச்சிறை நாயனார் இயற்றிய தொண்டினையே பற்றுக் கோடாகக் கொண்டு திருத்தொண்டு செய்வோமாக!

# 9

# சேக்கிழார் விழாவில் தலைமை உரை

சேக்கிழார் பிறந்த திருப்பதியில் சேக்கிழார் விழாக் காணக் கூடியிருக்கும் மெய்யன்பர்களே! அருள் நலம் சான்ற அடிகள் பெருமக்களே! இந்த இனிய வாய்ப்பினை வழங்கிய மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் அவர்களே! அமைச்சரின் கருத்தறிந்து செயற்பாடு நிகழ்த்தும் அறநிலையத் துறை ஆணையர் அவர்களே! அறிஞர் பெருமக்களே! திரு நெறிய தொண்டின் நெறி மண்ணில் நின்று நிலவ, புகழ்மிக்க வரலாற்றுக் காப்பியத்தை அருளிச் செய்த சேக்கிழார் பெருமானின் சேவடிகளைச் சென்னி மேற்கொண்டு போற்றுகின்றனம்.

## ஒப்பற்ற சாதனை

சேக்கிழார் இயற்றித் தந்துள்ள காப்பியத்தில் வரும் வரலாற்று நாயகர்கள் பல்வேறு காலத்தில் வாழ்ந்தவர்கள்; பல்வேறு நாட்டில் வாழ்ந்தவர்கள்; பல்வேறு ஊர்களில் வாழ்ந்தவர்கள்; பல்வகைத் தொண்டுகளை மேற்கொண்டு வாழ்ந்தவர்கள். இவ்வளவையும் சேக்கிழார் கற்றும் தேர்ந்தும்

---

* 5.6.1986 அன்று குன்றத்தூரில் தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை எடுத்த சேக்கிழார் விழாவில் அடிகளார் ஆற்றிய தலைமை உரை.

தெளிந்தும் காப்பியத்தை இயற்றித் தந்துள்ளார். சேக்கிழார் இயற்றிய காப்பியத்தில் வரும் நாயகர்கள் கி.பி.300 முதல் கி.பி. 865 வரையுள்ள கால எல்லையில் வாழ்வாங்கு வாழ்ந்து வெற்றி பெற்ற அடியார்கள். அவர்களின் வரலாற்றைச் சேக்கிழார் தொகுத்துக் கூறியுள்ளார். அதாவது சேக்கிழார் காப்பியத்தில் வரும் நாயகர்கள் ஏறத்தாழ 600 ஆண்டுகள் இடை வெளிக் காலத்தில் வாழ்ந்தவர்களாகின்றனர். கண்ணப்பர், இயற்பகை நாயனார் போன்றவர்கள் கிறித்து பிறப்பதற்கு முன் வாழ்ந்தவர்கள் என்னும் ஒரு கருத்து உண்டு. இந்தக் கால எல்லையில் ஒரு நாட்டில், ஒரு சமுதாயத்தில் எவ்வளவு மாற்றங்கள் நிகழ்ந்திருக்க கூடும்? அதுவும் முறையாக வரலாற்றை எழுதி வைக்கத் தெரியாத சமுதாயத்தில், பரவலாக அங்கும் இங்குமாக வாழ்ந்த அடியார்களின் வரலாற்றையெல்லாம் கண்டும் கேட்டும் அறிந்து காப்பியத்தை இயற்றியுள்ளார் சேக்கிழார். இஃதோர் அருமையான பணி! அரிதின் முயன்று முடித்த பணி! முயற்சியின் அருமை அறிந்தோர் பாராட்டுதில் வியப் பென்ன? காப்பியத்தில் வரும் நாயகர்கள் பல்வேறு குலத்தினர்; சிலர் நாடறியத் தொண்டு செய்தவர்கள்; பலர் எங்கோ ஒரு மூலையில் எளிமையாக இருந்து கொண்டு செய்தவர்கள். இத்தகையோர் அனைவரின் வரலாற்றையும் சேக்கிழார் கண்டறிந்து எழுதியது ஒப்பற்றசாதனை. முதல் நூலினைத் தொடர்ந்து வரும் விரிவுநூல் இலக்கிய அமைப்பிலேயே வடிவம் பெறும். திருத்தொண்டத் தொகையாகிய முதல் நூலைத் தொடர்ந்து விரிவு நூல் செய்த சேக்கிழார் வரலாற்றுப் போக்கில் செய்திருப்பது அருமையான படைப்பு. இது போல் சேக்கிழாருக்கு முன்பும் யாரும் செய்ததில்லை, பின்பும் யாரும் செய்யவில்லை. திருத்தொண்டத் தொகையின் விரிவு இலக்கிய நலம் செறிந்த வரலாற்று நூலாக மலர்ந்திருக்கிறது; தத்துவ நூலாக உருப் பெற்றிருக்கிறது. மெய்ப்பொருளியல் விளக்கும் நூலாகக்

கிடைத்திருக்கிறது. ஞான நெறியினை விளக்கும் ஞானப் பனுவலாக அமைந்திருக்கிறது.

## செழுந்தமிழ் வழக்கே சேக்கிழார் குறிக்கோள்

*சேக்கிழார் வாழ்ந்த காலத்தில் அவர் பல்வேறு தர்க்கங்களுக்கு ஆளாகியிருக்கின்றார். அது மட்டுமன்று சேக்கிழாரின் காப்பியத்தில் வருகிய நாயகர்களில் பலர் சமுதாய வரலாற்றுக் களங்களில் நின்றவர்கள்; அறைகூவல் களைச் சந்தித்தவர்கள். தமிழினமும் தமிழும் தமிழ் நெறியும் காலத்தால் முந்நியன. ஆயினும் இவை காலத்துக்குக் காலம் சந்தித்து வந்துள்ள அன்ற கூவல்களின் காரணமாகப் பல்வேறு இடர்ப்பாடுகளை அடைந்துள்ளன. தமிழ் வரலாறு தேக்க நிலை அடைந்திருக்கிறது. பல சமயங்களில் தமிழையும் தமிழ் நெறியையும் பாதுகாக்க அரசையே கூட எதிர்த்துப் போராட வேண்டியதிருந்திருக்கின்றது. அத்தகைய துணிவு மிக்க வரலாறுகள் பெரிய புராணத்தில் பலவுண்டு. இவற்றுள் குறிப்பிடத்தக்கவை திருஞான சம்பந்தர் வரலாறும் திரு நாவுக்கரசர் வரலாறுமாகும். சேக்கிழாரின் திருவுள்ளம் உலகம் தழீஇய ஒட்பமுடையது. ஆயினும் திசையனைத்தின் பெருமையெல்லாம் தென் திசையே வென்றேற வேண்டும் என்ற பெருவிருப்பம் கொண்டிருந்தவர், அவர். அசைவில் செந்தமிழ்வழக்கு அயல் வழக்கை வென்று விளங்க வேண்டும் என்ற நோக்குடையவர். ஏழாம் நூற்றாண்டில் அயல் வழக்கை செழுந்தமிழ் வழக்கு வென்று விளங்கியது. ஆயினும், அந்த வெற்றி வாழ்க்கை தொடரவில்லை. மீண்டும் தொய்வு! இருள் படர்ந்த நிலை! மயக்க நிலை! இந்த நிலையில்தான் சேக்கிழாரின் திருத்தொண்டர் வரலாறு என்ற ஞானக் கதிர் இருள் கடிந்து எழுகின்றது. செந்தமிழ் வழக்கு நெறி நெறி இதுவென உணர்த்தியது. செழுந்தமிழ் நெறியில் நின்று வாழ வழிகாட்டியது.*

சேக்கிழாரின் காப்பிய நிகழ்வுகள் நிகழ்ந்த காலத்திலிருந்த சமுதாயச் சூழல்கள். சேக்கிழார் காலச் சூழல்கள் இவையனைத்தையும் நினைவிற்கொண்டு சேக்கிழார் காப்பியத்தைக் கற்றால்தான் அதன் அருமைப் பாடு விளங்கும்.

சேக்கிழார் செந்தமிழ் நாட்டு மரபினை அரண் செய்யும் குறிக்கோளோடு நூல் இயற்றினார். ஞாலமளந்த மேன்மை தெய்வத்தமிழின் புகழ் பரப்பும் பணி! திரு நெறிய தொண்டின் நெறி நிற்கும் குறிக்கோள்! வழி வழி வந்த அகனைத்திணை வாழ்க்கையில் மக்களை நின்றொழுகச் செய்தல்! தமிழ்ச் சமுதாயத்தின் மையமென விளங்கிய திருக்கோயில்களைப் பேணுதல், தமிழிசையைப் பேணுதல் இயற்கையோடிசைந்த இறை நலம் சார்ந்த வாழ்க்கை நெறியைக் காணல்! அன்பு நலம் பாராட்டுதல் இவை யனைத்தும் சேக்கிழார் காப்பியத்தின் குறிக் கோளாகும்!

## திருஞானசம்பந்தர் காலச்சூழல்

சேக்கிழார், திருஞானசம்பந்தரின் திருவவதாரத்தை விளக்கும் பொழுது, "அசைவில் செழுந்தமிழ் வழக்கு அயல் வழக்கின் துறைவெல்ல" திருவவதாரம் செய்தார் என்று அருளிச் செய்கின்றார், திருஞானசம்பந்தர் அவருடைய பெற்றோரின் பெருந்தவத்தின் பயனாகப் பிறந்தவர். திருஞானசம்பந்தர் திருவவதாரம் செய்யும் சூழ்நிலையை, "மனையறத்தில் இன்பமுறு மகப்பெறுவான் விரும்புவார் அனையநிலை தனைநின்றே ஆடியசே வடிக்கமலம் நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறாக்கும் புனை மணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந் தவம் புரிந்தார். (பெரியபுராணம்-திருஞானசம்பந்தர் பா-19) என்ற சேக்கிழார் பாடலின் வாயிலாக அறியலாம். அதாவது திருஞான சம்பந்தர் திருவவதாரம் செய்வதற்கு முன்பே தமிழகத்தைத்

தமிழ் நெறிக்கு மாறான புறச் சமய நெறிகள் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டன. இதனை,

"திசையனைத்தின் பெருமை எலாந் தென்றிசையே வென்றேற, மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல, "அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல, இசை முழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலை பெருக";

"அவம்பெருக்கும் புல்லறிவின் அமண் முதலாம் பரசமயப்
பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்
தவம் பெருக்கும் சண்பையிலே தாவில் சராசரங்க ளெலாம்
சிவம் பெருக்கும் பிள்ளையார் திருஅவதாரஞ் செய்தார்"

என்னும் பாடல்களின் மூலம் அறியலாம்.

திருஞான சம்பந்தரின் பெற்றோர்கள் குலவழி அந்தணராயினும், சைவநெறியையே சார்ந்தொழுகியவர்கள். அந்தக் காலத்தில் சைவத்தில் வேதாந்தம் இருந்ததே தவிர வேதத்தின் அடிப்படையில் தோன்றிய ஏகான்மவாதம், மாயாவாதம் போன்ற சமயங்கள் தோன்றவில்லை. மறைமலையடிகள் பௌத்தத்தையே மாயாவாதம் என்று குறிப்பிடுவர். இச்செய்தி ஆய்வுக்குரியது. பண்டு, தமிழகத்தில் வாழ்ந்தவர் அனைவரும் சைவ, வைணவ நெறிகளிலேயே நின்று வாழ்ந்தனர்.

## வேதம்–எது?

சேக்கிழார், திருஞானசம்பந்தர் திருவவதாரத்தை எடுத்துக் கூறும்போது, "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" என்று அருளியுள்ளார். 'வேதம்' மொழிகளைக் கடந்த ஒரு பொதுச்சொல். உலகத்தின் அனைத்துச் சமயங்களுக்கும் வேதம் உண்டு. வேதம், மொழி எல்லைகளைக் கடந்தது. மானிடர் அறியப்பெறுவனவாகவும் கருத்தாகவும் உயர் கொள்கையாகவும் உடைய அனைத்தையுமே வேதம் என்று போற்றுதல் மரபு என்பார் ஞானத்தமிழாகரர் வை. இரத்தினசபாபதி. தமிழில்

வேதத்திற்கு 'மறை' என்று பெயர். திருமுறைகளில் வேதம் என்ற சொல்லும் பயில்கிறது மறை என்ற சொல்லும் பயில்கிறது. "நால் வேதம் ஆனான்", மறையுடையான் என்ற வழக்குகளைக் காண்க. மறை, நூல்கள் என்று ஒத்துக் கொண்டாலும் ரிக், யசுர், சாம, அதர்வணம் என்று வேத வியாசரால் முறைப்படுத்தப் பெற்ற வேதங்களை, திருமுறைகள் நமக்கு அரண் செய்யும் நூலாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் மறுப்பும் இல்லை. திருமுறைகளில் வரும் மறை, நிறைமொழி, மாந்தர் ஆணையிற்கிளந்த மறைகளே. அவை, பொதுவாக. மொழி எல்லைகளைக் கடந்தன. உணர்த்தும் பொருளால் சிறப்பாகத் தமிழுக்கே யுரியன; இதனைத் திருஞான சம்பந்தர் பாடிய,

"பண்பொலி நான்மறை பாடியாடிப்பல வூர்கள் போய்
உண்பலி கொண்டுழல் வாலும் வானினொளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கடவூரதனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லவே"

"தேம்பல் நுண்ணிடையாள் செழுஞ் சேலன

கண்ணியோடண்ணல் சேர்விடம் தேன்அமர்
பூம்பொால் திகழ் பொற் பதிபூந்தாராய் போற்றுதும்
என்றோம்பு தன்மையன முத்தமிழ் நான்மறை

ஞான சம்பந்தன் ஒண்டமிழ் மாலை கொண்டாம்படி இவை ஏத்தவல்லார்க்கு அடையா வினையே" என்ற திருப்பாடல்களில் வரும் "பண்பொலி நான்மறை", "முத்தமிழ் நான்மறை" என்பவற்றால் அறியலாம். பொதுவான கொள்கை வேதநெறி யென்றும். அதே நெறி ஒன்றிய உள்ளத்தோடு உணர்வு நிலையிலிருந்து செயற்படுத்தும் பொழுது-அனுபவ நிலையில் வாழும் பொழுது சைவத்துறை யென்றும் பெயர் பெறுகின்றது. குளம்-படித்துறை ஆறு-இறங்கு துறை ஆகிய வழக்குகளோடு ஒப்பு நோக்குக. வேதநெறி, சைவநெறிக்கு அயல் வழக்கன்று. ஆனால் வேத

நெறியே சைவ நெறியாகாது. முன்னையது பொது; பின்னையது சிறப்பு.

## அயல்வழக்கு

திருஞானசம்பந்தர் காலத்தில் பௌத்த, சமண சமயங்கள் தமிழகத்திற்குள் வந்துவிட்டன. அயல் வழக்கு என்று சேக்கிழார் கருதுவது பௌத்தத்தையும் சமணத்தையு மேயாம் அவை எப்படி அயல் வழக்காயின?

இந்தியாவின் வடபகுதியில் ஆரியமதம் கால் கொண்டிருந்தது. இது பெரும்பாலும் உயர் குடியினராகிய பார்ப்பனரின் மதமாக இருந்தது. கடுமையான வருணாசிரம வேறுபாடுகளை இந்த மதம் நடைமுறைப்படுத்தியது. வேள்வி முதலியன உயிர்ப்பலியையும் வற்புறுத்தியது. சமூக ஏற்றத் தாழ்வுகள் இன்பதுன்பங்கள் ஆகியன விளையின் விளைவுகள் என்று ஓதின. இந்தக் கொள்கைகளை ஏற்றுக் கொள்ள இயலாத நால்வகை வருணத்தில் போர் செய்வதையும் ஆட்சி செய்வதையும் பிறப்புரிமையாகப் பெற்றிருந்த க்ஷத்திரிய வமிசத்தினர் ஆரிய மதத்திலிருந்தும் ஆரிய புரோகிதர்களிடமிருந்தும் விடுதலை பெறுவதற் காக–தன்னாட்சி அமைப்புக்காகச் சமண பௌத்த சமயங்களைக் கண்டனர். வடக்கே ஓரளவு அச்சமங்களுக் கேற்ற சூழலிருந்ததால் பரவ முடிந்தது. ஆனால் தமிழகத்தில் இதற்கு முற்றிலும் மாறான சூழ்நிலை. தமிழ் மக்களுக்கு அவர்களுடைய சொந்த வாழ்வில் தோன்றிய சைவ வைணவ நெறிகளே சமயங்களாக விளங்கி வந்தன. இவை நெறிகள்; வாழ்வோடியைந்த சமயங்கள். பிறப்பின் அடிப்படையில் மனிதகுல வேறுபாட்டைக் கற்பிக்காத சமயங்கள். வினை வலியை நம்பினாலும் போரிட்டு, அதனை வெற்றிபெற இயலும் என்ற வழி நடத்திய சமயங்கள். ஆதலால், சமண பௌத்த சமயங்கள் நிலப்பகுதியினால் மட்டுமல்ல, வாழ்க்கை முறையினாலும் அயல்வழக்கு நெறிகளாயின.

ஆயினும், வட புலத்தில் அரசுகளே கண்டு வளர்ந்த சமயங்களாதலால் அவை தமிழகத்திற்குள் வரும்பொழுது தமிழகத்தில் நிலவிய பல்லவ, பாண்டியப் பேரரசுகளும் வரவேற்றன; ஆதரவளித்தன. ஆனால் மக்கள் ஏற்றுக் கொள்ள வில்லை. இத்தகைய போராட்டங்களைத்தான் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாற்றில் பார்க்கிறோம்.

## சமணக் கொள்கைகள்

சமணத்திற்கு உயிர் உண்டு என்ற கொள்கையில் நம்பிக்கையுண்டு. அதே பொழுது உயிர்களே முற்றுணர்வும் முடிவிலாற்றலும் உடையன என்னும் நம்பிக்கையுடையது. சமணர்களுக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. அவர்களுடைய சமய மரபுப்படி கேவல ஞானம் எய்திய மனிதனே கடவுள் என்று வழிபடுகின்றனர். ஆனால் சமணர்களுக்கு வினைத் தொடர் பற்றிய நம்பிக்கையுண்டு. சமணர்கள் கொல்லா விரதத்தையே குறிக்கோளாகக் கொண்டவர்கள். சமண சமயத்திலிருந்த கொல்லாமை என்ற அறம் இந்திய நாட்டில் நிலவிய அனைத்துச் சமயங்களையும் தன்வயப் படுத்தியிருக்கிறது என்பது மகிழ்வான செய்தி.

## பௌத்தக் கொள்கைகள்

பௌத்தம் பொதுவாக இந்து மதத்தோடு அதிகம் மாறுபடுவதில்லை என்ற ஒரு நம்பிக்கையுண்டு. ஆனால், பௌத்தம் கடவுள் நம்பிக்கையை ஏற்றுக் கொள்வதில்லை. அதே போல பௌத்தத்திற்கு உயிர் உண்டு என்பதில் நம்பிக்கையில்லை. இதில் இருவேறு கருத்துக்கள் உண்டு. இதனை ஆய்வது இங்கு நோக்கமில்லையாதலால் கைவிடப் படுகிறது. கடுமையான துறவை வற்புறுத்துவது பௌத்தம். இவ்விரு சமயங்களையும் மறுத்து இயல்பாக அமைந்த

வாழ்க்கை நெறியாக இருக்கிற சைவ நெறியை மக்களிடை வலியுறுத்திப் பரப்பவே சேக்கிழார் காப்பியம் செய்தார்.

## செழுந்தமிழ் வழக்கு—சைவநெறி

சைவ சமயம், தமிழரின் பேரறிவில் பூத்து வளர்ந்த நெறி; நம்பிக்கைக்கும் நல்வாழ்க்கைக்கும் ஏற்ற நெறி; இயற்கையோடிசைந்த நெறி. இம்மையிலும்-இம்மண்ணுலகிலும் மகிழ்ச்சியோடு வாழத்துணை செய்யும் நெறி. மறுமையிலும் இறவாத இன்ப அன்பு வழங்கும் நெறி. சைவ நெறியில் நம்பிக்கைகள் மட்டுமே ஆட்சி செய்யவில்லை. புனைந் துரைகள் அறவே இல்லை. மானுடம் போற்றப் படுகின்றது. கடவுள் மானுடத்தின் வாழ்முதலாகப் பேசப்படுகிறார். பரவப் படுகிறார். கடவுள் தந்தையாக, தாயாக, ஆசிரியனாக, தோழனாக, சேவகனாக நின்றாளும் பெற்றிமை தமிழகத்தின் சமய நெறிகளில் மட்டுமே உண்டு. ஆதலால் சைவம், செந்தமிழ் வழக்கு என்றும் இவற்றுக்கு ஒத்துவரா நெறிகள் அயல் வழக்கு என்றும் கொள்ள வேண்டும்.

## சைவத்தின் சிறப்பு

இந்தியாவில் வழங்கும் சமயங்களில் அய்ல் வழக்குகள் பல உள்ளன. அதை எதிலுமில்லாத-நிலையில் அறிவியலடிப் படையில் வாழ்வியலை தத்துவ இயலைச் சேக்கிழார் விளக்குகிறார். இது சைவத்திற்கே உரிய தனிச் சிறப்பு.

"செய்வினையுஞ் செய்வானும் அதன் பயனுங் கொடுப்பானும், மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக் கொண்டே, இவ்வியல்பு சைவ நெறி அல்லவற்றுக்கு இல்லை என, உய்வகையாற் பொருள் சிவன் என்று அருளாலே உணர்ந்தறிந்தார்"

(சாக்கியநாயனார் புராணம்-பா5)

என்பது பெரிய புராணம்.

இந்தப் பாடல் சைவ நெறியின் தத்துவம் முழுதையும் ஒருங்கே விளக்கும் திருப்பாடல். இத்திருப்பாடல் சாக்கிய நாயனார் வரலாற்றில் வருகிறது. திருச் சங்க மங்கையில் வேளாளர் ஒருவர் இருந்தார். அவர் எல்லா உயிர்களிடத்தும் அருள் காட்டியவர். நன்னெறியில் நின்று ஒழுகியவர் அவர் பிறவித் துன்பத்தை நீக்கிக் கொள்ளும் ஆவலில் தத்துவ விசாரம் செய்யத் தொடங்கினார். இதற்காகக் காஞ்சிபுரம் சென்றார். அங்கிருந்த பௌத்த சமயத்தாருடன் பழகி பௌத்தத்திலே சேர்ந்தார். பௌத்தத்தை ஆராய்ந்தார். தெளிவு கிடைத்தபாடில்லை! பின் சைவ நூல்களைக் கற்கலானார்; அதன் பயனாகத் தெளிவு கண்டார். சைவ நெறியில் பொது வகையால் மூன்றும் சிறப்பு வகையால் நான்கு பொருள்களும் உண்டு. பொதுவகை மூன்றாவன உயிர், தளை, இறை. உயிர்-ஆன்மா-பல! அவை பிறப்பும் இறப்பு மற்றவை. உயிர்கள் துய்த்து அனுபவிக்கும் இயல்பின. உயிர், அறிவித்தால் அறியும் அறிவுப் பொருள்; உயிர், இயல்பாக ஆணவத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆண வத்தின் ஆற்றலுக்கு உயிர் அடங்கும் பொழுது உலகைத் துய்த்து மகிழும். கடவுள்-தலைவன். உயிர்களுக்கு அறிகருவி களையும் செய்கருவிகளையும் துய்த்து மகிழ்வதற்குரிய உலகையும் படைத்துத் தருபவன்! உயிர், ஆணவத்தின் சார்பில் உலகைத் துய்க்கும் பொழுது துணையாக இருந்து பொன்னும் பொருளும் போகமும் வழங்கி, துய்ப்பு வழித் துறவும் பெறச் செய்து இன்ப அன்பில் நிலைத்து நிற்கச் செய்பவன்.

இப்பாடலில்,

*செய்வான்-ஆன்மா*

*செய்வினை-ஆன்மா செய்யும் நல்வினை, தீவினை*

*வினையின் பயன்-நல்வினையால் இன்பம்*
*தீவினையால்துன்பம்*

*பயன் கொடுப்பான்-இறைவன்*

*உயிர்கள் வினைகளைச் செய்கின்றன. அவை நல்வினை, தீவினை என்பன. நல்வினை இன்பம் பயக்குமானாலும் அவ்வின்பத்தைத் துய்த்தற்குப் பிறத்தல் வேண்டுமாதலால் பிறவித் துன்பம் நீங்க நல்வினையும் செய்யற்க! நல்வினையும் செய்யற்க என்றால் உலக இயக்கம் எப்படி நிகழும்? நன்று செய்தலே வாழ்க்கையின் குறிக்கோள்! நல்வினை கூடாதென்றால் அறவே கூடா தென்பது பொருளன்று; நல்வினையைத் தன்னல நயப்புடன் இலாபம் கருதியோ, புகழ் கருதியோ, செய்யக் கூடாது. நன்மையை நன்மைக்காகவே செய்தல் வேண்டும். நன்மை செய்தலைத் தவிர வேறு உள் நோக்கம் இருத்தல் கூடாது. அத்தகைய நல்வினை செய்யத் தக்கது. இறைவன்' உயிர்கள் செய்த வினைவழி அவ்வப் பயன்களை நுகர்விக்கும் நியதியாக விளங்குகிறானேயன்றி, அவன் தன்விருப்பப் படியாதொன்றும் செய்வதில்லை. இதுவே சைவத்தின் சிறப்பு.*

**ஊழையும் உப்பக்கம் காணலாம்!**

*சமணம், பௌத்தம் முதலியன ஊழ்வினையை ஒத்துக் கொள்கின்றன. அது மட்டுமல்ல; ஊழ்வினையின் ஆற்றலை மிகுத்துப் பேசுகின்றன. சைவ நெறியிலும் ஊழ்வினை நம்பிக்கை உண்டு. ஆயினும் அயல் நெறிகள் ஊழின் ஆற்றலை வெற்றி காண முடியாதென்று கூறும்; சைவம் வெற்றி காண முடியும் என்று கூறும்.*

*திருஞானசம்பந்தர் கொடி மாடச் செங்குன்றம் என்ற திருச்செங்கோட்டில் அருளிய திருப்பதிகத்தில் வினையின் வழியிலானது துன்பம் என்று கூறிக்கொண்டு வினை மாற்றத்திற்குரிய முயற்சி மேற்கொள்ளாது வாளா இருப் போரை இடித்துக் கூறுகின்றார். வினையிலிருந்து மீள்வதற்கு*

முயற்சி மேற்கொள்ளாத வாழ்க்கை ஊனமுடைய வாழ்க்கை என்று ஏசுகிறார்.

"அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும்
அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக்கே ஊனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும்
நாமடியோம்
செய்வினை வந்தெமை தீண்டப் பெறா திருநீல கண்டம்"

(திருமுறை 1-116-1)

என்பது திருஞான சம்பந்தர் திருப்பாடல். ஆதலால் வினை வழியில் வரும் துன்பத்தை ஆண்டவன் அருளின் துணையாலும் அயர்விலா ஆள்வினையாலும் மாற்றமுடியும் என்பது சைவ நெறிக்கொள்கை. இறைவனின் ஆற்றல் இடர்களையும் ஆற்றல். மற்றவர்களின் இடர் களைவதற் காகவே நஞ்சினை உண்டு கண்டத்தில் அடக்கினான். அதனால் திருநீலகண்டன் என்று பெயர் பெற்றான். மற்றவர்கள் துன்பம் களைவதற்காக நஞ்சினையே ஏற்றான். செய்கின்ற தலைவனைத் தலைவனாகப் பெற்ற மானுடம் வினையுடன் போராடி வெற்றி பெறுவதற்கு என்ன ஐயம்? அவர்களால் "கூற்றம் குதித்தலும் கைகூடும்". சேக்கிழார், வழி வழி வளர்ந்து வந்துள்ள இலக்கியங்களில் தோய்ந்த நெஞ்சினர். திருநீல கண்டத்தை "நீலமணிமிடறு" என்று புறநானூறு பேசும்.

"விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்"

(சிலம்பு-வேட்டுவரி 24-25)

என்று சிலப்பதிகாரம் கூறுதலும் அறிக. வல்வினையினால் வரும் இடர் தாக்காமல் பாதுகாக்கப்பதற்குரிய பெயர் திருநீல கண்டம் என்று தெரிகிறது. இதனைச் சேக்கிழார்

"அவ்வினைக் கிவ்வினை என்றெடுத்(து)" ஐயர் அமுது செய்த
வெவ்விடம் முன்தடுத்(து) எம்மிடர் நீக்கிய வெற்றியினால்
எவ்விடத்தும் அடியார் இடர் காப்பது கண்டம் என்றே
செய்வினை தீண்டா திருநீலகண்டம்" எனச் செப்பினார்

திருஞானசம்பந்தர் புராணம் பா 335.

என்று விளக்குகிறார். ஆதலால் அயல் வழக்குகளால் மக்களிடையே பரவிய ஊழ் வலிது என்ற கொள்கை மறுக்கப்பட்டு ஊழையும் உப்பக்கம் காண்பது சாலும் என்ற செழுந்தமிழ் வழக்கு அரண் செய்யப் பெறுகிறது.

## மானிடப் பிறப்பின் சிறப்பு

தமிழர் வாழ்வியல் இயற்கையோடியைந்தது. தழுவி வாழ்வது உலக இயக்கத்திற்கும் தமிழ் நெறிக்கும் முரணில்லை. வாழ்க்கையைப் பொய்ம்மையென்று தமிழ் நெறி கூறாது; இந்த வாழ்க்கையையே நிலையானது என்று கூறியும் மயக்கம் தராது.

தமிழ்மரபில் போற்றுதல் என்ற சொல்லுக்கே பயன் கொள்ளுதல் என்பதுதான் பொருள்.

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்"

"மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"

என்று அப்பரடிகளும்

"பொன்னும் மெய்ப் பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானை"

என்று சுந்தரரும்

"வந்த பிறப்பை வணங்குவாம்!"

என்று சேக்கிழாரும் பிறப்பைப் போற்றும் பாங்கு அறிக! பிறப்பு, பயனுடையது; இயற்கை தழுவியது. அப்பிறப்பை

உரியவாறு பயன் கொள்வது மாந்தர் கடமை. பிறப்பின் பயன் கொள்வதற்கு ஏற்றநெறி செழுந்தமிழ் நெறியேயாம்.

## இயற்கையோடிசைந்த நெறி

நம்மைச் சூழ்ந்துள்ள இயற்கை அழகுடையது; தன்மையுடையது; ஆக்கத்தருவது. இயற்கையில் தோய்ந்த நெஞ்சங்கள் அன்பில் திளைக்கும், வளர்ச்சியில் ஊக்கம் காட்டும்; தன்மையும் தண்ணளியும் சார்ந்ததாக விளங்கும். மானிடத்திற்குத் தீமை பயக்கும் எந்தச் சிந்தனையும் இயற்கையில் தோய்ந்து துய்த்தவர் செய்யார்! செய்ய நினையார்! திருமுறைகள் இயற்கையெழிலுக்குச் சொல் லோவியம் தீட்டுவன! அயல்வழக்கு புறக்கணிக்கத் தூண்டிய செழுந்தமிழ் வழக்கிற்கும் புத்துயிர் அளிக்க வந்த திருஞான சம்பந்தர் தமது பதிகம்தோறும் இயற்கையெழிலைப் பாடுகின்றார்! இயற்கையெழிலைத் திருக்கோலமாகக் காண்கிறார்! இயற்கையின் நிகழ்வுகளை இறைவனின் திருவிளையாடல்களாக வியந்து பாராட்டுகின்றார். ஆங்கிலக் கவிஞர்கள் வோர்ட்ஸ் வொர்த்தும், கீட்சும், டென்னிசனும் இயற்கையை வியந்து பாராட்டிய கவிஞர்களில் சிறந்தவர்கள். திருஞான சம்பந்தர் இயற்கையை வியந்து பாடிய கவிதைகள் அந்தக் கவிஞர்களின் கவிதைகளிலும் சிறந்தவை என்பதைக் கற்பார் உணர்வர்.

## திருஞானசம்பந்தர் தீட்டிய இயற்கை ஓவியம்

பாண்டிய நாட்டில் உள்ளது திருக்கொடுங்குன்றம் என்னும் திருத்தலம். இத்திருத்தலத்திற்குச் சங்க காலத்துப் பெயர் பறம்புமலை! திருமுறைக் காலத்துப் பெயர் திருக்கொடுங்குன்றம், இன்று வழங்கும் பெயர் பிரான் மலை! மலையும் மலையைச் சார்ந்த இடமுமாதலால் குறிஞ்சி! மலை உயர்ந்தது! மலையின் முகட்டில் பிறைநிலா! சூல் முற்றிப் புயல்சுமந்த கருமேகம் உலாவருகிறது. பிறைநிலா

அம்மேகத்தைக் கிழித்து இடையீடின்றி அன் பயணத்தைத் தொடர்கிறது! சூல் மேகம் கிழிக்கப் பெற்றதால் மழை பொழிகிறது! பெருமழையாதலால் அருவி கிழிந்து ஓடி வருகிறது! குளிரும் கூட இருக்கிறது! சூல் முற்றிய மேகம் மலர் செழிக்க மழை பொழிவது போல ஐம்புலன்களிலும் அன்பினால் செழித்த ஆன்மா இறைவனை அவாவி நிற்கிறது! அதற்கு ஆன்மாவே இறைவன் உவந்து குடிபுகும் திருக்கோயில். அன்பில் திளைத்தாடும் இடமாகும். இறைவன் ஊனுக்கும் உயிருக்கும் ஆக்கம் சேர்க்கும் அன்னையோடு எழுந்தருளியுள்ள திருநகரம் திருக்கொடுங் குன்றம் என்று பாடுகின்றார் திருஞான சம்பந்தர்.

> "வானிற்பொலி வெய்தும்மழை மேகம்கிழித் தோடிக்
> கூனற்பிறை சேரும்குளிர் சாரற்கொடுங் குன்றம்
> ஆனிற்பொலி ஐந்தும்அமர்ந் தாடியுல கேத்தத்
> தேனிற்பொலி மொழியாளொடு மேயான் திருநகரே"
>
> (திமுறை 1–14–1)

என்பது திருப்பாடல்.

பிறைநிலா மேகத்தைக் கிழித்தோடுகிறது. ஆன்மாவின் ஞானம் ஆணவப்படலத்தைக் கிழிந்தோடித் திருவருட் புயலைத் தருகிறது. பிறைநிலா மலையின் முகடு சேர்கிறது! ஆன்மா. வாழ்க்கையின் முகடாகிய இறைவன் திருவடியைச் சேர்கிறது. மலை, தண்சாரற் குன்று! இறைவன் திருவடி, தண்ணளி மிக்கது! இங்ஙனம் இயற்கையை வியந்து பாராட்டுவது தமிழ் மரபு! திமுறைவழக்கு! ஆங்கிலக் கவிஞர்கள் இயற்கையை வியந்து பாராட்டுவதற்கும் திருமறை வழக்கிற்கும் வேறுபாடு உண்டு. அவர்கள் இயற்கையே இறை என்று போற்றுபவர். திருமுறைகள் ஒரோ வழி இயற்கை இறை என்று–

> "வாச மலரெலாம் ஆனாய் நீயே"
> "முரி முழங்கொலி நீர் ஆனான் கண்டாய்"

—என்று பாராட்டினாலும் இயற்கைக்கும் உள்ளீடாக இருந்து இயக்கும் இறைவனை அறிந்து பாராட்டும் இது தமிழ் மரபு! காலத்தின் காரணமாக மாறாத ஒன்றே இறைத்தன்மை உடையது. கடவுள் ஒருவனே காலத்தத்துவத்திற்கு அப்பாற் பட்டவன், கடவுள் தன்மையே மாறாதது, கடவுள் தத்துவத்தில் ஒரோவழி மாற்றம் உண்டெனினும் அஃது அடிப்படை மாற்றமன்று. மானுடத்தை, உய்வார்கள் உய்யும் வகை ஆட்கொள்வதற்காகத் தாமே ஏற்படுத்திக் கொள்ளும் மாற்றமே அது. ஆட்கொள்ளும் பொருள் அளப்பிலாற்ற லுடையது. ஆட்கொள்ளப்படும் உயிர் அளவுக்குட்பட்ட ஆற்றலுடையது. அதனால் அளப்பிலாற்றலுடைய பொருள் அதன் இயல்பிற்கேற்ப மாறுகிறது.

## சேக்கிழார் தீட்டிய இயற்கை ஓவியம்

சேக்கிழார் திருமுறை நெறிகளைச் சார்ந்து இயற்கையைச் சைவப்பார்வையில் பாராட்டும் இடங்கள் நினைத்து நினைத்து கற்கத்தக்கன! கழனியில் கதிர்கள் முற்றி விளைந்துள்ளன. முற்றி விளைந்த கதிர்கள் ஒன்றையொன்று தழுவிச் சாயும் இயல்பின. இதனைக் கண்ணுற்ற சேக்கிழாரின் சிந்தை மகிழ்கிறது. சிவனடியாரின் இயல்புகளோடு இக்காட்சியை ஒத்துப் பார்க்கிறார் சேக்கிழார் பெருமான்! பத்திமை உணர்வில் விளைந்த அடியார்கள், பரமனுக்கு ஆட்பட்டவர்கள் கூடினால் ஒருவரையொருவர் முந்திக் கொண்டு தலைவணங்கி மகிழ்வர்! அப்படி வணங்குதல் வித்தகத்தின் பயன். அடியாரை வணங்காமை ஆணவத்தின் விளைவு. இன்று வணங்கி மகிழ்தல் நம்மிடையில் இல்லை. யார் பெரியர் என்று ஆய்வே எங்கும் நிகழ்கிறது. இந்த ஆய்விற்குத் துறவிகளும் விலக்கல்லர்; பிறிதொருவரை வணங்காமையே, பெருமைக்கு அழகு என்ற பொய்யர்தம் மெய் இன்று உலா வருகிறது. வேண்டாம் இத்தகு தீமை! வணங்குதல்

வாழ்க்கைக்கு அழகு! வணங்குதல் வளம் சேர்க்கும்! வணங்கிய வாயே வையகத்தை வளர்க்கும்; ஒருங் கிணைக்கும்! வணங்கி வாழ்தலே திருவருட்சார்புடைய வாழ்க்கைக்கு வாயில்! இதோர் சேக்கிழாரின் செஞ்சொற் கவிதை!

*"பக்தியின் பாலராகிப் பரமனுக்குக் காளாம் அன்பர்*
*தத்தமிற் கூடினார்கள் தலையினால் வணங்கு*
*மாபோல்*
*மொய்த்தநீள் பத்தியின்பால் முதிர்தலை வணங்கி*
*மற்றை*
*வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலியெல்லாம்*

(பெரிய புராணம்—திருநாட்டுச் சிறப்பு—22)

மேலும்,

*பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்*
*வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்அரன்*
*அஞ்செ முத்தும் உணரா அறிவிலோர்*
*நெஞ்சம் என்ன இருண்டது நீண்டவான்"*

(பெரியபுராணம்—தடுத்தாட்கொண்ட புராணம் பா 159)

*"தோற்றும் மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே*
*சாற்றும் இன்பமும் தண்மையும் தந்துபோய்*
*ஆற்ற அண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்*
*நீற்றின் பேரொளி போன்றது நீணிலா"*

(பெரியபுராணம்—தடுத்தாட்கொண்ட புராணம் பா—162)

என்ற பாடல்களில் இயற்கையின் நிகழ்வுகளை இறை நெறியோடு ஒப்பு நோக்கிக் கண்டு நன்னெறி உணர்த்தும் பாங்கினை அறிக.

## அகனைந்திணை மரபு

தமிழ் மரபு அகனைத்திணை மரபு! அதாவது காதல் வாழ்க்கை! தமிழ் மரபில் பெண்மை பெருமையுடையது. பாண்டிய நாடு அகனைந்திணை வாழ்க்கைக்குரிய நெறிகாட்டும் அகப்பொருள் இலக்கணம் இழந்ததை அறிந்து இறைவனே தமிழ் நிலம் உய்யுமாறு அகப்பொருளி லக்கணத்தை அருளிச் செய்தான் என்பது வரலாறு. இறையனார் அகப்பொருள் என்பது அந்த நூலின் பெயர். உலக மொழிகளில் எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் உண்டு! ஆனால் வாழ்க்கைக்கு இலக்கணம் இல்லை! வாழ்க்கைக்கும் இலக்கணம் கண்டது தமிழேயாம்! ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழும் அறத்திற்கு அகப்பொருள் இலக்கணமும், அக்குடும்பம் நின்று நிலவும் சமுதாய நிகழ்வுக்கும் உறவுகளுக்கும், சமுதாயமேல் வரம்பாகிய அரசிற்கும் புறப்பொருள் இலக்கணமும் என்று கண்டது தொல்காப்பியம்!

## அம்மையப்பன் திருக்கோலம்

வீடு பேற்றுக்குரிய வாயில் துறவே என்பது தமிழ் மரபுக்கு உடன்பாடுடையதன்று. தமிழரின் வழிபாட்டுத் திருவுருவம் அம்மையப்பரின் திருமேனியாகும்.

"நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே!

(ஐங்குறுநூறு–கடவுள் வாழ்த்து)

என்று ஐங்குறுநூறு பேசும். தமிழ்ச்சமய நெறியில் நிலவும் கடவுள் திருமேனிகளில் அம்மையப்பன் திருவுருவமே தொன்மையானது என்பார் மாணிக்கவாசகர்.

*"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்*
*பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!*

(திரவாசகம்–232)

இத்திருப்பாடல் அம்மையப்பன், ஒருபகுதி அம்மை யாகவும் ஒரு பகுதி அப்பனாகவும் விளங்குவதை விளக்கும் பாடல். இன்றைய வழக்கில் இத்திருவுருவத்தை அர்த்த நாரீசுவரர் என்பர். "அம்மையப்பரே உலகுக்கு அம்மை யப்பர்" என்று சித்தாந்தச் சாத்திர நூல்களில் தொன்மை யதாகிய திருக்களிற்றுப்படியார் பேசும். அவன் என்று ஆண்பாலையும் அவள் என்று பெண்பாலையும் கட்டடுவது தமிழிலக்கண மரபு. குமர குருபரர் சிந்திக்கிறார். அம்மையப்பன் திருவுருவத்தைச் சிந்திக்கிறார். சிந்தனையில் முகிழ்க்கிறது தெளிவு.

*"ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன் றால்அவ்*
*உருவையிஃ தொருத்தன் என்கோ ஒருத்தி என்கோ*
*இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்*
*இயற்சொல்இல தெனின்யான்மற்*
*றென்சொல் கேனே!*

(சிதம்பரச் செய்யுட் கோவை–54)

என்று பாடுகிறார். அவருக்கு 'ஒருவர்' என்ற சொல் கிடைத்தது. இறைவன் அம்மையோடு உடனிருக்கின்ற பொழுதே அருள் செய்கின்றான். அதனால் இறைவனுடைய திருவருட் செயற்பாடு நிகழ்ந்த பொழுதெல்லாம் அம்மையப்பன் திருமேனியே போற்றப்படுகிறது. இன்றைய திருக்கோயில்களில் கூட இறைவனின் திருவருட் செயல் வெளிப்பட்ட இடங்களில் எல்லாம் கருவறையில் சிவலிங்கத் திருமேனிக்குப் பின்னால் அம்மையப்பன் திருமேனி எழுந் தருளச் செய்திருப்பதைக் காணலாம்.

## இவ்வுலக இன்பம் திருவருள் இன்பத்திற்கு இட்டுச் செல்வது

உலக வழக்கில்-ஒரூருக்குச் செல்லும் வண்டியை அந்த ஊரைச் சொல்லி அழைப்பது வழக்கம். இராமேசுவரம் விரைவு வண்டியை "இராமேசுவரம்" என்றழைப்பார். அந்த வண்டி இராமேசுவரம் அல்ல. இராமேசுவரத்திற்கு அந்த வண்டி கொண்டு விடும் என்ற பொருளின் அடிப்படையில் உபசார வழக்காக அது இராமேசுவரம் என்று கூறப்பெறுகிறது. அது போல, உயிர் இந்த உலகில் துய்த்து மகிழும் இன்பங்கள் இன்பமல்ல. ஆனால் இந்த இன்பங்கள் முறையாகத் துய்க்கப் பெற்று அவாத் தணியும் பொழுது திருவருளின்பம் சிந்திக்கும். அதனால் உபசார வழக்காக இதையே திருவருளின்பம் போல உபசரித்துக் கூறுதல் மரபு. இவ்வுலக இன்பங்கள் திருவருளின்பம் அல்ல என்று கூறுவதால் அயல் வழக்கினர் போல் இவ்வுலக இன்பம் தவறானது; முறைகேடானது; இறைவன் திருவுள்ளத்திற்கு மாறானது என்பது கருத்தன்று. ஓர் ஆன்மாவின் வளர்ச்சியில் அவ்வக்காலத்தில் நுகரும் இன்பங்கள் வளர்ச்சிக்குத் துணை செய்வன. திருவருள் இன்ப அன்புக்கு ஆற்றுப் படுத்துவன, அழைத்துச் செல்வன என்றே பொருள் கொள்ள வேண்டும். இந்த நிரந்தினிது முறையைச் சுந்தரர்,

> "பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
> போகமும் திருவும் புணர்ப்பானை" (திருமுறை 7-59-1)

என்று பாடியதால் அறிக.

பொன்-மூலப்பொருள், பொருள்-நுகர்தலுக்குரிய பொருள். போகம்-நுகர்தலால் வரும் இன்பம், இவை மூன்றும் இறைவனால் ஆன்மாக்களுக்குத் தரப்படுகின்றன. திருவருள் சேர்ப்பிக்கப் பெறுகிறது. அதாவது புணர்த்தப் பெறுகிறது. தருதல்-புணர்தல் என்ற சொற்கள் இடம் நோக்கி

அமைந்திருப்பதை அறிந்து இன்புறுக. இக்கருத்தினை மிக அழகாக விளக்கும் அப்பரடிகள் திருப்பாடல் இது.

அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ
துணையாயென் நெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே!

(திருமுறை 6–95–1)

இது வாழ்க்கையின் தத்துவத்தை விளக்கும் அருமையான பாடல். அதுமட்டுமல்ல. மானுடத்தின் பரிணாம வளர்ச்சியை விளக்கும் பாடல்! ஒரு மானுட உயிர்க்குத் தந்தை முதல் துணை, தாய் இரண்டாம் துணை, தந்தை கருவுற்றே தாயிடம் கருமாற்றுப் பதியம் செய்யப் பெறுகிறது. மண்ணிற் பிறந்தவுடன் உடனிருந்து வளர்க்க உடன் பிறந்தான். பின் வளர்ந்த பருவ நிலையில் வாழ்க்கைக்குத் தாயாகவும், தோழியாகவும் அமைச்சனாகவும், காதல் மனைவியாகவும் விளங்குபவளை ஈன்று வளர்த்துத் தந்து உதவி செய்யும் அன்புடைய மாமனாகவும், மாமியாகவும், தன்னோடு ஒப்புமையுடைய வாழ்க்கைத்துணை நலமாகவும் மனையறம் நிகழ்த்துதற்குரிய பொருளாகவும் இறைவன் விளங்கியருள்கின்றான் என்று இத்திருப்பாடல் விளக்குகிறது. உலகின்பங்களைத் துய்த்து மகிழும்போதே இறைவன் துணையாய் அமைந்து உள்ளத்தின் வேட்கையை மெல்லத் தணித்தும் அதனைத் தூய துறவின்பால் ஆற்றுப் படுத்தும் பாங்கினையும் இப்பாடல் விளக்குகிறது. இதுவே செழுந் தமிழ் வழக்கு. அதனாலன்றோ இறைவன் சுந்தரர்க்குப் பொன்னும் பொருளும் தந்தனன்; ஒன்றுக்கிரண்டாகத்

திருமணம் செய்து வைத்தனன்; சேக்கிழார் காப்பியத்தில் வரும் அடியார்களில் பெரும்பாலோர் மனையறத்தில் வாழ்ந்தவர்கள். சிவபெருமான் மண்ணுக்கு வந்த பொழு தெல்லாம் சிறந்த மனையறம் நிகழ்ந்த இல்லங்களுக்கு எழுந்தருளி அவர்களுடைய அன்பினில் மகிழ்ந்து, கலந்து உறவாடி அருள் செய்துள்ளான். காதல் மனை வாழ்க்கையில் பிரிவு ஏற்பட்டபொழுது அந்தப் பிரிவினைத் தானே முன்னின்று சேர்த்து வைத்துள்ளான். திருநீலகண்டர் வரலாறும், சுந்தரர் வரலாறும் இதற்குச் சான்று. மனையறத்தில் நிகழும் வாழ்க்கை சமயச் சார்பில்லாதது; தவமன்று; அவம் என்ற அயல் வழக்கின் கருத்தைச் சேக்கிழார் சுந்தரர் வரலாற்றில் நயம்பட மறுத்துச் செழுந்தமிழ் வழக்கிற்கு அரண் செய்கிறார். ஏன்? இறைவனின் புகழை, அவனுடைய புகழில் தோய்ந்த அடியார்களைப் போற்றுவதற்காகக் காப்பியம் செய்த சேக்கிழார் காதலையும் பாடுகிறார். காதலைப் பாடுவது மட்டுமல்ல. காதலைக் கடவுள் தன்மையுடைத்து என்றும் பாராட்டுகிறார். சுந்தரர்–பரவையார் காதல் பற்றி விளக்கும் சேக்கிழாரின் பாடல்கள் காலத்தை வென்று விளங்கம் புகழ் மிக்கவை.

திருவாரூரில் சுந்தரர் பரவையாரைச் சந்திக்கிறார். சுந்தர் பரவையாரைக் கண்டு காதல் கொண்டு அதிசயித்த நிலையைச் சேக்கிழார்,

“கற்பகத்தின் பூங்கொம்போ? காமன்தன் பெருவாழ்வோ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ? புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ?
அற்புதமோ? சிவனருளோ? அறியேன்என் றதிசயித்தார்”!

(தடுத்தாட்கொண்ட புராணம்–140)

என்று பாடுகிறார். காமன்தன் பெருவாழ்வு சிவனருளில் சென்று சேர்கிறது என்ற குறிப்பு அறிந்து இன்புறத்தக்கது. சுந்தரரைக் கண்ட பரவையார்,

"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ?
பெருகொளியால்
தன்னேரில் மாரனோ? தார்மார்பின் விஞ்சையனோ?
மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற்
றுடையவனோ?
என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ
எனநினைத்தார்

(தடுத்தாட்கொண்ட புராணம்–144)

என்று நினைந்து வியந்து பாராட்டுகிறார். இருவர் நினைப்பும் காதலில் தொடங்கி இறைவன் அருளில் முடிவதை எண்ணுக! எண்ணி எண்ணி இத்தகு காதல் நெறி இவ்வையகத்தில் நிலவத் தவம் செய்க! சுந்தரர் பரவையாருடன் கூடித் திருவாரூரில் வாழ்ந்ததை,

"தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடிமருங்குல் பரவையெனும் மெல்லியல்
தன்
பொன்னாரும் முலைஓங்கல் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார்"

(தடுத்தாட் கொண்ட புராணம்–181)

என்று விளக்கும் பாடலால் தமிழ் வழிப்பட்ட மனை யறத்திற்குக் கொடுத்த பெருமையை ஓர்க! உற்றறிக! அதுபோலவே சங்கிலியாரிடத்தில் சுந்தரரின் விருப்பத்தை உணர்த்த சென்ற சிவபெருமான் சங்கிலியாரிடம் சுந்தரரை அறிமுகப்படுத்தும் பொழுது பாடும் பாடல் அருமையிலும் அருமை.

*"சாருந் தவத்துச் சங்கிலி! கேள்; சால என்பால்*
*அன்புடையான்*
*மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய்*
*நல்லூரில்*
*யாரும் அறிய யான்ஆள உரியான்; உன்னை எனை*
*இரந்தான்*
*வார்கொள் முலையாய்! நீ அவனை மணத்தால்*
*அணைவாய் மகிழ்ந்தென்றார்"*

(ஏயர்கோல கலிக்காமர் புராணம்–239)

என்ற பாடல் தவத்திற்கும், இறையன்பிற்கும், மனையறத் திற்கும் முரணில்லை என்ற தத்துவத்தை விளக்குவதை அறிக. அதே போலச் சுந்தரர் தம் வாழ்வின் இயல்பினைத் தன்னிலை விளக்கமாக எடுத்துக் கூறும்பொழுது.

*"சங்கிலியார் மென்தடந் தோள் தோயும்போது*
*நின்திருவருள் மறக்ககில்லேன்"*

என்றருளிச் செய்திருப்பது அறிக. பெண்மையை இழிவு படுத்தியும் திருவருளின்பத்திற்கு வாயிலாக அமைந்த மனையறத்தை- இயற்கையோடிசைந்த வாழ்வை இழிவெனக் கருதியும் அயல் வழக்கினர் பரப்பியதை மறுத்துச் செழுந்தமிழ் வழக்கை அரண் செய்ய அம்மையப்பர் வழிபாட்டு நெறி எடுத்தோதப் பெற்றது. மனையறம் போற்றப் பெற்றது.

### கலை—கடவுளையடையும் சாதனம்

தமிழ் முத்தமிழாகத் தோன்றியது; வளர்ந்தது. இயல், இசை, கூத்து என்பன முத்தமிழ். கூத்து, இசை, இயல் என்பது வளர்ச்சி முறை மரபென்றும் கூறுவர். தமிழ் கலைகளோடு வளர்ந்த மொழி. இசைக்கலை, ஆடற்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை இங்ஙனம் பல்வேறு கலைகளிலும் தமிழர்கள் சிறந்து விளங்கினர். கலையை வாழ்க்கையை மகிழ்ச்சி

யாக்கும் கருவியாகவும், திருவருளை அடைதற்குரிய கருவியாகவும் கண்டு போற்றினர். சேக்கிழார் பெரிய புராணத்தில் வரும் அடியார்களில் பலர் நல்ல கலைஞர்கள். திருநீலகண்ட யாழ்ப்பாணரும், ஆனாய நாயனாரும் மிகச் சிறந்த இசைக் கலைஞர்களாக விளங்கியவர்கள். தேவாரம் பாடிய மூவரும் நல்ல இசைப்பாடல்கள் பாடியவர்கள். திருஞானசம்பந்தர் இன்னிசையால் தமிழ் பரப்பினார். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோருடைய தமிழிசைப் பாடல்களைக் கேட்பதற்காக இறைவன் நாளும் காசு தந்தனன். ஆதலால் சுந்தரர்,

*"ஏழிசையாய் இசைப்பயனாய்"* (திருமறை 7–21–10)

என்று இறைவனைப் பாராட்டுவார். ஆடல் வல்லான் சுந்தரரின் பாடலில் ஒன்றிக்கலந்து போனதால் சேரமான் பெருமான் நாயனார் பூசைக்குச் செல்லக் காலம் தாழ்த்திற்று என்று சிவபெருமானே அருளிச் செய்ததாகச் சேக்கிழார் கூறும் பெற்றிமை அறிக.

*"மன்றி னிடைநம் கூத்தாடல்*
*வந்து வணங்கி வன்தொண்டன்*
*ஒன்றும் உணர்வால் நமைப்போற்றி*
*உரைசேர் பதிகம் பாடுதலால்*
*நின்று கேட்டு வரத் தாழ்ந்தோம்*
*என்றார் அவரை நினைப்பிப்பார்."*

(கழறிற்றறிவார்–44)

ஆதலால் வாழ்க்கையை இம்பமயமாக்கம் கலைகளைப் புறக்கணித்த அயல்வழக்கினை மறுத்துக் கலைகளைக் கடவுட் சாதனமாக ஏற்றுப்போற்றிய சேக்கிழார் செழுந்தமிழ் வழக்குக்கு அரண் செய்துள்ளார்.

## திருக்கோயில்கள் சமுதாய மையங்கள்

சேக்கிழார் காப்பியம் திருக்கோயில்களை மையமாகக் கொண்டே இயங்குகிறது. செழுந்தமிழ் வழக்கின் மையம் திருக்கோயில்களே! தமிழர் சமுதாய அமைப்பும் நிகழ்வும் திருக்கோயில்களை மையமாகக் கொண்டவை. கடல் கொண்ட தென்குமரிக் கண்டத்தில் மிகப்பெரிய திருக் கோயில் இருந்ததைப் புறநானூறு கூறுகிறது. அந்தத் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவன் திருமுன்னால் பேரரசர்களின் குடைகள் தாழ்ந்தன. இதுவே செழுந்தமிழ் வழக்கு.

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே! (புறம்–6)

என்பது புறநானூறு. திருக்கோயில் நாகரிகம் தமிழ் நாகரிகம்; தமிழ் நாகரிகத்தின் பண்ணைகள் திருக்கோயில்கள். செழுந்தமிழ் வழக்குக்கு அரணாகவுள்ள திருக்கோயில் களைத் தமிழ் மக்கள் என்றும் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்பதற்காகத் திருக்கோயில் தொண்டுகளைச் சேக்கிழார் சிறப்புற விளக்கியுள்ளார். ஏன்? சேக்கிழாரே தமது வாழ்க்கையின் இலட்சியமாக, செஞ்சொற்காப்பியமாகத் திருத்தொண்டர் வரலாறும் செய்தருளினார். அதுபோலவே இறைவனும் சிவனடியார்களும் மற்றைய சமுதாயமும் மகிழ்ந்து வாழ்வதற்குத் துணை செய்யும் திருக்கோயிலை எடுப்பித்தல், பேணுதல் அறங்களிற் சிறந்த அறம் என்று உணர்த்தவதற்காக.

முதலமைச்சராக இருந்தபொழுது திருநாகேச்சுரத்தில் தாமே முன்னின்று திருக்கோயில் எடுப்பித்தார். முன் முதலமைச்சர் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு தமது பிறந்த ஊராகிய தொண்டைநாட்டுக் குன்றத்தூரிலும் திருநாகேச்சுரம் திருக்கோயிலைப் போலவே ஒரு திருக்கோயில் எடுப்பித்தார். அத் திருக்கோயிலில்தான்

நாம் இன்று கூடியிருக்கிறோம். ஆதலால் சேக்கிழார் திருக்கோயிலை மையமாகக் கொண்ட ஒரு சமுதாய அமைப்பை உருவாக்கத் திருவுள்ளம் பற்றினார். அதுவே செழுந்தமிழ் வழக்கு.

சேக்கிழார் தமது அருமையான காப்பியத்தைச் செய்து நமக்குத் தந்தது இற்றைக்கு 800 ஆண்டுகட்கு முன்பாகும். இன்று நம்முடைய சமய வாழ்க்கையில் சேக்கிழார் இடம் பெற்றுள்ளாரா, என்பதை அன்பு கூர்ந்து எண்ணுங்கள்! சேக்கிழார் தமிழ் மக்களின் வாழ்க்கையை அயல் வழக்கி லிருந்து மீட்க-தமிழ் நெறிப்படுத்தக் காப்பியம் செய்தார். சேக்கிழார் காப்பியத்தில் சிந்தனை உண்டு; கவிதை உண்டு; காப்பிய நலன்கள் உண்டு; சைவசீலம் உண்டு; திருவருள் பொலிவும் உண்டு. இவை மட்டுந்தானா? நாம் எப்படி வாழ்தல் வேண்டும் என்ற உண்மையில்லையா? சேக்கிழாரைப் படித்தால் போதாது ஓதினாலும் போதாது. உணர்தல் வேண்டும். நாம் சைவ நெறியின் சீலத்தை மேற்கொள்ள வேண்டும். திருத்தொண்டில் ஈடுபடவேண்டும். அறுபத்து மூவரில் எந்த ஓர் அடியார் செய்த திருத்தொண்டையாவது நாம் இன்று எடுத்துச் செய்யக் கூடாதா! நம்முடைய திருமடங்கள் செயற்படக் கூடாதா? நம்முடைய திருக்கோயில்கள் திருத்தொண்டின் பண்ணை களாக மாறக்கூடாதா? தடை என்ன? மரபுகள் வழிகள் வழி நிற்றல் என்ற பெயரில் இடைக்காலத்தில் அயல்வழக்காக வந்த வாழ்க்கைக்கு ஒவ்வாத வெற்றுச்சடங்குகள், ஆரவாரங்கள், புன்மைத் தன்மையுடைய சாதி வேற்றுமைகள், உயர்வு என்ற பெயரால் சமுதாயத்தினின்றும் ஒதுங்கி வாழ்தல் இவற்றையெல்லாம் ஏற்றுக் கொண்டு தமது அறியாமையை மரபின் மீதும் சைவத்தின் மீதும் ஏற்றுதல் முறையோ? ஒருக்காலும் முறையாகாது.

இன்றைய தமிழகத்தை நன்னெறிப் படுத்துதற்குரிய ஒரே காப்பியம் சேக்கிழார் காப்பியமேயாம். சேக்கிழார்

எடுத்துக் கூறும் திருமுறை நெறியே செழுந்தமிழ் வழக்கு. இச் செழுந்தமிழ் வழக்கு தொல்காப்பியர் காலந்தொட்டு வளர்ந்து வரும் மரபு. ஆதலால் சேக்கிழார் செந்நெறி நிற்போமாக! திருத்தொண்டினால்தான் வையகத்தை வாழ்விக்க முடியும். ஒரு தத்துவத்திற்கு மக்கள் மன்றத்தில் நிலையான இடத்தைப் பெற்றுத் தருவது பிரசாரங்கள் மட்டுமல்ல. உபதேசங்கள் மட்டுமல்ல. அத்தத்துவம் செயலுருவம் பெற்றாக வேண்டும். மீண்டும் தமிழகத் திருக்கோயில்களில் அப்பரடிகள் தொடங்கி வைத்த உழவாரப் பணி தொடர்ந்து நடைபெற வேண்டும். அவ்வழி நமது திருக்கோயில்கள் பேணிக் காக்கப் பெறுதல் வேண்டும். திருக்கோயில்கள் நமது வாழ்வின் மையம், உயிர் நாடி! திருக்கோயில்களைக் கடவுளின் இருப்பிடமாக மட்டும் கருதிச்சமுதாயத்தைப் புறத்தே தள்ளிய அயல்வழக்கின் கொடுமையை உணர்க! அக்கொடுமையால் திருக் கோயில்கள் சமுதாயத்திலிருந்து விலகிவிட்டன. சமுதாயமும் திருக்கோயில்களிலிருந்து நெடுந்தொலைவிற்கு விலகி விட்டது. இல்லை, திருக்கோயில்கள் மாறுபாடாகக் கூட நடக்கத் தலைப் பட்டுள்ளன. கடவுட் பொருள் தனிமைப் படுத்தப் பெற்று ஏகபோகத்திற்குரிய முதல் போலாகி விட்டது. புறத்தே தள்ளப்பட்ட மக்களோ "இவர்தேவர் அவர் தேவர்" என்று தேடி அலைந்து எய்த்துக் களைத்துப் போகின்றனர்! கடவுளும் ஆன்மாக்களும் கலந்து மகிழும் இடமே திருக்கோயில்களை மையமாகக் கொண்டே வளர வேண்டும்; விளக்கம்பெற வேண்டும் "கோயிலைத் தழுவிய குடிகளும், குடிகளைத் தழுவிய கோயிலும் காண வேண்டும். வாழ்க்கைப் போக்கில் சமூகத்தில் நிகழும் சிக்கல்களுக்கு, திருக்கோயில்களில் பஞ்சாயத்துக்கள் காணப்பட்டு, அவற்றின் மூலம் தீர்வுகாணப்பட வேண்டும். திருக் கோயில்கள் சமுதாயப் பணிமனைகளாக உருக் கொண்டால் உடைமைச் சிக்கல்கள் தோன்றா; குத்தகை வரவில்லை,

வசூலாக வில்லை, என்றெல்லாம் கவலைப்படவேண்டிய அவசியம் இருக்காது. ஏன்? களவுகளைக் கூட தவிர்த்து விடலாம். மீண்டும் பெண்மை பெருமை பெற வேண்டும். காதல் திருமணங்கள் நிகழவேண்டும். ஒரு வீட்டில் இன்பம் ஒரு விட்டில் துன்பம் என்ற நிலை தொடரக்கூடாது. எல்லோரும் இன்புற்று வாழ வேண்டும். மண்ணில் விண்ணகம் காண வேண்டும். இதுவே சேக்கிழார் காட்டிய செழுந்தமிழ் வழக்கு.

## தமிழ்நாடு அரசுக்குப் பாராட்டு – வேண்டுகோள்

சேக்கிழாரின் செந்நெறி வெற்றி பெறுதல் இன்றைய தமிழகத்திற்கு நல்லது. தமிழ்நாடு அரசு இந்த நிலையை நன்கு அறிந்து, அறநிலையத்துறை மூலம் சேக்கிழார் விழா நெறியைப் பேணிக்காப்பதை நோக்கமாகக் கொண்ட அரசு இராசராசனுடைய ஆயிரமாவது முடிசூட்டு விழாவை இராசராசேச்சரத்தில் சிறப்பாக எடுத்த அரசு; செழுந்தமிழ் வழக்கிற்கு அரணாகவுடைய திருமுறைகளை அயல் வழக்கினரிடமிருந்து மீட்டுத் தந்த இராசராசன் விழாவை ஆண்டுதோறும் கொண்டாடும் அரசு; கோச்செங்கட் சோழன் நினைவாகத் திருக்கோயில் திருப்பணிக்குப் பொது நிதி அமைத்த அரசு; நாடெல்லாம் முன்னவன் பூசை முட்டின்றி நடக்க வைப்பு நிதி அமைத்துள்ள அரசு. நம்முடைய பாராட்டுதலுக்குரிய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு ஆர்.எம்.வீ. அவர்கள் சிறந்த சைவச்சிந்தனையாளர், திருமுறைப்பற்றாளர். அவர்தம் அறநிலையத்துறை அமைச்சில்தான் இத்தகைய பணிகள் சிறப்புற நடைபெறுகின்றன. அரசுக்கும் அமைச்சருக்கும் நமது நன்றி! கடப்பாடு. அமைச்சர் அவர்களுக்கு மேலும் ஒரு வேண்டுகோள்! பொன்மனச் செம்மல் தலைமையில் அமைந்துள்ள தமிழ் நாடு அரசு சங்ககாலப் புலவர்களுக்கு நினைவுத் தூண் நட்டு, புகழ் பூத்த சங்க காலத்தை நினைவுக்குக் கொண்டு வந்துள்ளது. அதேபோல் சேக்கிழார்

பாராட்டிய அறுபத்து மூன்று நாயன்மார்கள் வாழ்ந்த பகுதிகளில் நினைவுச்சின்னங்கள் அமைத்தல் வேண்டும். திருக்கோயில்களில் செழுந்தமிழ் வழக்குகிற்கு அரண் செய்த நால்வர் சந்நிதியை அழகுறப் பொலிவுற அமைத்திடல் வேண்டும். ஒவ்வொரு திருக்கோயிலிலும் திருவிழா நிகழும் பொழுது தவறாமல் திருமுறை விழா நடத்த ஆணை பிறப்பித்தல் வேண்டும். இவைகள் அறநிலையத் துறை அமைச்சர் அவர்களின் நினைவிற்கிடக்கும் செய்தி களேயாம். நமது வேண்டுதல் தூண்டுதல் தன்மையதேயாம்!

## திருத்தொண்டு செய்வோமாக

நமது இனம் மொழிவழியிலோ, சமய வழியிலோ எந்தக் காலத்திலும் ஒருமைப் பாடுடையதாக இருந்ததில்லை; இன்றும் இல்லை. இந்த ஒருமைப்பாட்டை உருவாக்கவும் சேக்கிழார் முயன்றுள்ளார். சேக்கிழார் காப்பியத்தில் வரும் அடியார்களுக்குள்ளேயும் கூடச் சில இடங்களில் வேறுபாடுகள், பிணக்குகள் தோன்றுவதைப் பார்க்கிறோம். ஆனால் சேக்கிழார் அவற்றிற்கு எளிதில் தீர்வுகண்டது அதி அற்புதமானது. திருவிழா மிழலையில். திருஞானசம்பந்த ருக்கும் திருநாவுக்கரசருக்குமிடையில் ஒரு சிறு வேற்றுமை கால் கொள்கிறது. இந்த வேற்றுமையைச் சிவபெருமானே நல்லெண்ணத்தின் அடிப்படையில் தோற்றுவிக்கிறான். திரநாவுக்கரசருக்கு வாசியில்லாக் காசு. அதனால் திருநாவுக்கரசர் மடத்தில் காலத்தோடும், திருஞானசம்பந்தர் மடத்தில் காலந்தாழ்த்தும் அன்னம் பாலிக்கப் பெறுகிறது. நம்முடைய வாழ்க்கையில் இது என்ன சாதாரணமான பிரச்சனையா? அன்றும் அதே நிலைதான்! திருஞான சம்பந்தரின் உள்ளம் அலைமோதுகிறது. ஆனால், அஃது நம்மனோர் வாழ்க்கை போல அழுக்காறாக-அவாவாக வெளிப்படவில்லை. ஐயந்தொழிலாக வெளிப்படவில்லை; ஐயந்தெளிதலாக வெளிப்படுகிறது. காரணம் அறியும்

முனைப்பு கால்கொள்கிறது. பெருமான், ஆளுடைய பிள்ளையின் ஐயத்தினைத் தீர்ந்து வைக்கிறான். அந்த ஐயத்தினைப் பெருமான் தீர்த்து வைத்துச் சொன்ன உரை அன்றும் இன்றும் என்றும் நம்மனோர்க்கு உய்யும் நெறியாகும்.

## புனிதப் பேரவை விளங்கி வெல்க

பேச்சு, தொண்டாகாது; கைத்திருத்தொண்டு செய்ய வேண்டும். அப்பரடிகள் கைத்திருத்தொண்டு செய்தது உழவாரப்படைப்பணி. அதனால் வாசியில்லாக்காசு. அம்மையின் சிவஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தருக்கே கைத்திருத் தொண்டின்மையின் வாசியுடைய காசு வழங்கப் பட்ட தென்றால் நம்மனோர் நிலையென்ன? போதும் பேச்சு? திருத்தொண்டு செய்வோமாக! அதுபோலவே சுந்தரருக்கும். ஏயர்கோன் கலிக்காம நாயனார் சினம் கொள்கிறார். இதனையும் பெருமானே சமாதானம் செய்துவைத்து ஆரூரரையும் ஏயர்கோன் கலிக்காம நாயனாரையும் இணைத்து வைக்கிறார். திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் அடியார்கள் விறன்மிண்டர் தலைமையில் இருக்கின்றனர். ஆரூரரை வழிபடும் வேட்கை மிகுதியால் நம்பியாரூரர் தேவாசிரிய மண்டபத்து அடியார்களுக்கு வணக்கம் செய்யாமல் சென்று விடுகிறார். தேவாசிரிய மண்டபத்திலிருந்த அடியார்களுக்கு ஆற்றொணாச்சினம் தோன்றுகிறது. நம்பியாரூரர் புறமானவர் என்று ஒதுக்குகின்றனர். ஆரூரீசன் நம்பியாரூரருக்கு இந்நிலை உணர்த்தி "அடியவர்க்கு வணக்கம் செய்க" என்று ஆற்றுப்படுத்துகிறார். அந்தச் சூழ்நிலையில் பிறந்ததுதான் சேக்கிழார் காப்பியத்துக்கு முதல் நூலாக விளங்கும் திருத்தொண்டத்தொகை; அதனால் சேக்கிழார் தமது நூலின் குறிக்கோள்களை எடுத்துக் கூறும் பொழுது சைவ அடியார்கள் திருக்கூட்டம் அடங்கிய "புனிதர்பேரவை" என்றும் நின்றும் நிலவ வேண்டும் என்று பாடுகிறார்.

"மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்ப்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே"

(பாயிரம்-4)

என்பது சேக்கிழார் பாடல்.

இன்றும் நம்முடைய செழுந்தமிழ் வழக்கில் நின்றொழுகும் அடியார்கள், திருமடத்துத் தலைவர்கள், ஆட்சியாளர்கள் ஒருங்கிணைந்து சமய இயல் நடத்தக் காணப்பெற்றதே தெய்வீகப் பேரவை. இன்றைய தமிழகத்தில் சமய நிறுவனங்களை ஒருங்கிணைத்துத் திருத்தொண்டின் நெறியில் ஈடுபடுத்துதல் தவிர்க்க இயலாத கடமை. அதற்குப் பேரவையே சாதனம். சிறப்புற இயங்கிய பேரவையைச் செழுந்தமிழ்வழக்கு வெற்றி பெற்றுவிடும் என்றஞ்சிய அயல்வழக்கினர்; நெருக்கடிக் கால ஆட்சியின்போது முடக்கி விட்டனர்; மூடச்செய்து விட்டனர்; இதனால் மீண்டும் தமிழகத்தில் செழுந்தமிழ் வழக்கிற்கு மாறாக அயல் வழக்கு புகுந்து வளர்கிறது.

இது தமிழகத்திற்கு நலம் செய்யாது. தமிழ்நாடு அரசுக்கும் நலமின்று. இதனை மாண்புமிகு அமைச்சர் அவர்களும் அறிந்தே இருக்கிறார்கள். இந்த விபத்தை இப்போது தடுக்காவிடில் மீண்டும் செழுந்தமிழ் வழக்கு நடுக்குறும். தனித்தன்மை மிக்க தமிழ் மரபுகள் மாசுறும். பாராட்டுதலுக்குரிய முதல்வர் "நான் தமிழ் மதத்தைச் சார்ந்தவன்" என்று கூறிய பெருமித உரை வரலாறாக மாறாமல் போய்விடும். ஆதலால் புனிதர் பேரவையை இயக்க எண்ணம் கொள்க! நம்மனோரைப் பணியில் ஈடுபடுத்துக! பயன்பெறுக என்பது நமது உரிமையோடு கூடிய வேண்டுகோள்.

## பாராட்டு—நன்றி

சேக்கிழார் திருவடிகளைப் போற்றிச் சென்னிமேற் கொண்டு விழா எடுத்த தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை ஆணையருக்குப் பாராட்டுக்கள். இன்று நம்முடைய தலைமுறையில் சமய மறுமலர்ச்சிக்குரிய பலபணிகளைச் செய்து வருகின்ற மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சருக்கு நன்றி! கடப்பாடு! விழாவிற் கலந்து கொண்டு சிறப்புரையாற்றி வாழ்த்தியருளும் அடிகள் பெருந்தகைக்கு நன்றி! அறிஞர்களுக்கு பாராட்டு! சேக்கிழாரின் செவ்விய குறிக்கோளாக விளங்கிய "திசையனைத்தின் பெருமையெலாம் தென்திசையே வென்றேற"ச் செய்வோமாக! எவ்வுலகிலும் இம்மண்ணுலகம் சிறப்புடைய தென வாழ்ந்து காட்டு வோமாக! அயல்வழக்கின் துறைகளைவென்று, செழுந்தமிழ் வழக்கினை நிலைபெறச் செய்வோமாக! ஐயன் அரனுக்குப் பொருளாகிய அன்பினை வளர்ப்போமாக! உயிர்க்கு ஊதியமாகிய தொண்டினைச் செய்வோமாக! திருக்கோயில் வழிபாடு நாள்தோறும் இயற்றுவோமாக! அணி அணியாகத் திரண்டு சென்று கூட்டமாக வழிபடுவோமாக! இறைவனைத் தலைவனாகக் கொண்ட ஒப்புரவு நெறி கொண்டொழுகும் ஒருகுலம் ஆவோமாக!

*என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்*
*ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட*
*மன்று ளாரடி யாரவர் வான்புகழ்*
*நின்ற தெங்கு நிலவி உலகெலாம்.*

# 10

# திருமுறைத் திருநாளில் தலைமை உரை

## சித்தாந்தச் சிவநெறிச் செல்வர்களே!

*செந்தமிழ்ச்-சொக்கரின், பேரருட் பெருக்கிலே-குரு ஞானசம்பந்தப் பெருந்தகையின் ஞானவாரமுதப் பெருக் கிலே திளைக்கின்ற நாம் இன்று திருமுறைத் தமிழிலே இன்பம் காணக் கூடி இருக்கின்றோம். இந்த இன்ப வாய்ப்பினை அளிக்கத் திருஉள்ளங் கொண்ட திருப்பெருந்திரு மகாசந்நிதானம் அவர்களின் திருவருளை வந்தித்து வாழ்த்திப் பணிமேற் செல்ல விழைகின்றோம்.*

## சமய வாழ்க்கை

*மக்கட் பிறப்பின், உண்மைப் பயனை எய்த வழி செய்வது சமயமேயாம். ஏன்? சமயச் சார்புடைய வாழ்க்கையே வாழ்க்கையாக மதிக்கப் பெறுகின்றது. மக்களை மிருக வாழ்க்கையிலிருந்து, பூரண மனித வாழ்க்கைக்கு மாற்றி, அருள்தோய்ந்த தெய்வ வாழ்க்கைக்கு உட்படுத்துவது சமயமேயாம். துன்பம் நிறைந்த வாழ்க்கையி*

* **18.5.1951** அன்று தருமபுர ஆதீனத் திருநெறிய தெய்வத்தமிழ் மாநாட்டுத் திருமுறைத் திருநாளில் அடிகளார் ஆற்றிய தலைமை உரை.

லிருந்து மக்களை இன்ப வாழ்க்கைக்கு இழுத்துச் செல்வதும் சமயமேயாம். சமுதாய உணர்வுடையோர்களாக மக்களை ஆக்குவதும் சமயமேயாம். சமய வாழ்க்கையின் இன்றியமை யாமையை இந்த நாட்டுப் புலவர் பெருமக்களும், ஏனைய நாட்டு அறிவியற் கலைஞர்களும், மிக நன்றாக வற்புறத்தி உள்ளனர். உலகப் பொது மறை தந்த வள்ளுவர், தமது அருமை நூலில் சமய வாழ்க்கையின் இன்றியமையாமையைத் தெள்ளத் தெளியப் பேசியுள்ளார். சிறப்பாகச் சமயச் சார்புடைய வாழ்க்கையே தெளிந்த வாழ்க்கை நிலை என்று கூறிச் சமய வாழ்க்கையின் பெருமையைப் பாராட்டுகின்றார். பழந்தமிழ்ப் பெருநூலாகிய தொல்காப்பியம் சமய வாழ்க்கையை, "அறவெற்றி" என்று பேசுகின்றது. எனவே சமய வாழ்க்கை அன்பு மலிந்த-அருள் நிறைந்த-அறம் தழுவிய வாழ்க்கை என்பது விளங்குகின்றது. சமயச் சார்பற்ற வாழ்க்கை வளமற்றது, பயனற்றது என்று அறிவுடைப் பெரியோர்கள் சொல்லுகின்றனர்.

இந்த நூற்றாண்டின் ஷேக்ஸ்பியர் என்று போற்றப் பெற்ற ஜார்ஜ் பெர்னாட்ஷா, சமயச் சார்பற்ற மனிதர்களை, "Men without religion or moral cowards and mostly phycial cowards too"- என்று இழித்துப் பேசுகின்றார். எனவே வாழ்க்கையை வகைப்படுத்த வளம்படுத்த- அருட்சார் புடையதாக்கச் சமய வாழ்க்கை தேவையான தொன்றேயாம்.

## தலையாய சைவத் திருநெறி

இவ்வுலகிலே, மக்கள் என்று அறிவும் உணர்வும், உடையவர்கள் ஆனார்களோ அன்றே சமயமும் தோன்றி வளர்ந்து வளம் பெற்றது. அங்ஙனம், இவ்வுலகமெங்கும் சமயக் கொள்கைகள், அறிவு-உணர்வு நிலைகளுக்கேற்பத் தோன்றி வளர்ந்தன. அங்ஙனம், தமிழகத்திலே தோன்றி வளர்ந்த சமயம் சைவசித்தாந்தத் திருநெறி. இந்த நெறி காலத்தொடுபடாத பழமையை உடையது. மேனாட்டு வரலாற்றறிஞர்களின் அறிவுக்குக் கூட அது மிகப் பழையதொரு நெறியாக-உலகப் பொது நெறியாகக் காட்சி

அளிக்கின்றது. சர் ஜான் மார்ஷல் (Sir join Morshal) என்ற பேரறிஞர் "Saivism has a history going back to chalcolithic age or perhaps even further still and it thus takes its place as the most ancient living faith in the world" என்று சைவத்தின் பழமையைப் பேசுகின்றார். சைவம் பழமையால் மட்டுமன்றிக் கொள்கையாலும் மிக உயர்ந்து விளங்குகிறது. சித்தாந்தம் என்ற சொல்லுக்கே முடிந்த முடிபு என்பதுதான் பொருள். ஏனைய சமயங்களின் கொள்கைகளைத் தன்னகத்தே கொண்டு அவற்றினும் மிக்கு விளங்குகின்ற பெருமையை உடையது சைவம். அதனாலன்றோ, "சைவத்தின் மேற் சமயம் வேறிலை" என்று பாராட்டிப் பேசப் பெற்றுள்ளது. "சித்தாந்தமே சித்தாந்தம்; அவைக்கு வேறானவை பூர்வபட்சங்கள்" என்பது இரத்தினத் திரயம். "அந்தம் வேதாந்தம்; அந்த தரம் சித்தாந்தம்; ஆகலின், அதனைப் பெற்றாரது பெருமை கூறுவார். சிவமென்னும் அந்தர என்றார்" என்பது சிவஞானபாடியம். நம்பிக்கைக்கும் நல்வாழ்க்கைக்கும் எடுத்துக்காட்டாக-இந்தியர் நினைவின் சீர்மைக்குச் சான்றாக-உயர்தர வாழ்க்கைக்கு எல்லையாக, அணிபெற அமைந்த சமயம், சைவசித்தாந்தச் சமயமேயாம், என்பது உலகறிந்த முடிபு.

## முப்பொருள் நிலை

சைவத் திருநெறி, உலகு, உயிர், கடவுள் என்ற முப்பொருள் உண்மையைத் தெளிவாக விளக்குகின்றது. இம் முப்பொருள் நிலையின் ஆய்வுணர்ச்சி, தொல்காப்பியத் திலேயே அமைந்திருக்கின்றது.

"மக்கள் தாமே ஆறறி வுயிரே"

"மாயோன் மேய காடுறை உலகமும்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே"

என வரும் தொல்காப்பிய நூற்பாக்கள், முப்பொருள் தன்மையைத் தெளிவாக விளக்குகின்றன. உயிர் பாச சம்பந்தப்பட்ட உலகினைச் சார்ந்திருப்பதால் உய்ய

வேண்டிய நிலையில் இருக்கிறது. உயிர் உய்வை அடையவுங் கூடும். உயிருக்கு உய்தியைத் தரக்கூடியவன் வரம்பி லாற்றலும், இன்பமும் உடைய கடவுளேயாவான் என்பதும் சைவத்தின் கொள்கை. அங்ஙனம் உயிர் உய்வதற்குரிய வழிகளை—சாதனங்களைச் சைவம், மிகத் தெளிவாகப் பேசுகின்றது. சைவத்தின் சாதனங்கள் அருமையில் எளிமை யும், அருள்பயப்பதில் சிறப்பும் கொண்டு, விளங்குகின்றன.

## சைவமும் தமிழும்

சைவம் உயிர்; தமிழ் உடல். தமிழின் உள்ளீடு சைவமேயாம். சைவத் தமிழென்றே அறிஞர்கள் பேசுவர். சைவத்தை விளக்குகின்ற தமிழ் மறைகளும், சைவம் காட்டுகின்ற இறை இன்பத்தைத் துய்க்க—துணையாகத் தமிழ் மந்திரங்களும் இந்த நாட்டிலே பண்டே இருந்தன என்பதை மறுக்கவோ மறக்கவோ முடியாது.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப"

என்ற தொல்காப்பிய நூற்பாவும், அதற்கு, "தானே என்று பிரித்துக் காட்டியது தமிழ் மந்திரம் என்பது அறிவித்தற்கு" என்று பேராசிரியர் எழுதிய உரையும், தமிழின் மறைகளும் மந்திரங்களும் இருந்தன என்பதை விளக்குவனவாம்.

"புரையில் பனுவல் நால்வேதம்" எனவும், "நான் மறை முனிவர்" எனவும், "நான்மறை முதல்வர்" எனவும் வரும் புறநானூற்றுப் பகுதிகளும், தமிழ் மறைகளைக் குறிப்பன வேயாம். தேவார திருவாசகங்களிலும் "நான்மறை" "நால்வேதம்" எனப் பேசப்படுவனவும், தமிழ் மறைகளேயாம். அவைகள், "பண்பொலி நான் மறை', என்றும், "முத்தமிழ் நான் மறை" என்றும் தமிழ் மறைகளைப் பேசுகின்றன. "கொழி தமிழ் மறைப்பாடல்" என்பது மாதவச் சிவஞான முனிவர் வாக்கு.

அத்தமிழ் மறைகள், குமரி கடல் கொள்ளப் பட்ட காலத்து மறைத்தனவாதல் வேண்டும். அங்ஙனம் மறைந்த

தமிழ் மறைகளின் கருத்துக்களை எடுத்துரைக்கவே சைவ ஆசிரியன்மார்கள் நால்வர் இவ்வுலகில் அவதரித்து அருட்செம்பாடல்கள் அருளினர். ஆதலான். அப்பாடல் களாய வோர திருவாசகங்களும், அவற்றின் வழிப்பட்ட ஏனைய திருமுறைகளும், தமிழ் மறை எனப்படும். இக்கருத்துப் பற்றி அன்றோ, தேவாரங்களை, திருமுறைகண்ட புராண ஆசிரியர், "இது என்றும் உளதாம்" என்று குறித்தனர்.

## திருமுறைகளின் பெருமை

சைவப் பத்தியிற் கனிந்த அருட்பெருமக்களின் அருண்மொழிகளே, திருமுறைகள். திருவருளே கண்ணாகக் கொண்டு, வாழ்ந்த திருவருட் செல்வர்களின், உள்ளத்தில் எழுந்த உயர் ஞான மொழிகளே திருமுறைகள். அவை இறைவனது அருள் மொழிகள் என்றே கருதப் பெறுகின்றன. சித்தம் சிவமேயாய செம்மனச் சான்றோர்கள் சிவனோடொப்பர். அவ்ர்களது கரணங்களெல்லாம், சிவ கரணங்கள். இக்கருத்தினை,

> "பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
> காலனைஅன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
> மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தங்
> கரணம்போல் அல்லாமை காண்",

என்ற திருக்களிற்றுப்பாடியார் வலியுறுத்துகின்றது. பேய்க் கோட்பட்டான் செயல்கள் யாவும் பேயின் செயலாகவே இருத்தல்போல, சிவமேயாய நாயன்மார்களது செயல்களும் சிவன் செயல்களேயாம். எனவே, திருமுறைகள் இறை வனுடைய வாக்குகளே என்பதை,

> "எனதுரை தனதுரையாக நீறணிந் தேறுகந் தேறிய
> நிமலன்"
> "தன்னியல் பில்லார் சண்பையர்கோன் சீர்சம்பந்தன்"

எனவும் வரும் ஞானசம்பந்தருடைய தேவாரங்கள் வலியுறுத்துவனவாம். அவைகள் உண்மை ஞானத்தை உணர்த்துவன. உள்குவார் உள்ளத்தில் உவட்டாமல் இனித்து

உருக்கும் தன்மையை உடையன. அருமையில் எளிய அழகுடையவனவாக அமைந்து அருட்டிறம் விளைவிப்பன. இனிய எளிய சொன்னடையில் அமையப் பெற்றன. தண்ணென்ற ஒழுக்கில் தலைசிறந்து விளங்குவன. இம்மையும்-மறுமையும் இன்பம் பயப்பன. நல்ல புத்தங்களைப் பற்றி ஜான் மில்டன் பேசுகின்ற பொழுது, "A good book is the precious life blood of a masterspirit emblamed and treasured upon purpose to a life beyond life" என்று குறிக்கின்றார்.

இங்ஙனம் வாழ்க்கையை உயர்ந்த முறையில் வளம் படுத்த - அருள் நெறிப்படுத்த - இம்மையோடன்றி மறுமை யிலும் பயன்தரத் தக்கதாக அமைந்துள்ளவை திருமுறைகள் என்பது அநுபவ உலகறிந்த உண்மை.

## திருமுறைகளும் பிற்காலத்துப் புலவர்களும்

தேவாரம் முதலிய திருமுறைகளின் பெருமையையும், பயனையும், பிற்காலப் புலவர் பெருமக்கள் மிக நன்றாகப் பேசியுள்ளனர். திருமுறைகளைக் கண்டு முறைப்படுத்தி, திருமுறை கண்ட வரலாற்றையுஞ் செய்த நம்பியாண்டார் நம்பிகள் திருமுறைகளின் உயர்பண்பை மிக நன்றாக விளக்கியுள்ளார்கள். ஞான சம்பந்தரது ஞானத் தமிழாகிய நாவாயைத் துணையாகக் கொண்டு பிறவிப் பெருங்கடலை நீந்த முடியும் என்று பேசுகின்றார்.

> "பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
> துறவியெனுந் தோற்றோணி கண்டீர்-நிறைஉலகிற்
> பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
> தன்மாலை ஞானத் தமிழ்"

என்பது பாடல். மக்கள் தாம் உய்வதற்கு வழிகாட்டும் குருவாகத் தேவாரத் திருமுறைகளைக் கொள்ளலாம் என்றும், அங்ஙனம் கொண்டொழுகினால், சிவனது, அடிகளைச் சூடும் பேறுபெற்று, பிறவியற்று, பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவர் என்றும் நம்பிகள் கூறுகின்றார்.

"உழவாரப்படை கையிலுடையான் வைத்தனதமிழ்
குருவாகக் கொடுசிவனடி சூடத்திரிபவர்
குறுகார்புக் கிடர்படுகுடர் யோனிக்குழியிலே"

என்பது அன்னார் உரை. ஞானத் தவமுனியாக விளங்கி அருண்ஞானப் பாக்களை அருளிய தாயுமான அடிகள் —தேவாரத் திருமுறைகளின் பெருமையை-இனிமைப் பண்பை-இறைவன் உகந்து கேட்கும் இயல்பை மிக அழகாகப் பேசியுள்ளார்கள்.

"தேவரெலாந் தொழச் சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கே
மூடனே னியம்பிய சொன்முற்று மோதான்"

என்பது அடிகளது அருமைப்பாடல்

## வடமொழி மறைளும் தமிழ் மறைகளும்

வடமொழி மறைகள் இவ்வுலகின் மிகப் பழைய நூல்களாகும். மக்களிடையே சமய வாழ்க்கை தொடங்கப் பெற்ற காலத்தி லெழுந்தவை, இருக்கு முதலிய மறைகள். இம்மறைகள் சைவச் சார்புடையன. சைவத்தின் கடவுளாம் சிவபெருமானுடைய பெருமையைப் பலபடக் கூறுவன. இந்த நாட்டில் எழுந்த ஏனைய நூல்களெல்லாம் வேதத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தனவேயாம். சிறப்பாகச் சைவ சாத்திரங்களும், திருமுறைகளும் வேதங்களிற் பேசப்பட்டுள்ள செய்திகளை மிகத் தெளிவாக விளக்கு கின்றன. இதனை "வேதம் பசு" என்று வருகின்ற பழம் பாடல் விளக்குகின்றது. திருமுறைகளும், வேதங்களும் பல இடங்களில் ஒரே கருத்தைப் பேசுகின்ற முறையில் ஒத்துள்ளன. இந்த நாட்டில் வேதங்கள் முதல், பிற மதச் சார்புடையவையாகக் கருதப் பெறுகின்ற பகவத் கீதை, பாரதம், இராமாயணம் முதலிய அனைத்தும் சிவபெருமான் முழுமுதற் தலைவன் என்பதையே பேசுகின்றன. ஊழித் தலைவனாகச் சிவபெருமான் விளங்குகின்றான் என்பதை,

"பெருங்கடன் முடிப் பிரளயங்கொண்டு பரமனும்போ
யிருங்கடன் மூடியிறக்கு மிறந்தான் களேபரமுங்
கருங்கடல் வண்ணன்களே பரமுங்கொண்டு
கங்காளராய்
வருங்கடன் மீளநின்றெம் மிறைநல்
வீணை வாசிக்குமே"

என்று நாவுக்கரசர் பேசுகின்றார். இக்கருத்தினை, இருக்கு வேதச் சொற்றொடர்கள் விளக்குகின்றன. இது போகப் பல கோடியான கருத்தொப்புமைகள் இருப்பினும் விரிவஞ்சி விடுகின்றனம்.

## அருண்மொழிகளுள் சில

திருமுறைகள் சைவப் பக்தியைப் பற்றிப் பேசுகின்றன. அன்பே அன்பே என்று அழுது அரற்றுகின்ற அன்பு நிலையைக் காட்டுகின்றன. சைவ சாத்திரங்களில் பேசப்படுகின்ற நெறிமுறைகளை இலக்கியம் போலிருந்து விளக்குவன. உயிர்களைத் துன்பத் தொடக்குக் குட்படுத்துவன ஐம்புலன்களே. அழிவிலின்ப நுகர்வுக்குத் தடையா யிருப்பனவும் அவையேயாம். அதனாலன்றோ "வஞ்சப் புலனைந்து", "ஐம்புலக் களிறு" என்றெல்லாம் அறிஞர்கள் இழித்துப் பேசுகின்றனர். இந்த ஐம்புல நுகர்ச்சியினை அடக்கி ஆளுதலைப் "பேராண்மை" என்று பாராட்டுகின்றார் வள்ளுவர். ஞான உணர்வு நிகழ வொட்டாத வண்ணம் தடைசெய்வன இவ்வைம்புலன்கள். ஒரோ வழி உறுதியை நாடுகின்ற நிலை உள்ளத்திற்கு வரும் பொழுது, இப்புலன்களின் ஆற்றல் மிக்கு நின்று, அந்த ஞான உணர்ச்சியினை அடக்குகின்றது என்று அநுபவ உள்ளத்த வர்கள் பேசுகின்றனர். இறைவனே தாயும் தந்தையும். அவனே எல்லா உயிர்களுக்கும் இன்பம் செய்பவன் என்றெல்லாம் கருதி, அன்பு செய்ய எண்ணுகின்றது உள்ளம். ஆனால் உடலில் வாழும் ஐவர் ஒன்றி இருந்து நினைக்கவொட்டாது இன்னல் விளைவிக்கின்றனரே என்று அஞ்சுகின்றேன் என்று ஞானசம்பந்தர் பாடுகின்றார்.

*"தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்*
*ஆயுநின் பாலன்பு செய்வானா தரிக்கின்ற துள்ளம்*
*ஆயமாய காயந்தன் னுளைவர்நின் றொன்ற*
*லொட்டார்*
*மாயமேயென் றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே!"*

என்பது பாடல். இக்கருத்தினையே அப்பரடிகளும்,

*"மெய்யுளே விளக்கை ஏற்றி வேண்டளவு*
*யரத்தூண்டி*
*உய்வதோர் உபாயம்பற்றி உகக்கின்றேன் உகவா*
*வண்ணம்*
*ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர்சாலச்*
*செய்வதொன் றறியமாட்டேன் திருப்புக லூரனீரே"*

என்பர். இந்த ஐம்புலச் சேட்டைகள் அடியோடு அடங்குதற்கும், உண்மை ஞான உணர்வு தடையின்றி நிகழ்ந்து, திருவருளின்பத்தைத் துய்த்தற்கும் சாதனமா யிருப்பது சிவனடியாருடைய இணக்கமும் வழிபாடும் என்பது சைவத்தின் சிறந்த கொள்கை. சிவபத்தர்களுக்கு அன்பு செய்து, மனம் சொல் செய்கைகளான் அவர்வழி நிற்பாருக்கு உலகியல் உணர்வு மாறிச் சிவாநுபூதியுணர்வே மேம்பட்டு நிகழும். அஃது அங்ஙனம் நிகழவே, உடலுள்ள அளவும் நிற்பனவாய பிராரத்த வினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின், அவை வாதிக்கமாட்டா; எனவே வீட்டுணர்வை நிலைநிறுத்துவது சிவனடியாருடைய வழிபாடேயாம். அது மாத்திரமன்றிச் சிவனடியா ரல்லாதாருடைய இணக்கம் அறவே நீங்கவும் வேண்டும். இக்கருத்தினை ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனார்,

*"மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்*
*சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை–யறப்பித்துப்*
*பத்த ரினத்தாய்ப்பர னுணர்வினா லுணரு*
*மெய்த்தவரை மேவா வினை"*

என்று கூறி விளக்குகின்றார். இக்கருத்தினை அப்பரடிகள்,

*"உரைதளர்க் துடலார் நடுங்காமுனம்*
*நரைவிடை யுடையா னிடம் நல்லமே*
*பரவுமின் பணிமின் பணிவாரோடே*
*விரவுமின் விரவாரை விடுமினே"*

என்று அழகுறக் கூறுகின்றார். சிவனடியார்களை வழி படாதவர்கள் என்னுடையரேனும் மதித்தற்குரியரல்லர் என்பது நக்கீரர் கருத்து.

*"பிறப்புடையர் கற்றோர் பெருஞ்செல்வர் மற்றும்*
*சிறப்புடையர் ஆனாலுஞ் சீசீ—இறப்பில்*
*கடியார் நறுஞ்சோலைக் காளத்தி ஆள்வார்*
*அடியாரைப் பேணா தவர்"*

என்பது சுக்கிரருடைய நற்றமிழ்ப் பாடல். இன்னோ ரன்ன பல அரிய கருத்துக்களைத் திருமுறைகளில் கண்டு மகிழலாம்.

## திருமுறைகளின் பயன்

திருமுறைகளின் பயனை, திருமுறைகள் எழுந்த வரலாற்றைக் கொண்டே உணர முடிகின்றது. திருமுறைகள் பல சந்தர்ப்பங்களில் இன்னல்களை நீக்கி இன்பந்தர எழுந்தனவாம். அன்று அப்பாடல்கள் செய்த நன்மைகளை, இன்றும் உணர்ந்து ஓதுகின்றவர்களுக்குக் கொடுத்தே வருகின்றன. அஃதோடன்றி, திருமுறைகளின் பயனை சிறப்பாகத் தேவாரங்களின் பயனை அவற்றை அருளிய நாயன்மார்களே அறுதியிட்டு உரைத்துள்ளனர். சிவஞானச் செம்மலாராகிய ஞானசம்பந்தப் பெருந்தகையாரது அருட்பாக்களைப் பயில்வோர், நோயினின்று விடுபெறுவர். சிவகதிப் பெருவாழ்வும் பெறுவர் என்பதை,

*"ஞான சம்பந்தன் செந்தமிழ்*
*பாட நோய்பிணி பாறுமே"*

– எனவும்,

*"கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன் சம்பந்தன்சொல்*
*மடியாது சொல்ல வல்லார்க்கு இல்லையாம் மறுபிறப்பே"*

எனவும்,

*“அந்திவண்ணன், தன்னை அழகார் ஞானசம்பந்தன்சொல்*
*சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதிசேர்வரே”*

எனவும், வரும் ஞானசம்பந்தரது அருண் மொழிகள் விளக்குகின்றன. ஞானசம்பந்தரது அருட்பாக்களைப் பயிலுகின்றவர்கள் இம்மை வாழ்வுக்குரிய அனைத்தும் பெற்றுத் திருவருள் இன்பமும் பெறுவர் என்பதை,

*“சினமலிகரியுரி செய்தசிவனுறை தருதிருமிழலையைமிகு*
*தனமனச்சிரபுர நகரிறை தமிழ்விரகன துரை யொருபதும்*
*மனமகிழ்வொடு பயில்பவ ரெழின்மலர் மகள்கலை*
*மகள்சயமகள்*
*இனமலிபுகழ் மகள் இசைதர இருநிலனிடை இனிதமர்வரே”*

என்ற அருட்பாடல் வலியுறுத்துகின்றது. திருமுறைப் பாக்களை விரும்பிப் பயில்பவர்கள் மக்களின் மேலாயவர் என்பதை ஆளுடைய நம்பிகள்,

*“கரந்தையும் வன்னியும் மத்தமும் கூவிளம்*
*பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி அம்மானை*
*நிரம்பிய ஊரன் உரைத்தன பத்திவை*
*விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே”*

என்றருளி விளக்கியுள்ளார்கள்.

## போற்ற வேண்டிய கடமைப்பாடு

இத்தகு திருமுறைகளைப் போற்றிக் காத்துப் பயின்று இன்பப் பெருவாழ்வைப் பெறவேண்டுவது சைவத் தமிழ் மக்களது கடமைப்பாடு. அங்ஙனம் போற்றுவதால் நமது நாட்டு அருட்செல்வத்தைக் காப்பாற்றிய பெருமையை அடைவதோடன்றி, தனிப்பட்ட வாழ்க்கையிலும் பெரிய தொரு பயனையும் முன்னேற்றத்தையும் அடைகின்றோம்.

உயர்ந்த வாழ்க்கையை உடையராய் இருந்த சான்றோர் களது வாழ்க்கையையும் அவர்களது அருமைத் திருவாக்கு

களையும் பயில்வதனால் நாம் உயர்கின்றோம். "சான்றோர் தம் வாழ்க்கை நிலை, நாமும் நம்முடைய வாழ்க்கை நிலையை இறப்ப உயர்ந்ததாகச் செய்து கொள்ளுதல் கூடும் என்பதை நினைப்பூட்டுகின்றது" எனவும், "வாழ்க்கையில் வழியற்றுக் கலங்கும் மக்களை, அது நல்வழியிற் செலுத்தும் இயல்புடையது" எனவும் வரும் Longfellow என்ற மேனாட்டுப் புலவரின் பொருளுரைகள் சிந்தித்துணரத் தக்கன. அந்த அடிப்படையில் திருமுறை ஆசிரியப் பெரு மக்களது வாழ்க்கை வரலாறுகளும், அவர்களது அருண் மொழிகளும் மக்களை உயர்த்துவனவாம்.

மக்களை அறத்துறையில் ஆற்றுப்படுத்தி அருள்நெறி நின்றொழுகச் செய்வனவாம் இத்தகு திருமறைகளை நாம் போற்றிப் பாராட்டாது வாளா இருந்து மக்களது மனத்திலே இடம் பெறாத நிலைக்கு விடுவோமானால் நாம் அருளறத்தையே சிதைத்தவர்கள் ஆவோம். திருமுறைகளின் பயிற்சி மக்களிடையே பெருகி அமைந்து, அதனாலாய அற உணர்ச்சியும், அருளுணர்ச்சியும் இல்லையானால் இவ்வுலகில் திருமறைகளுக்கு எந்த நிலையைச் சொல்வது? பெரும்பான்மையும் மறைந்தது போலத்தானே! ஜான் மில்டன் என்ற பெரும்புலவர், நல்ல புத்தகங்களை அழிப்பது நன்மையையே அழிப்பதாகும்; அச்செயல் நல்ல மனிதர்களைக் கொல்வதைவிடக் கொடியதொரு செயலு மாம் என்று கூறுகின்றார். "As good almost kill a man as kill a good book; who kills a man kills a responsible creature, god's image; but he who destroys a good book kills reason itself" என்பது அன்னாரின் தெருளுரை. எனவே திருமுறைகளைப் போற்றிப் பரப்புகின்ற அருட் பணியை நாம் செய்யவில்லையானால் அருட்பெருமக்கள் கண்டு, நால்வர்களின் நல்லருள் உணர்ச்சியால் வளர்க்கப் பெற்ற அருளறத்தை அழித்தவர் களாவோம். அத்தகையதொரு கொடிய தீங்கு நம்மை வந்து சாராவண்ணம் நாமே காத்துக்கொள்வோமாக.

## தொகுப்புரை

இன்று உங்கள் நினைவிற்கு கொண்டு வந்த கருத்துக்களைத் தொகுத்துக் கூறி அமைய விரும்புகின்றோம். தமிழகத்தின் தனி நெறி பெருநெறி திருநெறி சைவ சித்தாந்தத் திருநெறியேயாம். அது முடிந்த முடிபாகக் கருத்துலகக்குக் காட்சி அளிக்கின்றது. ஏனைய சமயங்க்ளும் மக்கள் நலம் கருதுகின்ற இயக்கங்களும், மக்களை மக்களாகவே கருதி அன்பு செய் என்று சொல்ல, சைவம், மக்களை-மனநலம் சிறந்த மக்களை-அருளறம் பூண்ட பெருமக்களைக் கடவுளாகவே எண்ணி அன்பு செய் என்று சொல்கிறது. ஆண்டவன் அருளற நெறிவழி நிற்பவர்கள் அரனோ டொப்பர். அப்பெருமக்களைச் சாருவதனால்-வழிபடுவ தனால் பல்வளமுற்று அழிவிலின்பத்தையும் பெற்று வாழ முடியும் என்பது சைவத்தின் கொள்கை. தேவாரத் திருமுறைகளை உள்ளன்புடன் ஓதி அனுபவிப்பவர்கள் ஓதக் கேட்பவர்கள் இம்மை மறுமை இன்பங்களைப் பெற்று இனிது வாழ்வார்கள் என்பன போலச் சில செய்திகளைச் சிந்தித்தோம்.

## முடிப்புரை

மெய்யன்புடையீர், தமிழகத்தின் தனிச் சொத்து தெய்வத் திருமுறைகள். திருமுறைகள் உணர்த்தும் அருள றத்தை மக்களிடையே பரப்புதல் பெரும் பணியாகும் -இன்றைய சூழ்நிலைக்குத் தேவையான தொரு பணியுமாகும். சைவத் தமிழன்பர்கள் ஒவ்வொருவரும் இந்தப் பணியைச் செய்யக் கடமைப்பட்டுள்ளார்கள். கடமையை உணர்ந்து பணியில் இறங்குவோமாக. அத்தகையதொரு பணியை அகனமர்ந்த அருளுணர்வுடன் இயன்ற போதெல்லாம் செய்துவரும் அருட்குருமூர்த்திகளின் அடி இணைகளுக்கு உள்ளந் தோய்ந்த-நன்றி கலந்த வணக்கத்தை உரிய தாக்குகின்றோம்.

**வளர்க சைவம்!**

**மல்குக திருமுறை வளம்!!**

# 11

# சேக்கிழார் காட்டும் சமுதாயம்

## தோற்றுவாய்

திருநாகேச்சுரம், சேக்கிழார் ஈடுபாட்டுடன் வணங்கிய திருத்தலம். சேக்கிழார் தமிழகத்தின் தவப் பயனாய்த் தோன்றியவர். தமிழக வரலாறும் நாகரிகமும் தலைமயங்கிக் கிடந்த பொழுது சேக்கிழார், காலத்தின் மாமருந்தெனத் தோன்றித் தமிழ் நாகரிகத்திற்கு அரண் அமைத்தார். சான்றோரை ஈன்று புறந்தந்து புகழ் பெற்ற தொண்டை நாட்டில் குன்றத்துரில் குணத்தில் மிக்காராகிய சேக்கிழார் தோன்றினார். வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து வழிகாட்டிய பெரியோர் வரலாற்றை மாகாப்பியமாகச் செய்தருளினார். சுந்தரமூர்த்தி நாயனார் சில சொற்களில் திருத்தொண்டத் தொகை மூலம் அறிமுகப்படுத்திய அடியார்களின் வரலாற்றை, வரலாறாக விரித்து எழுதிய பெருமைக்குரியவர் சேக்கிழார்.

## நூலின் சிறப்பு

பெரியபுராணம் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப் பெற்றுள்ளது; நாள்தோறும் ஓதுதற்குரிய

உயர்மறையெனத் திகழ்கிறது. இதனை நாள்தோறும் ஓதி உணர்ந்தால் தீவினை அகலும்-அன்பு நனி சிறந்து ஊற்றெடுக்கும்-உணர்வு சிறக்கும்-ஞானம் கைகூடும்-இன்ப அன்பினை எய்தி இன்புறலாம்.

பெரியபுராணம் அன்பினில் விளைந்த காப்பியம் -ஆற்றல்மிக்க அன்பினை அளிக்கும் காப்பியம்-வரலாற்று உண்மைகளைக் கூறுவதால் வரலாற்றுக் காப்பியம்-பெருங் காப்பியமெனச் சிறந்து விளங்குவதுமாகும்.

பெரியபுராணம், தொல்காப்பியம், திருக்குறள் முதலிய நூல்களையும் அக இலக்கிய இலக்கணங்களையும் திருமுறை களையும் போற்றித் தழுவிய காலத்தில் தேவையாகிய விரிவையும் பெற்றுச் சிறப்புற்றமைந்திருக்கிறது. பழமையான வரலாறு என்ற பொருளில் "புராணம்" என்ற பெயரைப் பெரியபுராணம் பெற்றிருந்தாலும், அது மற்றைய புராணங் களின் வரிசையில் வைத்து எண்ணத்தக்கதன்று; திருத் தொண்டத் தொகை, திருத் தொண்டர் திருவந்தாதி ஆகியவற்றைச் சார்ந்து தோன்றிய நூலெனினும் பெரிய புராணம், முதல் நூலுக்குரிய தகுதியனைத்தும் பெற்று விளங்குகிறது; உரை விளக்கம் தரும் நூலாகவும் விளங்குகிறது. மூவர் அருளிச் செய்த திருமுறைப் பாடல்களுக்குச் சேக்கிழார் செய்துள்ள உரை விளக்கம் அருமைப் பாடுடையது.

சேக்கிழார் செய்த நூல் பத்திக் காப்பியம்-ஆனாலும் உணர்ச்சிநிலைப் பக்திக் காப்பியமல்ல-மெய்யறிவு நூல்-ஞானநூல். அதனால், சமுதாயத்தை மூடிக்கிடந்த மூடப் பழக்கங்கள், வாழ்க்கைக்கு ஒவ்வாத வழக்கங்கள் ஆகியவை களை அகற்றும் புதுமை நூல். ஏழாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள தமிழக வரலாற்றினை நமக்குத் தரும் வரலாற்று நூல். அதற்கு முந்திய பழங்காலச் செய்திகளும் உண்டு. வரலாறு என்றால்,

காலம்–போர்களம் முதலியனவற்றைத் தொகுத்துக் கூறும் வரலாறல்ல; தமிழகத்தின் கருத்து, உணர்வு, சமுதாயம் வளர்ந்து வாழ்ந்த இயல்பு ஆகியவற்றை அறிந்து கொள்வதற்குரிய காப்பியமாகப் பெரிய புராணம் திகழ்கிறது.

## நூல் தோன்றிய களம்

தமிழ், காலத்தால் மூத்தமொழி; கருத்தாலும் மூத்து வளர்ந்த மொழி; தமிழ், இலக்கிய வளம்பெற்ற இனிய மொழி; இலக்கணத் திட்டம் வாய்ந்த மொழி; தமிழர்கள் வாழ்வியலிலும், தத்துவ இயலிலும், சமய வியலிலும் துறைபோகி வளர்ந்தவர்கள்; தனித்தன்மையுடைய தமிழர் நாகரிகம் பெருமிதமுடையது. அந்த நாகரிகம், யாதொரு குறிக்கோளும் பற்றுக்கோடு மில்லாத நாடோடிகளால் ஊடுருவப் பெற்று உரு மாற்றங்கள் அடைந்ததுண்டு. ஆயினும் பழமையின் பொலிவும் புதுமையின் துடிப்பும் இன்றும் தமிழ் நாகரிகத்திற்கு இருக்கவே செய்கிறது. அஃது என்றும் இருக்கும். 'உலகெலாம்' என்று காப்பியத்தைத் தொடங்கிச் செய்த சேக்கிழார், உலகைத் தழுவ நினைத்தார். அஃதியற்கை. அதுதான் நாகரிகமுமாகும். ஆனாலும் தனித்தன்மையை இழக்கவோ, நாகரிகக் கலப்படக் கொடுமைக்கு ஆளாகவோ சேக்கிழார் விரும்பவில்லை. சேக்கிழார் தமிழ் நெஞ்சினர்; தமிழ் இன்பத்தில் துய்த்துக் களித்து அக்களிப்பைப் காப்பியத்தில் பொழிந்துள்ளார். சேக்கிழார், பாண்டிய நாட்டில் வீசும் தென்றல் தென்தமிழை நினைவூட்டுவதாக மூர்த்தி நாயனார் வரலாற்றில் பாடுகின்றார். தென்றல் உடல் வெப்பத்தைத் தணிக்கும்; தென்தமிழ் உயிர் வெப்பத்தைத் தணிக்கும்; அதனால் தமிழையும் தென்றலையும் ஒரு சேர எண்ணினார்.

"மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்ற சந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த

*மெய்வைத்த காலும் தரும், ஞாலம் அளந்த மேன்மைத்*
*தெய்வத் தமிழும் தரும் செவ்வி மணஞ்செ யீரம்"*

என்பது சேக்கிழார் பாடல். இப் பாடலில் "ஞால மளந்த மேன்மை தெய்வத் தமிழ்" என்று தமிழின் பெருமையைச் சிந்தையினிக்கச் செயலினிக்க அருளிச் செய்துள்ளார். உயிர்களுக்குச் சால்பினை வழங்குவது தமிழ் என்றும், அதுவும் முத்தமிழ் என்றும் அத்தமிழ் தங்கிய மூதூர் மதுரையென்றும் சேக்கிழார் சிறப்பித்துப் பாடுகிறார். "சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய அங்கண் மூதூர்" என்பது சேக்கிழார் வாக்கு. ஆலவாயில் எழுந்தருளிய அழகமர் சொக்கன், தமிழுக்கு அகத்திணைப் பொருள் நூல் தந்தனன் என்பது வரலாறு. அந்த வரலாற்றை நினைந்து சேக்கிழார் மதுரையைப் புகழ்ந்து பாடுகிறார். ஆலவாயில் உறைகின்ற அப்பன், "கூடலின் ஆய்ந்த ஒண் தீந்தமிழின் துறை வாய்"த் திளைத்தவன், மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இறைவன் இருந்து ஆராய்ந்தமையை எண்ணி எண்ணி மகிழ்கிறார் சேக்கிழார். அகத்திணை இலக்கணத்தை அகன்ற தமிழகத்திற்குத் தந்து அவ்வகனைந்திணை ஒழுக்கத்தின் வாயிலாகவே செம்மைப் பொருளும் தேர்ந்திடச் செய்த அருளை வியந்து பாராட்டுகின்றார்.

*"மும்மைப் புவனங்களின் மிக்கதன் றேஅம் மூதூர்*
*மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்*
*செம்மைப் பொருளும் தருவார் திருவால வாயில்*
*எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்க மிருந்த தென்றால்"*

என்பது சேக்கிழார் பாடல்.

## தமிழ் வழக்கு

திருஞானசம்பந்தரின் வரலாற்றில் சேக்கிழார், தமது நெஞ்சத்தைக் காட்டுகிறார். "செழுந்தமிழ் வழக்கு அயல் வழக்கின் துறை வெல்ல வேண்டும்" என்பதே சேக்கிழாரின்

குறிக்கோள். "திசையனைத்தின் பெருமையெலாம் தென்திசையே வென்றேற வேண்டும்" என்பது அவர்தம் ஆர்வம். "செழுந் தமிழ் வழக்கு" என்பது சிந்துவெளி நாகரிகக் காலந்தொட்டுச் சிறந்து விளக்கமுற வளர்ந்திருக்கின்ற சித்தாந்தச் செந்நெறியே யாகும். இன்றும் சித்தாந்தச் செந்நெறிக்கு ஈடான சமயம் மனித குலம் கொண்டொழுகும் சமய நெறிகளுக்குள் தோன்றவில்லை.

உலகில் புகழ்பெற்ற சமயங்களில்கூட, பகுத்தறிவுத் திறனாய்வுக் களத்தில் நின்று வினாக்கள் கேட்க முடியும்-விவாதிக்க முடியும். சித்தாந்தச் செந்நெறியைப் பொறுத்தவரையில் வினாத் தொடுக்கும் எல்லைகளைக் கடந்து சிந்தனை முகட்டின் எல்லையில் முடிந்த முடிபாகத் திகழ்கிறது. கடவுள் நம்மைப் படைத்தான் என்று சொல்லும் சமய நெறிகளும், 'நாமேதான் கடவுள்' என்றும் கூறும் சமய நெறிகளும், பகுத்தறிவின் முன்னே நிற்க இயலா.

"உயிர், கடவுள் இரண்டும் இருவேறு உள் பொருள்கள்-என்று முள்ள உள்பொருள்கள். உயிர் படைக்கப்பெற்ற தல்ல; உயிர் குறையுடையது, கடவுள் நிறையுடையது. உயிரின் குறையும்-கடவுளின் நிறையும் கூட இயற்கை. குறை-அறியாமை; நிறை-அறிவு, ஞானம். குறை நீங்கி நிறைவு பெறும் உறவே உயிர்-கடவுள் உறவு! இந்த உறவு ஞானத்தின் பாற்பட்டது என்ற சைவ சித்தாந்தக் கொள்கையின் சீர்மையை என்னென்போம். இத்தகைய செழுந்தமிழ் வழக்கு, பிற அயல் வழக்குகளை வென்று விளங்கவேண்டும் என்பது சேக்கிழார் திருவுள்ளம். மீண்டும் மாயாவாத மயக்கத்தி லிருந்து செழுந்தமிழ் வழக்கைக் காப்பாற்றுதல் நமது கடமை.

பகுத்தறிவு இயக்கத்தைவிடக் கொடுமையானது மாயாவாதம்; பகுத்தறிவாவது மாறுபட்டுத் தோன்றுவதால் எளிதில் அவ்வழியில் மக்கள் செல்லார். ஆனால் மாயாவாதம் புல்லுருவியாக வேறுபாடு காட்டாமல்-

உடனிகழ்ந்து உள்ளிட்டழிப்பது. ஆதலால் விழிப்புத் தேவை. இன்றும் நமது சமுதாயத்தைச் செழுந்தமிழ் வழக்கில் நிலைநிறுத்துவது நமது கடமை; அங்ஙனம் நிறுத்தினாலே பல தீமைகள் மறையும்; பல தெய்வ வழிபாடு மறையும். அதாவது சிவத்தையே தொழுபவர்களாக வளர்வர். நாளையும் கோளையும் கண்டு அஞ்சார்; வழிபடார்; அன்பினால் இணைந்து வளர்வர். இந்தப் பணியைச் செய்தலே சேக்கிழாருக்குச் செய்யும் வழிபாடு.

## வாழ்ந்தோர் வரலாறு

மானிட வாழ்க்கை அருமையானது; இனிமையானது. "வாய்ந்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்பது திருமுறை மொழி. இன்று வாழ்க்கையை மதித்திடுவோர் யார்? மாயாவாதம், பௌத்தம், சமணம் முதலிய கலப்பால் விளைந்த வாழ்க்கையைப் பற்றிய அச்சமே ஆட்கொண்டிருக் கிறது. வாழ்க்கையை வெறுத்துப் பேசுதல், மரணத்தை விரும்புதல், வாழ்க்கையை வளர்க்கும் சோதனைகளைத் தண்டனைகளாகக் கருதுதல், இந்த வாழ்க்கையைப் பாவச் சுமையெனக் கருதி அவலமடைதல் ஆகிய பொல்லாத -அறிவியலுக்கு ஒவ்வாத-சேக்கிழார் செந்நெறிக்கு மாறான மனப் போக்கே மேம்பட்டுக் காட்சியளிக்கிறது.

இது நமது மறை வழக்கன்று; சேக்கிழார் செந்நெறியு மன்று.

வாழ்க்கை ஓர் அரிய கொடை. அஃதை அறிந்து வாழ்தல் வேண்டும்; பிழைப்பு நடத்தக்கூடாது. வாழ்தல் வேறு; பிழைத்தல் வேறு. இன்று பலர் பிழைத்தே பொழுது போக்குகின்றனர். வாழ்தலென்பது உயிர்ப்புள்ள கலை, நாள்தோறும் உயிர்ப்புடன் வளரும் மரங்கள் தளிர்த்துப் பூத்துக் குலுங்கும். அது போல வாழும் மனிதனும் உயிர்ப்புள்ளவனாக இருப்பான்-, வளம் கொழித்து வாழ்வாங்கு வாழ்வான். இங்கு உயிர்ப்பு என்பது மூச்சு

விடுவதன்று; செயலாக்கம். ஒருவர் வாழும் பொழுதும், அவர் மறைந்த பிறகும் அவருடைய இருப்பை அல்லது தேவையை மற்றவர்கள் உணரும் வகையில் வாழ்தலே வாழ்தல். புவியீர்ப்பு ஆற்றலைவிட வரலாற்றின் இழுவைப் போக்கு, குறிக்கோளும் உறுதியும் இல்லாதவரை வீழ்த்தியே வேடிக்கை பார்க்கிறது. ஒரு சிலரே-அதாவது வாழ்வோரே வரலாற்றின் இழுவையிலிருந்து தப்பி வெற்றி பெற்று நிற்கின்றனர்-விளங்குகின்றனர். உலகிற் பெரும்பாலோர் ‘காலத்தைக் கடத்துபவர்கள்’. காலத்தைக் கணக் கிட்டு-வாழ்க்கையின் அணிகளாக மாற்றும் பழக்கம் நம்மிடம் இல்லவே இல்லை. நம்முடைய மக்களின் காலம் சிந்திச் சிதறி வீணாகிப் பாழாய்ப் போவதை எண்ணிப் பார்க்க வேண்டும். நமக்குக் காலத்தின் அருமையை உணர்த்தச் சேக்கிழார் காலங்கடந்த பெருமானுக்குக் காலத்தைத் தந்து காப்பியம் செய்துள்ளார்; சேரமான் பெருமான், நாயனாரின் பூசையை ஏற்றுக் காலந்தாழ்த்தி எழுந்தருளியமைக்குப் பெருமான் விளக்கம் கூறவேண்டிய நிலை எற்பட்டமையை எண்ணிப்பாருங்கள்! காலக் குறிப்பை உணர்த்தவே மனக்கோயில் புகுந்த வரலாறு! ஆதலால் காலம் போற்றுமின்! குறித்த காலத்தில் வழிபாடு ஆற்றுமின்! வாழ்க்கை வளம் கொழிக்கும்! காலத்தை வென்று விளங்குபவர்கள் வாழ்ந்தோராவார். அவர்கள் வாழ்ந்த காலத்தால் அவர்கள் பெருமை பெறுவதில்லை. அவர்களால் அவர்கள் வாழ்ந்த காலம் பெருமை பெறுகிறது. காலத்திற்குக் கருத்தினையும் புது மாற்றத்தினையும் தருபவர்களே வாழ்பவர்கள். அவர்களால் அந்தக் காலம் பொலிவு பெறுகிறது. இங்ஙனம் புகழ்பட வாழ்ந்தார் வரலாறே பெரிய புராணம்.

## அன்பு நெறி

புறத்தே நிகழும் பயணங்களுக்குச் சாலைகள்-பாதைகள் இன்றியமையாதனை. சாலைகள் செப்பமாக அமையாதபோது பயணம் எளிதாக அமைவதில்லை.

துன்பத்தையும் விளைவிக்கிறது; பயனுடையதாகவும் அமைவ தில்லை. அது போல அகநிலை நிகழ்வுகளின் உணர்வு வழியது வாழ்வியல். மனிதகுலம், ஒருவர் குடும்பம் சமுதாயம் என்று தழுவி வளர்வதற்கு அகநிலை உணர்வு நிகழ்வுகளே காரணம். நிலத்தின் அடிப்பகுதி சுண்ணாம்பாக இருந்தால், ஊற்றெடுக்கும் தண்ணிரும் சுண்ணாம்பாகவே இருக்கும். நிலம் சீராக உழப்பெற்றுச் செப்பம் பெறாவிடில் தாவரங்கள் இனிது வளர்ந்து பயன் தரா. பால் பொழிந்து பாரினைப் பாதுகாக்கும் பசுவின் உடல் நலமாக இருந்தாலன்றிப் பாலும் நலம் தருவதாக அமையாது; அது போலப் பொறிகளைத் தாக்கி, பாதிப்பைத் தரும் காரியங்கள் தற்செயலாக நிகழ்வன அல்ல. திடீரெனவும் தோன்றுவன அல்ல. பல ஆண்டுகளாக நிகழ்ந்த அகநிலைகளின் விளைவேயாம். அகநிகழ்வுக்குக் களம் புலன்கள். புலன்களை இயக்குவது புத்தி; புத்தியின் செயற்பாடு அறிவு; அறிவு அன்புடன் கலக்குமானால் காரியங்கள் இன்பம் தருவனவாகவே அமையும். இருவேறு பொருள்கள் முரண்படலாம். ஆனால், உயிரின் அகநிலையும் புறநிலையும் அதாவது காரணமும் காரியமும் மாறுபடவே படா. அன்பு-சொல்வதற்கு எளிதாக இருக்கிறது. ஆனால் அன்புடையராதல் அரிது. 'அன்பே சிவம்' என்பதை உணர வேண்டும். அன்பு, தவத்திலும் சிறந்தது. அதனினும் உயர்ந்த சீலம் உலகத்தின் இல்லை. இறைவன் திருவருளைப் பெறுதற்குரிய பொருளும் அன்பேதான். "அன்பலால் பொருளும் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே" என்பது அப்பரடிகள் திருவாக்கு.

தன்னல நயப்பின் காரணமாகத் தோன்றும் உணர்ச்சி-நிர்ப்பந்தங்கள் காரணமாகத் தோன்றும் உணர்ச்சி அன்பு போலத் தோற்றமளிக்கும்-நடிக்கும்; ஆனால் அஃது அன்பன்று; உடல் தன்னலமே நாடும்; உயிர் பிறர் நலமே நாடும்; அன்பு பிறர் நலமே நாடும்; தன்னல மறுப்பே அன்பின் அடையாளம். அன்பு கனன்று எரியும் நெருப்பைப்

போல எரியும்; அன்பு தூய வேள்வித் தீ; ஆற்றல் மிக்கது. இந்த அன்பு தீமையைச் சுட்டெரிக்கும்; இன்பத்தை வழங்கும். அன்பு உடையோர் வளர்வர்; வாழ்வர்; அவர் தம்மைச் சார்ந்தோரையும் அன்பு உயர்த்தும்; உலகையும் உயர்த்தும். ஏன்? இறைவனையே ஏவல் கொள்ளும்! ஆற்றல் மிக்க அன்பு வளர்ந்தால் உலகத்தில் துன்பம் ஏது? அன்பினைப் பெற விரும்பாதவர்கள் அன்பினைப் பெறுதற்குரிய ஆவல் அற்றவர்கள், ஆசைகளை-பாசங் களை-அன்புபோலக் காட்டி மேவிப் பழகுகிறார்கள். அவர்தம் ஆசைகள் நிறைவேறாதபொழுது பிணங்கு கிறார்கள்; பிணக்குக்குக் காரணம் கண்டு பிடிக்கிறார்கள். பகைத் தீ மூட்டுகிறார்கள்; படைக்கலங்களைப் பெருக்கு கிறார்கள். கோளினைக் கொட்டி அளக்கிறார்கள்; வீதி தோறும் வதந்தியைப் பரப்புகிறார்கள். இத்தகைய அன்பிலிகள்-அன்பு வேடதாரிகள்-இன்று தொற்று நோயெனத் தெருத்தோறும் அலைகிறார்கள். இவர்கள் வாழ்ந்தாலென்ன? மாண்டாலென்ன? அதிசூரனும்-முத்த நாதனும் வாழ்ந்ததுபோல வாழ்கிறார்கள்; வாழ்ந்துவிட்டுப் போகட்டும். அங்ஙனம் வாழ விடுதல் நமது நெறியுங்கூட. ஆனால், நாம் என்ன ஏனாதிநாதரைப் போலவும் மெய்ப்பொருளாரைப் போலவும் விளங்கியா விட்டுக் கொடுக்கின்றோம். அல்லவே!

சேக்கிழார் காட்டும் அன்பு தூய்மையானது. வணிக நோக்கில்லாதது. இன்று சிலர் பழகுதற்கே பணம் கேட்கிறார்களே! இலாப நட்டக் கணக்குப் போடு கிறார்களே! பழங்காலத்தில் பலரோடு பழகினால் ஆக்கம் இருந்தது; அழிவு தடுத்து நிறுத்தப் பெற்றது; அமைதி இருந்தது. சேக்கிழாரின் நெறி அன்பு நெறி; காப்பியம் முழுதும் அன்பு வெள்ளம்; அன்பு வேள்வி. அன்பில் அயராது வாழ்வோர் வெற்றி பெறுவர். தலைவியிடத்தில் தலைவன் காட்டும் அன்பும் உண்டு. தலைவனிடத்தில் தலைவன் காட்டும் அன்பும்

உண்டு; இந்த அன்பு உயிரியலில் அற்பமானதல்ல; உயர்ந்தது. மிக மிக உயர்ந்தது என்று சேக்கிழார் பாராட்டுகின்றார். அதுவே அன்பு, மக்களிடத்தில் பெற்றோர் காட்டும் அன்பும் அன்பேதான்! தோழர்களிடத்தில் காட்டும் அன்பும் அன்பேதான்! சிவனடியாரிடத்தில் காட்டும் அன்பும் அன்பேதான்! இறைவனிடத்தில் காட்டும் அன்பும் அனபேதான்! இவற்றில் எந்த அன்பும் தாழ்ந்ததில்லை. ஒன்றில் ஒன்று உயர்ந்ததாக இருக்கலாம். ஒன்றில் ஒன்று உயர்ந்தது என்றால் ஒன்றில் தாழ்வு ஏது?

அன்பு என்பது உயிரின் உணர்வு; உயிரின் ஒழுக்கம். இந்த அன்பு எதன்மீது எவ்வகையில் காட்டப் பெற்றாலும் காட்டுகின்ற உயிரும் வளரும்; காட்டப்படுகின்ற உயிரும் வளரும். காட்டப்படும் இடம் நோக்கி நட்பு, காதல், பக்தி என்று அன்பு வேறு வேறு பெயரைப் பெறலாம். இம் மூன்றின் விளைவும் பயனும் ஒன்றேயாம். குறைவற்ற, நிறைவான அன்பு சிவத்தின் தன்மையைப் பெறுகிறது-சிவ மாகிறது. அந்த உணர்வில் திளைத்து நிற்கும்பொழுது நட்புக் கொண்டாலும், காதல் கொண்டாலும் அது சிவத்தின் பாற் காட்டிய பத்திமையைப் போலவே கருதப் பெறும். நட்பு காதலைக் கடந்து சிவத்தினிடம் அன்பு காட்டலாம். இஃது உலகியலில் ஒரோவழி நிகழும். அங்கேயும் சிவம் நட்புக் காட்டப்பெறும் பொருளாக, காதலிக்கப்பெறும் பொருளாக இடம் பெற்று அனுபவத்தை வழங்குகிறது. மாணிக்கவாசகர் சிவத்தையே காதலித்தார். அந்த அனுபவம் திருக்கோவை யாராக மலர்ந்தது. சுந்தரர் பரவையாரைக் காதலித்தார். இவ்விருவரின் காதலில் மாணிக்கவாசகர் காதல் உயர்ந்தது. ஆனாலும், சுந்தரர் காதல் தாழ்ந்ததன்று. அது சிவத்தினைக் காதலிப்பதற்கு முரணன்று. பரவையார் காதல் வழியிலேயே சிவத்தைக் காதலிக்க முடியும் என்னும் குறிப்பில் சேக்கிழார் பாராட்டுகிறார். அறியா மக்கள் உலகியல் காதலுக்கும் பக்திக்கும் இடையில் பெரிய இடைவெளியை உண்டாக்கிக்

கொண்டு காதல் வாழ்க்கையைச் சிற்றின்பம் என இழித்துப் பேசும் புல்லறிவாண்மையை மறுப்பார் போலச் சுந்தரர், பரவையார் காதலை யோகமெனச் சிறப்பித்துப் பாடுகிறார்.

*"தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான்*
*திருவருளால்*
*மின்னாருங் கொடிமருங்குல் பரவையெனும்*
*மெல்லியல்தன்*
*பொன்னாரும் முலையோங்கல் புணர்குவடே சார்வாகப்*
*பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்."*

இத்தகைய காதலராதல் எளிதன்று. நாள்தோறும் பழக்கத்தால் அன்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். ஒருவரை ஒருவர் தழுவி வளர்ந்து அன்பை வளர்த்துத் துய்க்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இத்தகைய அன்பு நெறி, சமுதாயத்தின் எல்லா மட்டத்திலும் தேவை. சமுதாய அமைப்பின் தோற்றமே அன்பினால் ஆயது; அன்பின் விளைவுக்குக் களமாக அமைய வேண்டியது. சேக்கிழார் காட்டும் சமுதாய அமைப்பு, தாங்குவது; வளர்ப்பது; திருந்தத் துணை செய்வது; வேலியாக அமைவது; ஆனால் இன்றோ, சமுதாய அமைப்பு போலித் தன்மையுடையதாக-உயிர்ப் பில்லாததாக இருக்கிறது. இன்று, சமுதாய அமைப்பு அச்சுறுத்துகிறது; பிடரியில் உட்கார்ந்து கொண்டு சவுக்கால் அடித்து அவமானப்படுத்துகிறது. சமுதாய அமைப்பை இந்த இழி நிலையிலிருந்து, சேக்கிழாரின் சமுதாய நெறியில் மனமாற்றம் செய்ய வேண்டம். இன்று பழகும் பழக்கம் வாழ்க்கையில் கழித்தற் குறியீடுகளையும் தருவதில்லை; கூட்டற் குறியீடுகளையும் தருவதில்லை. நாமும் மாற விரும்புவதில்லை; மற்றவர்களையும் மாற்ற விரும்புவதில்லை. எப்படியோ பல ஆண்டுகள் பயனின்றியே ஒரு சமுதாய வாாக்கையைப் பெயரளவில் நடத்திக் கொண்டு வருகின் றோம். நீரோட்டமில்லாத நிலத்தில் பசும் புல்லும்

தலைகாட்டாது. அதுபோல ஈரநெஞ்சு இல்லாத வாழ்க்கை தளிர்த்தல் அரிது. நாம் ஒருவரோடொருவர் கூடிப் பழகுவதே கூட அகநிலையாக்கமாகிய பயன் பெறுவதற்குத்தான்!

திருவீழிமிழலையில் முருகநாயனார் திருமடத்தில் திருஞானசம்பந்தர், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், அப்பரடிகள் ஆகிய அடியார்கள் தங்கியிருந்தார்கள். எவ்வளவு அருமையான காட்சி! இங்குக் கூடிய அடியார்களில் யாரும் 'சந்நியாசிக'ளல்லர்; ஆயினும் துறந்தோரில் தூய்மையுடையவராக விளங்கியவர்கள். இன்று நமது 'சந்நியாசி'களை அப்படி ஒருங்கிணைத்துப் பார்க்க முடிகிறதோ? திருமடங்களின் தலைவர்கள் நிலை என்ன? ஒரோவழி இணைத்துப் பார்த்தாலும், அது செயற்கையாகவே அமைந்து விடுகிறது. இயற்கையாக அமையவில்லை என்பதை இந்த நூற்றாண்டு உறுதிப்படுத்தியுள்ளது. அகம் நெகிழ் அன்பும் உறவும் வளர வேண்டுமானால் தனித்திருக்கும் பொழுதும் பலரோடு கூடியிருக்கும் பொழுதும் உயர் குணங்களையும், உயர் அன்பையும் நினைத்தல் வேண்டும்; பேச வேண்டும். பழகுவோரின் நற்பண்புகளை எண்ணிப் பார்ப்பதின் மூலம்தான் மேலும் மேலும் அன்பு வளரும்.

"ஒன்று நன்று உள்ளல்" என்பார் திருவள்ளுவர். அன்பு வளர்வதன் மூலம்தான் குறைகள் நீங்கும்; அன்பு நெறியே குறைகள் நீக்கத்திற்குரிய வழி. "மறத்திற்கும் அஃதே துணை" என்ற தமிழ் மறை உணர்க. இந்த அடியார்கள் முருக நாயனார் திருமடத்தில் கூடியிருந்தபொழுது என்ன பேசினார்கள்? திருத்தொண்டர் பெருமையினைப் பேசி னார்கள். அப்பெருமையினைப் பலவாறாக விரிந்துரைத் தார்கள். விரிவுரைகள் மாறுபட்டிருக்கக்கூடும்; ஆனால் முரண்பாடுகளாக அல்ல; குறிக்கோள் ஒன்றாக இருக்கும் இடத்தில் முரண்பாடுகள் தோன்றா. இம்மாறுபாடுகள், அன்பின் வளர்ச்சியில்-விகிதத்தில் ஏற்பட்ட மாறுபாடுகளே!

முனைப்பால் ஏற்பட்ட முரண்பாடுகள் அல்ல. அனைவரும் ஒருமைப்பாடுடைய சிந்தையினர்; ஆதலால் அவர்கள் "உடனுறைவின் பயன் பெற்றார்" என்று சேக்கிழார் விளக்குகின்றார்.

> திருப்பதிகச் செழுந்தமிழின் திறம் போற்றி
> மகிழ்வுற்றுப்
> பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர்
> பொற்றாளில்
> விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை
> விரித்துரைத்து அங்கு
> ஒருப்படுசிந் தையினார்கள் உடனுறைவின் பயன்
> பெற்றார்.

என்பது சேக்கிழார் திருப்பாடல். இங்ஙனம் வீட்டிலும், நாட்டிலும் உடனுறைவின் பயன் எய்தி வாழ்கின்ற பண்பாடுடைய வாழ்க்கை தோன்ற வேண்டும்.

இறைவனைச் சடங்குகளால் மகிழ்விக்க இயலாது; "பொக்கமிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்குநிற்பவன்" பெருமான். கல்லடியும் செருப்படியும் ஏற்று மகிழ்பவன். சிவகோசரியாரின் வழிபாடு விதிமுறையைச் சார்ந்ததுதான்; கண்ணப்பரின் வழிபாடு ஆகம விதி முறைகளை மீறியதுதான்! ஆனால், கண்ணப்பரின் வழிபாடே இறைவனுக்கு உவப்பாக இருந்தது. மாமன்னன் கட்டிய கருங்கல் கோயிலினும் பூசலார் கட்டிய மனக்கோயிலே இறைவனுக்கு உவப்பையளிக்கிறது. இறைவனை நாள் தோறும் வணங்கினால் என்ன? கோடி அருச்சனை செய்தால் என்ன? வழிபாடு அகம் நிறைந்த அன்பினின்று எழுந்ததாக இல்லாது போனால் பயனில்லை.

வானவர்கள், இறைவனை வாழ்த்தத்தான் செய்கின் றனர். வானவர்கள், பதவி அதிகாரப் பித்துப் பிடித்து அலைபவர்கள்; அவற்றைக் காப்பாற்றிக் கொள்வதற்கும்

பெறுவதற்குமாகவே அவர்கள் இறைவனை வாழ்த்து கின்றனர். தக்கன் வேள்வி நிகழ்வு இதற்குச் சான்று.

"வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான்; மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து
தம்மையெல்லாம் தொழவேண்டி"

என்று மாணிக்கவாசகர் வானவர்தம் நிலையை எடுத்துக் காட்டுவார். "நாட்டுத் தேவர்களும்" அதே இயல்பினர்; அதனாலன்றோ பெருமான் வான்பழித்திடுகின்றான். மண் ணில் புகுந்து மனிதருடன் விளையாடி ஆட்கொள்கிறான். தூய அன்பில் குளித்து மகிழும் வாய்ப்பு இறைவனுக்குக் கிடைப்பதில்லை. அன்றே அந்த நிலை! இன்று அதைவிட மோசம்! இன்று வழிபாடு நூற்றுக்கு நூறு வணிகமாகி விட்டது. அதனால்தான் பழங்காலத்தில் "வானத்தில் இறைவனைக் காணமுடியாது-ஆனால் மண்ணில் பார்க் கலாம்" என்ற நம்பிக்கை இருந்தது; இன்று அந்த நம்பிக்கையும் பசுமையாக இல்லை. அடியார்களுடைய அன்பில் நனைந்து ஆடுவதற்காக இறைவன் மண்மீது வருகின்றான்.

அமர்நீதி நாயனார் வரலாற்றில்

தொண்டர் அன்பெனும் தூயநீர் ஆடுதல் வேண்டி
மண்டு தண்புனல் மூழ்கிய ஈரத்தை மாற்றத்
தண்டின் மேலதும் ஈரம்நான் தந்தகோ வணத்தைக்
கொண்டு வாரும்என் றுரைத்தனர் கோவணக்கள்வர்"

என்று பெருமான் கோவணக் கள்வராக அருளாடல் செய்ததைக் குறிப்பிடுகின்றார்.

வழிபாட்டில் விதிமுறைகள் இருக்கலாம். ஆனால் அன்பினைத் தடைசெய்யும் முள்வேலிகளாக விதிகள் அமையக்கூடாது. வழிபாட்டுக்கு அன்பே உயிர் என்பதைக்

கண்ணப்ப நாயனார் வரலாறு உணர்த்துகின்றது. ஆனாலும் நாட்டில் நிகழ்ந்தது என்ன? நடப்பது என்ன? சிவகோசரியார் பரம்பரை வருகிறது. கண்ணப்பர் பரம்பரை வரவில்லையே. கண்ணப்பரின் புகழ் கண்டு ஒளித்த சிவகோசரியார் பரம்பரை, அடுத்துக் கண்ணப்பர் தோன்ற முடியாமல் கருவறையைப் பூட்டிவிட்டதே; வழிபடும் உரிமையைப் பறித்துவிட்டதே! புனலும் பூவும் சொரிந்து வழிபாடு செய்யும் ஞானப் பயிற்சியில்லாமல் எப்படி அன்பு வளரும்? ஞானம் வளரும்? திருஞான சம்பந்தர் முதலாகச் சமய ஆசாரியர்கள் வழங்கிய உரிமையைத் தட்டிப் பறித்துவிட்டனரே! ஆன்மாவின் ஞானப் பண்ணையாக விளங்கிய திருக்கோயிலைக் காட்சிச் சாலையாக-தொழிற் கூடமாக-மடைப் பள்ளியாக மாற்றிய கொடுமையை நினைத்தால் நெஞ்சு பொறுக்க வில்லையே! பக்தர்கள் ஆவார் எல்லாரும் திருக்கோயிலில் புனலும் பூவும் சொரிந்து வழிபாடு செய்யும் உரிமையைப் பெறும் நாளே-நன்னாள். தூய அன்பினால் இறைவனை வழிபடுதலே வழிபாடு. தூய அன்பினால் இணைந்து ஒருமைப்பாட்டுடன் வாழ்வதே வாழ்வு.

பெரியபுராணத்தில், சமுதாய அமைப்பில் பல்வேறு நிலைகளைக் காட்டும் அன்புநெறி பேசப் பெறுகிறது. ஆயினும், நூல் முழுவதும் மையமிட்டுக் கொண்டிருப்பது சிவனடியார்பால் காட்டும் அன்பேயாம். சிவத்தைப் பேணுவதாலும், சிவத்தைத் தம் நெஞ்சத்திற் கோயில் கொண்டருளச் செய்திருப்பதாலும், சிவத்தின் திரு வேடத்தையே தம் திருவேடமாகக் கொண்டிருப்பதாலும், சிவனடியார்கள் அன்பு பாராட்டுதற்குரியவர்கள். சிவனடி யார்கள் 'யான்', 'எனது' என்னும் செருக்கற்வர்களாகச் சிவத்தையே நினைந்து தொழும் பழமை பூண்டவர்கள். இத்தகு சிவனடியார்கள்பால் அன்பு காட்டுதல் தமிழகத்தின் வழக்கு. ஒரோவழி இவ்வழிபாட்டினைப் பெற்றார்.

பிழையுளராக இருந்தும், வழிபாட்டினைச் செய்தார், பெற்ற பேற்றினையே பெற்றிருக்கிறார்கள். காரணம், வழிபாடு, வேடத்தினைத் தாங்கியிருந்த மனிதருக்கன்று. அவர் மூலம் சிவத்தின் திருவேடத்திற்கே வழிபாடு நிகழ்த்தப் பெற்றது. நினைப்பும்-மறப்பும் சேர்ந்தது உயிரியல் வாழ்க்கை. உலகியல் வாழ்க்கையில் சிவத்தை மறக்கும் வாயில்களே மிகுதி. அப்போது சிவத்தின் நினைவைத் தரும் திருவேடமும் திருக்கோயிலும் போற்றுதலுக்கு உரியனவான நினைப்பிக்கும் பணியினை எது செய்தாலென்ன? அதனாலன்றோ சேரமான் பெருமான்,

> "...................................திருநீற்றின்
> வாரவேடம் நினைப்பித்தீர் வருந்தாதேகும்"

என்று நினைப்பிக்கும் பணியின் பெருமையை விளக்கு கின்றார்.

அன்பு, பகைக்கு மாறானது. எப்போது? பகையை இலட்சியமாகக் கொள்ளாத போது. அதிசூரன்-முத்த நாதன்களுக்குப் பகைமைக் குணம் மாறததுபோல இன்றும் பலர் வாழ்நாள் முழுவதும் பகைவர்களாகவே வாழ்கின் றார்கள். அவர்கள் வாழ்க்கை அவலத்தில்தான் முடியும். இதனால் யாருக்கென்ன பயன்? பகைமைக் குணம் ஒருபொழுதும் பயன் தராது. ஒரோவழி பயன் கிடைப்பது போலத் தோன்றும்; அஃது ஒரு வாணவேடிக்கை. வாணம் வெடித்தபின் கரியே; அதுபோல்-பகைமை செறிந்த வாழ்க்கை துன்பமே தரும்; பயனைத் தராது. ஏனாதிநாதர், ஈழவர் குலத்தைச் சார்ந்தவர். அவருடைய தாயத்தில் உரிமை கொண்டாடி அதிசூரன் என்பவன் போரிடுகின்றான். பலமுறை போரில் தோல்வியடைகிறான். அதிசூரன் தான் அடைந்த தோல்வியின் காரணமாக வஞ்சகச் சூழ்ச்சியை எண்ணுகிறான். தனி இடத்துக்குப் போருக்கு வருமாறு ஏனாதிநாதரை அழைக்கின்றான். ஏனாதிநாதரோ நல்லவர்.

ஆதலால் தன்னோடு பொருதியவனையும் கூட அவர் ஐயுறவில்லை. ஐயுறுதலே தீய பண்புதானே! இங்ஙனம் ஐயுற்றுக் காதலை, நட்பை, உறவை இழந்தவர்கள் ஏராளம்.

"ஐயப்பாடு தங்குகின்ற நெஞ்சு தவறுள்ள நெஞ்சு" என்று செகப்பிரியர் கூறுவார். அது மட்டுமன்று நம்பிக்கைக்கு எதிரானது ஐயுறல். ஐயுறல் நம்பிக்கையைக் கெடுக்கும்; ஊற்றெடுக்கும் அன்பை வற்றச் செய்யும். நன்னம்பிக்கை ஒரோவழி பிழைபடலாம். அதனால் ஒன்றும் பிழை வாராது; இழப்பும் வாராது. நம்பாமையினால் வரும் இழப்பைவிட எந்நிலையிலும் நம்பிக்கையினால் ஒரோவழி வரும் இழப்பு-இழப்பே அல்ல. அதுவும் வாழ்க்கையை வளர்க்கும்; புகழைத் தரும். நம்பிக்கையில்லாதவர்கள் காலப்போக்கில்-தம்மையே நம்பாத பைத்தியக்காரர் களாகிவிடுவர். ஐயத்தை வழக்கமாகக் கொண்டவர்கள், யாரையும் நம்பமாட்டார்கள். ஏனாதிநாதர் நம்பிக்கையில் திளைத்த நல்ல சிவனடியார் ஆதலால், அதிசூரன் குறிப்பிட்ட தனியிடத்திற்குத் தனியே போருக்குச் செல்கிறார். அதிசூரனும் போருக்கு ஆயத்தமாயிருக்கிறான். போர் தொடங்கிவிட்டது. கடுமையான போர் செய்யும் பொழுது, அதிசூரன் கேடயத்தால் தன் நெற்றியை மறைத்துக் கொண்டே போரிடுகிறான். போர் நல்ல வேகத்திலிருக்கும் பொழுது திடீரென அதிசூரன் தன் நெற்றியை மறைத்திருந்த கேடயத்தை விலக்குகிறான். நல்ல போருணர்வில் போர் செய்து கொண்டிருந்த ஏனாதிநாதர் கண்ணில், அதிசூரன் கொண்ட திருநீற்று வேடம் படுகிறது; தெரிகிறது. ஒரு விநாடி போருணர்ச்சி மாறுபடுகிறது. அன்பு ஊற்றெடுக்கிறது; அருள் உணர்வு தலைப்படுகிறது; அமைதி தவழ்கிறது; தம்மையே ஒப்படைக்கும் பெருந்தகைமை பிறக்கிறது. அவர் குறிக்கோள் வழி இசைந்து நிற்பதே கடமை என்பது ஏனாதிநாதர் திருவுள்ளம். ஆயினும் போரில் சிவனடியார் என்று கருதிப் போரிடாமலிருந்து விட்டால் படைக்கலமில்லாதாரைக்

கொன்று தாயம் கொண்ட பழி சேரும்! அது சிவவேடம் கொண்டாருக்குப் புகழாகாது என்றெண்ணிப் போர் செய்வார்போல் நடித்துத் தம்மையே மரணத்திற்குள்ளாக்கிக் கொண்டு அதிசூரனுக்குத் தாயம் மட்டுமல்லாமல் தாவில் புகழும் சேர்த்தார். கொடிய பகைவரிடத்தும் ஒரு நொடியில் அன்பு கசிவெடுத்து வெள்ளமெனப் பாய்வது சேக்கிழார் காட்டும் சமுதாய நெறி.

மனையறத்தில் திருநீலகண்டரது மனைவியின் காதல்–அன்பு போற்றுதலுக்குரியது. குறை காணல் திருத்தத்திற்கேயாம் என்ற அறநெறியை அம்மையார் உலகிற்கு அளித்தார். வாழ்க்கையின் முதலாக, மையமாக, முடிவாகப் பரிணமிக்க, வேண்டியது அன்பே என்பது சேக்கிழாரின் தத்துவம்; அன்பே சேக்கிழாரின் சமுதாயக் கொள்கை; அன்பு நெறியே கோட்பாடு.

## தொண்டு நெறி

தூய அன்பில் ஒப்புரவு நெறி தோன்றும்; திருத் தொண்டின் நெறி மலரும். அன்பின் விளைவு தொண்டு. அன்பின் பயன் தொண்டு. உயிர், உணர்விற் சிறந்ததை உறுதிப்படுத்தி, ஊதியமாக்குவது தொண்டேயாம். அன்பு ஆழமானதா? அன்பு, அன்பையே நோக்கமாகக் கொண்டதா? நிலையானதா? என்பனவற்றையெல்லாம் அளந்துகாட்டி விளக்கம் செய்வது தொண்டேயாம். அன்பினை மேலும் வளர்த்துப் பண்ணைப் பணைத்த செல்வமாக்கி உறுதிப் படுத்தவதும் அன்பேயாம். அன்பிற் சிறந்தார் தொண்டராதல் இயற்கை. அங்ஙனம் ஆகா திருந்தால் இயற்கைக்கு மாறு. அவர்கள் அன்பு உடைய வர்களா என்பது ஆய்வுக்குரியது. யாதொன்றன்பால் அன்பு காட்டப்படுகிறதோ அதனைப் பாதுகாத்தல் என்பது சராசரி அறிவு. ஆதலால், இறைவனின் நுண்ணுடலாகவும் பருவுட லாகவும் விளங்கும் பரந்துபட்ட உயிர்த் தொகுதியின்பால்

அன்பு காட்டுதல் என்பது அவ்வுயிர்த் தொகுதியின் பாதுகாப்பு, வளர்ச்சி, அவைகளுக்கு உற்ற இடர்நீக்கல் முதலிய தொண்டிலே கொண்டுபோய்ச் சேர்க்கும்.

தொண்டு என்பது புலன்களில் ஒன்றிய பொறிகளின் வாயிலாகச் செய்யப்படும் பணி. இப்பணிகள் யாரை நோக்கிச் செய்யப் பெறுகின்றன என்பதைவிடப் பணிகளின் வகையையும் தரத்தையும் விடப் பணி செய்யும் மனப்பாங்கே தொண்டா? வணிகமா? என்பதைப் பகுத்துக் காட்டும் அளவுகோல். எவ்விதக் குறிபெதிர்ப்புமில்லாமல் திரு வருளையே முன்னிட்டுத் திருவருளுக்குச் செய்வதெனவே கருதிச் செய்யப்பெறுவது தொண்டு. அதனால் அப்பரடிகள், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று அருளிச் செய்தார். 'கிடப்பதே' என்பது அஃறிணைக் குறிப்புச் சொல். உலகில் எந்தவோர் அஃறிணைப் பொருளும் மனித குலத்திற்குப் பயன்படாததன்று. ஆனால் அஃறிணைப் பொருள்களில் எதுவும் நன்றியை, புகழை விளம்பரத்தை விரும்புவதில்லை. துறவிகளும் கூட அதுபோன்று பணி செய்ய வேண்டுமென்பதுதான் மரபு. ஆனால் அஃறிணை நிலையில் அவ்வாறு மனச் செழுமையடைந்து தொண்டு செய்யும் துறவிகளை இன்று காண்பது அரிது. இன்றைய துறவிகள் அழுக்காறு, அவ்வழிப்பட்ட போட்டிகள், போட்டிகளில் தொடர்ந்த வழக்குகள், விளம்பர மோகங்கள் ஆகியவற்றிலேயே "பெரியவர்க"ளாக விளங்குகின்றனர். அப்பரடிகள் திருக்கோயிலிலும் உழவாரப் பணி செய்தார். தெருவிலும் தொண்டு செய்தார்.

> "பார்வாழத் திருவீதிப் பணிசெய்து
> பணிந்தேத்திப் பரவிச் செல்வார்"

என்று சேக்கிழார் பாராட்டுவார், மன்பதை உய்தி பெறுதற்கு உரியன செய்தல் அனைத்தும் தொண்டேயாம். அப்பரடிகள் இளமைக் காலத்தில் செய்த தொண்டுகளைச் சேக்கிழார்

முறைப்படுத்திக் கூறுகிறார். ஆதுலர்க்கு உணவளிக்கும் அறச்சாலைகள் அமைத்தல், தண்ணீர்ப்பந்தல் அமைத்தல், மழைவளம் தருவதுடன் மன்னுயிர்க்கு நிழல் தரும் காடு வளர்த்தல், மனிதரும் விலங்குகளும் குளித்து மகிழக் குளங்கள் தொடல், வேண்டுவார்க்கு வேண்டுவன தருதல், விருந்தளித்தல், செந்தமிழ் நாவலர்க்கு வழங்குதல், ஈதல் முதலிய அறங்களை அப்பரடிகள் செய்துள்ளார் என்பதனை,

*"மாசில்மனத் துயரொழிய மருணீக்கி யார் நிரம்பித்*
*தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க்*
*காசினிமேற் புகழ்விளங்க நிதியளித்துக்*
*கருணையினால்*
*ஆசிலறச் சாலைகளும் தண்ணீர்ப்பந் தரும்*
*அமைப்பார்".*

*"காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்*
*மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும்*
*விருந்தளித்தும்*
*நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா*
*னிலத்துள்ளோர்*
*யாவருக்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்."*

என்ற பாடல்களால் அறியலாம். அப்பரடிகளையே வழிபடும் தெய்வமாகக் கொண்டு போற்றி அவர் வழி நின்றொழுகிய அப்பூதியடிகள், பலரும் நடமாடும் வழியில் தண்ணீர்ப்பந்தல் அமைத்துப் பணி செய்துள்ளார். குளம் தொட்டும் பணி செய்துள்ளார். காடு வளர்த்தும் பணி செய்துள்ளார். இவை பொதுத் தொண்டு.

சிவனடியார்பால் அன்பு பூண்டொழுகி அவர்க்குத் தொண்டு செய்தலும் தொண்டேயாம். சிறுத்தொண்டர், இளையான்குடி மாற நாயனார் முதலியோர் அடியார்க்கு அமுதருத்தித் தொண்டு செய்தனர். திருநிலகண்டர்

அடியார்களுக்குரிய உண்கலமாகிய திருவோடு தந்து உதவி செய்தார். திருக்குறிப்புத் தொண்டநாயனார் அடியார்களின் உடை அழுக்கைத் திருத்தித் தூய்மை செய்து தரும் தொண்டு செய்தார். இங்ஙனம் நடமாடும் கோயிலெனத் திகழும் அடியார்கள் மாட்டு அன்பு பூண்டு தொண்டு செய்தவர்கள் பலர். "நடமாடும் கோயில்" என்ற வழக்கு சாதாரணமாக மனிதனைக் குறிக்காது. கடவுள் எழுந்தருளாத கோயில், கோயிலாகாது, 'எம்பெருமானை, சிவத்தைத் தம் உள்ளத்தே கோயில் கொண்டருளச் செய்து உலாவரும் சிவனடியார்களே நடமாடும் கோயில்கள்'; இவர்களுக்குச் செய்வது சிறப்புத் தொண்டு. இவையனைத்தும் தொண்டு என்றே பெயர் பெறும். இத்தொண்டில் ஈடுபடுவார் யாருக்கும் உளத் தகுதியே தவிர வேறொரு ஈடுபாடும் இல்லை.

அடுத்து, பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயிலுக்குச் செய்யும் தொண்டு. அதைத் "திருத் தொண்டு" என்று சிறப்பாகக் குறிப்பிடலாம். அப்பரடிகள் திருக்கோயில்கள் தோறும் சென்று உழவாரப் பணி செய்துள்ளார். அப்பரடிகள் காலம் தமிழகத்தில் சமண சமயம் பரவியிருந்த, காலம். தமிழக அரசர்களில் பலர் சமண சமயத்தைச் சார்ந்து விட்டனர். அதனால் தமிழகத் திருக்கோயில்கள் பல, பேணுவாரற்ற நிலையை எய்தின. மக்கள் சமண சமய அரசர்க்கு அஞ்சித் திருக்கோயில்களைப் பேணும் கடமையிலிருந்து விலகிவிட்டனர். அதன் காரணமாகத் திருக்கோயில் மண்டபங்களிலும், மதில்களிலும், கோபுரங் களிலும் அவற்றை இடித்துப் பாழாக்கும் மரங்கள், செடிகள் முளைத்திருக்கக்கூடும். திருக்கோயில்கள் தூய்மை இழந் திருக்கக் கூடும். 'சமணர்கள் திருக்கோயிலை மூடி மறைக்கவே முயற்சித்தனரே- அதுதானே பழயாறை வரலாறு'. ஆதலால் திருக்கோயில்களைப் பேணுதல் அந்தக் காலக் கடமை என்று அப்பரடிகள் எண்ணியிருப்பார். அதனாலேயே அவர் திருக்கோயிலைப் பேணும் உழவாரப்

பணியை மேற்கொண்டார் என்று கருதலாம். உழவாரப் பணிசெய்து திருக்கோயிலைக் காப்பாற்ற எண்ணிய அப்பரடிகள் மக்களைத் திரட்டினார். “நாமார்க்கும் குடியல்லோம்” என்று எடுத்தோதி-அடிமைத் தனத்தை அச்சத்தை நீக்கினார்.

வழிவழியாக வளர்ந்துவரும் செழுமைமிக்க அன்பு உழுவலன்பு எனப்பெறும். தமிழினம் வழிவழியாகச் சிவத்தினிடம் காட்டி வரும் அன்பு உழுவலன்பு; சிவம் உறையும் திருக்கோயில் பணி சிவநெறியைப் பேணும் அன்பில் தோன்றிய பணியாதலால் “உழவாரம்” என்று பெயர் பெற்றது போலும். ‘மனத்தால், வாக்கால் செய்யும் தொண்டு உயர்ந்ததே’ ஆனாலும் அதைவிட உயர்ந்தது கைகளால் செய்யும் தொண்டு. கைகளால் செய்யும் தொண்டுக்கு உழைப்பு மிகுதியும் தேவை. உடலால் உழைப்பவர்கள் உயர்ந்தவர்களல்லர் என்ற கருத்து பொய்யானது; தவறானது. அது மட்டுமன்று. மனத்தினால் -வாக்கினால் செய்யும் தொண்டின் தகுதியை உறுதிப் படுத்துவது கையினாற் செய்யும் தொண்டேதான். மேலும் மனத்தினால் வாக்கினால் செய்யும் தொண்டிற்கும் தொண்டிற்குக் காரணமான உணர்விற்கும் பாதுகாப் பளிப்பது “கைத் திருத் தொண்டே”யாம். மனத்தினால் வாக்கினால் செய்யும் தொண்டைவிடக் கைத்திருத்தொண்ட உயர்ந்தது என்பதைச் சிவம், திருவீழிமிழலையில் வாசி யில்லாக் காசு தந்ததன் மூலம் உணர்த்திற்று. ஆயினும் அப்பரடிகள் அடிச்சுவட்டையொட்டி அந்தக் கைத் திருத்தொண்டு வளரவில்லை. இன்றளவும் வளரவில்லை. வளராதது மட்டுமின்றித் திருக்கோயில்களில் இன்று கைத்திருத்தொண்டு செய்வோர் நாலாந்தர ஊழியர்களாக நடத்தப்படுகின்றனர். அவர்கள் பெறும் ஊதியமும் குறைவு; மரியாதையும் குறைவு.

திருக்கோயிலில் கைத்திருத் தொண்டு செய்தல் எளிதான பணியன்று. இதற்குக் கணநாதநாயனார் பயிற்சியே கொடுத்தார் என்று பெரியபுராணம் கூறுகிறது. ஆனால் இன்று இப்பணி, தொண்டின் பாங்கில் வளரவில்லை. தொழில் முறையாக மாற்றம் பெற்றுவிட்டது. திருவேடம் தாங்காதவர்களும், திருவைந்தெழுத்து எண்ணாதவர்களும் இன்று இப்பணியைச் செய்கின்றனர். கைத்திருத்தொண்டு செய்யும் மனப்பான்மை ஒவ்வொருவருக்கும் வர வேண்டும். திருக்கோயில்களில் கைத்திருத்தொண்டு செய்பவர்கள் தரமும் தகுதியும் உடையவர்கள் ஆக வேண்டும். அவர்கள் சிறப்பு வாய்ந்த பணியாளர்களாகக் கருதப்பெற வேண்டும்; நடத்தப் பெற வேண்டும். அவர்களை, வருத்தும் வறுமையிலிருந்து மீட்க வேண்டும்.

அடுத்து, இறைவனை முன்னிட்டுச் செய்கிற தொண்டு. இந்தத் திருத்தொண்டில் கண்ணப்பர் ஈடு இணையற்ற தொண்டரானார். மற்றும் அரிவாட்டாய நாயனாரின் தொண்டு தலை சிறந்தது. சண்டீசர், குங்கிலியக்கலயர், அமர்நீதிநாயனார் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். ஆக, சமுதாயத்தின் ஒவ்வொரு படிநிலையிலும் அன்பு காட்டித் தொண்டு செய்தவர்களைச் சேக்கிழார் நிரந்தினிது பேசியுள்ளார். இன்றைய சமயமும் சமுதாயமும் மீண்டும் தொண்டின் நெறியினால்தான் உய்தி பெறமுடியும். தத்துவங்கள் உயர்ந்தவையாக இருந்தால் மட்டும் போதாது; அத் தத்துவங்கள் செயலுருவம் பெற வேண்டும். ஆயிரம் தடவை தத்துவங்களைப் பற்றிப் பேசுவதைவிடத் தத்துவத்திற்குச் செயலுருவம் கொடுக்கும் பணியே சிறந்த பணி. பேச்சினால் வளர்ந்த கொள்கை கிடையாது; தொண்டினால் வளர்ந்த கொள்கைகளே உண்டு; அதனாலன்றோ சுந்தரர் வரலாற்றில் சிவத்தின் வாயிலாகச் சேக்கிழார் "வித்தகம் பேசவேண்டாம் பணி செய்ய வேண்டும்" என்று நமக்கு அறிவுறுத்துநின்றார்.

## குறிக்கோள் வாழ்க்கை

உயிர்கள், உய்திபெற வேண்டிய நிலையில் உள்ளவை: உயிர்கள் உய்திக்குரியன. உயிர்கள் முயன்றால் உய்தி பெறமுடியும். உயிர்கள் உய்திக்குரிய அடிப்படைத் தகுதி களைப் பெற வேண்டும். உயிர்கள் உய்திபெறல்- அதாவது நிறைவு பெறல் இறைவன் விருப்பத்தால் மட்டுமே நிகழக்கூடிய ஒன்றன்று. உயிர்கள் தகுதி பெற்றாக வேண்டும். உயிர்களைத் தகுதிப்படுத்துவது அவை ஏற்றுக் கொள்கின்ற குறிக்கோளைப் பொறுத்தது. வாழ்க்கையில் பொருள்பட வாழ்கிறவர்களுக்கெல்லாம் நிச்சயம் குறிக்கோளிருக்கும். குளிக்கோளில்லாத வாழ்க்கை கெட்ட வாழ்க்கை. "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்பார் அப்பரடிகள்.

"நல்லாறு" என்பதும் "நன்னெறி" என்பதும் "அறம்" என்பதும் கடலினும் பரப்புடையது. எல்லாவற்றையும் எல்லாராலும் செய்தல் இயலாது. ஆதலால் தத்தம் இயல்புக் கேற்றவாறு ஒன்றை அல்லது சில துறைகளைக் குறிக்கோளாக ஏற்றுக் கொண்டு உறுதியுடன் செய்து நிறைவேற்ற வேண்டும். பலர் ஆசைகளையும் ஆவல்களையும் கூடக் குறிக்கோள்கள் என்று தவறாகக் கருதிக் கொண்டிருக்கிறார்கள். குறிக்கோள் என்பது தற்சார்பு இல்லாதது. பிறர் நலத்தைச் சார்பாக வுடையது. அது தூய அன்பில் விளைவது; இடர்களைப் பற்றி எண்ணாதது. உயர்குறிக்கோளுடையோர் பல்கிப் பெருகி வளர வளர நாடு வளரும்-சமுதாயம் மேம்பாடுறும். சிலர் சூழ்நிலைகளின் தூண்டுதலால் ஒரு குறிக்கோளை எடுத்துக் கொண்டு விடுவர். அக்குறிக்கோளை அடைவதற்குத் தடை ஏதாவது வருமானால் துன்பம் வருமானால் குறிக்கோளைக் கைவிட்டு விடுவர்; பிழைத்துப் போய்விடுவர்.

பெரியபுராணத்தில் வருகிற அடியார்கள் அனைவரும் குறிக்கோளுடையவர்கள்; குறிக்கோளில் உறுதியாக நின்ற வர்கள்; தம் உயிரினும் குறிக்கோள் உயர்ந்தாக எண்ணிய

வர்கள்; குறிக்கோளை அடைவதற்காகத் தம்மையே அர்ப்பணித்தவர்கள். இறைவனுக்குத் தாயனைய பரிவுடையராகி அமுதருத்தும் இயல்பினர் அரிவாட்டாயர். அவருடைய பணிக்கு ஒரு தற்செயலான இடையூறு தோன்றியது. இறைவனுக்கு அமுதை எடுத்துச்செல்லும் பொழுது தடுக்கி விழுந்து விட்டது. அமுதுக்குக் கொண்டு போன மாவடு முதலிய பொருள்கள் வயல் வெடிப்புகளில் வீழ்ந்துவிட்டன. அரிவாட்டாயர் இறைவனுக்கு அமுதருத்துதல் தடைப்பட்டதே என்று தன்னையே மாய்த்துக் கொள்ள முனைகிறார். உடன் பெருமானுடைய திருக்கரம் அரிவாட்டாய நாயனாரின் அர்ப்பணிப்பைத் தடுக்கின்றது; உடனிகழ்வாக, வயல் வெடிப்புக்குள் 'கடுக்'கென்று மாவடுவைக் கடித்துண்ணும் ஒலியும் கேட்கிறது. இன்று இறைவனுக்கு அமுது அருத்தியே தீர வேண்டும் என்னும் அன்புடையார் யார்? குறிக்கோளுடையார் யார்? இன்று திருக்கோயில்களில் திருவமுது அருத்துதல் என்பது ஒரு போலிச் சடங்காகப் போய்விட்டது. இறைவன் அமுதருந்தவில்லையே என்று எண்ணிக் கவலைப்படுவாரில்லை. ஏன்? அத்தகைய குறிக்கோளுடையவரும் இல்லை. எல்லாம் தொழில் மயம்; பிழைப்புக்கு வழி. ஆதலால் இன்று உயிர்ப்பில்லை. அடுத்து, கண்ணப்பநாயனார் இறைவனிடத்தில் அன்பு காட்டுதல். அவர் சாத்திர சம்பிரதாயச் சடங்குகளைக் கடந்து ஊனும் உயிரும் நின்றுருக அன்புருவானார். இறைவனுடைய திருமேனிக் கண்ணி லிருந்து செங்குருதி பாய்கிறது. அன்பின் குறிக்கோளாகவுள்ள உயிரின் உயிர்நிலையாகிய திருமேனியின் கண்ணில் செங்குருதியைக் கண்டவுடன் கண்ணப்பர் துடிக்கிறார். ஆனால் பலநாள் பழகிய சிவகோசரியாருக்கு அந்தத் துடிப்பில்லை, ஏன்? அதுதான் அன்புக்கும் தொண்டுக்கும்-பிழைப்புக்கும் உள்ள வேறுபாடு.

குறிக்கோள் நிறைந்த வாழ்க்கை என்பது இடர்களைப் பற்றிக் கவலைப்படாதது. ஆங்குப் பாசமும் இல்லை; பழிக்கஞ்சுதலும் இல்லை; குறிக்கோளை நிறைவேற்றுதலே இலக்கு. குறிக்கோள் நெறியில் பயணம் செய்து இனிதே முடித்த பெரியாரின் வரலாறே பெரிய புராணம். வாழ்க்கைக்கு, உயர்ந்த குறிக்கோளாக எடுத்துக் கொள்வது நல்லது; இயலாதுபோனாலும் கவலைப்பட வேண்டிய தில்லை. உலகியல் வாழ்க்கையில் இன்பம் தரும் நட்பு, காதல் போன்ற துறைகளிலாவது குறிக்கோளுடைய வாழ்க்கை நடத்தக் கூடாதா? இன்பத்திலும் துன்பத்திலும் இழப்பிலும் ஈட்டத்திலும் குறைகளிலும் நிறைகளிலும் தோய்ந்து நின்றுவிடாமல் காதலையும் நட்பையும் குறிக்கோளாகக் கொண்டு வாழ்தல் சேக்கிழார் காட்டும் தனிநிலையில் சிறப்புற்ற வாழ்க்கை; சமுதாய நிலையில் சிறப்பையும் இன்ப அன்பையும் தரும் வாழ்க்கை. இன்று இந்த நாட்டை வருத்தும் கொடிய நோய் குறிக்கோளிலாமைதான். தனி மனிதன், குடும்பம், சமுதாயம், அரசியல் ஆகிய அனைத்துத் துறைகளிலுமே குறிக்கோளுடைய வாழ்க்கையைக் காணோம். ஆசைகளும் அவலங்களும் அலை மோதுகின்றன. அழுக்காறும் அவ்வழிப்பட்ட பகையும் சமுதாயத்தை உருக்குலைத்து அலைக்கழிக்கின்றன. இன்றைய காலக் கட்டத்தில் திருநீலகண்டநாயனார் மனைவியை ஒத்த தலைவியும், சிவபெருமானையொத்த நட்பும், மனுநீதிச் சோழனையொத்த அரசும், ஏனாதிநாத நாயனாரை ஒத்த பகைவர்க்கருளும் பண்பும் நாட்டில் கால் கொள்ளுமாயில் இந்தச் சமுதாயம் மேம்படும்.

## சாதி வேற்றுமைகளற்ற சமுதாயம்

மனித குலத்தின் பிரிவினை தீது. பிரிவினை வேறு; வேறுபாடு வேறு. இயற்கை நியதியின் வழியிலும் சமுதாய அமைப்புக்களின் காரணமாகவும் வளர்ச்சி நிலைகளின்

காரணமாகவும் தோன்றும் வேறுபாடுகள் வேறு. அத்தகு வேறுபாடுகள் அன்பையும் அனுதாபத்தையும் தோற்று விக்கும். இணக்கமுறச் செய்து வளர்க்கும். பிரிவினை என்பது பிரித்து வைப்பது. செல்வத்தை, அதிகாரத்தை, தமக்கே உரிமையாக்கிக் கொள்ளத் தந்திரங்கள் செய்து கண்ணுக்குப் புலனாகாத காரணங்களைக் காட்டிப் பிரித்து வைப்பது. இத்தகு பிரிவினைகள் அறிவியல் முறைக்கு ஒவ்வாதன. இந்தப் பிரிவினைகளின் காரணமாகத்தான் தீண்டாமை, இன ஒதுக்கல் முதலிய சமுதாயக் கேடுகள் தோன்றின. பிரிவினைகளில் தீயது என்று நாம் குறிப்பிடுவது பிறப்பின் காரணமாகக் கற்பிக்கப்படுகின்ற சாதி, குல வேற்றுமைகளைத்தாம். சேக்கிழாரின் பெரியபுராணத்தில் சாதிகள் இல்லாமல் இல்லை. குலங்கள் கூறப்பெறாமல் இல்லை. எந்தவோர் அடியாரைக் குறிப்பிடும் பொழுதும் சேக்கிழார் சாதி, குலம் ஆகியன கூறியே குறிப்பிடுகின்றார். ஏன்? திருநாட்டுச் சிறப்பில் "சாதிகள் நெறியில் தப்பா" என்று சேக்கிழார் தெளிவாகவே கூறுகிறார். பெரியபுராணம், அவர் காலத்திலும் அவர் காலத்திற்கு முன்பும் சாதிகள் இருந்தன என்பதை நமக்குத் தெரிவிக்கிறது. ஆனால் சாதி வேற்றுமைகள் இன்றிருக்கும் அளவுக்கு இறுக்கமாக இல்லை என்பதை யாரும் மறுக்க முடியாது.

பல்வேறு சாதிப் பிரிவினரிடையே கலந்து பழகுதல் தகாதெனும் கருத்து அன்று இல்லை. மகள் கொடுத்தல், மகள் கொள்ளுதல், உடனுறைதல், உடனுண்ணுதல் போன்ற நிகழ்வுகள் இருந்தன. ஏன்? ஞானாசிரியன்மாராக ஏற்றுக் கொள்கிற மரபு இருந்து வந்திருக்கிறது. சைவ அந்தணர் குலத்தில் தோன்றிய ஆரூரர், சிவத்தின் துணையோடு உருத்திரக்கணிகையார் குலத்தைச் சேர்ந்த சங்கிலியாரையும் திருமணம் செய்துகொண்டது இதற்கு எடுத்துக்காட்டு. மயிலையில் வைசிய குலத்தைச் சேர்ந்த சிவநேசச் செட்டியார் தமது திருமகளைத் திருஞானசம்பந்தருக்கு மணம் முடிப்பதற்கென்றே வளர்த்திருந்தது இதை அரண்

செய்கிறது. வேளாளர் குலத்தைச் சேர்ந்த திருநாவுக்கரசர், வேதியர் குலத்தைச் சேர்ந்த அப்பூதியடிகள் இருவரும் உடனிருந்து உண்டது; சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான் பெருமான் நாயனார் இருவரும் உடனிருந்து உண்டது; திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், முருக நாயனார் ஆகியோர் உடனிருந்து உண்டது ஆகிய நிகழ்ச்சிகளை உன்னுக. இதனால் சாதி வேற்றுமைகள் அன்புக்கும் உறவுக்கும் தடையாக இல்லையென்பதை அறிய முடிகிறது. திருஞானசம்பந்தரின் திருப்பாடலுக்குத் தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்தவராகக் கூறப்பெறும் திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழ் மீட்டினார். வேதியர் குலத்தைச் சேர்ந்த திருநீலநக்க நாயனார் வீட்டில் வேள்வி செய்யும் தூய்மை நிறைந்த அறையிலேயே திருநீலகண்ட யாழ்ப்பாணர் தங்கியிருந்தார். வேதியர் குலத்தைச் சேர்ந்த அப்பூதியடிகள் வேளாளர் குலத்தைச் சேர்ந்த அப்பரடிகளைத் தம் ஞானாசிரியராக வழிபடும் கடவுளாக ஏற்றுக் கொண்டமையை நினைதொறும் நெஞ்சு நெகிழ்கிறது. இவை மூலம் நாம் உணரத்தக்கது இயற்கை வழிப்பட்ட பிரிவுகள் அன்று இருந்தன; ஆனாலும் அவை வற்புறுத்தப் பெறவில்லை; உறவுக்குத் தடையாக இல்லை. தெளிவாகச் சொன்னால் சாதி வேற்றுமைகளைப் பாராட்டாத ஒரு சமுதாய அமைப்பு அன்று கால்கொண்டிருந்தது.

அன்று திருக்கோயில் வழிபாட்டிற்கூட எல்லைகளும் சாதிகளும் இருந்ததில்லை. வேடுவர் குலத்தைச் சேர்ந்த கண்ணப்பர் காளத்தியப்பர் திருமேனிக்குத் தாம் விரும்பிய வண்ணம் விழிபாடு செய்திருக்கிறார். அதற்கு யாதொரு தடையுமில்லை. சிவகோசரியாருக்கு ஏற்பட்ட வருத்தம் “யார் வழிபட்டவர்?” என்பதன்று. பொதுவாகச் சிவநெறியில் புலால் படைத்தலில்லை. சந்நிதியில் புலால் சிதறியிருந்தது. அதை நினைத்துத்தான் சிகோசரியார் “இந்த அனுசிதம் கெட்டேன் யார் செய்தார்” என்று நொந்தார். திருக்கோயி

லுக்குள் எழுந்தருளியிருக்கும் இறைவனை எல்லாரும் புனலும் பூவும் சொரிந்து வழிபடும் உரிமையைப் பெற்றிருந்தனர். பின்னர்தான் சாதி வேற்றுமையுணர்வு தடிப்பாக மாறியதோடு, திருக்கோயில் நாட்பூசனை செய்யச் சமுதாய ரீதியாக அமைக்கப்பெற்ற சைவ அந்தணர்கள் அந்த வழிபாட்டை உலகியல் இலாப நோக்கத்தோடு இணைத்துத் தொழில் மயமாக்கிய பிறகு, சாதி வேற்றுமைகளை வற்புறுத்தினர். இன்று தமிழர்கள் வழிபடுவோர்கள் அந்த உரிமையை இழந்திருக்கின்றனர். இங்ஙனம் கூறும்பொழுது திருநாளைப் போவார் வரலாறு என்ன? என்ற கேள்வி எழும். அதற்கு விடை காண்பது அவசியமே.

திருநாளைப்போவார் வாழ்ந்த காலம் கொழுத்த நிலப்பிரபுத்துவமுறை தோன்றி நிலவிய காலம். அவர் நிலப்பிரபுத்துவத்தின் தாயகமான இருந்த தஞ்சைத் தரணியில் பிறந்தவர். தற்செயலாக நிலப்பிரபுத்துவத்தோடு உயர்சாதி மனப்பான்மை கெண்ட வேதியரிடமும் பணி செய்தவர். இவ்வளவும் சேர்ந்து அவரிடத்தில் ஒரு தாழ்வு மனப்பான்மையை உண்டாக்கி விட்டன. தில்லைத் திருக்கோயிலுக்குள் செல்ல அவருக்குத் தடையாக இருந்தது தில்லை மூவாயிரவர் ஆதிக்கம் மட்டுமன்று; திருநாளைப் போவாரின் தாழ்வு மனப்பான்மையும்தான். இதனை,

"தம் குலம் நினைந்தே அஞ்சி அணைந்திலர் நின்றார்" என்று சேக்கிழார் குறிப்பிடுவார். ஆதலால் அவருடைய தாழ்வு மனப்பான்மையை நீக்கும் திருவுள்ளக் குறிப்பி லேதான் இறைவன் வேள்வித் தீயில் மூழ்கும் செயலைச் செய்வித்தார். இதில் தாழ்வு மனப்பான்மை தோன்றுவதற்குக் காரணமாயிருந்த சமுதாய அமைப்பு கொடுமையானதுதான். சேக்கிழார் காட்டும் சமுதாய அமைப்பில் வேறுபாடுகள் இயல்பின் காரணமாக இருக்கலாம். ஆனால் அவை பிரிவினையல்ல. அங்கு ஒருகுல உணர்வுக்குத் தடையில்லை என்பதை அறிக! அத்தகையதொரு சமுதாய அமைப்பை நாம் காணவேண்டும்.

## புனலும் பூவும் சொரிந்து வழிபடும் உரிமை

வழிபாடு என்பது உயிர்கள் தம் உய்தி நோக்கிச் செய்வது. வழிபாட்டில் அகக் கருவிகளும் புறக் கருவிகளும் ஈடுபடவேண்டும். வழிபாட்டில் நாம் ஒவ்வொருவரும் சிறக்க வேண்டுமானால், நாள்தோறும் தனித்திருந்து திருமுறைகள் காட்டுகின்ற நெறி வழியில் அகப்பூசையும் புறப்பூசையும் செய்ய வேண்டும். இங்ஙனம் செய்வோர் எண்ணிக்கை, வரவரக் குறைந்து கொண்டே வருகிறது. தமிழகத்திலுள்ள ஆற்றங்கரைகளிலும் திருமடங்களிலும் இங்ஙனம் பூசை செய்வதற்கென்று அமைக்கப்பெற்ற மேடைகள் இன்று பயனற்றுக் கிடக்கின்றன. இங்ஙனம் ஒவ்வொருவரும் நாள்தோறும் முறையான சிவபூசை செய்ய இயலாது என்று கருதித்தான்போலும் திருக்கோயில் வழிபாட்டு முறையைக் கண்டனர். நாள்தோறும் எல்லாரும் முறையாக அகப்பூசை செய்தல் என்பது எளிதன்று. அத்துறையில் வல்லார் இன்று இருக்கிறார்களா என்பது ஐயத்திற்குரியது. அந்த அருமை யான விஞ்ஞானக் கலையைக் கற்றுத் தருகின்ற சித்தர்கள் இன்று அருகிப் போயினர். ஆதலால் அகப்பூசை செய்வதி லுள்ள இடர்ப்பாட்டையும் காலத்தின் அருமையையும் கருதி அகப்பூசை நெறியில் நின்று, பெருமானைத் திருவுருவத்தில் எழுந்தருளச் செய்து நாம் எளிதாக வழிபடுவதற்கு உதவத்தக்க வகையில் தோன்றியதே திருக்கோயில் வழிபாடு என்று நாம் நம்புகின்றோம். இத்திருத்தொண்டைச் செய்து தருவதற்கு நம்மில் உயர்ந்தோராக-சான்றோராக-அந்தண ராக விளங்கிய சிலரைத் தேர்ந்தெடுத்து ஒப்பித்தோம். அவர்களே ஆதிசைவர்கள். காலத்தாலும் சமுதாய வரிசையில் முன்னிற்பதாலும் அவர்கள் ஆதிசைவர்கள் ஆயினர். அவர்கள் சிறந்த செந்தமிழ்க் குடியினர்; நம்முடைய குலத்தினர்; நம்மோடு, நம் குலத்தினரோடு உண்ணல், உறவு முதலியன கொண்டிருந்தவர்கள். இதற்குச் சுந்தரர் வரலாறு சான்று. திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானை நாள்தோறும் திருமுழுக்காட்டி, நாட்பூசனை செய்து,

பெருமானைத் திருவருட் பொலிவோடு எழுந்தருளச் செய்து, வழிபட வருவோருக்குச் சிவாச்சாரியார்களாக இருந்து, உடனிருந்து வழிபாட்டைச் செய்யச் செய்து துணைநிற்கும் பணியே சிவாச்சாரியார்களின் பணி.

திருக்கோயிற் பூசையைப் "பரார்த்த பூசை" என்பர். பரார்த்த பூசை என்பதற்கு மற்றவர்களுக்காகச் செய்யும் பூசை என்பது பொருள். ஆதலால் மற்றவர்கள் வழிபடுவதற்காக இருப்பதுதான் திருக்கோயில் என்று கொள்ளவேண்டும்.

வழிபடுதல் என்பதில் புனலாட்டுதல், மலர் சொரிதல், பாடுதல், பரவுதல், ஆர்வத் துடிப்புடன் அணைத்தல், உச்சிமோத்தல் ஆகிய அனைத்தும் உண்டென்பதைச் சேக்கிழாரின் பெரியபுராணம் தெளிவாக வரையறுத்துக் காட்டுகிறது. இன்றையத் திருக்கோயில்களில் இதற்கு ஏது உரிமை? இந்த வழிபாட்டு முறை திருமுறைக் காலத்தில் இருந்தது என்பதை நமது திருமுறைகள் வாயிலாக அறிய முடிகிறது. திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருமுறையில் சற்றேறக்குறைய 97 பாடல்களிலும், திருநாவுக்கரசர் அருளிச் செய்த திருமுறையில சற்றேறக்குறைய 44 பாடல்களிலும், சுந்தரர் அருளிச்செய்த திருமுறையில் சற்றேறக்குறைய 19 பாடல்களிலும், மாணிக்கவாசகர் அருளிச்செய்த திருவாச கத்தில் 2 பாடல்களிலும் இந்நெறி எடுத்துக் கூறப்பட்டுள்ளது. கண்ணப்பநாயனார், திருநீலநக்கநாயனார் வரலாறுகளும் இதற்கு அரண் செய்வன.

நம் திருக்கோயில்களின் தல வரலாறுகள் அனைத் தையும் ஆராய்ந்தால் ஒவ்வொரு திருக்கோயிலும் இன்னின்னார் பூசித்தது என்பதை அறியலாம். இராமன் பூசித்தது இராமேச்சுரம்; பாண்டவர் பூசித்தது திருமண்ணிப் படிக்கரை; வாலி பூசித்தது வாலீச்சுரம்; இப்படிப் பல திருக்கோயில்களின் வரலாறுண்டு. ஏன்? விலங்கினங்களும் புள்ளினங்களும்கூடப் பூசித்திருக்கின்றன. இன்றும் வட புலத்தில் இந்த முறை நடைமுறையிலிருந்து வருகிறது என்பது

குறிப்பிடத்தக்கது. அதனால் அந்தத் திருத்தலங்களின் பெருமை குறைந்துவிடவில்லை. இன்றைய கல்வி கூட- செய்முறையில்லாத கல்வி-பயனற்றது என்று சொல் கிறார்கள். சமயத் துறையில் மட்டும் செய்முறைக்கு வாய்ப்பில்லாத காணல் அளவேயுள்ள வழிபாட்டுமுறை நிறைபயனைத் தராது. ஆதலால் எல்லாரும் திருக்கோயி லுக்குள் எழுந்தருளியுள்ள பெருமானைப் புனலும் பூவும் சொரிந்து வழிபடும் உரிமை வேண்டும். இங்கு நாம் 'எல்லாரும்' என்று குறிப்பிடுவதால் "விதிமுறையில்லாமல் எல்லாரும் வழிபடலாம்" என்று கொள்ளக்கூடாது. "தகுதியுடையார் எல்லாரும் வழிபடலாம்" என்பதுதான் குறிப்பு. திருமுறை நெறிகாட்டும் "திருவாளன் திருநீறு" பெறும் சமய தீக்கை பெற்றோர், சமய நிறுவனங்களால் ஏற்பளிக்கப் பெற்றோர், சமய சீலமுடையோர் என்றெல்லாம் வரையறை வைத்துக் கொள்வது இன்றியமையாதது. இச் செயல்முறை வருவதால் சிவாச்சாரியாரின் தரமும் தகுதியும் உயருமேயன்றி யாதொரு குறைவும் வராது. அவர்கள், அயல்வழிக் கருத்தைக் கேட்டு அலமருதல் நியாயமன்று. அவர்கள் அருச்சர்களாக இல்லாமல் சிவாச்சாரியார்களாக இருந்து, கண்டு காட்டி வழி நடத்த வேண்டும் என்பதே நமது விருப்பம். இது நமது சமயத்தை வளர்ப்பதற்கும் சமுதாயத்தை ஒருங்கிணைப்பதற்கும் உரிய சாதனம். இதுவே சேக்கிழார் கண்ட வழிபாட்டு முறை.

## திருமுறை வழிபாடு

இறை வழிபாடு என்பது கடவுளுக்காகச் செய்யப் பெறுவதன்று. உயிர், இறையருளைப் பெறுவதற்குக் கருவியாகக் கொள்வது வழிபாடு. வழிபாட்டின்பயன், உயிருக்கேயாம். உயிர் நலமுறுதல், வழிபாட்டின்பயன், உயிருக்கேயாம். உயிர் நலமுறுதல், வழிபாட்டின் ஆக்கம். "உயிர், எல்லாம் வல்ல இறைவனை நோக்கிப் பெருமானின் நலம் பெறுதல்வேண்டி அழுகின்ற அழுகையே பிரார்த்

தனை" என்பார் டெனிசன். மாணிக்கவாசகரும். உயிர் பொய்ம்மை நீங்கி வாய்மையடைந்து மெய்யாய நலமுறுதல் அழுதல்வழி நிகழலாம் என்று கருத்தை,

"யானே பொய் என் நெஞ்சும்
பொய் என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால்
நின்னைப் பெறலாமே,"

என்று அருளிச் செய்துள்ளார். பழந்தமிழகத்தில் தாய் மொழியே-அதாவது தமிழே வழிபாட்டு மொழியாக இருந்தது. அதுதான் இயற்கை. இயற்கைக்கு இசைந்து வராதது எதுவும் இறைமைத் தன்மையுடையதாகாது. மூவர், தமிழிலேயே இறைவனைப் போற்றினர்; வழிபட்டனர். சிவபெருமான் அப்பரடிகளுக்காகக் கயிலையை ஐயாற்றில் காட்டியதே, "மன்னு தீந்தமிழ் புவியின்மேல் பின்னையும் வழுத்த" என்பதுதான் காரணம் எனச் சேக்கிழார் குறிப்பிடு கின்றார். இங்ஙனம் ஏழாம் நூற்றாண்டில் வெள்ளமெனப் பெருக்கெடுத்த தெய்வத் தமிழ்ப் புனல், சுந்தரர் காலத்தில் வற்றிவிட்டது போலும்! அதனால், பெருமான் தமிழ் கேட்கும் விருப்பத்தால் ஆரூரரை வாய் திறந்து கேட்கிறார். "அருச்சனை போதும்; நாம் கேட்க விரும்புவது பண்பொலி பாடலே" என்று அறிவிக்கிறார்!

"......நமக்கும் அன்பினில் பெருகிய சிறப்பில் மிக்க
அறசனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல்
நம்மைச்
சொற்றமிழ் பாடுக" என்றார்......"

என்பது பெரியபுராணம். நாம் விரும்புவது தமிழருச்சனை மட்டுமன்று. அது முதற்படியே. நாம் உண்மையிற் செய்யவேண்டியது வைணவத் திருக்கோயிலில் செய்வதைப் போலத் திருமுறைச் சாத்துச் செய்து வழிபடுதலேயாகும்.

அதாவது மூவரருளிய திருப்பதிகங்களை ஓதி மலர் சொரிந்து வழிபடுதல்தான் திருமுறை காட்டும் வழிபாட்டு முறை. அதுவே தமிழ் முறை. திருமுறை வழிபாட்டு முறை யாண்டும் மலர்க! நமது சமய ஆசிரியன்மார்கள் அருளிச் செய்த திருமுறைப் பதிகங்களை ஓதி வழிபட்டால் துன்பம் நீங்கும்; நலமுற்று வாழலாம்; இன்பம் பெருகும். இதனைத் திருவீழிமிழலையில் அருளிய பதிகத்தில் திருஞான சம்பந்தர்,

*"சினமலி கரியுரி செய்த சிவனுறை தருதிருமிழலையைமிகு*
*தனமனர் சிரபுர நகரிறை தமிழ்விர கனதுரையொருபதும்*
*மனமகிழ் வொடுபயில் பவர்எழில் மலர்மகள் கலைமகள்*
*சயமகள்*
*இனமலி புகழ்மகள் இசைதர விருநில னிடையினி*
*தமர்வரே."* (பா.11)

என்று அருளிச் செய்துள்ளார். ஆதலால், திருமுறைச் சாத்து வழிபாட்டு முறையினை நடைமுறைக்குக் கொண்டு வருக!

## காதல் திருமணம்

தமிழகம் அகனைந்திணை ஒழுக்கத்தை இனிதெனப் போற்றியது. அகத்திணை இலக்கணம் பெருமானாலேயே வழங்கப் பெற்றது என்ற கொள்கை உண்டு. அதை "இறையனார் அகப்பொருள்" என்பர். தமிழரின் மனையறம் விழுமியது. அன்பும் அறனும் பெற்று விளங்குவது. அவற்றைப் பண்பும் பயனுமாகக் கொண்டு பொலிவடைவது. தமிழர் வாழ்வியலில் திருமணங்கள் நிகழ்ந்தன; செய்விக்கப் பெற்றதில்லை. தலைவனுக்கும் தலைமகளுக்கும் காதலுரிமை உண்டு. மகளிரைச் சிறைவைக்கும் அயல் வழக்கு வந்த பிறகுதான் "சிறைகாக்கும் காப்பு எவன் செயும்" என்ற வள்ளுவம் தோன்றியது! பழந்தமிழர் போற்றிய காதல் உணர்ச்சி வசப்பட்ட தன்று! உணர்வு வழிப்பட்டது.

*சேக்கிழாரின் பெரியபுராணத்தில் பழந்தமிழர் நெறியாகிய காதல் திருமணமும் பேசப் பெறுகிறது. இடையில் வந்த திருமணமும் பேசிமுடிக்கும் திருமணமும் கூறப்பெறுகிறது. ஆனால் திலகவதியாருக்குத் திருமணம் பேசம்பொழுது குலத்திற்குக் காரணமாகிய குணம் பேசப்பெற்றதே யொழியச் சாதிமுறைகள் பேசப்பெறவில்லை. இன்று நிலவும் வரதட்சணை முதலிய கொடுமைகள் இல்லை. சுந்தரர் வரலாற்றில் பெற்றோர்வழிப் பேசி முடிக்கும் ஒரு சாதித் திருமணம் நடைபெறாமல் தடை செய்யப்படுகிறது; காதல் திருமணம் நிகழ்கிறது. சுந்தரர், பரவையாரைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்ளுகிறார். அது போலவேதான் சங்கிலியார் திருமணமும் நடைபெறுகிறது.*

*திருஞானசம்பந்தர் வரலாற்றில் திருமருகலில் நிகழும் செட்டிப் பெண் வரலாறுகூட, தான் விரும்பும் ஆடவனை மணக்க, பெண் உரிமையுடையவளாக இருந்தாள் என்பதைக் காட்டுகிறது. அதற்குத் திருஞானசம்பந்தர் முதலியோர் துணையாக இருந்தனர் என்பதும் அறியக் கிடக்கிறது. இன்றைய மனையற வாழ்க்கை மங்கலமாக அமையாமல் அதன் பயனாகிய நன்கலமும் சிறப்பாக அமையாமல் அல்லற்படுவதற்குக் காரணம் காதல் திருமணத்தைப் புறக்கணித்ததுதான். காதல் திருமணத்தில் ஆங்காங்குச் சில தவறுகள் நிகழ்ந்திருக்கலாம். எந்தவொரு செயல்முறையிலும் சில தவறுகள் நிகழலாம் அதற்காக அந்தச் செயல்முறையே தவறு என்று கூறுதல் ஆகாது. மீண்டும் தமிழகம் காதல் திருமணத்தில் சிறந்து விளங்குவதாக!*

## பெண்ணின் பெருமை

*சேக்கிழாரின் பெரிய புராணத்தில் மகளிர் பெருமைப் படுத்தப் பெற்றுள்ளனர். பெண்ணடிமை என்பதோ மகளிர் ஆணின் உடைமை என்பதோ தமிழர் கொள்கையன்று.*

சேக்கிழாருக்கும் மகளிரைப் பெருமைப்படுத்தும் செந்தமிழ் நெறியே ஏற்றதாக இருந்தது. வாழ்க்கையில் ஒரு பகுதியாகிய இல்லத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிற பெண், குடும்பத்தில் விருந்தோம்பல், வழங்குதல் முதலிய அனைத்துரிமைகளையும் பெற்றிருந்தாள். இதனைக் காரைக் காலம்மையார் புராணத்தில் வரும்,

"நம்பரடி யார்அணைந்தால் நல்லதிரு அமுதளித்தும்
செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் முதலான
தம்பரிவி னால்அவர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக ஒழுகுநாள்"

என்ற திருப்பாடலால் அறியலாம்.

காரைக்காலம்மையார் பரமதத்தனுக்குப் பாங்காக அமைந்த மனைவி. தம் கணவன் மாங்கனியைச் சுவைத் துண்ணும் திறமறிந்து இல்லை என்று கூற மனம் வராது மாங்கனி தேட முயன்றமை அவர் கற்பிற்கு எடுத்துக் காட்டு. எண்ணரிய மாங்கனியை இறைவனிடத்தே பெற்றது அம்மையாரின் நிறைநலத்துக்குச் சான்று. கணவன் மனம் மாறியவுடன் தனது பொற்புடை அழகை, கணவனுக்குப் பயன்படாமையின் காரணமாகத் துறந்தமை அம்மையாரின் கற்புத் தவத்தை மேலும் உறுதிப்படுத்துகிறது. அந்நிலையை அவலமாக மாற்றாமல் அருளாக மாற்றித் தவமே தவம் செய்தது போல அம்மையார் பேயுடம்புடன் செய்த தவமும், கயிலையாத்திரையும், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்ற வள்ளுவத்தின் வினாவுக்கு, "ஆம், பெண்ணோடொத்த பெருமை பெண்ணேதான்" என்று விடையளிப்பதாக விளங்குகின்றது. அதனாலன்றோ நமையாளும் சிவமே "அம்மையே" என்று அழைக்கும் பேற்றினைப் பெற்றார்.

தமிழக வரலாற்றின் பெருமையை—சைவ நன்னெறியின் சீர்மையை இன்றளவும் நாம் அடைந்து, கடைப்பிடித்து ஒழுகத் தக்கவாறு விளங்கியருளிய பெருமை மகளிர்க்கே

உண்டு. ஏழாம் நூற்றாண்டில் தமிழகத்தை வருத்திய அயல் வழக்கின் நுழைவு தடுத்து நிறுத்தப்பட்டதும், தமிழகம் முழுதும் சைவ எழுச்சி நிகழுமாறு செய்த பெருமையும் மகளிருக்கே உரியது என்பதைப் பெரியபுராணம் எடுத்துக் காட்டுகிறது.

வழிவழிச் சைவ குலத்தில் தோன்றிய மருணீக்கியாரே சமணத்திற்குச் செல்லும் அளவுக்கு அச்சமயம் கவர்ச்சியாகப் பரவியது. வாழ்க்கைக்கு இசைவில்லாத தாகவும், உண்மைக்குப் புறம்பானதாகவும் இருந்த சமண சமயம், மந்திரங்கள், துன்ப நீக்கம், துறவிப் படைகள், தமிழ் இலக்கிய இலக்கண ஆய்வு பரப்புப் பணிகள், உயிர்கள் பால் இரக்கம் காட்டுதல் இன்னோரன்னவற்றால் கவர்ச்சியாகப் பரவியது. தமிழகத்தை ஆண்ட பல்லவப் பேரரசரும், பாண்டியப் பேரரசரும் சமண சமயத்தவராயினர். இந் நிலையில் இரண்டு கதிர்கள் ஞாயிறெனவும் தண்நிலவெனவும் தமிழகத்தை வலம் வந்து சைவ எழுச்சியைத் தந்தன. கண்ணுக்குத் தெரிந்த கதிர்களை விட அந்த வரலாற்றுக்குப் பின்னணியாக விளங்கிய தவச் செல்வங்களை நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

திருவதிகையில் தவம் செய்த திலகவதியார், திருநாவுக் கரசரைச் சிவநெறியில் நிறுத்தி நமக்குத் தந்தருளினார். திலகவதியாரின் தவம்தான் திருநாவுக்கரசரின் திருத் தொண்டாகப் பரிணமித்தது. சேக்கிழார், “எங்கள் தெய்வம்” என்று நெஞ்சு நெகிழப் போற்றும் மங்கையர்க்கரசியார் திருஞானச்சம்பந்தரின் சிவநெறிக் காப்புப் பணிக்கு ஊன்றுகோலாகத் திகழ்ந்தார். இந்த மகளிர் குலவிளக்குகள் இரண்டும் தோன்றியிராவிடில் இன்று ஏது திருக்கோயில்கள்? இன்று ஏது திருமுறைகள்? ஆதலால் ஒவ்வொரு சைவனும் சேக்கிழார் வாத்தியபடி மங்கையர்க்கரசியாரைக் குல தெய்வமாக வணங்கவேண்டும்; திலவதியாரைத் தொழும் தெய்வமாகக் கொள்ள வேண்டும்.

அடுத்து இளையாங்குடிமாறநாயனார் விருந்து வந்த போது வறுமையின் காரணமாக அயர்ந்தார். "தீரவே பசித்தார் செய்வதென்ன?" என்று இரங்குகின்றார். அப்போது அவர்தம் மனைவியார் அவர் அயர்ச்சி நீங்க நல்ல ஆலோசனை கூறும் பாங்கினை எண்ணிப் பார்ப்பின், அன்று மனைவியார் தத்தம் கணவன்மாருக்கு ஆலோசனை கூறும் அறவுக்கு மதிநுட்பம் பெற்றிருந்தனர் என்பதும் அவர்தம் ஆலோசனையை அவரவர் கணவன்மார் பெருமை சிறுமை உணர்ச்சியின்றிக் கேட்டனர் என்பதும் பெறப்படுகின்றது.

"செல்லல் நீங்கப் பகல்வித்" திடுசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலும் ஆகும்மற்(று)
அல்ல தொன்றறி யேன்"என் றவர்வுற.

மற்(று)அம் மாற்றம் மனைவியார் கூறலும்
பெற்ற செல்வம் எனப்பெரி துள்மகிழ்ந்(து)
உற்ற காதலி னால்ஒருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார்.

என்ற திருப்பாடல்கள் படித்தின்புறத் தக்கன. தத்தம் கணவன்மார் எடுத்துக்கொண்ட குறிக்கோளை அடைவதில் சேக்கிழார் காட்டும் மனைவியர் உற்ற துணையாயிருந் திருக்கின்றனர். சிறுத்தொண்டர் மனைவி திருவெண்காட்டு நங்கையும், இயற்பகையார் மனைவியும் இதற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டு ஆவர். வாழ்க்கையின் உயர் குறிக்கோளை அடைவதற்குத் தானே மனையறம்! அதற்கு ஒத்திசைந்த வளாக வாழ்கிறவள்தான் மனைவி என்ற சிறப்பைப் பெறமுடியும். அதனாலன்றோ வள்ளுவமும் "வாழ்க்கைத் துணை நலம்" என்று வாழ்த்தியது. பெரியபுராண மகளிர் அத்தகைய சிறப்புடையவரே!

## தோழமைச் சிறப்பு

வாழ்க்கையில் காதலை ஒப்பச் சிறப்புடைய பண்பு– நட்பு; இல்லை, காதலைவிடக் கூட நட்பு சிறந்தது. எந்தவொரு உயிரும் தனித்து வளர்தல் அரிது. உயிர், முதல் நிலையில் சுதந்தரமாக மனம்விட்டுக் கலந்துபேசி உரிமையையும் உறவையும் பகிர்ந்து கொள்வதற்கு ஏற்றது நட்பேயாம். நட்பில்லாத வாழ்க்கை நிலவில்லாத வானம் போன்றது. நட்பு ஓர் உயரிய வாழ்க்கை முறை. ஆங்கிலச் சிந்தனையாளர்கள், "காதலிக்காமல் கூட இருக்க முடியும்; நட்பில்லாதிருக்க முடியாது" என்று கூறுகின்றார்கள். அகம் நிறைந்த நண்பினராகி வாழ்வளிக்கக்கூடிய நண்பர்கள் கிடைப்பதரிது. பழகுவோரெல்லாம் நண்பர்களாகி விடமாட்டார்கள்.

சமுதாய அமைப்பு தொய்வுள்ளது. அதுவும் அன்றாட வாழ்க்கையின் தேவைகளுக்கே பற்றாக் குறை மிகுந்துள்ள நாட்டில் அழுக்காறு உறவினைக் கெடுக்கும்; உணர்வினை அழிக்கும்; நெறி முறையிகந்த போட்டிகள் தோன்றும்; தேவைக்காகக் கூடிக்குலவுவர்; தேவை நிறைவாகாதபோது பிரிவர்; பிரிந்து நின்றும் பேயைப்போலத் துன்பம் செய்வர். இந்த மனிதர் சந்தையில் நண்பர் கிடைப்பது அரிதே. அது மட்டுமன்று, வளர்ந்த நட்பாகவும் கிடைக்காது. கிடைத்த நட்பை வளர்த்து, அனுபவிக்க வேண்டும். அதற்குரிய பொறுத்தாற்றும் பண்பும்–பரிவும் தேவை. நட்பில் பிரிவு தீது. நோயுற்ற உடலைத் துறப்பார் யார்? அது போலத்தான் நட்பிலும்கூட! நண்பனின் குற்றம் அன்புற்றமர்ந்த நண்பனுக்குத் தெரியாது. ஒரோவழி தெரிந்திருந்தாலும் குற்றம் நீக்க மருத்துவனாய்–தாதியாய் நின்று தொழிற் படுவானே யன்றித் தூற்றமாட்டான். குற்றம் கூறிப் பழிவாங்க மாட்டான். அதனாலன்றோ, சுந்தரர் திருவாரூர் திருப்பதிகத்தில்,

"ஏழிசையாய் இசைப்பயனாய்
இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும்
துரிசுகளுக் குடனாகி"

என்று, தாம் செய்த துரிசுகளுக்கெல்லாம் பெருமான் உடனாகி இருந்ததாகப் பாடுகின்றார்.

பெருமான், சுந்தரர்க்கு உற்ற தோழராக இருந்தார். தோழமையில் அன்பும் இருக்கும்; விளையாட்டும் இருக்கும்; உதவியும் இருக்கம்; ஒறுத்தலும் இருக்கும்; இன்பமும் இருக்கும்; துன்பமும் இருக்கும். இவற்றை ஏற்றுத் தாங்கிக்கொண்டு நிகழ்வதே நட்பு. பெருமான் சுந்தரர்க்குச் சிறந்த நண்பராகத் திகழ்கிறார். ஐயோ, பாவம்! கழுதும் கண்படுக்கும் நள்ளிரவில் தம் தோழர் ஆரூரருக்காகப் பரவையார் வீட்டுக்குத் தூது சென்றுவரும் காட்சியைச் சேக்கிழார் எடுத்தோதும் பொழுது, நமக்குச் சிவபெருமானமீது இரக்கமே தோன்றுகிறது. அதனால்தான் போலும் அன்றும் ஏயர்கோன் கலிக்காமர் வருந்தினார். ஆனால் அதில் பெருமான் பெற்ற மனநிறைவு நாமறியோம். மீண்டும் மனித உலகம் – தோழமையில் தழைப்பதாக! ஆரூரர்–அண்ணல் சிவம் 'இருவரிடையே இருந்த நட்பைப் போல நட்பு நலன்களைப் பெற்று வளர்க வாழ்க!

## ஒப்புரவு வாழ்க்கை

பெரியபுராணம் முழுதும் ஒப்புரவு நெறி பேசப் பெற்றுள்ளது. விருந்தோம்பல் சிறந்த வேள்வியாகப் போற்றப் பெற்றுள்ளது. இல்லையென்று சொல்லாது ஈதல் வாழ்வின் கடன் என்று கொண்டவரும் வாழ்ந்திருக்கிறார். பெரிய புராணம் காட்டும் ஒப்புரவு நெறியில் மிக உயர்ந்தது பரவையார் மேற்கொண்ட நெறி. திருவருளால் மழையெனப் பொழிந்த நெல் மலையை "எல்லாரும் அவரவர் தம்

இல்லத்திற்கு எடுத்தேகுக' என்று அறிவித்து அள்ளிக் கொள்ளச் செய்த ஒல்காப் புகழ்மிக்க ஒப்புரவுப் பண்பாட்டை என்னவென்று வாழ்த்துவது! இளையான்குடி மாற நாயனாரின் விருந்தோம்பற் பண்பும் நெஞ்சில் நெகிழ்வு தரத்தக்கது. சேக்கிழாரின் பெரிய புராணத்திலுள்ள ஒப்புரவு நெறி இன்றைச் சமுதாயத்தில் மேற்கொள்ளப்பெறுமானால் நிர்ப்பந்தமான-வன்முறை வழிப்பட்ட சமுதாய மாற்றத்தை அவாவ வேண்டிய அவசியமில்லை.

தமிழ் நாகரிகம் சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாயத்தைக் குறிக்கோளாக, உடையது. அந்நெறியிலேயே முயன்று வாழ்ந்த பெருமை தமிழினத்திற்கு உண்டு. சங்ககாலத்துச் சான்றோர் பக்குடுக்கை நன்கணியார் என்பவர், 'ஒரு வீட்டில் மணமுரசு கேட்பானேன்? பிறிதொரு வீட்டில் சாப்பாறை கேட்பானேன்? இம்மாறுபட்ட நிகழ்வு கொடுமையானது. இதற்குக் காரணமாய் அமைந்துள்ள அடிப்படை பண்பில்லாதது. உலகத்தின் நடைமுறை இன்னாததாக இருக்கலாம்; ஆனால் நாம் முயன்று அதை இனியதாக ஆக்க வேண்டும்' என்று அறிவுறுத்துகின்றார்.

"ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்
இன்னா தம்மஇவ் வுலகம்
இனிய காண்க, இதன் இயல்புணர்ந் தோரே."

(புறம்.194)

இங்குப் பேசப்பெறும் துன்பம் இயற்கையின் வழிப்பட்டது. அதாவது இறத்தலைப் பற்றியது. இறத்தல் இயற்கை. இயற்கை நியதியின் வழிப்பட்ட துன்பத்தைச் சாடுகிறார். அதையே மாற்றச் சொல்கிறார். ஆனால்

இன்றைய தமிழகமோ இயற்கை நியதியின் வழிப்பட்ட துன்பத்தில் வருந்துவதைவிட, அறியாமையினாலும் தன்னல நயப்பினாலும் சமுதாய உணர்வின்மையினாலும் அல்லறும் துன்பம் கொடியதாக இருக்கிறது. தீண்டாமை, சாதி வேற்றுமை, காதல் திருமணமின்மை, வறுமை, சமயந்தழுவிய வாழ்வின்மை, வாழ்வைத் தழுவிய சமயமின்மை ஆகிய பிழைகள் பெருந்துன்பம் செய்வன. இப்பிழைகளினின்றும் நாம் விடுதலை பெறும் நாள் எந்நாளோ? இந்தப் பாடல் சற்றேறக்குறைய 2300 ஆண்டுகளுக்கு முன் தோன்றியது. இந்தப் பாடல் தோன்றி ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு சுந்தரர் அதே உணர்வோடு வருந்தியதைச் சேக்கிழார் எடுத்துக் காட்டுகிறார்.

"மறையோர் வாழும் அப்பதியின்
மாட வீதி மருங்கணைவார்
நிறையும் செல்வத்(து) எதிர்மனைகள்
இரண்டில், நிகழ்மங் கலவியங்கள்
அறையும் ஒலிஒன் றில், ஒன்றில்
அழுகை ஒலி வந்(து) எழலும் ஆங்(கு)
உறையும் மறையோர் களைஇரண்டும்
உடனே நிகழ்வ தென்! என்றார்"

என்பது சேக்கிழார் பாடல். இத்திருப்பாடலைச் சிந்தனை செய்யும் தமிழகமே! ஓதும் சைவ உலகமே! இத்திருப் பாடலுக்குச் செயலுருவம் கொடுக்க முன் வருக! "இரண்டும் உடனிகழ்வது ஏன்?" என்பது அன்று சுந்தரர் கேட்ட வினா. இன்றும் இந்த வினா கேட்கிறது. ஒரு வீட்டில் வறுமை; ஒரு வீட்டில் வளம். திருக்கோயிலில் செல்வச் செழிப்பு; மக்களிடத்தில் வறுமை. மடங்கள் மாளிகைகளென உயர்தல்; மக்கள் வறுமையுற்றுச் சிறுமையுறுதல். ஒரு வீட்டில் துன்பம்; ஒரு வீட்டில் இன்பம். இந்நிலை சைவத்திற்கு ஏற்புடையதா? அப்படியானால் சைவம், "மேன்மை கொள் சைவ நீதி"

என்று போற்றப் பெறுமா? எண்ணுங்கள்? துன்பத்தை எதிர்த்துப் போராடுங்கள்! தொழுதகைத் துன்பம் துடையுங்கள்! எங்கும் இன்பம்! எல்லாருக்கும் இன்பம் என்ற புதுமை நிறைந்த-பொதுமை நிறைந்த சமுதாய அமைப்பே சைவ சமுதாயமென முடிவு செய்யுங்கள்! முடிவுக்கு முனைப்புத் தாருங்கள்! முனைந்து நிற்கும் பணியைப் பொதுவில் ஆடுபவன் முடித்து வைப்பான்! பொதுமைச் சமுதாயம் அமையும்! இம்மண்ணகம் விண்ணகமாகும்! இதுவே சேக்கிழாரின் சமுதாயச் செந்நெறி.

## வாணிகச் சிறப்பு

சேக்கிழார் சமுதாய நிகழ்வுக்குரிய அனைத்துத் துறை களையும் வாய்ப்பு ஏற்படும் பொழுதெல்லாம் பாராட்டு கிறார். பல்வேறு தொழில்களை மேற்கொண்டோரும் பெரிய புராணத்தில் உள்ளனர். நாம் பல்வேறு தொழில்களையும் எடுத்து விளக்க விரும்பினாலும் விரிவஞ்சி விடுக்கின்றோம். ஆயினும் இன்றைய சமுதாய அமைப்பில் வாணிகம் முதன்மை நிலையை அடைந்திருக்கிறது. நாடு விடுதலை பெற்ற பிறகு வாணிகம் வளர்ந்து வருகிறது. ஆனாலும் வாணிகத்திலும் வியாபாரமே வளர்ந்து வருவது வருந்து தலுக்குரியது. வாணிகம் என்பது உள்நாட்டுப் பொருள்களை அயல்நாடுகளில் விற்றுச் செல்வம் கொண்டு வந்து சேர்ப்பது. வியாபாரம் என்பது கிழக்கு வீதியில் வாங்கி மேற்கு வீதியில் விற்பது. வியாபாரத்தில் உற்பத்தித் தொடர்புமில்லை; அயல்நாட்டுச் செல்வமும் இல்லை. மறைமுகமாகக் நம்மிடத்திலுள்ள செல்வத்தைச் சுழற்றிவிடுவதும் சுரண்டு வதும்தான். இத்தகைய வியாபார முறை இன்று பெருகி வருகிறது. நகரங்கள் தோறும் கடைகள், பெருகி வருகின்றன. "பிழைப்பில்லையா? பெட்டிக்கடை வை" என்கின்றனர். இதனால் நம் நாட்டுச் செல்வ வளம் வற்றிவருகிறது.

"வியாபாரிகள் பெருகும் நாடு அழியும்" என்றார் கிரேக்க நாட்டு அறிஞர் சாக்ரட்டீஸ். உற்பத்திக்குப் பயன்பட வேண்டிய மனித ஆற்றல் உட்கார்ந்து அழிகிறது. இந்த வியாபாரத்தில் கலப்படம், அளவுக் குறைவு போன்ற மோசடிகளும் மலிந்து வருகின்றன. இத்தகைய வியாபாரி களே இன்றைய அரசியல் இயக்கங்களுக்கும், சமய இயக்கங்களுக்கும் கூடப் பின்னணியாக உள்ளனர். இது வர வேற்கத் தக்கதன்று. சேக்கிழார் வாணிகத்தின் சிறப்பை வாயாரப் புகழ்கிறார். வாணிகம் அறவழியில் நிகழ வேண்டும்-வாய்மையில் வழாதிருக்க வேண்டும் என்பது சேக்கிழாரின் வாக்கு. காரைக்கால் அம்மையார் வரலாற்றில் காலைக்காலை அறிமுகம் செய்து வைக்கும் சேக்கிழார்,

> *"மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்*
> *ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி ஓங்குபதி*
> *கூனல்வளை திரைசுமந்து கொண்டேறி மண்டுகழிக்*
> *கானல்மிசை உலவுவளம் பெருகுதிருக் காரைக்கால்"*

என்று பாராட்டுகின்றார். அத்தகைய வணிகர் சமுதாயம் நம் நாட்டுக்குத் தேவை.

## அரசியல் நீதி

சேக்கிழார் முதலமைச்சராக இருந்தவர். ஆதலால் அரசியலைப் பற்றி ஐயத்திற்கிடமின்றித் தெளிவாகப் பேசுகிறார். சேக்கிழாரின் பெரியபுராணத்தில் 'திருநகரச் சிறப்பு' மிகுந்த சிறப்புடையது. அதில் அரசு, மன்னுயிரை எப்படிக் காக்க வேண்டுமென்பதை விளக்கிப் பாடுகிறார்.

> *மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்*
> *தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்*
> *ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்*
> *ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ?*

இந்தப் பாடலில் மிகவுயர்ந்த அரசியல் நீதியைக் கூறுகிறார். சேக்கிழார். நம்முடைய வாழ்க்கையில் நடைமுறை நிகழ்வு களைக் கூர்ந்து நேக்கி இந்தப் பாடலைச் சிந்திக்கும் பொழுது பலவற்றை உணரமுடிகிறது. உயிர்களுக்கு ஆட்சியால் தொல்லை நேரக் கூடாது. ஆட்சி என்பது உயிர்களுக்குக் காவற் பணியே தவிர அஃது அதிகாரமன்று. காலப்போக்கில் அஃது அதிகாரமாகிவிட்டது. ஆட்சி மக்களை வருத்துதல் கூடாது. ஆட்சியில் அமர்ந்துள்ளவரின் பரிவாரங்கள் இருக்கின்றனவே, அவற்றால் வரும் தொல்லைதான் அதிகம். தன்னுடைய பரிவாரங்கள், உறவினர், சுற்றத்தார் முதலியோர் தன்னிடத்துள்ள செல்வாக்கைப் பயன்படுத்தி மக்களுக்குத் துன்பம் செய்யாமல் அரசு பாதுகாக்க வேண்டும்.

அடுத்து, மிக நுட்பமாகச் சேக்கிழர் ஒன்றைக் குறிப்பிடுகின்றார். பகையே யில்லாதவர் யாருமிலர்; இருந்தலும் இயலாது. அதிலும் இந்த நூற்றாண்டில் ஒருவர் பெற்றுள்ள திறமையும் பெருமையுமே மற்றவர்களால் தாங்கிக் கொள்ளமுடியாதபோது, பகையில்லாமலிருந்துவிட இயலாது. ஆனால் அந்தப் பகை வலிமையுடையதாக இருக்காது; நேரில் சந்திக்கச் சக்தியற்றிருக்கும். அப்போது ஆட்சியைக் கருவியாகப் பயன்படுத்தி அது தன் பகை முடிக்க எண்ணும். அன்று சமணர்கள் பல்லவ அரசைப் பயன்படுத்தினர். இன்றும் நெருக்கடிகால அரசைப் பயன்படுத்தினர்; தமது பகையைத் தாம் சந்திக்க முடியாமல் அரசைத் துணையாகப் பெற முயலும்போது அரசு உடன் போதல் நெறியன்று. ஆட்சியாளர், மற்றவர்தம் நடை முறையில் குற்றங்களை, ஆட்சியின் நடைமுறையிலேயே காண வேண்டுமே தவிரப் பகைவர் வாயிலாகக் கேட்டு, பகைவர் கூறும் அக்குற்றமிருக்கும் என்று நம்பி, பின் நம்பியது மோசமாகிவிடக் கூடாதே என்று கருதிக் குற்றத்தைப் படைத்துக் காட்டுதலோ, உள்ளதைப் பெரிதாக்கிக்

காட்டுதலோ போன்ற குற்றத்தை அரசு செய்தல் கூடாது. மற்றபடி கள்வர், கொடிய விலங்குகள், விலங்கனைய மாக்கள் அதாவது கயவர் இவர்களிடமிருந்தும் அரசு குடிகளைக் காப்பாற்ற வேண்டும். இங்ஙனம் ஐவகை நெறியாலும் பாதுகாக்கும் அரசே அரசு. சேரமான் பெருமான் நாயனார், அவர் தம் ஆட்சியிலமைந்திருந்த அனைத்து உயிர்களும்- ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை கழறுவன அறிந்து, அவையுற்ற துன்பம் நீக்கி ஆட்சி செய்தமையை எங்ஙனம் வாழ்த்துவது! அத்தகைய நல்லரசு அமையத் தவம் செய்வோமாக!

## இறைவன் வாழ்வுப் பொருள்

சேக்கிழார் இறைவழிபாட்டை எப்படிக் கருது கின்றார்? ஒரு மனிதன், சராசரித் தகுதியுடையவனாக இருப்பதற்கு அவன் இறைவழிபாடு நிகழ்த்தபவனாக இருக்க வேண்டும் என்று சேக்கிழார் ஐயத்துக் கிடமின்றிக் கூறுகிறார். அதனால் சிவனடியார் என்ற தகுதி எங்கும் எதிலும் வற்புறுத்தப் பெறுகிறது. ஆனால் சிவம் வாழ்த்துப் பொருள் மட்டுமல்ல-வாழ்வுப் பொருள் என்பதைச் சேக்கிழார் தொடர்ந்து வலியுறுத்துகிறார். சுந்தரர் வரலாற்றில் சிவம், சுந்தரர்க்குத் தோழமையாய்ப் பொன்னும் மெய்ப்பொருளும் தந்து, போகமும் திருவும் புணர்த்து வாழ்வளித்தது அறிதற் குரியது. இறைவன் அச்சுறுத்துவான்! நரகமும் தருவான் என்ற பயக்கொள்கை அயல்வழி ஊடுருவலால் வந்தது. அந்தக் காலத்தில் சேக்கிழார், மண்ணில் பெருமானை நடமாட வைக்கின்றார். உற்ற தோழனாக உலாவர வைக்கிறார். திருக்கச்சூரில் இறைவன் ஆரூரருக்காக இல்லங்கள் தோறும் சென்று இரந்து வரும் நிலையை உலகில் உள்ள வேறு எந்தக் காப்பியத்தில் காண முடியும்? இன்றும் இறைவனை வாழ்த்துப் பொருளாகக் கொள்ளாமல் வாழ்வுப் பொருளாகக் கொள்ளும் சேக்கிழார் செந்நெறியை மேற்கொள்வோமாக!

# 12

## சேக்கிழார் செந்நெறி

உலகிற்கு அனுபவம் பொது. ஆனால் அந்த அனுபவத்தை யடையும் நெறிமுறைகள் பொதுவல்ல. அவரவர் இயல்புக்கு ஏற்றவாறு மாறுபடும். இயல்பை நினைவிற் கொள்ளாமல் இலட்சியங்களை ஆய்வு செய்யப் புகுவதும், அவ் இலட்சியங்களை அடையும் நெறிகளை ஆய்வு செய்யப் புகுவதும், அதனால் ஏற்பட்ட முடிபுகளே, முடிபுகள் என்பதும் நெறியல்ல. எதற்கும், அதற்கென்று அமையும் வகையுண்டு; வழியுண்டு; சாதாரணமான அன்றாட உலக வாழ்வியலுக்குக் கூட ஏற்றுக்கொள்ளப் பெற்ற வழிவகைகள் உண்டு என்றால் அறிவியலுக்கு அதற்கென்று உரிய தனிமுறை இருக்காதா, என்ன? அறிவியலுக்கே நியதியின் பாற்பட்ட வாய்பாடுகள் உண்டு; வழிகள் உண்டு; வகைகள் உண்டு என்றால் அறிவியலிலும் முதிர்ந்த அருளியலுக்குச் சிறப்புடைய வாய்பாடுகளும் அமைந்து இருக்கத்தானே செய்யும்!

ஏன்? சாதாரணக் கதை - பாட்டி பேரனுக்குச் சொல்லும் கதை. கதை, கதையே தானா? அந்தக் கதைக்குக் கருத்து இல்லையா? அந்தக் கதை சொல்வதில் நோக்க மில்லையா? இவை அனைத்தும் எல்லாருக்கும் ஒரு மாதிரி

தோன்றுமா? கையில் சோற்றை வைத்துக்கொண்டு குழந்தைக்குப் பூச்சாண்டியை நினைவூட்டுகிறாள் பாட்டி. அவளுக்குக் குழந்தையைப் பயமுறுத்துதல் நோக்கமல்ல. சோற்றை ஊட்டுவதே நோக்கம். ஆனால், பாட்டியின் பகைவர்கள் குழந்தையைப் பயமுறுத்துகிறாள் என்று குற்றம் சொல்லலாம்.

உடல்நூல் வல்லார் ஒருவர் "தேங்காய் தின்பது உடலுக்கு நல்லது" என்று ஒரு சொற்பொழிவில் கூறினார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒருவன் நேரே தேங்காய் விற்கும் கடைக்குச் சென்றான். அவன் தேங்காயை முன் பார்த்ததும் இல்லை; தின்றதும் இல்லை. ஆதலால் அவன், வழியில் சென்றவர்களைத் "தேங்காய் கடை எது?" என்று கேட்டுக்கொண்டு தேங்காய்க் கடைக்குச் சென்றான். அவன் சென்று சேர்ந்த தேங்காய்க் கடை மட்டையோடுள்ள தேங்காய் விற்கப்படும் கடை. காசு கொடுத்து தேங்காய் வாங்கினான். தேங்காய் தின்ன வேண்டுமென்ற ஆசையால் தனியிடம் தேடிச் சென்றான். அங்கிருந்தவாறே தேங்காயைக் கடித்துத் தின்ன முயன்றான். முடிவு பல் போயிற்று; செங்குருதி சிந்திற்று! சினம் கொண்டான். அறிஞர் கருத்தைப் பிழையெனத் துணிந்தான். அவரை நாடிச் சென்று, அலறினான்! அவர் அமைதியாகத் தேங்காய் தின்னும் முறையை அறிந்துகொள்ளாமல் தேங்காய் தின்ன முயன்றது, தவறு என்று அவனை அமைதிப்படுத்தித் தேங்காய் தின்னும் நெறிமுறையை எடுத்துக் காட்டியதோடு, செய்துகாட்டி அவனுக்குத் தேங்காய்ச் சுவையைக் காட்டினார்.

இந்தக் கதைபோல்தான் இன்று சிலர் நூல்களை ஆராய முற்படுகின்றார்கள். எழுதப்படிக்கத் தெரிந்தவர்க ளெல்லாம் நூலாராய்ச்சிக்குத் தகுதி வுடையவர்களாக முடியாது. அதுமட்டுமல்ல. ஒரு துறையில் துறைபோகக் கற்றவர்கள் பிறிதொரு துறையில் யாதும் அறியாதிருக்கலாம். அது தவறன்று. ஆனால், இந்த உண்மையை இன்று

உணர்வாரில்லை. அறிவுத் துறையில் ஒரு போலி மயக்கம் எங்கும் காணப்படுகிறது. எல்லாம் தெரிந்தவர்களாகக் காட்டிக்கொள்ளும் தவறு மலிந்து வருகிறது. அறியாமையை விடக் கொடுமை, அறியாமையை அறிவு என நம்புதல்; மற்றவர்க்குக் காட்டுதல். இந்தப் புல்லறிவு இன்று எங்கும் பரவலாகக் காணப்பெறுகிறது.

ஒருநூலைக் கற்கவும், ஆராயவும் தொடங்கும் ஒருவன், முதலில் தன்னை நடுநிலைக்கு ஆளாக்கிக் கொள்ள வேண்டும். சார்புகளுக்கு ஆளானவர்கள் வழக்கைக் கேட்காமலேயே முடிவை எழுதி வைத்து விடுவார்கள். நூலை, நூல் வழி நின்று ஆராயாமலே எடுத்துரைக்கத் தலைப்படுவர். இம்முறை அறிவியலுக்கும் பயன்தாராது; அனுபவத்திற்கும் துணைவராது.

இலக்கியம் தோன்றிய பிறகே, அதன் இலக்கணம் அவ்விலக்கியத்தின் அடிப்படையில் தோன்றுகிறது. இலக்கியத்திற்குப் பின்னே தோன்றிய இலக்கணத்தின் அடிப்படையில் உரைநலம் காண்பது, பொருள்நலம் காண்பது நேரிய மரபு ஆகாது. அந்த இலக்கிய உத்தி களுக்கேற்பப் புதிய இலக்கண விதிகள் தோன்ற வேண்டுமே தவிர, இலக்கணம் நோக்கி இலக்கியச் செழுமை சிதைக்கப்படுதல் முறையன்று. நடைபயிலும் கால்களில் தளை பூட்டுதல் நடையைத் தடுக்கும். அதைவிடக் கொடுமை, சிந்தனைக்குப் பழக்கவழக்கங்கள் என்ற தளைகளைப் பூட்டுதல். பழக்க வழக்கங்கள் என்ற தளைகளுக்குள் சிக்கி நூலை ஆராயப் புகும் பொழுது, நூலின் கருத்து மேம்பட்டு விளங்குவதற்கு மாறாக, நமது பழக்க வழக்கங்களே மிஞ்சும். அதனால் நமது பழக்க வழக்கங்களுக்கு அந்த நூலாசிரியனைச் சாட்சியமாக்குவதே வழக்கம். நாம் நூலாசிரியனை நோக்கிப் பயணம் செய்வதென்பது இல்லை.

அடுத்து, நூலாசிரியனிடத்தில் மரியாதை – மதிப்பு என்பது நூலாசிரியனொடு மாறுபடாதது என்று கருதுகின்ற

பொய்ம்மை நிறைந்த மூட நம்பிக்கை அறவே கூடாது. மதிப்பு என்பது வேறு. மாறுபாடு என்பது வேறு. விருப்பம் என்பது வேறு; வேறுபாடு என்பது வேறு. இவை தம்முள் முரண்பாடுகள் வளர்ச்சியடையாத-மானுடர் என்ற பெயரில் உலவும்-மாக்களிடத்திலேயே இருக்கும். தெளி வாகச் சொன்னால் சான்றோர்களிடத்தில் மாறுபாடுகள் ஏற்பட ஏற்பட மதிப்பு வளரும். அதற்குத் சான்றாண்மை என்று பெயர்.

தமிழகச் சமய, சமூக அமைப்பில் புராணங்களுக்கு நிறைந்த இடமுண்டு. இந்தப் புராணங்களை ஆதரித்தும் ஓர் அணி பிரசாரம் செய்து கொண்டு வருகிறது. எதிர்த்தும் ஓர் அணி பிரசாரம் செய்து கொண்டு வருகிறது. இவற்றில் பொதுமக்களாகிய நாம் அடையும் பாடு, திண்டாட்டமாகப் போகிறது.

சேக்கிழார், "மாக்கதை" என்ற பெயரில் திருத் தொண்டர்கள் வரலாற்றைச் செந்தமிழில் செய்து தந்துள்ளார். அதனை வழக்கில் "பெரியபுராணம்" என்போம். இந்த நூலைக் கற்று, உணர்தல் எளிதன்று. பெரியபுராணம் இன்றைய சமுதாயத்தில் விவாதத்திற்குரிய பொருளாக மாறி வளர்ந்திருக்கிறது.

"பெரிய புராணத்தை எப்படி அணுகுவது?" வினாவிற்கு விடைகாணும் முயற்சியில் ஈடுபடுவோம். ஒன்று மட்டும் உறுதி. நம்முடைய நம்பிக்கைகளை மையமாக வைத்துச் சேக்கிழாரை நாம் அணுக மாட்டோம். பக்தியின் பெயரால் பெரிய புராணத்தை ஒற்றுத்தாள் மனோபாவத்தில் அணுகும் முயற்சியும் நாம் செய்யப் போவதில்லை. இந்த முயற்சியில் கிடைக்கும் விடைபற்றி மற்றவர்கள் எப்படி விமர்சிப்பார்கள் என்பது பற்றியும் கவலைப்பட வில்லை.

திருத்தொண்டர்கள் என்ற சொல் இனிய சொல்; கவர்ச்சி நிறைந்த வார்த்தை. திருத்தொண்டர் யார்? இன்று

திருத்தொண்டர், வார்த்தை வழக்கில் இல்லை. "பொதுத் தொண்டு" செய்வதாகச் சொல்லிக் கொள்பவர்கள் இருக்கிறார்கள். அவர்களும் கூட "தொண்டர்" என்று கூறிக் கொள்வதில்லை; அழைக்கப்படுவது இல்லை. இன்று, பொதுத்தொண்டு எனப்படுவது எது? பெரும்பாலும் பேச்சே பொதுத்தொண்டு என்று கருதப்பெறுகிறது. ஒரோவழி, பேச்சாளர்களுக்கு மேடை அமைத்துக் கொடுப்பதும் தொண்டு என்று கருதப் பெறுகிறது.

சேக்கிழார் காலத்தில் பொதுத்தொண்டு இருந்ததில்லை. ஆனால் திருத்தொண்டு இருந்தது. பொதுத் தொண்டு மக்களைப் பாமர மக்களாக-ஏழைகளாக எண்ணிக் கொண்டு செய்வது. திருத்தொண்டு, மக்களைக் கடவுளின் குழந்தைகளாக எண்ணிக் கடவுளுக்குச் செய்வதாக எண்ணிச் செய்வது. பழைய மனப்பான்மையுடையவர்கள் நேரிடையாகச் சொர்க்கத்திற்குப் போகும் யுக்தியைச் சொல்பவர்கள் மனிதனுக்குச் செய்யும் உதவியைப் 'பசு புண்ணியம்' என்று ஒதுக்குவர். ஆனால், மாதவச் சிவஞானமுனிவர் மனிதனாக எண்ணாமல் கடவுளின் பாத்திரமாக நினைந்து செய்தால் பசுபுண்ணியமல்ல; பதி புண்ணியம் என்றார். திருத்தொண்டராதல் எளிதன்று. அப்பரடிகள் திருத்தொண்டின் திருவுருவம்; ஆலயங்களைப் பாதுகாத்துத் தந்த அண்ணல். அப்பரடிகள் ஆலயங்களைப் பாதுகாத்தது எப்படி? "ஆலயப் பாதுகாப்பு மாநாடு" நடத்தியா? வெள்ளைத்தாளில் கருப்பு மையால் தீர்மானங்கள் எழுதியா? இவையெல்லாம் இன்றைய நம்மனோர் முறைகள். அதனால் மாநாடுகள் ஒருபுறம் கோலாகலமாக நடக்கின்றன. மறுபுறம், ஆலயங்கள், செடிகொடிகள் முளைத்து இடிந்து கொண்டிருக்கின்றன. அப்பரடிகள் உழவாரப் படைதாங்கிக் கைத்தொண்டு செய்து, திருக்கோயில்களைப் பாதுகாத்தார். சேக்கிழார், "வாய்த்தொண்டை விலக்கவே கைத்தொண்டு" என்று

கூறுகிறார். பழந்தமிழகத்தில் திருத்தொண்டர்கள் இருந்தனர். திருத்தொண்டர்கள் திருக்கோயில்களில் உழவாரப் பணி செய்தனர். இன்றோ, திருக்கோயில்கள் திருத்தொண்டர் களால் சூழப்பெற வில்லை. அது தொழிலாகி விட்டது. பூசனை செய்பவரிலிருந்து, தூய்மை - துப்புரவு செய்யும் பணியாள் வரை இன்று தொழில் நினைவே! வணிகக் கண்ணோட்டமே!

அடியார்கள் ஆதல் எளிதன்று. அரிதினும் அரிது. ஆள்பவனாவதற்குரிய முயற்சியை விட அடியார் ஆதலுக்கு நிறைந்த முயற்சி தேவை. யாருடைய இதயம் அசைவின்றி ஆண்டவன் அடிகளைச் சார்ந்திருக்கிறதோ அவரே அடியார். நீரூற்று மடியில் உள்ள மரம் வளமான பசுமை பெற்றிருத்தல் போல் திருவடிகளைத் தாங்கிய இதயம் பெற்ற அடியார்கள் அன்பினால் - அருளினால் செழித்து வாழ் விப்பர். அடியார்கள் "நான்" ஒழிந்தவர்கள். ஆங்கு முனைப் பில்லை. மரத்தின் வேர் மண்ணிலே மறைந்து வளம் தருதல்போல யார்க்கும் அடியாராகித் தொழும்பு பூண்டு பணி செய்வர். புகழ்மொழி அவர்களை மயக்குவதில்லை. இகழ்மொழி அவர்களுக்கு நோதலைத் தருவதில்லை. திருத்தொண்டர்கள் அளவிலாத பெருமை யுடையவர்கள். அவர்களுடைய வரலாறு அகத்திருள் நீக்கும். இருள் என்பது அறியாமை. அறியாமை, அணவத்தின் விளைவு. ஆணவம் அடங்காப் பிடாரித்தனமுடையது. அருளார்ந்த அனுபவம் தரும் பத்திமை வாழ்க்கையே, தாழ்வு எனும் தன்மைதருவது. திருவாரூரில் அடியார்களை மதியாது சென்ற ஆரூரரை "அடியார்க்கு அடியேன்" என்று திரும்பத்திரும்பச் சொல்லவைத்தார் திருவாரூர்த் தியாகேசர். அங்ஙனம் பிறந்ததுதான் திருத்தொண்டத் தொகை. திருத்தொண்டத் தொகையிலிருந்து மலர்ந்தது திருத்தொண்டர் புராணம். புராணம் என்பது பழைய வரலாறு. சேக்கிழார் செய்த அந்தப் பழையவரலாற்றை அடியார்கள் வரலாற்றைக்

கற்றால் அறியாமை அகலும் ஆணவத்தின் கொட்டம் அடங்கும்; அன்பு ஊற்றெடுக்கும்; பக்தி கனியும்; திருத்தொண்டு செய்யும் உணர்வு முகிழ்க்கும்.

பழங்காலத்தில் அடியார்கள் தனிமை வாழ்க்கை யுடையவர்கள் அல்லர். அவர்கள் ஒரு கூட்டம். சாதாரணக் கூட்டமல்ல. திருக்கூட்டம். அடியார் திருக்கூட்டம், நாயன்மார் சொல்லமுதம் ஆர்ந்து அனுபவிக்கும் பேரவை யாகும். பேரவை, சமய உலகிற்கு-சமயவழி நிற்கும் மானிட சமூகத்திற்கு அனுபவத்தின் வழி விதிமுறைகளை வழங்கும். அந்த விதி முறைகளே சமூகத்தின் சட்டங்கள்.

திருத்தொண்டர் வரலாறு கயிலையில் தொடங்கு கிறது. கயிலையில் முடிகிறது. ஆம்! 'எல்லாம் ஈசன் செயல்' என்ற அநுபவ வாக்குப்படி - கயிலையே அம்முடிவாய கருத்தைத் தருகிறது. கயிலையே நிறைவேற்றி முடித்து வைக்கிறது. ஆதியே அந்தமாதலும், அந்தம் ஆதியாதலும் மரபு. மலை உயர்ந்தது; உயர்வுக்கு வழி செய்வது; எல்லா மலைகளிலும் சிறந்தது கயிலைமலை; ஓங்கி உயர்ந்த மலை; தண்ணளியிற் சிறந்த மலை; பயன்படு நிலையில் பாரினில் சிறந்தது. பனிமால்வரை, திருநீற்றுக் காப்பின் திருக் கோலத்தை நினைவிற்குத் தருகிறது. அறிவரியான், அநுபவத்திற்குரியான் என்று வாழ்த்தப் பெறும் கடவுள் உறையும் மலை. கயிலை மலை புண்ணியத்தின் திரட்சி; ஆம் அங்குப் பாபத்தின் வாசனைக்கும் இடம் இல்லை. எண்ணங்களில் உயர்ந்த மனிதர்கள் - சிந்தனையில் சிறந்த மனிதர்கள் செயலாலும் சிறந்தே விளங்கிடுவர்; செயல் உயர்ந்தால் பாபம் இல்லை. சிந்தனையில் - செயலில் சிறந்தவர்களே நிறை தவத்தினர். ஆசைகளை, வெறுத்து முனிந்தவர்களை முனிவர் என்று கூறுவது தமிழ் மரபு. வடமொழியில் முநி: என்றால் நிறைந்த குணம் உடையவர். அதாவது மநநசீலமாகிய உள்ளத்தொழுக்கம் உடையவர் என்பது பொருள்: 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்' என்று

வள்ளுவம் கூறும். 'புலன் அழுக்கற்ற அந்தணாளர்' என்று புறநானூறு புகலும். பொறிகளில் தூய்மை காத்தல் எளிது; புகழ்ச்சியின் பால் உள்ளவிருப்பும், இகழ்ச்சியின்பால் உள்ள வெறுப்பும், தண்டனையின்பால் அச்சமும்கூட, பொறிகளின் தூய்மை காக்கத் தூண்டும். பொறிகளில் தூய்மை காத்துப் புலன்களில் மாசற்று இருந்தலைப் "புறம் சுவர்க்கோலம் செய்தல்" என்று நகைத்துப் புறக்கணிக்கும் சான்றோர் உலகம். புலன்களில், மனத்தில், உணர்வில், உயிரில் தூய்மை காத்தலே தூய்மை. ஆதுவே தவம். புலன் தூய்மை பேணும் தவத்தின் பொலிவே பொறிகளில் தூய்மை தர வேண்டும். புலன்களில் உள்ள சீலத்தினை - நோன்பினைக் காக்கும் வேலியாகப் பொறிகளின் தூய்மை துணை செய்யலாம்.

பொறிவாயில் ஐந்தவித்தல் என்று வள்ளுவம் காட்டும் வாழ்வியல் எண்ணத்தக்கது. அவித்தல்-அழித்தல் அல்ல; ஒடுக்குதல் அல்ல; அடக்குதல் அல்ல; கிழங்கு அவித்தல், இட்டலி அவித்தல் என்ற உலகியல் வழக்குளை ஒப்பு நோக்குக. "சுவையில்லாத வற்றிற்கும் சுவை தந்து, நலந்தரு பொருளாக மாற்றுதல் அவித்தலால் பெறப்படும் பயன். அது போல உயிர்க்கு இன்பம் பயவாத புலன்களை, இன்பந்தரும் நெறியில் பக்குவப் படுத்துதலே அவித்தல் ஆகும்.

மோனத்திலிருந்து, பொறிபுலன்களை ஒருங்கிணைத்து உடையானின் திருவடிப்போதில் ஒன்றிய உள்ளம் பெற்றவர்கள் முனிவர்கள். கயிலையில் முனிவர்கள் சூழ இறைவன் - பரமசிவம் உமையொடு காதலித்தருள் பாலிக் கிறான். பெருமானுக்குப் பணிவிடை செய்தலை மேற் கொண்டிருந்த ஆலால சுந்தரம்-கமலினி, அநிந்திதை மீது மனம் செலுத்தினார். அண்ணல் பெருமானுக்கு இது தெரிந்தது. மாதர்மேல் மனம் வைத்த ஆலால சுந்தரரை-மண் மீது மெல்லியலாளருடன் காதலின்பம் கலந்தணைந்து வாழ ஆணை பிறப்பித்தனன்; இது என்ன நீதி? இறைவனக்கு ஒரு நீதி; அடியார்க்கு ஒரு நீதியா? கயிலையில் இறைவன்

உமையொடு காதலித்து வாழலாம். ஆனால் அடியார் காதலித்து வாழக் கூடாதா? கேள்வியில் நியாயம் இல்லாமல் இல்லை. ஆனால், 'காதல்' எல்லாம் ஒருதன்மையாமோ? இறைவன் உமையொடு காதலித்தல் உடல் நினைவு நீங்கிய உணர்வுக் காதல்; காரணங்கடந்த காதல்; மயக்கம் இல்லா மாண்புறு காதல்; உலகு இன்புறக் காதலிக்கும் காதல். ஆலாலசுந்தரர் காதலோ உடல் வழிப்பட்டது. மயக்க நிலையினது. மயக்க நிலைக் காதலுக்குரிய இடம் மண்ணகமே. ஆலாலசுந்தரரின் காதல், ஆலாலசுந்தரருக்குப் பிறப்பைத் தந்தது; அடியார் உலகத்திற்குத் திருத்தொண்டத் தொகையைத் தந்தது; அமரர் தம் தலைவனை ஈசனை ஆரூர்த் தெருவில் நடக்க வைத்தது; தென்திசைப் புகழினை உலகுக்கு உணர்த்தியது. திருத்தொண்டர் புராணம் தொடங்குகிறது.

கயிலைக்கு நிகரான பெருமை தமிழகத்திற்கு உண்டு. தமிழகத்தின் திருவையாறு தென் கயிலையாயிற்று. அதனாலன்றோ 'மாதவம் செய்த தென்திசை' என்று போற்றப் பெறுகிறது. ஆதலால், கயிலையில் தொடங்கிய திருத்தொண்டர் வரலாறு - தமிழகத்தில் நிகழ்கிறது. தையல் தமீஇய மனம் உடையவராய்த் தோற்றிய சுந்தரர் 'தம்பிரானைத் தம் உள்ளம் தழீஇயவராக வளர்ந்து - உபமன்னிய முனிவரும் தொழும் தன்மையராக உயர்ந்த வரலாறு திருத்தொண்டர் புராணத்தின் கருப் பொருள். ஆலால சுந்தரரின் காதல் கயிலையில் மயக்க நிலையில் தொடங்கினும், மண்ணகத்தில் அக்காதல் வளர்ந்து தூய்மை நிலை எய்தியது. "பெற்ற சிற்றின்பமே பேரின்பமெனின்" எனவும் "சங்கிலியார் மென்றடந்தோள் தோயினும் நின் திருவருள் மறக்க கில்லேன்" எனவும் வாழும் பெரு நிலைமையினைச் சுந்தரர் பெற்றார். காதல் சிறந்துழி-வேட்கை தணியும். தூய காதல் விடுதலைக்குத் துணை செய்யும்; மனையறம் தீதன்று; நெறி வழி நிகழின்

மனையறத்திலும் துறவு உண்டு. துய்ப்பின் எய்ப்பில் தொடங்கும் துறவினும், துறவில் தொடங்கும் துய்ப்பு மிக உயர்ந்தது. துறவில் தொடங்கும் துய்ப்பின் மூலமே எய்ப்பினில் வைப்பாகிய இறைவனை அடையலாம். இத்தகைய சிறப்புடைய இல்வாழ்க்கையே அறம்; பெயரளவில் நிகழ்வது பழிப்பை ஆக்கும் பொழுது போக்காகும்.

திருத்தொண்டர் புராணம் சுந்தரரில் தொடங்குகிறது. பழுத்த மனத்து அடியார்கள் பலரை அறிமுகப்படுத்துகிறது.

நாடு! – எது நாடு? சேக்கிழார் அமைச்சுப் பணி செய்தவர். நல்ல நாட்டைப் பற்றி அவர் ஒரு சித்திரமே தருகிறார். நாட்டில் நல்ல நீர்வளம் இருக்க வேண்டும். சோழநாட்டைக் காவிரி வளப்படுத்தி வாழ்விக்கிறது. பொன்னனைய கதிர்களைத் தருவதால் 'பொன்னி' என்று காவிரி பெயர் பெற்றது. காவிரியின் ஆற்றொழுக்கு அன்னை பராசக்தியின் கருணை போன்றது. ஆம்! அன்னையின் கருணை அனைவரையும் காக்கும்! அதுபோல், சோழநாடு – அதனில் ஒரு பகுதியாகிய இன்றைய தஞ்சைத் தரணி கோடானு கோடி மக்களுக்கு உணவை வழங்குகிறது. உயிர்க் கொடை அளிக்கிறது. காவிரி நாட்டில் காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்போர் அன்றும் இல்லை! இன்றும் இல்லை! காவிரி நாடு முழுதும் கழனிகளில் சுறுசுறுப்பாகக் கடமைகள் நிகழும். உழுதசாலில் தெளிந்த சேற்றின் இழுது செய்யினுள் இந்திர தெய்வத்தைத் தொழுது நாற்று நடுவர் என்று சேக்கிழார் கூறுகிறார். உழுதசேறு, கட்டிகளற்றதாக நெய் இழுது போல இருந்தது என்று சேக்கிழார் கூறுவது காவிரி நாட்டு உழவர் திறம் காட்டுகிறது. அஃது இன்றைய உழவர்களுக்கொரு பாடம்.

கழனிகளில் கதிர்கள் விளைந்து கிடக்கின்றன. எங்ஙனம்? பக்தியென்பது முனைப்பை முற்றாக அழிப்பது.

ஊனினை–உயிரினை உருக்கி உணர்வளிப்பது. அத்தகு பக்தியுடையவர்களிடத்தில் அன்பு உண்டு. எதன் மீது? பலவற்றிலா? பலவற்றின் மீதும் அன்பு – அதாவது ஆண்டவன் மீதும் அன்பு; அரண்மனை மீதும் அன்பு; சங்கரன் மீதும் அன்பு; கங்காளன் மீதும் அன்பு; காணிகள் மீதும் அன்பு என்று சிலர் சொல்வர். இது பக்தர்களுக்கு இலக்கணமல்ல; திருத்தொண்டர்களுக்கும் இலக்கணமல்ல. பக்தர்கள் பரமனுக்கு மட்டுமே அன்பு பூண்பர்; ஆட்செய்வர். கதிர்மணி தாளை இடமாகக் கொண்டு உணவெடுத்துத்தான் வளர்ந்தது. ஆனால், அந்தக் கதிர்மணி தன்னைத் தாங்கும் தாள் நிற்கும் நிலத்திடைக் கிடக்கும் உரம், தண்ணீர் ஆகியவற்றின் மீது மாளா அன்பு கொள்ளின் மனிதனுக்கு ஏது உணவு? அதுபோல் பரமனுக்கு ஆளாம் அன்பர்கள் வாழத்துடிப்பவர்கள் அல்லர். – வாழ்விக்கத் துடிப்பவர்கள். முற்றிய கதிர் பல ஒன்றோ டொன்று இணைந்து தழுவித் தலை வணங்கி நிலத்திடைக் கிடக்கும் காட்சி, ஊன்றிய கருத்துடையோருக்கு ஒரு தத்துவப் பல்கலைக் கழகம். பத்திமையிற் சிறந்த அடியார்களின் வாழ்க்கையில் ‘தனிமை’ இருத்தல் கூடாது; இருத்தல் இயலாது. அடியார்கள் தத்தமில் அகந்தழீஇக் கூடுவர். யார் வணங்கினார் என்று அறிந்து கொள்ள முடியாத வண்ணம் ஒருவரையொருவர் முந்திக்கொண்டு தொழுவர்; வணங்குவர். மெய்ப்பாட்டு மிகுதியால் வணங்கக் கிடைத்த தம்மையும் வணங்கிக் கொள்வர்.

வணக்கம், உள்ளீடு நிறைந்தது. முற்றிய கதிர்மணி இல்லாப் பதர் வணங்காது. உள்ளீடற்ற பதர், கழனியில் தலை நிமிர்ந்து நிற்கும்; ஆடும்; சுழன்று ஆடும்; காற்று ஆட்டிய வகையிலெல்லாம் ஆடும். அதுபோல, உள்ளீடற்றவர்கள் அபாரமாக ஆட்டம் போடுவர்; செருக்குடன் ஆடுவர்; ஆசைக் காற்று அலைக்கும் வழியெல்லாம் ஆடுவர். அடியார் வணக்கம் உள் நிறைந்து புறத்தே வெளிப்படுவதேயாம்.

அவர்கள் வயிற்றுக்காக வணங்குபவர்கள் அல்லர்; முகமனுக்காக வணங்குபவர்கள் அல்லர். ஞானத்தின் முதிர்ச்சியிலேயே உண்மையான வணக்கம் முகிழ்க்கிறது. இத்தகைய ஞானிகள் நாட்டின் மழைக்கு உதவுவார்கள். மாண்பினைச் சேர்ப்பார்கள். இவர்களே சான்றோர்கள். இத்தகு சான்றோர்கள் பல்கி வளரும் நாட்டிலேயே நரையிலா வாழ்க்கை கிடைக்கும்.

நாட்டிலுள்ள உழவர்கள் உழைத்துப்பொருள் சேர்க்கின்றனர். அரசுக்கு உரிய கடமையைச் செலுத்துகின்றனர். பழந்தமிழகத்தில் அது வரியல்ல. கடமை உணர்வுடன் செலுத்தப்பெறும் கடன். அரசுக்குத் தருவதை மகிழ்வுடன் முந்தித் தருவது முன்னோர் வழக்கம். அரசுக்குரிய வரியைச் குறைத்துக்காட்ட இரட்டைக் கணக்குமுறை இருந்ததில்லை; இருக்கக் கூடாது. காவிரி நாட்டு மக்கள் அரசுக்குரியன வற்றைக் கடமையெனக் கருதித் தந்தனர். அறங்கள் பல செய்தனர். கடவுளைப் போற்றினர்; ஆசிரியருக்கு அளித்தனர்; விருந்திற்கு வழங்கினர்; உற்றார் உறவினரைப் பேணிப் பாதுகாத்தனர். ஏன்? ஆட்சித் தலைவன் அநபாயனின் கொற்றக்குடை வெய்யில் மறைக்கும் குடையன்று. சமுதாயத்தைக் காப்பதில் தாய் குழந்தையைக் காப்பது போன்ற தண்ணளிக் குடையாக விளங்கியது. இஃது ஒரு சிறந்த நாட்டின் சமுதாய வாழ்க்கை.

இத்தகைய வாழ்க்கை சமுதாயத்தில் கால்கொள்ளு மானால், அங்கு இயல்பாகவே இன்றைய சோஷலிசத் தத்துவம் விளங்கித் தோன்றும். இந்த வாழ்க்கை முறையில் மாறுபாடுகள் தோன்றியதால் வளம் குறைந்துள்ளது; வறுமை பெருகியுள்ளது. அரசு வலிய ஏவலர் வைத்து அச்சுறுத்தி, கட்டாயப்படுத்தி வாங்குகிறது. திருக்கோயில்கள் கட்டாய மான கட்டணம் வைத்து வசூலிக்கின்றன. ஆசிரியருக்கு அரசு சம்பளம் வழங்குகிறது. சமுதாயம் நேரிடையாக வழங்கவில்லை விருந்தினர்கள் வீட்டுக்கு வருவதில்லை.

கு.IX.14.

"லாட்ஜ்"களுக்குப் போய் விடுகின்றனர். உற்றார், உறவினர் "ஒப்பு"க்குரியவராகி விட்டனர். நிர்ப்பந்தத்தின் அடிப் படையில் பழகுகின்றனர். ஆதலால், அரசும் செயற்கை முறையில் சோஷலிசம் படைக்க முயலுகிறது. அதற்கு மாறாகப் பழந்தமிழக வாழ்க்கை முறை – சேக்கிழார் காட்டிய நெறி வாழ்க்கையாக மலருமானால் இயற்கையாக சோஷலிசம் மலரும்.

மனு, இன்று விவாதத்திற்குரிய பெயர். மனுவைப்பற்றி ஆயிரமாயிரம் கதைகள். தர்மநீதி இன்று சர்ச்சைக்குரிய தாகியிருக்கிறது. மனோன்மணீயம் தந்த சுந்தரம் பிள்ளை மனு தந்த நீதி முறையைக் கண்டிக்கின்றார்.

"உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக்கு ஒரு நீதி" என்று சாடுகின்றார். ஆனால், உண்மை என்ன? ஆராய்ச்சி என்பது சார்பு நிலையற்றதாக நிகழவேண்டும் என்ற விதியை மீண்டும் நினைவூட்டிக் கொள்வோம். மனு என்ற பெயரில் வழிவழி பல மாமேதைகள் வாழ்ந்துள்ளனர். மனு, மக்கள் குலத்திற்கு நீதியை-நெறியைத் தந்தவர். மனு என்ற பெயரில் நீதி தோன்றிய காலம் எது? வழக்கம்போல் வரலாற்றாசிரியர் களிடத்தில் சண்டையே! மனு, ஒருவரா? பலரா? காலத்திற்குக் காலம் மனு என்ற பெயரில் பலர் வாழ்ந்து நீதி சேர்த்தனர் என்பதே பலர் கருத்து. இங்கேயும் வழக்கம்போல் சிலர் முரண்படுகின்றனர். ஒன்றை மறந்துவிடக் கூடாது. மனுநீதி தொடங்கிய காலம் கிறித்து பிறப்பதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முந்தியது. நாம் வாழ்வது இருபதாம் நூற்றாண்டு! கால வெள்ளம் கரைபுரண்டு ஓடி வந்திருக்கிறது. காலவெள்ளம் சமுதாயத்திற்குத் தந்த புதுக் கருத்தைப் பழைய மனிதர்களிடம் எதிர்பார்க்காதீர்கள்! அன்று அவன் வாழ்ந்த நிலையில் அவன் கருத்து வளர்ந்த கருத்தே! இன்று விமானத்தைப் படைத்த விஞ்ஞானிக்குப் பழைய கட்டைவண்டியைப் படைத்தோன் முன்னோடி என்பதை மறந்து விடுவது அறிவியலுக்கு அழகல்ல.

மனுநீதி தோன்றிய காலத்தில் வாழ்ந்த மனித சமுதாயத்தை நோக்கின் மனு ஆயிரம் மடங்கு உயர்ந்தவன். அவன் காலத்தில் வாழ்ந்த பிறநாட்டு அரசியல் சிந்தனையாளர்களை நோக்கின் அவனது அறிவியல் உயர்ந்தது. ஏன்? இன்றுமட்டும் என்ன வாழ்கிறது? மனுவை மறுப்பவர்கள் பெரிய குறையாகச் சொல்வது ஒரு குலத்துக்கு ஒரு நீதி என்ற முறையைத் தான்! ஒரே வகையான குற்றத்திற்கு மனிதர்களைப் பொறுத்துத் தண்டனை மாறுகிறது என்பதுதானே! இன்று தண்டனை ஒரு மாதிரியாகவா இருக்கிறது? இன்றைய சிறைச்சாலையில் வகுப்பு வேறுபாடு இல்லையா? பாமரனுக்கு ஒரு தண்டனை-படித்தவனுக்கு ஒரு தண்டனை என்று இல்லையா? ஏழைக்கு ஒரு தண்டனை-செல்வருக்கு ஒரு தண்டனை என்று இல்லையா? அறிந்து திட்டமிட்டு அரசுக்கு எதிராகப் போட்டியாகக் கள்ளநோட்டு அடித்த செல்வந்தர் சிறையில் 'ஏ' வகுப்பில் வாழவில்லையா? அதே சிறையில் உணர்ச்சியின் தூண்டுதலினால் தவறு செய்தவர்கள் 'சி' வகுப்பில் சித்திரவதைக் காளாக வில்லையா? தெளிவாகச் சொன்னால் மனுவின் நீதிமுறை குலப்பிரிவுகளில் மாறுபடுகிறது. ஆனால், செல்வ ஏற்றத் தாழ்வு காரணமான மனுவின் நீதி மாறுபடவில்லை. இன்றோ நாம் வளர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்கிறோம். சமநிலைச் சமுதாயம் என்று வாய்கிழியப் பேசுகிறோம். ஆனால் மனுவின் காலத்திலில்லாத செல்வத்திற் கேற்றவாறு தண்டனையைக் கூட்டிக்குறைத்து வழங்குகின்ற முறை நிலவுகின்றதே! மனு குலத்தின் அடிப்படையில் மனிதகுலத்தைப் பிரித்தான்.

மனுவினுடைய குலமுறைப் பிரிவு வள்ளுவருக்கும் உடன்பாடே. சாதிமுறை என்பது வேறு, குலமுறை என்பது வேறு. பழங்காலத்து முறை சாதிமுறைப்பிரிவு குலமுறைப் பிரிவு பிறப்பின் பாற்பட்ட தல்ல. கொண்டொழுகும்

ஒழுக்கம், தகுதி ஆகியவற்றின் பாற்பட்டது. சாதிமுறைப்பிரிவு பிறப்பின்பாற் பட்டது. நாம் நெறி தவறிக் கிடக்கின்ற பிறப்பின் வழிப்பட்ட சாதிமுறைகளை நினைத்துக் கொண்டு குலமுறைகளைப் பற்றிய சிந்தனையை மறந்து விட்டோம்.

பார்ப்பனக் குலம்! இது பழங்காலத்துக் குலமுறையில் தலையாய குலம். இந்தப் பார்ப்பனரையே தொல்காப்பியம், 'அறிவர்' என்றும் 'திருக்குறள் அந்தணர்' என்றும் எடுத்துக் கூறின. 'பார்ப்பனர்', 'அறிவர்' என்று அழைக்கப் பெற்றவர் முதிர்ந்த அறிஞர்கள். உயிர்களுக்கெல்லாம் ஓதுவித்து, ஞானம் நல்குபவர். அவர்கள் ஒழுக்கம் தண்ணளியே! மனு தொல்காப்பியத்தோடு திருக்குறளோடு இந்த அடிப்படையில் மாறுபடவில்லை. ஆனால், நமக்கு 'பார்ப்பனர்' என்றவுடன் கோபம் வருவது ஏன்? நமக்குச் சோற்றுக் கடை நடத்துகின்ற சுப்பிரமணிய ஐயர் முதல், அரசுப்பணி மனையில் ஏவல் கேட்டொழுகும் பணிக்குப் போட்டிபோடும் அரிகரஐயர் வரை நினைத்துக் கொண்டு மாழ்குகின்றோம். சோற்றை விலைக்கு விற்பவன் பார்ப்பனல்லன். காசுக்குக் கல்வியை விற்பவன் பார்ப்பனல்லன், நாளைய வாழ்க்கையைப் பற்றிச் சலனப்படுபவன் பார்ப்பனனல்லன். போர்முனை அறியாதவன் க்ஷத்திரியன் அல்லன். வாணிகம் செய்யாதவன் செட்டி அல்லன்; உழாதவன் வேளாளன் அல்லன். இதனையே நமது தலைமுறைப் புரட்சிக் கவிஞன் பாரதி,

> "பார்ப்பனக் குலம்
> கெட்டழி வெய்திய
> பாழடைந்த கலியுகம்..."

என்று பேசினான். குலமுறைப் பிரிவு, தகுதி சீலத்தின் பாற்பட்டுப் பிரிக்கப்பட்டவை. குலங்களின் தகுதி, சீலத்திற்கு ஏற்றவாறு தொழில் மாறுபடுதல் தவிர்க்க முடியாதது. ஒத்த உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. இந்தக் காலத்திலும் மிகப்பெரிய மாளிகையில் வாழும் குடியரசுத் தலைவர்

உண்டு. சின்னஞ்சிறு வீட்டில் அவருக்கு ஏவல் செய்து வாழும் பணியாளர்களும் உண்டு. இன்றும் வேறுபாடு உண்டு. ஆனால், வேறுபாடு இடைக்காலத்திலிருந்ததுபோல் அல்லாமல் அதாவது பிறப்பின் பாற்பட்டதல்லாமல் தகுதியின் பாற்பட்டதாக அமைந்துவிட்டது. ஆனால் இந்த மாற்றம் சட்டத்தின் அடிப்படையில் உலகியலில் அரசியலில் ஏற்பட்டிருக்ருக்கிறதே தவிர, சமுதாயம், முழுமையும் தழுவியதாக இல்லை. எனவே, மனுநீதி முற்றாக மறுக்கத் தக்கதுமல்ல, முற்றாக ஏற்றுக் கொள்ளத் தக்கதுமல்ல. மனுநீதி, மிகுந்த மரியாதை யுணர்ச்சியுடன் ஆய்வு செய்யத்தக்கது. அங்ஙனம் நடுநிலை உணர்வுடன் ஆய்வு செய்தால் மனுநீதி ஏற்றுப் போற்றத்தக்கதாகவே அமையும். அதனாலன்றோ ஆருரை ஆண்ட சோழன் ஆட்சி மனுநீதியில் அமைந்தது என்று சேக்கிழார் காட்டுகிறார்.

தமிழக வரலாற்றில் சோழப் பேரரசு புகழ்பூத்த பேரரசு. அரசுக்குரிய விழுமிய சீலமாகிய நீதியைப் போற்றிய பேரரசு. சோழப் பேரரசனின் திருமகன் தேரில் உலா வந்தான். அரச வீதியில் தேர் வந்து கொண்டிருந்த போது பச்சிளங்கன்று ஒன்று மிரண்டு யாரும் அறியா வகையில் ஓடித் தேர்ச் சக்கரத்தில் சிக்கி இறந்துவிட்டது. கன்றினை இழந்த பசு துயரம் தாங்க மாட்டாது அரண்மனை நோக்கி விரைந்தோடிற்று. சோழப் பேரரசின் கொற்றவனின் கோயில் முன்னேயுள்ள மணியைத் தன் கொம்பினால் இழுத்து ஒலிப்பித்தது. மணி ஓசை கேட்ட அரசன் பதறி ஓடி வந்தான். கன்றை இழந்த பசு, கண்ணீருடன் நிற்பதைக் கண்டான். பசுவின் கண்ணீர் பாராளும் மன்னனின் நெஞ்சினைச் சுட்டது. அரசின் ஆணையைக் குற்றமற நிறைவேற்ற வேண்டிய அமைச்சரை இகழ்ச்சியுடன் நோக்கினான். அமைச்சர் நிகழ்ந்தன கூறினார். நிகழ்ந்தன மட்டும் கூறாமல் நிகழ்வுக்கு உரிய காரணங்களையும்-சமாதானங்களையும் கூடச் சேர்த்து அமைச்சர் எடுத்துக் கூறினார்.

"இளவரசன் ஊர்ந்து சென்றதோ நெடுந்தேர். அதாவது உயரிய தேர்: ஒலிக்கும் மணிகள் கட்டப்பெற்ற தேர்; எண்ணில் பல தேர்களும் படைகளும் சூழச் சென்றான் இளவரசன். தேரூர்ந்து சென்றதும் அரசுலாத்தெரு, இறந்தகன்று இளைய கன்று. தேர், கன்றின் மீது ஊர்ந்து செல்லவில்லை. கன்று தேரிடைப் புகுந்து இறந்தது" என்றார் அமைச்சர். அமைச்சரின் விளக்கம் நுண்ணறிவின் பாற்பட்டது. கன்று, இறந்து பட்டதற்கு வேறு யாரும் காரணமல்ல என்பதை இவ்வளவு தெளிவாக விளக்க யாராலும் முடியாது.

ஊர்ந்த தேர், நெடுந்தேர். இளவரசன் தேரின் மீது அமர்ந்திருந்தான். அதனால் தேரின் அடியில் என்ன நிகழ்கிறது என்பதைக் காணும் வாய்ப்பில்லை. தேர் ஒலிசெய் மணிகளால் ஒப்பனை செய்யப்பெற்றது. ஆதலால், தேர்ந் நகர்ந்த போது மணிகள் ஒலி செய்தன. எனவே இளங்கன்றின் குரலொலியும் கேட்க வாய்ப்பில்லை. தேர்களும் படைகளும் சூழ வந்ததால் மண்ணகம் அவற்றால் மூடப்பெற்று பருவத்தாலும் உருவத்தாலும் இளைய கன்று ஒன்று இடையிற் புகுந்ததைக் காணும் வாய்ப்பில்லாமல் போய் விட்டது. தேரூர்ந்த வீதி, அரசுலா வீதி. அங்குப் பசுவும் கன்றும் வர விதியும் இல்லை; மரபும் இல்லை. எதிர்பாராத ஒன்று. கன்றும் இளையது. விளைவறியாது அது ஓடி வந்தது. தேர் தடம் மாறிக் கன்றின்மீது ஊரவில்லை. கன்றே தேரிடையிற் புகுந்தது. என்ன அற்புதமான சமாதானம்! சட்டப்படி நூற்றுக்கு நூறு சரி! இன்றையச் சூழ்நிலை யானால் இளவரசன் குற்றமுடையவனல்லன். கன்றே குற்றமுடையது. கன்று இறந்துபட்டதால் கன்று தவறு செய்திடத்துணையாகத் தாய்ப்பசு இருந்ததாகத் கருதப் பெற்றுத் தாய்ப்பசுவுக்கும் தண்டனை வழங்கும் முறை கிடைத்தாலும் கிடைத்திருக்கும், கொஞ்சம் மனச்சாட்சி இருந்தால் தாய்ப்பசுவுக்குக் கொஞ்சம் தண்ணீரும்

வைக்கோலும் அதனை உடையோனுக்கு இழப்பீட்டு நிதியாகச் சில வெண்பொற்காசுகளும் வழங்கப்பெறும். ஆனால், வரலாறு நிகழ்ந்தது சோழப் பேரரசில். எவ் வுயிர்க்கும் நீதி வழங்குவதை உயிரின் சீலமாகக் கொண் டொழுகிய சோழப்பேரரசர் வழிவந்த அரசன் துணுக் குற்றான்; விடம் தலைக்கேறிய நிலையினை எய்தினான். அரசன் உற்ற துன்பம் கன்றினை இழந்த பசுவின் துன்பத்தினை விஞ்சியது. என்னசெய்வது? என்ற வினா பிறந்தது.

அமைச்சர்கள், பசுவைக் கொன்றவர்க்கு அந்தணர் விதிமுறைநூல்விதிக்கும் கழுவாய்களை இளவரசன் செய்ய லாம் என்று எடுத்துக்கூறினர். இளவரசன் நோன்பிருந்து முறையாகத் தீர்த்தம் மூழ்கி தங்கத்தினாற் செய்த பசு ஒன்றினை அந்தணர்க்குத் தானமாக வழங்குதல் ஒழு கழுவாய்முறை. இந்து சமூகத்தில் கழுவாய் முறை தோன்றிய வுடன் பாவங்களும் பெருகின. தங்கமே கண்ணீரின் சின்னம். ஓர் உயிர்பட்ட துன்பத்திற்குப் பிறிதோர் உயிர்க்குப் போகம் வழங்குவதன் மூலம் எப்படி குற்றம் நீங்கும்? கழுவாய் என்பது எந்த உயிர்க்குத் தீங்கு செய்யப் பெற்றதோ அந்த உயிர்க்கு ஆறுதல் தரத்தக்கதாக இருக்க வேண்டும். அது மட்டுமின்றி ஓர் உயிர்க்குத் தீங்கு செய்த உயிர் தீங்கு செய்யும் இயல்பினுக்கு அடிப்படையாயிருந்த குற்றங்களினின்றும் விடுதலை பெற வேண்டும். தானம் செய்வதால் குற்றம் செய்யும் இயல்பு மாறாது. கண்ணிரைக் கண்ணீரால்தான் மாற்ற முடியும். கண்ணீரை, கங்கையாலோ, காவிரியாலோ மாற்ற முடியாது. இந்த விழுமிய நீதியைச் சோழப் பேரரசன் ஏற்றுப் போற்றினான். பசு, தன் கன்றை இழந்து துன்புற்றதைப் போல் தான் தன்னுடைய ஒரே மைந்தனை இழந்து துன்புறுதலே சரியான தண்டனை, விதிமுறை என்று அரசன் கருதினான்; அவ்வண்ணமே செய்ய முனைந்தான்! உலகுக்கு உணர்த்தினான். தனது ஒரு குலத்துக்கு ஒரு மைந்தனைத்

தேர்க்காலில் கிடத்தித் தேரினைச் செலுத்தத் தலைப் பட்டான்! ஆரூர் அண்ணல், அச்செய்கை பொறாது காட்சி தந்தருளி மன்னவன்றன் நீதியின் சிறப்பை மண்ணுலகுக்கு அறிவித்தனன்!

திருக்கூட்டம் என்பது அழகான சொல். 'திரு' என்பது எழுத்தாலான சொல் மட்டுமன்று, 'திரு' - கண்டோரால் விரும்பப்படும் தன்மை என்பார் பேராசிரியர். இறைவனுக்கே 'திரு' என்றொரு பேருண்டு. திருவருட் சிந்தனையுடையோர் பலர் கூடிய கூட்டம், திருக்கூட்டம். திருவருட் சிந்தனையுடையோர் தனித்து வாழார். தனிமையிழந்த நிலையிலேயே அடியாராகின்றனர். 'நான்', 'தான்' என்ற சொற்கள் வழிப்பட்ட முனைப்பு, கழனியில் உள்ள களையினும் கொடியது, அடியார் வாழ்க்கைக்கு!

தாம் பெற்ற அருளனுபவத்தைப் பேணிப் பாதுகாத்துக் கொள்ளவும் மேலும் மேலும் வளர்த்துக் கொள்ளவும் பலர் சூழ வாழ்தலையே அடியார்கள் விரும்புவர். இன்று, அடியார்களைக் காண்பது அரிது. அதுவும் திருக் கூட்டமாகப் பார்ப்பது அரிது. அடியார்கள் புறத்தே திரு நீற்றொளிதாங்கி நடமாடுவர்; அகத்தே ஓசை நிலையிலும் புறத்தே ஒலி நிலையிலும் ஐந்தெழுத்தே எண்ணி நடமாடுவர். அடியார்கள் கைத்திருத் தொண்டு செய்யும் கடப்பாட்டில் சிறந்து விளங்குவர். பூசும் நீற்றினைப் போல உள்ளும் புனிதர்களாக விளங்குவர். நிலைதடுமாறினும், நிலை குலையா நெஞ்சத்தவர்; ஐம்பூதங்கள் நிலைதடுமாறினாலும் சங்கரன்தாள் மறவாதவர்; இவர்களே அடியார்கள். அவர்கள் மகிழ்ந்து அணிந்த அணி கண்டிகையே. உடுத்திய ஆடையும் கந்தையே. அவர்கள் ஈசன் பணியே பணியெனக் கொண்டவர்கள். உயிர் நலங்காக்கும் ஈர அன்பினர்; குறை விலாதவர்; வீரத்தில் விழுமியர். அவர்களுக்குக் கேடும் இல்லை ஆக்கமும் இல்லை; கேடும் ஆக்கமும் கடந்த திருநிலை எய்தியவர்கள். ஓடு - செம்பொன் எல்லாம்

அவர்களுக்கு ஒன்றுதான். அவர்கள் மோட்சம், நரகம் பற்றிக் கூடக் கவலைப்படுவதில்லை. அவர்கள் 'கும்பிடு' குறியெதிர்ப்பு நோக்குடையதன்று. வணிக நோக்குடைய தன்று. கூடும் அன்பினில் கும்பிடுதலே அவர்கள் இயல்பு. இவர்களே அடியார்கள்.

சேக்கிழார் காட்டும் அடியார்களின் இலக்கணம் இது. ஆம்! தமிழகத்தில் இத்தகைய திருக்கூட்டம் கடலென நடமாடியதுண்டு. இன்றோ திருக்கூட்டத்திற்குப் பதில் நாட்டில் 'தெரு'க் கூட்டங்கள் வளர்ந்துள்ளன. சமயம் கருவுற்ற மனிதனை அழைத்துச் சென்று திருவிற்சேர்த்து மீண்டும் கருவுறா வண்ணம் காப்பதேயாம். இந்த அடியார்களின் வாழ்க்கை புறத்தால் அமைந்தன்று; அகத்தால் அமைந்தது. அதனால் புறம் இல்லை என்பது பொருளல்ல. புறத்தே நிகழும் நிகழ்வுகள் அகத்தே உணர்வுகளை வளர்க்கும் தகையன. பேணும் தகையன. திருநீறு சாதனத்திற் சிறந்த சாதனம். இன்று திருநீறு, என்பது ஆன்றோர் உரைத்த நெறி முறைப்படி இல்லை. திருநீறு தூய்மையாக-வெண்மை நிறத்ததாக இருக்க வேண்டும். கருமை நிறம் கொண்டதாக இருத்தல் கூடாது. அது போலவே செந்நிறத்ததாகவும் இருத்தல் கூடாது. தூய வண்ணம் கலப்பற்ற வெண்மையான திருநீறே திருநீறு. திருவின் நிலை எய்தியவர்கள் 'ராகதுவேஷ'ங்களுக்கு அப்பாற்பட்டவர்கள். அவர்களுக்கு விருப்பும் இல்லை; வெறுப்பும் இல்லை. காய்தலும் இல்லை, உவத்தலும் இல்லை. வேண்டுதலும் வேண்டாமையும் இல்லை. திருவருளைத் தவிர வேறு எந்த ஒன்றும் அவர்களை ஆட்கொள்ளாது. நிறங்களில் கூட வெண்மை ஒன்றே வெப்பத்தை ஈர்க்காதது. அதனாலேயே பழங்காலத்தில் கருப்பு நிறமுள்ள குடை வைத்திருந்தாலும் அதன்மீது வெள்ளைத்துணி தைத்திருப் பார்கள். ஆக, திருநீறு தூய்மையில் தூய்மையின் சின்னம், அதனால் திருநீறணிந்தவர்கள் உள்ளத்தில் நிறை தூய்மை

பெற்றிருக்க வேண்டும். ஆனால், இன்றோ யாருக்கு முதலில் திருநீறு என்ற சண்டை வலுத்து இருக்கிறது.

இறைவனின் கண்டத்தை நினைவூட்டுவது கண்டிகை. ஆம்! இறைவன் நீலகண்டன், விண்ணோர்கள் வாழ அமுதத்தை வழங்கி விட்டு நஞ்சை உண்டு நிறுத்திய கண்டமல்லவா? கண்டிகை அணிந்தவர்கள் பிறர்க்கு இன்பத்தை வழங்க வேண்டும். தாம் துன்பத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் கண்டிகைக்குப் பெருமை. கண்டிகை அணிந்தோரின் சீலம் ஏற்றுப் போற்றப் பெறும். இன்றோ கண்டிகையின் தத்துவத்திற்கும், கண்டிகை அணிந்திருப்போரின் வாழ்க்கைக்கும் ஒட்டும் இல்லை; உறவுமில்லை. இன்று கண்டிகை பெற்றிருக்கும் ஏற்ற மெல்லாம் அதற்குத் தங்கவளை பிடிக்கப்பட்டிருப்பதுதான். ஆம்! இதில் ஒரு நடைமுறை உண்மை புலப்படுகிறது. கருணையைத் தங்கம் கொள்ளை கொண்டு விட்டது என்பதே உண்மை. இறைவனைத் தொழுதல் ஓர் இன்பம். தொழுதலில்பெறும் இன்பத்திற்கு இணையான இன்பம் விண்ணிலும் இல்லை. மண்ணிலும் இல்லை. இன்று கூடும் அன்பினில் கும்பிடும் இயல்புமாறி, வணிகநோக்கில் கும்பிடும் கும்பிடுகள் அதிகமாகி விட்டன. வணிகக் கும்பிடுகள் வஞ்சனைக் கும்பிடுகள்தான். வணிகக் கும்பிடு வந்தவுடன் அடக்கம் போய் ஆணவம் தலையெடுத் திருக்கிறது. அதனால், தேவதேவன் முன்னாலேயே இந்தத் தெருக்கோடி மனிதன் பெயர் சொல்லப்படுகிறது. ஆம் அவன் அறியாத வனல்லவா? உடன் ஒரு தேவைப் பட்டியலும் அறிவிக்கப் படுகிறது. இந்த வணிகமுறை கும்பிடுதலில் கலந்திருக்கும் வரை இறைவனும் தலைப் படான். மண்ணுலகும் செழிக்கப்போவதில்லை. கூடும் அன்பினில் கும்பிடுதலே கும்பிடு. சேக்கிழார் படைத்துக் காட்டிய திருக்கூட்டம் மீண்டும் தமிழகத்தில் தழைக்க வேண்டும். அன்றே தமிழகத்திற்குப் பொன்னாள்.

சுந்தரரர் திருவாரூர்த் திருக்கோயிலில் எழுந் தருளியுள்ள இறைவனை வணங்க வருகிறார். திருவாரூர்த் திருக்கோயிலில் தேவாசிரிய மண்டபத்தில் விண்ணவர் களுடன் எண்ணற்ற அடியார்கள் கூடியிருந்தனர். ஆம்! எண்ணற்ற அடியார்கள்! அன்று அடியார்களின் அளவுக்குக் குறைவு இல்லை. இன்று எங்கே என்று தேடிக்கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது. அதனாலன்றோ திருமடங்களுக்கு வாரிசுகளைத் தேர்ந்தெடுப்பதில் கூட இடர்ப்பாடு ஏற்படு கிறது. இன்று பத்திமையிலும் தொண்டிலும் ஈடுபட்டு வளர்ந்து வாழும் மனப்போக்கைச் சூழ்நிலை கெடுத்திருக் கிறது. சுந்தரர், தேவாசிரிய மண்டபத்துக்குள் கூடியிருக்கும் அடியார்கள் கூட்டத்தைப் பார்க்கிறார். ஆரூரர்க்கு அடியார்களைச் சென்று வணங்கவும் அவர்களுக்கு ஏவல் செய்யவும் விருப்பம் மேலிடுகிறது. ஆயினும் பரமன் தாள்பணியும் ஆர்வம் தலையெடுத்ததால் திருக்கோயிலுக்கே சென்று விட்டார். ஆரூரரின் விருப்பத்தை அறிந்த பெருமான் அடியார்களை அறிமுகப்படுத்தி வணங்கி வாழ வழி காட்டுகிறார்.

பெருமான், உலகியலைச் சார்ந்த அறிமுகக் கலையில் தேர்ந்து விளங்குகிறார். திருவுள்ளம் நிறைந்த நிலையில் அறிமுகப் படுத்துகிறார். "அடியார்களின் பெருமை தம் பெருமையை ஒத்தது. அடியரார்கள் தம்மை நெஞ்சத்திற் பெற்றுப் பேணலால் தம்மை உரிமையாக உடையவர்கள்; ஒருமையுணர்வால் உலகை வென்று விளங்குகிறவர்கள்; யாதொரு குறையும் இல்லாதவர்கள்; அருமை என்று அறிந்து பாராட்டக் கூடிய நிலையில் நிற்கின்றவர்கள்; அன்பினால் இன்பம் அனுபவிக்கிறவர்கள். இம்மையும் மறுமையும் கடந்து நிற்கின்றவர்கள். அவர்களைச் சென்றடைக" என்று தம்மையடைந்த ஆரூரரை ஆற்றுப்படுத்துகின்றார். என்ன அற்புதம்! அடியார்களை இறைவன் அறிமுகப்படுத்தும் பாங்கைப் பாருங்கள்! இதுவன்றோ தோழமை!

இன்று இரு அடியார்கள்கூடத் தமக்குள் இப்படி அறிமுகப்படுத்திக் கொள்வதில்லையே! இன்று உலா வரும் அடியார்களுக்குள் இருக்கும் பிணக்குகள் வாஷிங்டனுக்கும் மாஸ்கோவுக்கும் இருப்பதைவிடக் கூடுதலாகவே இருக்கின்றன. எப்படி மனித சமுதாயத்தில் அன்பு வளரும்? தோழமை வளரும்? பெருமையை விளம்பரத்தைத் துறக்காத துறவு இப்போதையத் துறவு.

ஆரூரர், உடன் அடியார்களை அணுகுகிறார். அடியார்களை அணுகி வணங்கித் தொழுதலைத் துன்பம் துடைக்கும் நெறியென்று ஆரூரர் பரவுகின்றார். ஆம்! ஆண்டவன் முன்னே யாரும் பணிந்து விடுவார்கள். ஆனால், அடியார்களை நோக்கும் போதுதான் தராதரங்கள் பார்ப்பார்கள். இன்றைய சமுதாயத்தில் தராதரம் மட்டும் பார்ப்பதில்லை. சாதிகளும் பார்ப்பார்கள். ஆரூரர், அடியார்களின் பண்பைத் தாம் எப்படி ஏத்தமுடியும்? என்று சிந்திக்கின்றார். இறைவன், "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடி எடுத்துக் கொடுக்கின்றார். இறைவன் எடுத்துக் கொடுத்த அடியினைக் கொண்டு தம் சிந்தனையில் நினைவுக்கு வரும் அடியார் களையெல்லாம் தனித்தனியே பாடித் தேவாசிரிய மண்டபத்திலிருந்த அடியார்களைப் பணிகின்றார். இங்ஙனம் அடியார்களை வணங்கி வாழும் முறையைச் சேக்கிழார் தமிழ் முறை என்று பாராட்டுகின்றார்.

ஞானம் வருதலுக்குத் தாழ்வு உணர்ச்சி தேவை. இங்குத் தாழ்வு உணர்ச்சியென்பது குறைமனப்பான்மை யன்று. சீலத்திலும் தவத்திலும் நோன்பிலும் மெய்ப்பொருள் அறிவிலும் மிக்குயர்ந்தோர், தம்மை அடக்கத்துக்கு ஆளாக்கிக் கொள்வதற்குத் தாழ்வு என்று பொருள். தாழ்த்தப்பட்டு வந்த தாழ்வல்ல; தாழ்த்திக்கொண்ட தாழ்வு. இத்தாழ்வுணர்வு தழைக்கும் நெஞ்சில், நான் இல்லை; எனது இல்லை; வேண்டுவன இல்லை; வேண்டாமை இல்லை;

இன்பம் இல்லை; துன்பமில்லை; பகைமை இல்லை. இங்ஙனம் அனைத்தையும் கடந்து பழுத்த மனத்தோடு விளங்கும் மனப்பான்மையை அடியார் வணக்கம் தரும்.

சுந்தரர், சிவபெருமான் திருவடியிற் பதித்த நெஞ்சுடையாரேனும் மண்ணக வாழ்க்கையை நன்றாக ஆரத்துய்த்து வாழ்ந்தவர். அது மட்டுமா? இறைவனிடத்தில் நிறைய உரிமைகளைப் பெற்றவர். நாம் கூசி நடுங்கக் கூடிய செய்திகள் பற்றிக் கூட அவர் இறைவனிடத்தில் தாராளமாகக் கேட்டிருக்கிறார். இல்லை, அமரர்களையும் மற்றவர்களையும் ஏவல் கொள்ளும் இறைவனை ஆரூரர் ஏவல் கொண்டுள்ளார். ஆரூரருக்கு நெல் முதலியன வழங்கும் கடப்பாடுடையவர்களில் ஒருவர் குண்டையூர்க் கிழார். குண்டையூர்க்கிழார் அளித்த நெற்குவியலை எடுத்துச் செல்ல ஆள் பணித்தருளும் படி ஆரூரர் திருக்கோளிலித் திருக்கோயிலில் வேண்டுகிறார். திருக்கோளிலி எம்பெருமான் அருளால் பூத கணங்கள் ஆரூர்க்குக் கொண்டு சேர்த்தன.

சந்தரர், காதல் விருப்புடையவர் என்பது உண்மை. ஆயினும் அவர் சீலத்திற் சிறந்தவர் என்பதையும் நினைவிற் கொள்ளுதல் வேண்டும். கோட்புலியார் தாம் பெற்ற அருமை மகளிர் சிங்கடியார், வனப்பகையார் இருவரையும் மணந்து மகிழ்ந்தருளும்படி வேண்டுகின்றார். சுந்தரர் இவர்கள் நான் பெற்ற மக்களனையர் அதனால் மணத்திற்கியலாது என்று மறுத்து விடுகின்றார்.

பங்குனித் திங்கள் வந்து கொண்டிருக்கிறது. திருவாரூர் பங்குனி உத்தரத் திருநாள் ஆரூரர்க்கு நினைவு வருகிறது. உடன் பரவையிர், திருநாளின் பொழுது வழங்கும் கொடை நினைவுக்கு வருகிறது. பரவையார், திருநாளின் பொழுது வழங்கும் கொடை நினைவுக்கு வருகிறது. பரவையார் கொடைக்கு முட்டின்றி நிறையப் பொன்கொண்டு சேர்க்க வேண்டும் என்ற நினைப்பும் தோன்றுகிறது. சந்தரர்க்குப்

பொன் வேண்டும். எங்கே போவார்? அவர் பொன் வேண்டிப் புகுந்த இடம் திருப்புகலூர்! திருப்புகலூர் இறைவனை வணங்கி மகிழ்ந்து அருகில் இருந்த முற்றத்தில் திருப்பணிக்காகக் கொண்டு வந்து போட்டிருந்த செங்கல் ஒன்றை எடுத்துத் தலையணையாக வைத்துக்கொண்டு, துண்டை விரித்துப் படுத்துத் தூங்கினார். பொன் கவலையால் தூக்கம் வரவில்லை. இடையில் விழித்துப் பார்க்கிறார். தலைக்கு வைத்திருந்த செங்கல்லே செம்பொன் கட்டியாக விளங்கியமை கண்டு திருப்புகலூர் இறைவன் புகழைப் போற்றுகின்றார்.

அப்போது பாடிப் பரவும் பாடலில் "எதிரில் இன்பம் இம்மையே தருவார்" என்று விளக்குகின்றார். இறைவனை ஏத்துவது மறுமை இன்பத்துக்காக மட்டுமல்ல. இம்மை யிலேயே எல்லையற்ற இன்பங்களை ஆர்ந்து அனுபவிக் கலாம். உலக இன்பங்களைத் துய்த்து மகிழ்தல் இறைநெறிக்கு முரணானதன்று. இவ்வுண்மைகள் சுந்தரர் வரலாற்றினால் பெறப்படுகின்றன.

திருப்புகலூரில் சுந்தரர் பாடுகின்றார்.

"தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்
சார்கினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவ லோகம் ஆள்வதற்கி
யாதும் ஐயுற வில்லையே: (திருப்புகலூர் – 1)

இத் திருப்பாடலில் உலகத்துச் செல்வந்தர்களின் பொய்ம்மையை இடித்துக் காட்டுகிறார். செல்வந்தர்களைச் சார்ந்து, அவர்களைப் புகழ்ந்து, அவர்களுக்கு அடிமைகளாய் வாழ்ந்தாலும் அவர்கள் எதையும் எளிதில் தந்து விடுவ

தில்லை. ஆனால், அறமுடையார் போல பொய்ம்மை காட்டுவர். இவர்களைப் போற்றுவானேன்? புகழ்வானேன்? திருப்புகலூரில் எழுந்தருளியுள்ள எந்தை ஈசனைப் பாடுமின்! அவன் இப்பொழுதே உணவும் உடையும் கொடுப்பான்; இடர் கெடுத்தும் வாழலாம்; சிவலோகமும் ஆளலாம் என்று பாடுகின்றார்.

## அன்பின் வழி அச்சம்

திருப்புகலூர் வழிபாட்டை முடித்துக் கொண்ட பின் சுந்தரரின் திருத்தலயாத்திரை தொடர்கிறது. பலதலங்களை வழிபட்டுக்கொண்டு வருகின்றார். திருப்பாச்சிலாச்சிரமம் என்ற தலத்தை அடைகிறார். நம்பி பொருள் விரும்புகின்றார். சந்நிதியில் நின்று பொருள் இரந்து பாடுகின்றார். ஆனால், பொருள் கிடைக்கவில்லை. பொருள் எளிதில் கிடைக்குமா? அருமையில் கிடைத்தால்தான் பொருளின் அருமைப் பாட்டினை அறிந்து கொள்வர். மேலும் கேட்டவுடனே பொருளினைக் கொடுத்து விட்டால், கொழிதமிழ்ப் பாட்டு தொடராதே! தமிழ் கேட்க வேண்டும் என்ற இறைவனின் விருப்பம் நிறைவேறாதே! அதுமட்டுமா? ஏசியும் பேசியும் தோழமை வளராதே! ஆதலால், திருப்பாச்சிலாச் சிரமத்து இறைவன் பொருள் வழங்குதலை நீட்டிக்கின்றான்; காலந் தாழ்த்துகின்றான். வருத்தம் மிகுந்து முறைப்பாடு செய்து கொள்ளும் எல்லை வரையில் சென்று விடுகின்றார். "எத்தனை அருளா தொழியினும் பிரானார் இவரலா தில்லையோ?" என்று பாடுகின்றார்.

பொதுவாக, உலகியலில் அன்பு இருக்குமிடத்தில் அச்சம் இருக்காது. அச்சம் உள்ள இடத்தில் அன்பு இருக்காது. ஆனால், சுந்தரர் வாழ்க்கையில் இவ்விரண்டும் கலந்திருந்தன என்பது ஒரு புதுமை. அன்பும் அச்சமும் கலந்தவர்கள் வாழ்க்கையில் அன்பின் வழியதான அச்சம் இருக்கலாம் அல்லவா? அதாவது கொண்டுள்ள அன்பு

கெட்டுவிடக் கூடாதே? என்ற அச்சம் இருக்கலாம் அல்லவா? அன்பின் வழி அச்சம் இருத்தல் நல்லது. அச்சத்தின் வழியிலும் அன்பு தோன்றலாம். ஆனால், இது சிறப்புடையதன்று. நம்பிகள் திருப்பாச்சிலாச்சிரமத்தில் அருளிய பதிகத்தில் அன்பும் அச்சமும் ஒருங்கிணைந்து நம்பியாரூரரை இயக்கியதை உணரமுடிகிறது. அன்பு தழுவிய - அன்பு நீங்காத அச்சம் நிறைநலம் சான்ற அன்புடையாருக்கே கிடைக்கும்.

ஆரூரர் தம் வாழ்விற்குத் தாயைத் துணையாக நினைந்திலர்; தந்தையைத் துணையாக நினைந்திலர்; இறைவனை மட்டுமே நம்பியிருந்தார். இன்று பத்திமையில் இத்தகு உரமுடையோரைக் காண்பதரிது. பலரை நம்பி மோசம் போகும் காலம் இது. ஆரூரர் இறைவனை மட்டும் நம்பினார். இத்தகு ஒருமை நம்பிக்கையில் குறைவிலா உரிமைகள் வந்தமைதல் இயற்கை. வழங்குதலும்கூட உரியலத்தில் வழங்கப்பெறாமல் காலந்தாழ்த்துவதில் பலன் இல்லை! இறைவன், மறுமையின்பங்களையே வழங்குவான் என்பது ஒரு கருத்து. ஆனால், ஆரூரர் இம்மையில் அருள் பெறுதலையே விரும்புகின்றார். ஆம் மறுமை நலனுக்குரிய ஆன்மா - நிறைநலம் பெறுதற்குரிய ஆன்மா - இன்ப அன்பினை அடையவேண்டிய ஆன்மா இப்பிறப்பில் வறுமையில் கழிந்து விடின் மறுமை ஏது? இம்மை இல்லையேல் மறுமையில்லை; இதுவே சைவமரபு.

சைவத் திருமுறைகள் வாழ்க்கை நலன்களை அளிக்கும் அருமறைகள். ஆரூரரின் திருப்பாச்சிலாச் சிரமப்பதிகம் விழுமிய சிறப்புடையது.

ஒருவர், மனம் மகிழத் தக்கவகையில் நடந்து கொண்டபோது மகிழ்வர்; அள்ளி வழங்குவர். ஒரோவழி பழகுவோருக்கு மகிழ்வு தரத்தக்க நிலையில் நடக்க இயலாமல் சோர்வுபடும் பொழுது மகிழ்வைக்காட்டாமல்

வேற்றுமை காட்டுவது கூடாது. எப்போதும் ஒரே நிலையைப் பேணல் அறவாழ்க்கை; அருள் வாழ்க்கை!

"பெற்றபோ துகந்து பெறாவிடில் இகழில்
இவரலா தில்லையோ பிரானார்"

என்ற வாக்கினை அறிக.

அடுத்து, பழகுதற்கு இனிய நண்பராகத் தொண்டூழியம் செய்யும் பணிவிடையாக ஒருவர் இருத்தலே நன்று, பலர் இருந்தால் அந்த உறவினைப் பாதுகாத்தல் அரிது. உறவினைப் பேணி வளர்த்துக்கொள்ளும் செயல் முறைகளில் பரிந்து பேசுதல், உதவிகளைச் செய்தல் ஒருவகை. இத்தகு தோழமைச் செயல்கள் தோழர்கள் பலராயின் செய்தல் இயலாது. ஆதலால், அரிதாய் நட்புக்கொள்க! பெற்ற நட்பை தோழமையைப் பேணிக் காத்திடுக! என்பது ஆரூரர் வரலாற்றின் படிப்பினை!

ஆரூரரின் முறைப்பாடு பெருமானார்க்குத் தாங்க இயலாதது. ஆதலால், உடன் பொற்குவை வழங்கப் பெறுகிறது.

## உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம்

உலகியல் வாழ்வில் வளம் பொலியத் திருப்பாச்சிலாச் சிரமத்தில் பொன் முடிப்புப் பெற்ற ஆரூரர், தொடர்ந்து திருத்தலயாத்திரை செல்கின்றார். யாத்திரை சோழ நாட்டி லிருந்து கொங்கு நாட்டுக்குத் தொடர்கிறது.

கொங்கு நாட்டில் சுந்தரர் நெஞ்சு தங்கிப் பாடிய திருத்தலம் 'திருப்பாண்டிக் கொடுமுடி'. உடலியல் வாழ்க் கைக்குப் பொன் பெற்றாயிற்று: இனி என்ன கவலை? இந்தக் குறிப்பு யாத்திரையின் நடைமுறையிலும் தெரிவிக்கிறது. காவிரியின் வடகரையில் இருந்த நம்பி பொன் பெற்ற பிறகு, காவிரியைக் கடந்து தென் கரைக்குச் செல்கிறார். ஆம்! அருளார்ந்த வாழ்வியலுக்கு உலகியல் என்ற ஆறு கடக்கப்

பெற வேண்டும் என்ற படிப்பினை கிடைக்கிறது. உயிர் வாழ்க்கை உய்தி பெற வேண்டும். அதற்கு என்ன வழி? இறைவன் திருநாமத்தை - ஐந்தெழுத்தை எண்ணுதல் தானே! உயிர் வாழ்க்கைக்குப் பொருள் திருவைந்தெழுத்து என்பதை "வைத்த பொருள்" என்ற அப்பர் அருள் வாக்கால் அறியலாம். திருப்பாண்டிக் கொடுமுடியில் சுந்தரர் திருவைந்தெழுத்துப் பாடியருளுகின்றார். சுந்தரர் திருப்பதி கத்தில் இந்த "நமசிவாயத் திருப்பதிகம்" மிகவும் சிறப்புடைய தாக அமைந்துள்ளது.

ஏன்; கொடுமுடி இறைவன் பால் ஆரூரருக்குப் பொங்கி எழுந்த வேட்கையை எடுத்துச் சொல்ல முடியாமல் சேக்கிழார் தவிக்கிறார். இத் திருப்பதிகத்தைச் சுந்தரர், செழுந்தமிழில் அருளிச் செய்ததாகக் கூறிப் போற்றிப் பாராட்டுகின்றார் சேக்கிழார். மெய்ப்பொருளை உணர்த்தி அதன் பெருமையை வழுத்த திருவைந் தெழுத்தை உட்கொண்ட தமிழாதலால் செழுந்தமிழ் என்றார்.

பற்றுக்கள் நிறைந்தது வாழ்க்கை. சுந்தரர் பொன்னும் மெய்ப் பொருளும் போகமும் பெற்றுத் துய்த்து வாழ்ந்தவர். ஆனாலும் அவை சுந்தரருக்குப் பற்றாகி விடவில்லை. இறைவன் திருநாமமே பற்று என்று அயரா அன்பில் பாடுகின்றார்.

> *"மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்*
> *பாதமேமனம் பாவித்தேன்."*

என்பது அருள் வாக்கு.

> *"நான் மறக்கினும் சொல்லும் நா*
> *நமசிவாயவே!*

அதாவது நினைந்து நினைந்து சொல்லுமியல்பில் மனத்தை நாவைப் பழக்குதல் என்பது கருத்து. பாண்டிக் கொடுமுடி பதிகம் உலகெல்லாம் உய்யும் திருப்பதிகம் என்று சேக்கிழார்

எடுத்துக் கூறிப் பாராட்டி உயர்த்துகின்றார். திருப்பாண்டிக் கொடுமுடித் திருத்தலத்திலிருந்து நம்பிகள் கொங்கு நாட்டுப் பேரூருக்குச் செல்கிறார்.

## என்இனிப் புறம்போய் எய்துவது?

கொங்குநாடு சிறப்புடைய நாடு. காஞ்சி நதி பாய்ந்து வளப்படுத்தும் நாடு. சுந்தரர் வரலாற்றில் கொங்கு நாடு மையம் கொண்டுள்ளது. சுந்தரர்பேரூர் வந்தணைகிறார்; பேரூர்த் திருக்கோயிலில் தில்லையில் கண்ட திருநடனக் காட்சியைக் காண்கிறார். இது ஓர் உபாசனை மரபு. அதாவது தமது மனங்கவர்ந்த மூர்த்தியைச் சென்ற இடத்திலெல்லாம் பார்ப்பது. சுந்தரர் தில்லையில் ஐந்து பேரறிவும் கண்களே கொள்ளப் பார்த்தவர்; வணங்கியவர். அந்த ஞானானுபவம் தொடர்கிறது. ஆடல்வல்லானின் ஆனந்தக் கூத்தைப் பேரூரில் காண்கிறார். கண்ட அளவில் அன்பு ஊற்றெழுகிறது! புலன்களைக் கடந்த மெய்யுணர்வில் திளைக்கிறார்! புலன்களைக் கடந்த இன்பத்தினை ஆர்கிறார்! சிவானந்த இன்பத்தில் திளைத்த சுந்தரர் அருள்பொலிவுடைய ஆண்டகையானார். திருநடம் கும்பிடும் பேறு பெற்றமையை நினைந்து நினைந்து மகிழ்கிறார்! மகிழ்வின் பெருக்கில் இனிப் புறம்போய்த் தொழுவது என்னனென்று வினவுகின்றார்!

இதனால் இத்திருத்தலம் ஆடல்வல்லான் திருத்தலமாயிற்று. இதனை மேலைச் சிதம்பரம் என்றும் போற்றுவர். இன்றும் இத்தலத்தில் ஆடல்வல்லான் சந்நிதி திருவருட் பொலிவுடையதாக விளங்கி வருகிறது. சுந்தரரின் செந்தமிழ் வளர்க்கும் சாந்தலிங்க முனிவர் திருமடம் இத்தலத்தில் அமைந்துள்ளது. கொங்கு நாட்டுக்கு, சுந்தரர் காலம் முதல் இன்றுவரை பேரூரே சிறந்த திருவருள் நிரம்பிய திருத்தலம். பேரூரில், பெருகிய சிவஞானம் பெற்றுப் பொலிந்த சுந்தரர் பயணத்தைத் தொடர்கிறார்! வெஞ்சமாக் கூடல் வந்து சேர்கிறார்!

வெங்சமாக் கூடல் தலை நகரமாக விளங்கிய ஊர்! பழைய கோட்டைகளின் இடிபாடுகளை இன்றும் காணலாம். வெஞ்சமாக் கூடலில் சுந்தரர் அருளும் பதிகம் சுவையுடையது. பொருட் குறிப்புடையது. "வஞ்சியா தளிக்கும் வயலுடையது" கூடல் என்று பாடுகின்றார். இதனால் வெஞ்சமாக்கூடலின் மருத நிலவளம் - படுபயன் சிறப்பு அறியப்படுகிறது. வஞ்சியாதளிக்கும் வயலினை யுடைய ஊர்க்குத் தலைவனாகிய இறைவனும் வஞ்சியா தளிப்பான் என்பது கருத்து. இங்கு, சுந்தரர் மீண்டும் உறவு முறைப் பிணக்கில் ஈடுபடுகிறார்;

> "வெஞ்சமாக் கூடல் விகிர்தா அடியேனையும்
> வேண்டுதியே"

என்று வினவுகின்றார். சிவபெருமான் - சுந்தரர் இருவரும் ஒருவருக்கொருவர் தவிர்க்க முடியாத தேவையாகி வளர்ந்த வரலாறு, சுந்தரர் வரலாறு முழுதும் காணப்பெறுகிறது. சிவபெருமானுக்குச் சுந்தரரை நிகர்த்த பத்திமை நலம் மிக்கார் எங்குக் கிடைப்பர். பொன்னையும் பொருளையும் உகந்து, உண்டியையும் உடையையும் உகந்து ஓடித்திரியும் உலகில் புறத்தே போய்ப் பெறுவது எவன் என்று நிற்பார் யார்? சுந்தரருக்கும் சிவபெருமான் தேவை, ஆயினும் "அடியேனையும் வேண்டுதியே" என்று கேட்பதன் கருத்து ஐயத்தின் பாற்பட்டதன்று; உறுதிப் படுத்தவேயாம்.

## புறம்பயம் தொழப் புறப்படு, நெஞ்சமே!

சுந்தரர், வெஞ்சமாக்கூடலிலிருந்து திருப்பேரூரில் எழுந்தருளியிருக்கும் பட்டிப்பெருமானை வழிபட்டு, திருக்கற்குடி வந்திருக்க வேண்டும். ஆனால், பேரூர்ப் பதிகம் கிடைக்கவில்லை.

திருக்கற்குடி என்ற திருத்தலம், திருச்சிராப்பள்ளிக் கருகில் இருக்கிறது. வெஞ்சமாக்கூடலில் பெருமானுடன்

முறைத்துப் பேசிய சுந்தரர் திருக்கற்குடியில் அஞ்சிப் பேசுகிறார். வெயிலையும் மழையையும் ஒருங்கே காண்பது போன்றது சுந்தரர் தம் வாழ்க்கையில் இறைவனுடன் கொண்ட உறவு. சுந்தரர் இறைவனை 'அடிகேள்!' என்று நயம்பட விளிக்கிறார்! வெஞ்சமாக் கூடலில் தாம் பேசிய பேச்சில் இறைவனுக்குச் சினம் வரக்கூடாதென்பதால் திருக்கற்குடியில் 'பெரியோரே!', 'தவத்திற் சிறந்த அடிகேள்' என்றும் விளித்தல் அறிக.

பெருமான், சினம் கொள்பவனாக இருந்தாலும் மருந்து போலத் துன்பம் நீக்குபவன் என்றும் அருட் சக்தியாகிய உமையம்மையை இடப்பாகத்தில் கொண்டிருப்பவன் என்றும் நயம்பட விளித்துப் பாடுகிறார்.

திருக்கற்குடிப் பதிகத்தில் 'அஞ்சற்க!' என்று தன்னை ஆட்கொள்ளுமாறு வேண்டுகிறார். உலகியல் நோக்கி அஞ்சாமையை அருள் செய்யும்படி வேண்டுகிறார். திருக்கற் குடியிலிருந்து ஆரூரர் காவிரியைக் கடந்து வடக்கு நோக்கிப் பயணம் செய்கிறார். திருவாறை மேற்றளியை வணங்கித் திருஇன்னம்பருக்கு வருகிறார்.

திருஇன்னம்பரில் பலநாள் தங்கி, திரு இன்னம் பரீசனை வழிபடுகிறார். ஆயினும் திரு இன்னம்பர் இறைவன் ஆரூரர் செய்யத்தக்கது இன்னதென்று அருளிச் செய்ய வில்லையாம். இது ஆரூரர்க்கு இன்னம்பரில் ஏற்பட்ட மனக்குறை. அதனால், 'நெஞ்சமே, இன்னம்பர் இறைவன் செய்யத்தக்கது இன்னதென்று தெளிவித்தாரில்லை. புறப்படு! புறம்வயம்தொழச் செல்வோம்' என்று தமது நெஞ்சத்தை விளித்துக் கூறுகிறார்.

*அங்கம் ஓதியோர் ஆறை மேற்றளி*
*நின்றும் போந்துவந்தின் னம்பர்த்*
*தங்கி னோமையும் இன்ன தென்றிலர்*
*ஈச னார்எழு நெஞ்சமே!'* (ஏழாந்திருமுறை – 351)

இதிலிருந்து ஆரூரர், இறைவன் திருக்குறிப்பின் வழியிலேயே தமது வாழ்க்கையை நடத்தி வந்தார் என்பது தெளிவாகிறது.

திருப்புறம்பயத்திற்குச் செல்லும் ஆர்வம் ஆரூரர்க்கு மிக்கிருந்தது. ஏன், திருஇன்னம்பரீசன் அருளாமையை புறம்பயத்தில் பெறலாம் என்று நம்புகின்றார். புறம்பயத்தில் இரவு பகலின்றி, வானோர்கள் இறைவனை ஏத்திப் போற்றி வழிபடுகின்றனர். அங்கு வழிபடும் வானோர்க்கெல்லாம் உயர்வு கிடைக்கிறது என்ற நம்பிக்கை, திரும்புறம்பயத்தை நோக்கி ஆரூரரை அழைத்துச் செல்கிறது.

இதனை,

> *'கங்குல் ஏமங்கள் கொண்டு தேவர்கள்*
> *ஏத்தி வானவர் தாந்தொழும்*
> *பொங்கு மால்விடை ஏறி, செல்வப்*
> *புறம்ப யந்தொழப் போதுமே!*

(ஏழாந்திருமுறை – 351)

என்பதால் அறியலாம். அதனால் திருப்புயம்பயம் செல்லும் வழியிலேயே பதிகத்தை அருளிச் செய்கிறார்.

## வழித்துணை

ஆரூரர் திருவெஞ்சமாக்கூடலை வணங்கி, உடன் சோழ நாட்டுக்கு எழுந்தருளுகின்றார். சோழநாட்டில் திருக்கற்குடிமலை, திருவாறை மேற்றளி, திருஇன்னம்பர், திருப்புறம்பயம் முதலிய திருத்தலங்களை முறையே வழிபாடு செய்துகொண்டு திருமுதுகுன்று நோக்கி யாத்திரை செய்கின்றார். ஆரூரர் வழிபட்ட திருத்தலங்களுக்கிடையில் உள்ள தூரம் ஆரூரரின் இளைமைப் பொலிவையும் விரைவுணர்வையும் உணர்த்துகின்றது.

திருமுதுகுன்று செல்லும் வழியில் கூடலையாற்றூர் உள்ளது. ஆரூரர் திருக்கூடலையாற்றூருக்குச் செல்ல

விருப்பம் கொள்ளாமல் திருமுதுகுன்றுக்குச் செல்ல நினைந்து பயணம் செய்கின்றார். திருமுதுகுன்று நோக்கிச் செல்லும் ஆரூரரை – சுந்தரரைப் பெருமான் கூடலை யாற்றூருக்கு வழிகாட்டி அழைத்துச் செல்கின்றார். திருமுதுகுன்று நோக்கிப் பயணம் செய்து கொண்டிருந்த ஆரூரருக்குத் திருமுதுகுன்றத்திற்கு வழி தெரியவில்லை. வழிகாட்டுபவனாக இறைவனே வந்து திருமுதுகுன்றத்திற்குச் செல்லும் வழி என்று கூடலையாற்றுக்குரிய வழியைக் காட்டி முன் செல்கின்றார். கூடலையாற்றூர் அருகில் சென்றவுடன் வழிகாட்டியரைக் காணோம். ஆரூரர் நிகழ்ந்தது அறிந்து அதிசயித்து இன்றமிழ்ப் பாடல்களால் படிப்பரவுகின்றார்.

திருக்கூடலையாற்றூரில் அருளிய பாடல்கள் பொருள் பொதிந்தவை. இறைவனை அடிகள் என்று அழைக்கின்றார். வழிகாட்டும் ஆசிரியனாய் அமையும் பொழுது அருள் நலம் சார்ந்த அடிகளாதல் மரபு. ஆயினும் இங்கு அடிகள் என்றமை அநீதிகளைச் சாடுவான் என்பதை உணர்த்த "வடிவுடை மழுவேந்தி" என்றும் "மதகரியுரிபோர்த்தும்" என்றும் அருளிச் செய்தமை யறிக. ஆம் அநீதிகளை அழித்தல் அருளுடைமைக்குப் புறம்பன்று. இதுவே சமுதாய நியதி. ஒறுத்தல் மட்டுமே ஆளுமைப் பண்பல்ல – அருளுதலும் ஆளுமைப் பண்பேயாம். இறைவன் அருளும் இயல்பினன் என்பதை உணர்த்த "புரிகுழல் உமையாளொடு" எழுந்தருளி யுள்ளான் என்றருளிச் செய்து தேற்றுகின்றார். திருக்கூடலை யாற்றூர் வளமானவூர். வண்மையாளர் வாழுமூர். ஆதலால், கொடி மாடங்கள் உடைய கூடலையாற்றூர் என்றார். அதனாலன்றோ இறைவன் ஆண்டவனாகவும் அதே போழ்தில் ஆர்வலனாகவும் இருந்தருள் புரிகின்றான். ஆர்வம் என்பது அன்பின் முதிர்ச்சியாகி –வலிய மேற்சென்று அன்பு காட்டுதல். அது எல்லையற்ற அன்பாக விரியும். வாளா அன்பு உணர்வாக இல்லாமல் முயற்சியும் கூடி வாழ்வித் தருளும் உணர்வுக்கு ஆர்வம் என்று பெயர். "அன்பீனும் ஆர்வம் உடைமை" என்றார் திருவள்ளுவர்.

திருமுதுகுன்றத்திற்குப் போகும் முன் திருக்கூடலை யாற்றூருக்கு வரச்சொல்லி வழி மறித்ததிலும் ஒரு குறிப்புணரலாம். அதாவது வாழ்க்கையில் முதுமைக்கு முன் நிகழ்வன நிகழவேண்டாமா? முதுமை வருதலுக்கு முன்பே வாழும் வழி ஈதெனத் துணிந்து அவ்வழி நடத்தல் கடமையன்றோ? அதனால், தடுத்து - வழியில் நடத்தியருள் கின்றார்.

சேக்கிழார் நெஞ்சம் - சிவ நெறியில் - சித்தாந்தச் சிவ நெறியில் பதிந்தது. சித்தாந்தச் சமயமே சமயம்; சித்தாந்தச் சமயமே செழுந்தமிழ் வழக்கு; சித்தாந்தச் சமயமே வெற்றி பெறவேண்டும்; அயல் வழக்குகள் பின் தள்ளப்பெறுதல் வேண்டும் என்ற உணர்வுகள் பெரிய புராணத்தைப் பயில்வாருக்கு வராமல் போகாது.

நம்பி ஆரூரர் திருமுதுகுன்றத்துக்குச் செல்லாமல் தடுத்து - திருக்கூடலையாற்றூருக்கு வழிகாட்டிய இறை வனின் செயலை எடுத்துக் கூற வந்த சேக்கிழார் "ஒப்பரும் புகழார் செல்லும் ஒரு வழி" என்று அருளிச் செய்கின்றார். ஒப்பற்ற புகழினை உடைய அறிஞர்கள் விரும்புகின்ற சமயம் - சித்தாந்தச் சிவநெறியே என்று விளக்குகின்றார். உயிர்கள் உய்தலுக்குரிய நெறியாகிய சமயத்தை வழியெனக் கூறுதல் மரபு. இங்ஙனம் உயிர்களுக்கு உய்திகாட்டும் வழிகளாக - உலகில் பல சமயங்கள் நிலவுகின்றன. அச்சமயங்களில் எல்லாம் ஒன்றாக உயர்ந்து சிறந்து விளங்குவது சித்தாந்தச் சமயமேயாம். மற்ற சமயங்கள் எல்லாம் உய்யும் நெறி காட்டுவதில் தலைதடுமாறிப் போயின. ஏன்? தெளிவின்மையால் வேதாந்தத் தெளிவு சைவசித்தாந்தம் என்பர். பல்வேறு நெறியில் வாழ்ந்து - எய்த்துக் களைப்பான வர்களை - எய்ப்பிலிருந்தும் ஏமாற்றத்திலிருந்தும் மீட்கத் தோன்றி எழுந்த சமயம் சித்தாந்தச் செந்நெறியே! இறைவன் சிவபெருமானே!

*போற்றும் தகையன; பொல்லா முயலகன்*
*கோபப் புன்மை*
*ஆற்றும் தகையன; ஆறு சமயத்(து)*
*அவ ரவரைத்*
*தேற்றும் தகையன; தேறிய தொண்டரைச்*
*செந்நெறிக்கே*
*ஏற்றும் தகையன இன்னம்ப ரான்தன்*
*இணையடியே.*

இங்ஙனமிருக்க சிலர் சமயங்களிடையில் சமரசம் என்ற பெயரில் சமயக் கலப்படம் செய்து குழப்ப நினைக்கின்றனர். சமயங்களிடையே இணக்கம் தேவை. உறவு தேவை; ஒருமைப்பாடு தேவை, சமய ஒருமைப்பாடு மனித குலத்திற்குத் தவிர்க்க முடியாத தேவை. ஆயினும் ஒருமைப்பாட்டிற்கும் கலப்படத்திற்கும் உள்ள வேறு பாட்டைத் தெரிந்துகொள்ள வேண்டும். கலப்படத்தினால் தத்துவத் தெளிவு இல்லாமம் போகும்; சமய அனுபவங்கள் கிடைக்காது. ஒரு கடவுள் வழிபாடு இருக்காது. சமயத் தத்துவக் கலப்படம் - உணவுக் கலப்படத்தை விடத் தீயது. இந்தக் கலப்படத்தைக் காஞ்சி காமகோடி பீடம் துணிந்து செய்து வருகிறது. தரமான பொருள்களை விற்போருக்கு விளம்பரம் குறைவு. பொருளின் தன்மையறிந்து வாங்குவோர் வருவர். போலிகள் கூவியழைத்து விற்பர். இன்றும் எப்படியாவது 'இந்து சமயம்' என்ற பெயரமைப்பினைச் சாதகமாகக் கொண்டு சமயக் கலப்படம் செய்வதிலும் மறைமுகமாக மக்களை வேற்றுமைப் படுத்தி அழிப்பதிலும் முனைந்து நிற்கும் காஞ்சி காமகோடி பீடத்தின் 'சின்னப் பெரியவரின் செயல் முறைகள் ஏற்கத் தக்கனவல்ல. தமிழகத்தில் அறிஞர் ஏற்கும் ஒரே சமயம் சித்தாந்தச் சமயமே! அதுவே ஒரு வழி! இந்த வழியே ஆரூரரை - ஆற்றுப்படுத்தி வழித்துணையாக இருந்து இறைவன் அழைத்துச் செல்கின்றான்.

## நாதர்பால் பொருள் வேண்டல்

நம்பி ஆரூரர், திருக்கூடலை யாற்றூரிலிருந்து திருமுது குன்றம் செல்ல எண்ணிப் பயணத்தைத் தொடங்கினார். தேவார காலத்தில் - சேக்கிழார் காலத்தில் திருமுதுகுன்றம் என்ற தீந்தமிழ்ப் பெயர் நிலவிய திருமுதுகுன்றம் சமஸ்கிருத ஆர்வலர்களால் விருத்தாசலம் என்று மாற்றப்பட்டு விட்டது. இன்றும் வழக்கில் விருத்தாசலம் என்றே வழங்கப்பெறுகிறது. இதுபோல் நூற்றுக்கணக்கான திருத்தலங்களின் பெயர்களை சமஸ்கிருதப் படுத்தியுள்ளனர்.

மயிலாடுதுறை என்பது அழகான தமிழ்ப்பெயர். அது மாயவரம் ஆயிற்று. புரட்சித்தலைவர் எம்.ஜி. இராமச் சந்திரன் தலைமையில் அமைந்துள்ள தமிழ்நாடு அரசு மாயவரம் என்ற பெயரை மயிலாடுதுறை என்று மாற்றித் தமிழ்மக்கள் நெஞ்சில் மகிழ்ச்சியூட்டி யுள்ளது. தமிழ்நாடு முழுதும் இங்ஙனம் பெயர் மாற்றங்களைச் செய்யத் தமிழ்நாடு அரசு முன்வர வேண்டும்.

தென்னார்க்காடு மாவட்டம் திருமுதுகுன்றம் நல்ல அழகான ஊர். இவ்வூர் மணிமுத்தாற்றங் கரையில் இயற்கைச் சூழலுடன் அமைந்து வளர்ந்து வருகிறது. திருமுது குன்றம் என்பது பெயர். ஆனால் குன்றைக் காணோம். குன்று இருந்து நிலத்திடை அமிழ்ந்திருக்க வேண்டும். குன்று உண்டு என்று பொருள் கொண்டால் திருவருள்மலை என்ற பொருளிலும் உருவகமாக எடுத்துக் கொள்ளலாம் அல்லவா? திருமுது குன்றம் நான்குதிசைகளிலும் பெரிய நிலைகளையுடைய அரசகோபுரங்களைக் கொண்டு நிமிர்ந்து நிற்கும் திருக் கோலம் காண்போரை யெல்லாம் ஈர்த்திடும் தன்மையது.

ஆரூரர் இத்திருக்கோயிலில் நுழைந்து முறையே வலம் வந்து இறைவன் திருமுன்பை யணைந்து செந்தமிழ்ப் பாமாலை பாடுகின்றார்.

*நஞ்சி இடைஇன்று நாளையென் றும்மை நச்சுவார்*
*துஞ்சியிட் டாற்பின்னைச் செய்வதென் னடிகேள்*
*சொலீர்*
*பஞ்சி யிடப்புட்டில் கீறுமோபணி யீரருள்*
*முஞ்சி யிடைச்சங்கம் ஆர்க்குஞ் சீர்முது குன்றரே!*

(ஏழாந்திருமுறை – 435)

என்று தொடங்கி பதினொரு பாடல்கள் பாடி வேண்டு கிறார்.

இத்திருப்பதிகம் செந்தமிழ்ச் சுவை நிறைந்தது; நகைச்சுவை ததும்புவது. இறைவனை ஆரூரர் தோழமை யாகப் பெற்ற உரிமையில் எண்ணியவாறெல்லாம் பேசுகிறார். மானிட வாழ்க்கையின் சுவை நிறைந்த உணர்வுகளை இத்திருப்பதிகத்தில் அனுபவிக்க முடிகிறது. சேக்கிழாரின் துணையின்றி இத்திருப்பதிகத்தை நாம் படித்தால் சுந்தரர் மீது ஆற்றொணா வருத்தம் ஏற்படும். "ஏயர் கோன்கலிக்காமர்கள்" பலர் தோன்றிவிடுவர். ஆனால், சேக்கிழார் "நஞ்சியிடை" என்று தொடங்கும் திருப்பதி கத்தைப் பாடிய சுந்தரரை,

*"நாதர்பால் பொருள்தாம் வேண்டி*
*நண்ணிய வண்ணம் எல்லாம்*
*கோதறு மனத்துட் கொண்ட*
*குறிப்பொடும் பரவும் போது*
*தாதவிழ் கொன்றை வேய்ந்தார்*
*தரஅருள் பெறுவார் சைவ*
*வேதியர் தலைவர் மீண்டும்*
*"மெய்யில் வெண்பொடி"யும் பாட*

(பெரிய புராணம். ஏயர்கோன் – 186)

என்று அறிமுகப்படுத்துகிறார்.

"கோதறு மனத்துட் கொண்ட குறிப்பொடும்" என்பது சேக்கிழார் வாக்கு. சுந்தரர் குற்றமற்ற மனத்தினராகவே பாடுகின்றார். சுந்தரருக்குப் பொருள் தேவை! ஆனாலும் வெளிப்படையாகக் கேட்கவில்லை; குறிப்பால் புலப்படுத்து கின்றார். அதாவது கேட்டுப் பெறுவதை விட அவரே கொடுத்துப் பெற்றால் நல்லது என்ற கருத்து நம்பி ஆரூரருக்கு! ஆனால், பதிகம் வாழ்வியலின் உணர்வுகளை யெல்லாம் சித்திரித்துக் காட்டுகிறது. இதனைச் சுந்தரர் பொதுவாக உணர்த்திப் பாடுகிறார். "ஒரு குடுக்கையில் பஞ்சை அடைப்பதினால் குடுக்கை உடைந்து விடுமோ" என்று கேட்கிறார். அதாவது இறைவன் அடியார்க்கு அருளுவதன் மூலம் யாதொருகுறையும் அவனுக்கு வராதே என்பது கருத்து. அடியவர்கள் இறைவனின் அருள் இன்று கிடைக்கும்; நாளை கிடைக்கும் என்று ஏங்கியிருக்கின்றனர். இந்தச் சூழ்நிலையில் இறைவன் அருளைப் பெறாமலே இறந்து போனால் என்ன செய்வது? "அவர்கள் இறந்து போன பிறகு நீ என்ன செய்யப் போகிறாய்? செய்யக் கூடியது ஒன்றுமில்லையே!" என்று இறைவனுக்கே எடுத்துக் கூறும் நிலையும் அமைந்துள்ள இப்பாடல் அருமையானது. ஆழ்ந்த வாழ்வு அனுபவத்திற்குரியது. ஒவ்வொருவர் வாழ்க்கைக்கும் பயன்படக் கூடியது.

## உலகியல் கடந்த அருளியல் இல்லை

இறைவன், வேண்டுவார் வேண்டுவதே ஈவான். அன்பர் மனத்துள் நின்ற கருத்தறிந்து முடிப்பான். ஆரூரருக்கும் அவர்தம் மனம் மகிழப் பன்னிரண்டாயிரம் பொன் வழங்கியருள்கின்றான். ஆரூரர் பொன் பெற்ற பின்னரும் இறைவனிடம் வேண்டுகோள் வைக்கின்றார். ஆம்! திருமுதுகுன்றத்திற்கும் திருவாரூருக்கும் இடையில் உள்ள தூரம் ஏறத்தாழ 120 கல். இவ்வளவு தூரம் யாரால் பொன்னைச் சுமந்து வரமுடியும்? எடுப்பிற்கெல்லாம் வாய்ப்பிருக்கும்போது தூக்கிச் சுமக்கத்தான் மனம் வருமா?

இந்தச் சராசரி மனித வியலுக்கு ஆரூரரும் விதி விலக்கல்லர். திருமுதுகுன்றில் வந்த பொன்னை - திருவாரூரில் கொண்டு வந்து தர வேண்டுமாம்.

சாதாரணமாகத் தாம் வாழ்வதில் மட்டுமே மனிதர்கள் நாட்டம் செலுத்துவதில்லை. தமது வாழ்க்கையை மற்றவர்கள் பார்த்து மயங்க வேண்டும்; வியக்க வேண்டும் என்று நினைக்கின்றனர். ஏன்? மற்றவர் வியப்பதற்காகவே சிலர் வாணவேடிக்கை போன்று வெற்று ஆரவார வாழ்க்கையை நடத்துகின்றனர். இஃது உலகியற்கை. ஆரரருக்கும் தாம் பெற்ற பொன்னை ஆரூரில் கொண்டு வந்து தரவேண்டும்; பலரறியத் தரவேண்டும்; மற்றவர் மயக்கத்துடன் கூடிய வியப்பினை அடைய தக்க வகையில் தரவேண்டும் என்கிற விருப்பம். இந்த வேண்டுகோளையும் தம்மிடம் அன்புடையவரின் பாரம் தாங்கும் இறைவன் ஏற்றுக்கொண்டான். உடன் மணிமுத்தாற்றில் பொன்னை இட்டுவிட்டுப் போய் ஆரூர்க் குளத்தில் எடுத்துக் கொள்ளும்படி அருளுகின்றான் இறைவன்.

ஆரூரரும் மணிமுத்தாற்றில் பொன்னை இடுகின்றார். இந்த நிலையில் ஆரூரர் இரண்டு மனநிலையினராக விளங்குகின்றார். அதாவது இயல்மொழியை அருளாணை யென ஏற்று ஆற்றில் பொன்னை இடுகின்றார். மணிமுத் தாற்றில் இடும் பொன்னை ஆரூரில் உள்ள குளத்தில் எடுக்கலாம் என்று நம்புகின்றார். ஆயினும் மணிமுத்தாற்றில் இட்ட பொன்னே மாற்றுக்குறையாமல் ஆரூரில் கிடைக் கிறதா என்பதைச் சோதித்தறிய மச்சம் வெட்டிவைத்துக் கொள்கிறார். மச்சம் வெட்டி வைத்துக் கொள்ளுதலில் இறைவனிடத்தில் உள்ள நம்பிக்கை மாற்றுகுறைவதுபோல் தெரிகிறது. ஆனால் உண்மையன்று. "உலகியல் கடந்த அருளியல் இல்லை" என்பதே ஆரூரரின் வரலாற்று நோக்கம்.

பொன்னைப் பெற்ற பிறகு, அந்தப் பொன் ஆரூருக்குச் சொந்தம். அந்தப் பொன்னை ஆரூரர் பயன்படுத்தும்

நிர்வகிக்கும் முறைகளால் இறைவன் திருவுள்ளம் மகிழ நடந்து கொள்ள வேண்டும். பொன், ஆற்றில் இடப் பெறுகிறது. தண்ணீரில் நெடுந்தொலைவு வருவதால் பொன்னின் மாற்றுக் குறையலாம். அல்லது மற்றவர்களாலும் மாற்றுக்குறைய நேரிடலாம் அல்லவா? அதனால், மச்சம் வெட்டி வைத்துக்கொண்டாரே தவிர இறைவன் திருவருள் செயல்மீது ஐயப்பாடு கொண்டல்ல. இறைவனே கூட அவன் வழங்கிய பேறுகளை மக்கள் பயனுற - அளவாக மதித்துப் பயன்படுத்துதலிலேயே திருவுள்ளம் மகிழ்வான். ஆற்றில் இட்ட பொன்னுக்கு மச்சம் வெட்டிக் கொண்டது நம்பிக்கையின்மையின் பாற்பட்ட செயல் அல்ல. இது உலகியல்; வாழ்வியல்.

## ஆற்றில் போடு! குளத்தில் எடு!

### அடியேற்கு அங்கே!

இறைவன் மனத்துள் நிற்கும் கருத்தறிந்து முடிப்பவனாயிற்றே! ஆரூரருக்குப் பொன் வழங்கப் பெறுகிறது. ஒன்றல்ல; இரண்டல்ல! பன்னிரண்டாயிரம் பொன் வழங்கப் பெறுகிறது. ஆரூரருக்கு அளவற்ற மகிழ்ச்சி! ஆயினும் விண்ணப்பம் தொடர்கிறது. என்ன விண்ணப்பம்? உரிமையால் இறைவனை மேலும் அண்மித்து நின்று விண்ணப்பிக்கின்றார். நீ அருளிச் செய்த பொற்குவியலை, நீயே ஆரூருக்குக் கொண்டுவந்து தரவேண்டும் என்பது கோரிக்கை. "அடியேற்கு அங்கே என்கிறார். அங்கே என்ற சொல்லில் பல நயங்களும் வாழ்வியல் உண்மைகளும் பொதிந்து கிடக்கின்றன. ஓரிடத்தின் பெயரைச் சொல்லாமல் "அங்கே" என்றால் அதில் ஏதோ மறைவு இருக்கிறது. பலர் அறியக் கூடாத-அறிய வேண்டாத மறைவு! ஒத்த-நெருக்க மான இருவருக்கிடையில் தான் இங்ஙனம் மறைபொருளாக இடங்குறித்துப் பேசப்பெறும். இருவருக்கும் அது அறிந்த

இடமாய், உறுதிப்படுத்தப்பெற்ற இடமாய் இருத்தல் வேண்டும்.

## மற்றவர் மருள...

பழமலையுடையார் அருளிச்செய்த பன்னிரண்டாயிரம் பொன்னை ஆரூரர் அள்ளிச் செல்லத் தயாராக இல்லை! பொன் அவருக்கு ஆரூரில் கிடைக்க வேண்டும். பொன் கிடைத்தால் மட்டும் போதாது. இப்பன்னிரண்டாயிரம் பொன் ஆரூரில் கிடைக்கும் வகையில் ஆரூரில் உள்ளோர் மருள வேண்டும். இதற்குத் தக்கவகையில் பொன் ஆரூரருக்கு வந்தாக வேண்டும்.

ஒவ்வொருவரும் அவரவர் தம் வாழ்க்கை நடத்தால் சரி என்று நினைக்க மாட்டார்கள், அவர்களின் வாழ்க்கையைப் பார்த்து மற்றவர்கள் மயங்க வேண்டும் அதிசயமுறுதல் வேண்டும் என்று விரும்புவது உலகியல். இந்த உலகியல் விருப்பார்வம் நம்பி ஆரூரரையும் பிடித்தாட்டு கிறது. இறைவன் இதற்கும் உடன்படுகிறான்! ஆயினும் இறைவன் ஆரூரரை வாளாவிருக்க விடவில்லை. "இப் பொன்னை எடுத்துப் போய் மணிமுத்தாற்றில் இடுக! திருவாரூர் கமலாலயத் திருக்குளத்தில் எடுத்துக் கொள்க" என்று அருள்மொழி செய்தார்.

பொன்னை மணிமுத்தாற்றிற்கு எடுத்துச் செல்லும்பணி ஆரூரருடையதாகிறது. ஒரு பொருளை எடுத்துச் செல்வதில் ஆற்றல் மிக்குடையது தண்ணீர்! நிலத்தடியில் நீரோட்டம் பரவிக் கிடக்கிறது. அந்நீரோட்டத்தின் வழி எளிதில் பொருள்களை எடுத்துச் செல்லலாம் என்ற உலகியல் உணரத் தக்கது.

## நடைமுறைக் கடமை

இந்த வரலாற்றுக்கு இவ்வுண்மை எவ்வாறு பொருந்தும் என்பது ஆய்வுக்குரியது. ஆரூரர் ஆற்றில்

பொன்னை இடுகின்றார். இங்கு ஆரூரர் அப்பட்டமான உலகியலைச் சார்ந்த மனிதராகவே விளங்கி ஒரு செயல் செய்கிறார். நம்பிக்கை-நம்பிக்கையின்மை என்று போராடுவது மனித இயற்கை. இறைவனின் ஆற்றலை நம்பி—ஆணையை நம்பி ஆற்றில் பொன்னை இடுகிறார். அதே போழ்து எந்த மச்சத்தில் பொன்னை இட்டாரோ அதே மச்சத்தில் திருவாரூருக்குப் பொன்வந்து சேருகிறதா என்று அறிந்து கொள்ள ஐயப்பாட்டுணர்வுடன் ஆற்றில் பொன்னை இடும் முன் மச்சம் வெட்டி வைத்துக் கொள்கிறார். அது மட்டுமா? அன்று வலிய வந்து "தோழன்" என்று சொல்லி ஆட்கொண்ட அருளினை-அந்த அருளிப் பாட்டின் உண்மையினை இச்செயலில் அறியப்போகிறேன் என்றும் கூறுகிறார். இச்செயல் ஐயப்பாட்டின் வழியது என்றும் கூறலாம்.

அங்ஙனம் கூறுவதை விட வேறு வகையிலும் நாம் எண்ணுவது நல்லது. நம்பிக்கையின் பாற்பட்டு மட்டும் சிந்திக்கக்கூடாது; செயலாற்றக் கூடாது. வாழ்க்கையின் நடைமுறைகளுக்கு இசைந்ததாகவும் இருக்க வேண்டும். பொன்னை எண்ணுதல்; மச்சம் வெட்டி வைத்துச் சோதித்தல் போன்றவை வாழ்க்கையின் நடைமுறைக் கடமைகள் என்று பொருள் கொள்ளலாம். ஆரூரர், பழமலைநாதர் அருளித் தந்த பொன்னை மணிமுத்தாற்றில் இட்டுவிட்டுக் கவலையின்றி மேலும் திருத்தலப் பயணத்தைத் தொடர்கின்றார்; தில்லை நோக்கிப் பயணம் செய்கின்றார்.

தில்லையை நோக்கி நம்பியாரூரரின் புனித யாத்திரை தொடர்கிறது. இடையில் கடம்பூர் என்ற திருத்தலத்தை வணங்கியதாகத் தெரிகிறது. ஆனால் இதுபற்றிய விளக்கங்கள் கிடைக்கவில்லை. மற்றும் தில்லை செல்லும் வரையில் உள்ள பல்வேறு திருத்தலங்களிலும் வழிபாடு செய்து கொண்டு தில்லை நகரை வந்தடைகின்றார். தில்லைத் திருக்கோயிலில் மேற்குக் கோபுரப் புண்ணிய வாயில் வழியாகத்

திருக்கோயிலுக்குள் செல்கிறார். சேக்கிழார் திருக்கோயிலின் வாயிலையே புண்ணிய வாயில் என்கிறார். சிவ புண்ணியத்தை ஈட்டித்தரும் வாயில் என்பதால் புண்ணிய வாயில் என்கிறார்.

மேற்குத் திருவாயில்வழி உள்ளே நுழைந்த நம்பியாரூரர் இறைவன் ஆடல்வல்லானாக எழுந்தருளியுள்ள திருமுன் பிற்கு அழைத்துச் செல்லும் திரு அணுக்கத் திருவாயிலைக் கடந்து சந்நிதிக்குச் செல்கிறார். ஒளியாகிய இறைவன் உலகு தொழ ஆடும் அரங்கினைக் கண்டு பேரன்பு நிறைந்த உணர்வு அலை மோத எம்பெருமானை அணுகிச் செல்கிறார். பேரன்பு அழுத்தும் படியென்று சிறப்பிக்கப் பெறும் திருக்களிற்றுப் படியை அடைகின்றார். மேவிய காதலான், பதிகம் பாட இயலவில்லை. மெய்ப்பாடுறுகிறார். நிலந்தோய வீழ்ந்து வணங்குகிறார். தில்லையில் கண்ட திருக்கோலம் முன்பு ஆரூரர் தம் நெஞ்சில் நிறைந்து நின்று ஒரு திருக்கோலத்தை நினைவுக்குக் கொண்டு வந்தது. அது எந்தத் திருக்கோலம்? பேரூரில் கண்ட திருக்கோலம் நினைவிற்கு வருகிறது. பேரூரில் கண்ட பெருமான் திருவுரு மீண்டும் கரந்து போகாமல் நெஞ்சில் நிறைந்து மன்னிக் கிடந்ததாம். அதனால் பேரூர்ப் பெருமானுக்கு நெஞ்சிற் கரவிலாதவர் என்று சேக்கிழார் பெயர் சூட்டி மகிழ்கிறார். பலர், கட்புலனுக்குத் தெரிவர்; பொறிகளுக்குத் தெரிவர்; பொறிகளுக்கு விருந்தாய் அமைவர். என்ன பயன்? நெஞ்சிற் கரவாது ஒழுகினால்தான் அன்பு சிறக்கும். ஆருயிர்த் துணையாய் அமைய முடியும். பேரூரில் எழுந்தருளியுள்ள பெருமான் நெஞ்சிற் கரவிலாதவர். ஆரூரர் நெடுந்தூரம் வந்த பிறகும் அவர் நெஞ்சிலிருந்து இவர் நீங்கவில்லை.

தில்லைத் திருக்கூத்தைக் கண்டவுடன் ஆரூரர்க்குப் பேரூர்க் காட்சியே தென்படுகிறது. ஆம்! நம்முடைய வாழ்க்கையிலும் பேரூர்க் காட்சி பெருங்காட்சியே! இன்றும் நெஞ்சிற் கரவிலாத ஒரு மாமனிதர் பேரூரில் நடமாடு

கின்றார். எளிய தோற்றம்! நிறைந்த அன்பு! மக்கள் பால் ஈடுபாடு கொண்ட தோழமைக்கு உற்றதுணை! நமது நெஞ்சில் கரவிலாதிருக்கும் ஒரு தோழமை! தமிழுக்குக் கல்லூரி! வளரும் சமுதாயத்திற்குக் கல்வி நிலையங்கள் கண்ட அருளாளர்! பேரூர் அடிகள் நெடுந்தூரம் கடந்த பிறகும் நினைவு கூரத் தக்கவர்.

தில்லைத் திருக்கோயில் இறைவன் நன்னெறிக்கண் நின்றாரை வாழ்விப்பான். நன்னெறியினின்று வழுவி விழுந்தாலும், வீழ்ந்ததன் துன்பம் தாக்கா வண்ணம் தடுத்துக் காப்பாற்றுவான். இப்பெருமானை, தனிக்கூத்துடையானைக் காணப் பெற்ற பேறு பெரும்பேறு என்று களிப்பு மீதூரப் பாடுகின்றார். திருச்சிற்றம்பலப்பதிகத்தில் மடித்தாடும் பெருமான் என்றெடுத்துப் பாடுகின்றார். தூக்கிய திருவடிகள் அடிமைத் திறம் வழுவி வழி தவறிச் செல்லும் பொழுது தாமே தடுத்தாளும் என்ற குறிப்புணர்த்திப் பாடுகின்றார். தவறுகளுக்குக் காலம் கைப்பட்டுத் தண்டனை பெறாமல் தாமே வினைதிருத்தி ஆட்கொள்ளும் பெருங்கருணை முதல்வன் என்று உலகத்தார் உய்த்துணரப் பாடுகின்றார்.

தில்லையில் சிலநாள் தங்கி வழிபாடியற்றிக் கொண்டு திருக்கருப்பறியலூர் செல்கிறார்.

## வழிபாட்டு நெறி

### வாழ்த்தும் நெறி

நம்பியாரூரரின் திருத்தலச் செலவு தொடர்கிறது. தில்லையிலிருந்து திருக்கொகுடித் திருக்கோயிலுக்குச் செல்கிறார். இது திருக்கருப்பறியலூர் என்றும் அழைக்கப் பெறுகிறது. இத்திருத்தலத்தில் நம்பியாரூரர் அருளிச் செய்துள்ள பதிகம், தெள்ளுத்தமிழ்ப் பதிகம். இயற்கை வளம் கொழித்திடும் திருக்கருப்பறியலூரை வளமிக்க தமிழால் வாழ்த்தியுள்ளார். வளமும்-வாழ்த்தும் வாழ்த்தும்-வளமும்

இணைந்தவை; பிரித்தற்கியலாதவை. இறைவனை வாழ்த்து வோர் வளமோடு வாழ்வர்! இஃது இயற்கையின் நியதி! ஆனால், எப்படி வாழ்த்துவோர் வாழ்வர்? எப்படி வளமோடு வாழ்வர்; நம்பியாரூரர் இத்திருப்பதிகத்தில் சமய நெறியை இறைவனை வாழ்த்தும் நெறியை விளக்கியருளி யுள்ளார்.

*"சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திறம்பா வண்ணம்"*
*"விருந்தாய சொல்மாலை கொண்டேத்தி வினைபோக வேலி தோறும்"*
*"பொய்யாத வாய்மையால் பொடிபூசிப் போற்றிசைத்துப் பூசை செய்து"*
*"இலைமலிந்த மழுவானை மனத்தினால் அன்பு செய்(து) இன்ப மெய்தி"*

என்று வரும் தொடர்கள் நினைந்து நினைந்து படிக்கத் தக்கன; ஓதுதலுக்குரியன; உணர்ந்து ஒழுகுதற்குரியன. இந்தத் தொடர்களின் உணர்த்தப் பெறும் சமய வாழ்க்கை, வாழ்த்தும் நெறி இன்று உள்ளதா? எங்கிருக்கிறது? இன்று அன்பு நெறியாக, தொழும் நெறியாக, வாழ்க்கை நெறியாக இருந்த சிவநெறியை "இந்து சமயம்" என்ற கலப்பு – வெற்றுச் சடங்குச் சமயமாக ஆக்கிவிட்டது. அதனால்; வழிபாடும் முறையாக இல்லை; வளமும் இல்லை!

வழிபாட்டில் முதல் நெறி–உற்றிருந்து நினைத்தல். அதாவது தனக்குள்ளேயே இறைவனைநாடுதல், விறகில் தீ, வெளிப்புறத்தில் இல்லை; விறகுக்குள்தான்! பாலில் நெய், பாலுக்குள்தான்; பாலுக்கு வெளியே இல்லை! அதுபோல இறைவன் ஒவ்வொருவர் உயிருக்குள்ளும் உயிர்க்கு உயிராக விளங்குகின்றான்! தனக்குள், தனது உயிர்க்கு உயிராக இருக்கும் இறைவனைத் தேடும் முயற்சியில் ஈடபடுவோரைக் காணோம்! வெளியிலேயே தேடுகிறார்கள்! அதனால்

அவனும் அகப்படுவதில்லை. இன்று இறை வழிபாட்டிலும் பரபரப்பு! நெருக்கடி! ஆரவாரம்! தனியே இருந்து தேடுவாரைக் காணோம்! உலகியல் காதலுக்கு எவ்வளவு தனிமை தேவையோ அதே அளவு இறைவனிடத்து ஒருவர் காதலித்து அன்பு செய்யத் தனிமை தேவை. பலரறிய காதற் செல்கள் செய்வதை அநாகரிகம் என்று கருதுகிற உலகம், பொது மானிடஒழுங்கிற்குத் தீங்கு என்று கருதி அபராதம் விதித்திடும் உலகம், ஒருவர் தன்னுடைய ஆன்ம நாயகனாக விளங்கும் இறைவனைப் பூசிப்பதைக்கூட ஆரவாரமாக்கி, காட்சியாக்கிக் காசு பறிப்பதைக் கேவலமாகக் கருதவில்லை. இது சமய நெறிக்குப் புறம்பான போக்கு.'

## எது வழிபாடு?

நம்பியாரூரர், இறைவனை நினைத்து வழிபடும் நெறியில் நம்மை ஆற்றுப்படுத்துகிறார். காற்று மண்டலத்தைத் தண்மை செய்து உதவும் சோலையை நாடுக! தனிமையாக, நிமிர்ந்த நிலையில் உட்கார்ந்திடுக! கண்களைச் சற்றே மூடுக! இறைவனை உள்ளே தேடுக! தேடிப் பிடித்த இறைவனை உள்ளத்தில் அன்போடு நினைத்திடுக! உள்ளத்தால் உரையாடுக! இதுவே வழிபாடு. இந்த வழிபாடு, திருக்கோயிலை எடுத்து எழுந்தருளச் செய்யும் வழி பாட்டினும் சிறந்தது என்பதை, பூசலார் நாயனார் வரலாற்றில் சிவபெருமான் உணர்த்துகிறார். இன்று இத்தகைய வழிபாடு எங்கு நடக்கிறது? எந்தத் திருக்கோயிலில் செய்ய இயலும்? இந்த வழிபாட்டு நெறிக்குப் பதிலாக இன்று ஆரவாரமான திருக்கோயில் குட முழுக்குகள்! தனித்திருக்க, உன்னி உன்னி நினைத்திருக்க இயலாத நிலைக்கு உலகியல் வாழ்வு நம்மைப் பிடர்பிடித்துத் தள்ளுகிறது! ஏன்? இங்ஙனம் செய்கிற வழிபாடு உண்மையல்ல என்று சொல்கிற பொய்ம்மை உலகம் வெற்றி பெற்றாலும் வியப்பில்லை.

இனிய அன்புடையீர்! நாள்தோறும் உலகம் விழிப்பதற்கு முன் விழித்தெழுங்கள்! இயற்கை தழுவிய சூழ்நிலையை நாடிச் செல்லுங்கள்! புதிய காற்று, புத்துணர்வைத் தரவல்லது. உங்கள் தலைவனை, இறைவனை, துணைவனை உற்றிருந்து நினைந்து காணுங்கள்! தொழுங்கள்! இதுவே நம்பியாரரர் காட்டும் வழிபாட்டு நெறி!

## மயக்கம் தெளியவில்லை!

அடுத்து வருவது அருமையான செய்தி! இறைவனை புகழ்ந்து பாட, துதிக்க, அருச்சனை செய்யப் புதிய புதிய சொற்களைத் தேடச் சொல்கிறார் சுந்தரர். கூறியதே கூறிக்கொண்டிருந்தால் என்றும் இளைஞனாக, புதுமைக்கும் புதியவனாக விளங்கும் இறைவனுக்கு உவப்பாக இருக்காது என்கிறார். ஆனால் தமிழகத்தின் நிலை என்ன? என்றோ வழக்கில் வந்த அஷ்டோத்திரம், சகஸ்ரநாமங்கள் திரும்பத் திரும்பக் கூறப்படுகின்றன. இந்த அருச்சனை நாமாவளிகள் புரியாத மொழியில் உள்ளன. உணர்வுக் கிளர்ச்சியினைச் செய்ய முடியாதன! ஒரோ வழி புரிந்தாலும அப்பொருள் நெஞ்சநதைத் தொடுவதல்ல. அதனாலன்றோ சிவபெருமான் இந்த அருச்சனைக்கு முற்றுப் புள்ளி வைக்கும்படி ஆரூரரைக் கேட்டுக் கொள்கிறார்! 'சொற்றமிழ் பாடுக' என்றார்! நாள்தோறும் இறைவன் அனுபவிக்கும் அனுபவத்தில் விளையும் புதிய புதிய சொற்களைக் கொண்டு வழிபடுக என்றார் நம்பியாரூரர்! நம்முடைய நாட்டிலோ அஷ்டோத்திரம், சகஸ்ர நாமங்களின் மயக்கம் தெளிந்த பாடில்லை.

## மண்ணிப்படிக்கரை மாண்பினன்

நம்பியாரூரர் திருக்கருப்பறியலூர் இறைவனைப் போற்றி வணங்கிக் கொண்டு மண்ணியாற்றங் கரையிலுள்ள

திருமண்ணிப் படிக்கரையென்ற திருத்தலத்துக்குச் சென்றார். திருமண்ணிப் படிக்கரைத் திருத்தலம் இயற்கைச் சூழலில் அமைந்த திருத்தலம். இங்கு எழுந்தருளியுள்ள இறைவனை, அளவற்ற புகழ்படைத்த திருப்பதிகம் ஓதிப் பரவுகின்றார். திருமண்ணிப் படிக்கரைப் பதிகத்தில் பெருமானை "எங்கள் பிரான்" என்று பாடல் தோறும் அழைத்து மகிழ்கின்றார். திருமண்ணிப் படிக்கரையில் எழுந்தருளியுள்ள இறைவனை ஏத்தினால் வாழ்க்கை திருந்தும்; வாழ்க்கை திருந்தினால் வருத்தம் மாறும் என்றெல்லாம் கூறி நம்மை ஆற்றுப் படுத்துகிறார்.

அயனும் மாலும் அருச்சித்தற்குரிய மூர்த்தியாக எழுந்தருளியுள்ள பாங்கை இயம்புகின்றார். திருமண்ணிப் படிக்கரையிலுள்ள இறைவனை அட்ட புட்பங்களால் அயனும் மாலும் அருச்சித்தனர். அட்ட புட்டங்களாவன; புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தனம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை என்பனவாகும். திருமண்ணிப் படிக்கரையிலுள்ள இறைவன் நஞ்சினை உண்பவன், எருதில் ஊர்ந்து வருபவன். மண்ணிப் படிக்கரை இறைவனின் இந்தச் செயல்களால் அவனைப் பித்தன் என்று எண்ணற்க! இகழ்ச்சி செய்யற்க! அவனைப் பற்றித் தொழுது பாவங்கள் அறுத்திடுக! என்று அறிவுறுத்துகின்றார்.

இத்திருப்பதிகத்தை ஓதி முடித்த நம்பியாரூரர், கடைக்காப்புப் பாடலில் நிறைந்த பயனை அருளிச் செய்துள்ளார். இத்தமிழ்ப் பாடலை இரவிலும் பகலிலும் சொல்லுநருக்குத் துன்பமில்லை! கேட்டவர்க்கும் துன்ப மில்லை! இத்திருப்பதிகத்தைச் சொல்லுநர்க்கும் கேட்ட வர்க்கும் அவர்தம் உற்றாருக்கும் அந்த உற்றாரைப் பின்பற்றி வரும் சுற்றத்தாருக்கும் துன்பம் மிகுதலில்லை என்று அருளிச் செய்துள்ளார். பல்லுயிர் வாழும் தெண்ணீர்ப் பழமண்ணிப் படிக்கரையைத் தொழுது வணங்கிப் பயணத்தைத் தொடர்கிறார்.

## தன்னை நினைக்கத் தந்தவன்!

இடையில் உள்ள திருவாழ்கொளிபுத்தூர் என்ற திருத்தலத்தை நினையாது-தொழாது சென்று விடுகிறார் நம்பியாரூரார். ஆனால் சற்றுத் தொலைவு சென்றவுடன் நினைவு வருகிறது. திருவாழ்கொளிபுத்தூர் இறைவனை நினைந்து திரும்பி வந்து வணங்குகின்றார். மறந்து நினைந்து வாழ்த்தியதால் இத்திருப்பதிகத்தில் அரனை "என்னை நினைக்கத் தருவானை" என்று நினைந்து பாடுகின்றார். பாடல் முடிவில் "வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந்து என் நினைக்கேனே!' என்றும் பாராட்டுகின்றார்.

## எல்லாமாக இருக்கும் இறைவன்

திருவாழ்கொளிபுத்தூரை வணங்கிக் கானாட்டு மூள்ளூர் என்ற திருத்தலத்திற்குச் செல்கின்றார். கானாட்டு முள்ளூர்த் திருத்தலம் காவரியின் வடகரையில் உள்ளது. தற்போது கானாட்டாம்புலியூர் என்ற பெயரில் வழங்கப் படுகிறது. இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர் பதஞ்சலி நாதர்; அம்மையின் பெயர் கானார் குழலி. இறைவனின் பெயர் பதஞ்சலிநாதர், என்றிருப்பதால் பதஞ்சலி முனிவர் பூசித்த தலமென அறிக. இத்திருத்தலம் சிதம்பரத்திலிருந்து தென்மேற்கே சற்றேறக்குறைய 20 கல் தொலைவில் இருக்கிறது. செல்லும் வழியில் காட்டு மன்னார்குடி ஓமாம்புலியூர் என்ற ஊர்கள் உள்ளன. இத்திருத்தலத்திற்கு நம்பியாரூரர் வரும்பொழுது பெருமான் எதிர் கொள்காட்சி யளிக்கின்றார். கானாட்டு மூள்ளூர்த் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனை எல்லாமாக இருக்கும் இறைவன் என்று போற்றித் துதிக்கின்றார்.

ஒருமேக முகிலாகி ஒத்துலகந் தானாய்
ஊர்வனவும் திற்பனவும் ஊழிகளும் தானாய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி
னானைத்

*திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த*
*திருத்தக்க அந்தணர்கள் ஓதுநக ரெங்கும்*
*கருமேதி செந்தாம ரைமேயும் கழனிக்*
*கானாட்டு முள்ளூரில் கண்டுதொழு தேனே!*

(ஏழாந்திருமுறை, பா.405)

கானாட்டு முள்ளூர் இன்று ஒரு சிற்றூராக இருக்கிறது. அன்று கானாட்டு முள்ளூரில் திருமகளும் விரும்பும் செல்வத்தையுடையவர்கள் இருந்ததாக ஆரூரர் பாடுகின்றார்.

## சித்தநிலைத் திருப்பதிகம்

கானாட்டு முள்ளூரிலிருந்து நம்பியாரூரர் பயணத்தைத் தொடங்குகிறார். திருஎதிர்கொள்பாடியைச் சென்றடைய பயணம் நடைபெறுகிறது. இந்தப் பயணத்தில் நம்பியாரூரர் வழிநடையிலேயே எதிர்கொள்பாடியினை நினைந்து பதிகம் பாடிக் கொண்டே நடக்கிறார். இத்திருப்பதிகத்தை வழிநடைப் பதிகம் என்றுதான் கூற வேண்டும். எதிர்கொள் பாடித் திருத்தலத்தில் இறைவன் முன் பாடிய பதிகம் கிடைக்க வில்லை. இத்திருப்பதிகத்தைச் 'சித்த நிலைத் திருப்பதிகம்' என்று வழங்குவதுமுண்டு. இத்திருப்பதிகத்தின் அமைப்பும் இதற்கிசைந்தவாறு இருக்கிறது.

### வாழ்க்கையைப் பயனுடையதாக்குக!

வாழ்க்கையென்பது ஒரு பயணம். இந்தப் பயணத்தில் தோற்றமுண்டு; மரணமுண்டு. இந்தத் தோற்றத்திற்கும் மரணத்திற்கும் இடைப்பட்ட வாழ்க்கையைப் பொருளு டையதாக்க பயனுடைய தாக்கவேண்டும் என்பது பதிகத்தின் செழும்பொருள். வாழ்க்கைக்குப் பயன்படும் யாக்கை தேய்ந்து தேய்ந்து கடைசியில் இற்று வீழும் தன்மையுடையது. ஆதலால், இந்த வாழ்க்கை அத்தகைய இழி நிலையை

அடைந்து மரணம் வருவதற்கு முன்பு பயனுடையதாக்க வேண்டுமென்று நம்பியாரூரர் வலியுறுத்துகிறார். இதனை.

*தோற்ற முண்டேல் மரண முண்டு துயரமனை*
*வாழ்க்கை*
*மாற்ற முண்டேல் வஞ்ச முண்டு நெஞ்சமனத் தீரே*
*நீற்றர் ஏற்றர் நீல கண்டர் நிறைபுனல்நீள்*
*சடைமேல்*
*ஏற்றர் கோயில் எதிர்கொள் பாடி யென்பதடை*
*வோமே.*

(ஏழாந்திருமுறை–63)

*செடிகொள் ஆக்கை சென்று சென்றுதேய்ந்*
*தொல்லை வீழாமுன்*
*வடிகொள் வண்ணார் வஞ்சனையுட்*
*பட்டுமயங் காதே*
*கொடிகொள் ஏற்றர்வெள்ளை நீற்றர் கோவணஆ*
*டையுடை*
*அடிகள் கோயில் எதிர்கொள் பாடி யென்பதடை*
*வோமே!*

(ஏழாந்திருமுறை–64)

இத்திருப்பதிகம் ஆழ்ந்த சிந்தனைக்குரியது. தோற்ற முண்டேல் மரணமுண்டு என்ற கருத்து, உயிருக்கு உரியதன்று. உயிருக்குத் தோற்றமுமில்லை; மரணமுமில்லை என்பது தமிழ்க் கொள்கை. உயிர் உய்தற்கு எடுத்துக் கொள்ளும் கருவியே உடம்பு, இந்த உடம்பிற்குத் தோற்றமும் உண்டு; அழிவும் உண்டு. உயிர் எடுத்த உடம்பினுள் இந்த மானுட உடம்பு அருமையானது; ஆற்றல் மிக்குடையது; பன்னோக்குடையது. ஆனாலும் தேய்தலுக்குரியது; அழிதலுக் குரியது. அதனால் மிகச் சிறந்த இந்த மானுட உடம்பு அழிவதற்கு முன்பே, மீண்டும் ஓர் உடம்பை எடுக்க

வேண்டுமென்ற அவசியமில்லாமல் சாதல் பிறத்தலைத் தவிர்த்து மரணமிலாப் பெருவாழ்வை-இன்ப அன்பு நிலையை அடைந்து விட முயற்சி செய்வது சான்றோர் கடன்; அறிந்தோர்க்கு அழகு; இந்தக் குறிப்பில் 'தோற்ற முண்டேல் மரணமுண்டு' என்று ஆரூரர் குறிப்பிடுகின்றார்.

## துயர மனைவாழ்க்கை?

"துயர மனைவாழ்க்கை, மாற்றமுண்டேல் வஞ்சம் உண்டு" என்று பாடுகிறார் நம்பியாரூரர். நம்பியாரூரர், பெற்ற சிற்றின்பத்தையே பேரின்பமாக நுகர்ந்தவர். பரவையாருடன் கூடி வாழ்ந்த வாழ்க்கையை யோக வாழ்க்கையென்று சேக்கிழார் பாராட்டுகின்றார். அப்படியாயின் துயர வாழ்க்கை என்று கூறியது ஏன்? இப்பாடலின் அடுத்த அடியில் "மாற்ற முண்டேல் வஞ்சமுண்டு' என்கிறார். உயிர்க்கு இயல்பு அன்பாக இருத்தல். ஆனால் சுற்றுப்புறச் சூழ்நிலையின் காரணமாக அன்புக்குப் பதிலாக அன்பின் இடத்தில் ஆசை வந்து விடுகிறது; அன்பு வேறு; ஆசை வேறு. ஆசை கொச்சைத்தனமானது; முற்றாகத் தற்சார்புடையது. வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமானால் நிர்வாணத் தன்மையுடையது. ஆசை ஒரு தலைப்பக்கமாகவே இயங்கும். இத்தகைய ஆசை மேம்பட்டு அன்பு வாழ்க்கை இல்லாமற் போமாயின் வஞ்சமுண்டு; துயரமுண்டு. இந்த சூழ்நிலையில்தான் மனைவாழ்க்கை துயரமாக உருமாற்றம் பெறுகிறது. மணவாழ்க்கையில் நாயகன் நாயகிகளாக இருந்தும் ஒத்த அன்பின்றி ஆசைகள் நிறைவேறாத பொழுது ஏமாற்றம் ஏற்படும். அதன் காரணமாக அன்புக்கே உரிய மனை வாழ்க்கை துயரமாக மாறிவிடுகிறது. அதனால் 'ஆசை நீக்கி அன்பு சேர்த்தி' என்றும் இதே பதிகத்தில் நம்பியாரூரர் பாடுகின்றார். அதனால்தான் திருமூலரும் 'ஆசை அறுமின்கள்! ஆசை அறுமின்கள்!' என்றார். இத்திருப்பதிகம் எதிர்கொள்பாடித் திருப்பதிகம். இத்திருப்பதிகத்தின் பெயரைக் கொண்டே திருத்தலத்தின் பெயரும் வந்திருக்கு மானால் பொருத்த முடையது. இனிவரும் எதிர் காலத்தில்

ஏற்றுக் கொள்ள விருக்கும் 'வீட்டினை'-உடலினைத் தவிர்க்கும் பொருட்டுப் பாடியது. ஆதலால் வாழ்க்கையில் ஆசைகளை நீக்கு வோமாக! அன்பினைச் சேர்ப்போமாக! இதற்குத் துணையாக மூவர்க்கும் முதல்வனாக நிற்கும் இறைவ னிடத்தில் வைத்த மனம்மாற்றாது நினைந்து வழிபடு வோமாக! இத் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டே திருஎதிர்கொள்பாடியை வந்து அணைகின்றார்.

## அறிந்தால் ஆட்படோமே?

நம்பியாரூரர் திருஎதிர்கொள்பாடியில் எழுந்தருளி யுள்ள இறைவனை வாழ்த்தி வணங்கிய பிறகு, திருவேள்விக் குடியை வந்தணைந்தார். திருவேள்விக்குடியிலேயே, திருத்துருத்தித் திருத்தலதையும் எண்ணி இணைந்து நினைந்து வழிபடுகிறார். ஆயினும் இத்திருப்பதிகத்தில் திருத்தலப் பதிகம் போல் பாதோறும் ஈற்றடியில் தலத்தின் பெயர் வரவில்லை. முதற்பாடலில் மட்டுமே தலங்களைப் பற்றிய குறிப்புக்குள் வந்துள்ளன. இத்திருப்பதிகம் இறைவனின் நிலையை விளக்கும் பதிகம். எந்த உயர்வுக்கும் உலகியலை நோக்க இழிநிலைகள் உண்டு. உலகியலும் உயர்வும் ஒத்தே இருத்தல் இல்லை. முற்றாக உலகியலைச் சார்ந்தவர்கள், உயர்நிலைகளை எள்ளுவர்; பழித்துரைப்பர். "சகம் பொய்யென்று சிரித்திட" என்றும், "நின்னடியான் என்று ஏசப்பட்டேன்" என்றும் திருவாசகம் கூறுவது காண்க.

## மூப்பதுமில்லை!

சுந்தரரின் இத்திருப்பதிகத்தில் இறைவனின் உயர்வு நிலைகள் ஓதப்படுகின்றன; உலகியலை நோக்க உள்ள இழிவு நிலைகளும் பேசப்படுகின்றன. நம்பியாரூரர் தாம் இறை வனுக்கு ஆட்பட்ட நிலையை நகைச்சுவையுடன் உறுதிப் படுத்துகின்றார்.

*மூப்பதும் இல்லை பிறப்பதும்*
*இல்லை இறப்பதில்லை!*
*சேர்ப்பது காட்டகத் தூரினு*
*மாகச்சிந் திக்கினல்லால்*
*காப்பது வேள்விக் குடிதண்*
*துருத்திஎங் கோன் அரைமேல்*
*ஆர்ப்பது நாகம் அறிந்தோமேல்*
*நாம்இவர்க் காட்படோமே!*

(ஏழாம் திருமுறை 178)

*என்பது முதற்பாடல்; இறைவன்-கடவுள், பிறவாதவன்; இறவாதவன், பிறத்தலும் இறத்தலும் இல்லாமையால் மூப்பு எய்தாதவன் என்பது உணர்த்தப்படுகிறது. சாதலும் பிறத்தலும் துன்பம் தரும்நோய், இத்துன்பங்கள் இல்லாத ஒன்றையே இறைவன் கூற இயலும். சைவம், இசுலாமியம், கிறித்தவம் ஆகிய சமய நெறிகளைச் சேர்ந்தவர்கள் இறைவனுக்குப் பிறப்பும் இல்லை மூப்பும் இல்லை, இறப்பும் இல்லை என்ற கொள்கையில் உறுதியாக உள்ளனர். இந்து சமயம் என்ற போர்வையில் மிண்டிய நிலையில் வளரும் மாயாவாதக் கொள்கையினர் "கடவுளே உயிர்; உயிரே கடவுள்" என்று கூறி, தம், அறியாமையைப் புலப்படுத்துவது நகைத்தற்குரியது. அதோடு கருவாய்ப் பட்டுப் பிறந்து வாழ்க்கையில் உழன்று வாழ்ந்தவர்களையும் உயர் ஆன்மாக்கள் என்றும், நம்மிலும் வளர்ந்தவர்கள் என்றும் ஆசிரிய நிலையை உடையவர்கள் என்றும் வாழ்த்தலாமே தவிர, கடவுள் என்று போற்றுதல் இயலாது. அதனாலன்றோ இளங்கோவடிகள் "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று வாழ்த்தினார். பிறத்தலும் இறத்தலுமாகிய ஐம்பூதங்களா லாகிய திருமேனி இறைவனுக்கு இல்லை. ஆதலால், நஞ்சும் அமுதும் இவருக்கு வேறுபாடு இல்லை. ஆதலால், நாகப்பாம்பு அணியாகிறது. இறைவன் கறுத்த கண்ட*

முடையான், நிறத்தால் கறுத்தது; ஆம்! கருணையால் கறுத்தது. அலைகடலில் எழுந்த நஞ்சினால் வானவர் துன்புறாமல், நஞ்சை உண்டதால் ஏற்பட்ட கறுப்பே கண்டத்தில் உள்ள கறுப்பு. அன்னை உமை இறைவன் நஞ்சை உண்டபொழுது கண்டத்தை அமுக்கியதால் நஞ்சு நின்றதென்பது கதை. கதையானாலும் கருத்து உள்ள கதை. ஆம்! ஆற்றல் மிக்குடையார் சமுதாயத் தீமைகளை, நஞ்சனைய கொடுமைகளை மேலும் மேலும் வளராமல் தொடக்கத்திலேயே தடுத்து நிறத்திக் காக்க வேண்டும் என்ற பாடம் இக்கதையின் கருத்தாகும்.

இத்திருப்பதிகத்தில் திருமுருகன் பற்றிய குறிப்பு கிடைக்கிறது. வள்ளியை முருகன் மணந்த செய்தியை நினைந்து பாடுகின்றார்.

"குறவனார் தம் மகள் தம்மகனார் மணவாட்டி" என்று குறிப்பிடுகின்றார். குறவர் என்றால் இன்று பலர் நாடோடிகளாக வாழும் நரிக் குறவர் என்று கருதுகின்றனர். இது தவறு. குறிஞ்சிநில மக்களுக்குக் குறவர் என்று பெயர் உண்டு. முருகன் குறிஞ்சி நிலக் கடவுள். அன்னை வள்ளியும் குறிஞ்சி நிலப் பெண் என்பதறிக.

## இறைவனே பித்தன்

இத்திருப்பதிகத்திலும் இறைவனைப் பித்தர் என்று நினைந்து பாடுகின்றார். பித்துப் பிடித்தல் ஓர் உயர் குணமே. ஆனால் இன்றைய உலகியலில் பித்து கீழ்மைக் குணமாகவே கருதப்பெறுகிறது. இது மரபுக்கிசைந்து வராத பொய்ம்மை. பித்தாவது ஒன்றினைத் தற்சார்பின்றி ஆலோசித்து அன்பும் ஆர்வமும் காட்டி விரும்புதலுக்குப் பித்துக் குணம் என்று கூறுதல் பழைய வழக்கு. காதல், பித்தாக எண்ணப்படுதல் உண்டு. ஆனால், அக்காதல், காதலிக்கப் பெறும் பெண்ணுக்குத் துணையாதல், அப்பெண்ணுக்கு இன்ப வாழ்வளித்தல் என்ற எண்ணப் படும் பொழுது பித்து என்று

போற்றப் பெறும். ஒரு பெண்ணைத் தான் அடைந்து துய்த்தல் வேண்டும் என்று எண்ணி முயலும் பொழுது கொச்சைத் தனமானகாமம் ஆகிவிடுகிறது. தொண்டு செய்தலில் பித்தாதல் உண்டு. அத்தொண்டே விளம்பரப் பெருமை கருதிச் செய்தால் பித்தன்று.

இறைவன் பித்தன். ஆம், அவனுக்கு அவன் நிகழ்த்தும் இன்பக் கூத்தால் ஆவதென்? ஐயன் தொழிலால் அடையக் கூடியது என்? எல்லாம் உயிர்களின் உய்தியின் பொருட்டேயாம்! ஆதலால் இறைவன் ஒருவனே பித்தன்! "பித்தரை ஒத்தொரு பெற்றியர்" என்று வாழ்த்துகின்றார்.

நம்பியாரூரர், திருவேள்விக் குடியை வணங்கி மகிழ்ந்து திருவாரூரைச் சென்றடைகின்றார்.

## திருவாரூர் சென்றணைதல்

திருவாரூர் வந்து சேர்ந்த நம்பியாரூரர் திருவாரூரில் எழுந்தருளியுள்ள பெருமானை வணங்கி வாழ்த்தி மகிழ்கின்றார். பின், பரவையாரின் திருமாளிகைக்குச் செல்கின்றார். சேக்கிழார், பரவையாரை "தாவாத புகழ்ப் பரவையார் திருமாளிகை சார்ந்தார்" என்றருளிச் செய்துள்ளமை நினைவிற்குரியது. சேக்கிழார் பெண்மையைப் பெருமைப்படுத்தும் திருவுள்ளத்தினர். தமிழர் நெறி பெண்ணடிமைத் தனத்தை ஏற்பதில்லை; பெண்மையைக் கொச்சைப்படுத்துவதும் இல்லை. பெண்ணைத் துறப்பதே துறவு என்றும் தமிழ்நெறி கூறியதில்லை. நம்பியாரூரர் பெரும் புகழுடையவர். அவர்தம் வாழ்க்கைத்துணை நலமாக அமைந்த பரவையாரும் தாவாத புகழுடையவர்; எஞ்சுத லில்லாத பெருமையுடையவர். பரவையார் வசித்த மாளிகையை, "திருமாளிகை" என்று சேக்கிழார் பாடிப் பரவுகின்றார்.

## பரவையார் வரவேற்பு

திருமாளிகைக்கு வந்த நம்பியாரூரைப் பரவையார் வரவேற்கின்றார். பிரிவின் காரணமாக வருந்தும் உணர்வு இருக்கிறது. ஆயினும் நம்பியாரூரரை வரவேற்பதில் அந்தப் புழுக்கம் இல்லை. உள்ளத்தில் பொங்கி எழுந்த பெருவிருப்பத்துடன் தோழியர்களுடன் கூடிப் பாராட்டி வரவேற்கின்றார். நீண்ட பிரிவினையை, நயமாக எடுத்துக் கூறும்பாங்கு அருமையாக இருக்கிறது. நகைச்சுவை நிறைந்த பகுதி.

'எங்களையும் நினைந்தருளிற்று...'

என்ற அடிகள் ஆழமானவை! நம்பியாரூரர் திருத்தலம் தோறும் சென்று இறைவனையே வணங்கி வாழ்த்தி வருகின்றார். அவருக்கு இறைவனே நினைவு; உணர்வு; எல்லாம். இது நம்பியாரூரரின் நடைமுறை வாழ்க்கை. இடையில் பரவையாரிடம் வந்துள்ளார். அதனால் பரவையார் 'எங்களையும் நினைந்தருளி" என்று கேலி செய்கிறார். நம்பியாரூரர், பல நாள்கள் பரவையாருடன் சேர்ந்து மகிழ்ந்து வாழ்கின்றார்.

## திருக்குளத்தில் பொன் தேடல்

ஒருநாள் நம்பியாரூரர் முதுகுன்றத்தில் பொன் பெற்றதையும் அப்பொன்னை மணிமுத்தாற்றில் விட்டதையும் பரவையாரிடம் கூறி, அப்பொன்னைத் திருவாரூர் கமலாலயத்தில் எடுக்க வேண்டும் என்றருளிச் செய்து கமலாலயத்திற்கு அழைக்கின்றார். இது கேட்டுப் பரவையார் வியப்படைகின்றார். "என்ன அதிசயம்? சொல்வது என்ன?" என்று சிரித்துக் கேட்கின்றார் பரவையார். நம்பியாரூரர் 'என்னுடைய தலைவன் அருளால் நடக்கும். நான் குளத்தில் பொன்னெடுத்துத் தருவேன்' என்று அழைக்கின்றார். பரவையாருடன் திருவருட் பூங்கோயில் புகுந்து இறைஞ்சிப்

பின் கமலாலயம் திருக்குளத்தின் வடகிழக்குக் கரைக்கு வந்து சேர்ந்தார். பரவையாரைக் கரையிலிருக்கச் செய்துவிட்டுத் திருக்குளத்தில் பொன்னைப் போட்டு எடுப்பவர் போல தடவி எடுக்க முயல்கின்றார். பொன் கிடைக்க வில்லை நம்பியாரூரரின் நற்றமிழ்ப் பாடல்களை அனுபவிக்கும் திருவுள்ளத்தாராகிய இறைவன் பொன்னைத் தருவதில் காலந்தாழ்த்துகின்றார். பரவையாரோ 'ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடும் பெரியீர்!' என்று வினவுகின்றார். நம்பியாரூரருக்கோ நிறைந்த வருத்தம்! தன்னுடைய நிலை பரவையாரால் நகைக்கக் கூடியதாக ஆகிவிடக் கூடாதே என்று வருந்துகின்றார். ஆண்மையாளர்கள் பெண்ணின் நகைப்பைத் தாங்குவதில்லை. இது வரலாறு. இராவணன் நாடு இழந்ததற்குக் கவலைப் படவில்லை; கொற்றம் இழந்ததற்குக் கவலைப்படவில்லை. செருக்களத்தில் சாவப் போவதைப் பற்றிக் கூட கவலைப் படவில்லை; சீதை சிரிப்பாளே என்று தான் கவலைப்படுகின்றான்.

*"வான்நகும், மண்ணும் எல்லாம் நகும், மணி*
*வயிரத்தோளன்*
*நான்நகும் பகைஞர் எல்லாம் நகுவர் என்று அதற்கு*
*நாணான்.*
*வேல்நகுநெடும் கண் செவ்வாய் மெல் இயல் மிதிலை*
*வந்த*
*சானகி நகுவள்'*

என்றே கவலைப்படுகின்றான். பாஞ்சாலி துரியனை நகைத்தமையினாலேயே பாரதப்போர் நடந்தது.

நமது நம்பியாரூரரும் இறைவனிடம்

*"தன்செய்ய வாயில்நகை தாராமே தாரும்."*

என்று வேண்டுகின்றார். பரவையார் நகைத்தாலும் இறைவன் திருவுள்ளமே! ஆனாலும் ஏற்க இயலாமல் ஆரூரர் அலமருகிறார்.

## அன்பில் வரும் பாட்டு

நம்பியாரூரர் மணிமுத்தாற்றில் இட்ட பொன்னை, திருவாரூர் கமலாலயக் குளத்தில் தேடுகின்றார்; இறைவன் ஆணைப்படி தேடுகின்றார்; கிடைக்கவில்லை. பரவையாரோ ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடும் பான்மையைக் கண்டு நகைக்கின்றார். ஆனால், நம்பியாரரர் நகைக்க வில்லை. நம்பியாரூரருக்குத் திருவருளில் நம்பிக்கை இருக்கிறது. ஆதலால் ஆரூரருக்கு நகைப்பு வரவில்லை. நம்பியாரூரர் பொன் கொடுத்த திருமுதுகுன்றத்து இறைவனை எண்ணிப் பாடுகின்றார்.

## நீந்தாருள் தொடர்வரிய நெறி நின்றார்

பொன்னை நினைந்து பாடும் பாடல் 'பொன் செய்மேனியினீர்' என்று தொடங்குகிறது. பாட்டின் நோக்கம் கமலாலயத்தில் பொன் கிடைக்க வேண்டுமென்பது. பரவையார் முன்னிலையில் பொன் பெறா தொழிவது பெருந் துன்பமாக இருக்கிறது. இடர்ப்பாடாக இருக்கிறது. இந்த இடத்தில் சேக்கிழார் ஐயத்தினை எழுப்பி விடையளிக்கும் வகையில் பாடுகின்றார். ஆரூரர் பற்றிச் சேக்கிழார் 'நீத்தாருள் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும்' என்று அருளிச் செய்துள்ள பான்மை அறிக. நம்பியாரூரர் பொன் எடுக்க வேண்டித் திருக்குளத்தில் இறங்குகின்றார். பொன்னாசை பெண்ணாசை ஆகிய இரண்டும் உடையவராக விளங்கினார் நம்பியாரூரர்; ஆனாலும் நீத்தாருள் தொடர்வரிய நெறிநின்றார் என்று பாராட்டுகின்றார். இந்த இடத்தில் தமிழகச் சமய நெறி உணர்த்தும் உண்மையை உணர்தல் நல்லது. அப்பரடிகள்
கு.IX.17.

இறைவனை, 'துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ!' என்றார். ஆதலால் துய்த்தது அறவாழ்க்கையேயாம். இறை நெறிக்கிசைந்த வாழ்க்கை யேயாம். ஆனால், துய்த்தலில் சில மரபுகள் உண்டு. துறவு நெறிப் பான்மையில் துய்த்தல் வேண்டும். ஆரூரர் பொன் வேண்டுகிறார். பரவையார் வருந்தாமலிருக்கவே பொன் வேண்டுகின்றார். பரவையாருக்கும் பொன், ஆடம்பர வாழ்க்கைக்கு அன்று. அடியார்களுக்குப் பணி செய்யவேயாம். ஆதலால் பொன் நாடுதல் குற்றமன்று. இல்லறத்திலே, சிறந்த துறவிகள் வாழ்ந்துள்ளனர். துறந்தாரைப் போலக் காட்டிப் பேராசை அவலத்துள் வீழ்ந்தவர்களும் உண்டு. ஆரூரர் அப்படிப் பட்டவரல்லர்.

## நான் செய்த பிழை என்ன?

ஆரூரர் தொழுது வணங்கியே பழக்கப்பட்டவர்; தேவைக்காக வழிபடுபவர் அல்லர். இறைவன் அருளினாலும் சரி, அல்லற்படுத்தினாலும்சரி ஆரூரரால் இறைவனை ஏத்தி வழிபடாமல் இருத்தல் இயலாது. அதனால் ஆரூரரின் பாடலைக் கேட்பதற்காகப் பொன்னைத் தராமல் காலம் கடத்த வேண்டியதில்லை. காக்க வேண்டியதில்லை என்றெல்லாம் பதிகத்தில் பாடுகின்றனர். 'திருமுது குன்றுடையானே! முன்பு முயன்று கட்டிய மூன்று அரண்களை எரித்தீர்! அதுபோல் எம் ஆர்வத்தைக் கெடுத்து விடாதீர்! திருமுதுகுன்றத்துள் உறையும் இறைவனே! நீர் எனக்குப் பொன் கொடுத்தது உண்மை! ஆம்! நீர் பொன்கொடுத்ததற்குச் சாட்சியாகத் தேவர்கள் இருக் கின்றனர்! தேவர்களின் தலைவர்கள் இருக்கின்றனர். இறைவா, நின்னில் பாதியான பெண் உமையம்மை உடனிருக்கிறாள். உமக்குத் தெரியாதா பெண்களின் மனம்! அனுபவத்தில் தெரியாது போனாலும் நீர் படித்துணர்ந்த வேதங்கள் உணர்த்தவில்லையா? நீர் இப்போது எமக்குப் பொன்னைப் பெற அருள் செய்யாமைக்குக் காரணம் நான்

செய்த பிழையா? அப்படியேதான் பிழை என்று எடுத்துக் கொண்டாலும் திங்கள் செய்த பிழைகளைவிடவா நான் பிழை செய்து விட்டேன். பிழைகள் பல செய்த திங்களையே ஆதரித்துள்ளீர். என் மனைவி பரவையார் நல்ல குணமுடைய பெண். இப்போது நீர் பொன் கொடுக்கத் தாமதித்தால் அவள் குணம் திரிந்தால் நான் என்ன செய்ய இயலும்?' என்றெல்லாம் பொருள் குறித்த அருமையான ஒரு பதிகத்தைப் பாடித் தொழுகின்றார்.

## பொன் எடுத்தல்!

பொன் கிடைத்து விடுகிறது. ஆரூரர் பொன் முடிப்பை எடுத்துப் பரவையார் பார்வையில் வைத்து உரைப்பொன் ஆணி கொண்டு பொன் முடிப்பின் நடுவிலிருந்த ஒரு பொன்னைச் சோதித்துப் பார்க்கிறார். பொன் முடிப்பில் இருந்த பொன் மாற்றுக் குறைந்ததாக இருக்கிறது. ஆரூரருக்கு அதிர்ச்சி. மீண்டும் வருத்தமுறுகின்றார். இத் தருணத்தில் பாடிய பதிகம் கிடைக்கவில்லை. ஆனால் பதிகத்தை 'அன்பில் வரும் பாட்டு' என்று புகழ்ந்துரைக்கின்றார் சேக்கிழார். பாடுவன வெல்லாம் பாட்டாகி விடாது. பெருகிய அன்பில் பாடும் பாட்டே பாட்டு. அன்பே காரணமாக அன்பிலே ஊறி அன்பையே நோக்கமாகக் கொண்டு உள்ளத்தெழுந்து வரும் பாடல்களே பாடல்கள்! நம்பியாரூரர் பாடல்கள் இத்தகையன.

## சிந்தை நிறை மகிழ்ச்சி!

ஆரூரரின் அன்புப் பெருக்கில் நனைந்த நற்றமிழ்ப் பாடல்களைக் கேட்டு இறைவன் களிப்பெய்தினான். ஆரூரருக்குப் பொன் கொடுக்கக் கூடாதென்பதல்ல இறைவன் திருவுள்ளம்! நம்பியாரூரரின் பாடல்களைக் கேட்டு மகிழ்வதற்காகச் செய்த விளையாட்டு - கூத்து! மீண்டும் ஆரூரர் திருக்குளத்தில் இறங்குகின்றார். இறைவன்,

குறைவிலாப் பொன்முடிப்பினைக் காட்டியருள்கின்றான். ஆரூரர் எடுத்துக்கொண்டு கரை ஏறுகின்றார். எடுத்த பொன் பொதியினை ஆட்களின் தலையிலேற்றிக் கொண்டு பரவையார் மாளிகை நோக்கிச் செல்கின்றார். இடையில் திருவாரூர் பெருமானைப் பணிந்து பரவிச் செல்கின்றார். பரவையாரின் மாளிகையில் சிந்தைமகிழ வாழ்கின்றார். "சிந்தை நிறை மகிழ்ச்சியுடன்', என்பது சேக்கிழார் வாக்கு!

பொன்-போதுமென்ற மனத்தைத் தராது; மேலும் மேலும் ஆசையை வளர்க்கும் இயல்பு, பொன்னின் இயல்பு! ஆனால் ஆரூரர் பொன்னின் மீது ஆசைகொண்டு தேடவில்லை. பரவையார்தம் தொண்டுக்குப் பயன்படவே பொன் விரும்பினார். கிடைத்த அளவில் மன நிறைவு; நிறைந்த சிந்தனை மட்டுமல்ல; மகிழ்ச்சியும் கூட.

இந்த மகிழ்ச்சி ஆனந்தக் களிப்பாக உருக்கொள்கிறது. தணியா ஆனந்தத்தில் தொண்டருடன் கூடிப்பாடுகின்றார்.. இறைவனையே மையமாகக் கொண்டு வினாக்களைத் தொடுக்கின்றார். இறைவன் திருமேனி வினாக்கள் வழி ஆய்வுப் பொருளாகிறது. ஆரூரர் இறைவனை ஆய்வா செய்கின்றார்! இல்லை, இல்லை! ஒருபோதும் ஆரூரர் ஐயப்பாட்டில் ஈடுபடார்! ஆய்வும் செய்யமாட்டார்! கண்டு அனுபவித்தவைகளை மீண்டும் மீண்டும் ஆர அனுபவிக்கும் எண்ணத்தில் வினாக்கள் எழும்! மற்றவர்களுக்கு அறிவுறுத் தவும் வினாக்கள் எழும். இது மட்டுமா? தம்மை உடை யானின் புகழை மற்றவர் சொல்லக் கேட்பதிலே தோன்றும் மகிழ்ச்சிக்கு ஈடில்லை. சொல்லிக் கேட்கப் பெறுவதே புகழ்! அதனாலேயே வள்ளுவமும் 'கேட்ட தாய்' என்று கூறியது! அதனால் அடியார்கள் பலர் கூடி இறைவன் பெருமை களைத் தம்முள் சொல்லியும் சொல்லக் கேட்டும் மகிழ்வது அடியார்களின் இயல்பு. நம்பியாரூரர் தமது வினாவைத் தொடங்குகின்றார்.

*"பாறு தாங்கிய காடரோ, படு*
*தலைய ரோ, மலைப் பாவையோர்*
*கூறு தாங்கிய குழகரோ, குழைக்*
*காதரோ குறுங்கோட்டிள*
*ஏறுதாங்கிய கொடியரோ, சுடு*
*பொடிய ரோ, விளங் கும்பிறை*
*ஆறு தாங்கிய சடைய ரோதமக்*
*கடிக ளாகிய அடிகளே".*

—(ஏழாம் திருமுறை)

தலைவராகிய இறைவன் சுடுகாட்டில் வாழ்பவரோ என்பது முதல் வினா! அருள் நூல்களில் இடுகாடு என்று குறிக்கப் பெறுவது உலகியல் சுடுகாடு அல்ல! கடையூழி காலத்தில் பரசிவத்தைத் தவிர மற்றெல்லாம் அழியும்! அந்த யுக அழிவு நிலையையே இடுகாடு என்று கூறுகின்றனர். அடுத்த கேள்வியும் இப்பொருளின் தொடர்புடையதாக அமைந்திருப்பதை ஓர்ந்தறிக. கையில் உயிரற்ற தலைகளை ஏந்தித் திரிபவர்! ஆம்! இறைவன் கையில் நான்முகனின் மண்டையோட்டினைஏந்தி வையகத்தை நோக்கி இரக்கின்றான்! தத்துவம் செறிந்த கருத்து! நான்முகன் வேதங்களின் தலைவன். அவனே அழியாநிலை அறியாமல் அழிந்து போன நிலை உணரத்தக்கது. கற்பது பெரிதல்ல! அறிவின் ஆக்கம் வேண்டும்! மண்டையோட்டில் இரக்கின்றான் என்றால் மண்டையோட்டிற்குள் வைப்பது சோறன்று. அறிவேயாம். ஆதலால் வையகத்து மக்களை நோக்கி அறியாமையை இடுங்கள் என்றுணர்த்துவதே மண்டையோடு தாங்கி இரத்தல்.

அடுத்து 'மலைப் பாவையோர் கூறு தாங்கிய குழகரே!' என்ற வினா! பெண்மைக்குச் சமயம் தந்த ஏற்றத்தை இந்தப் பகுதியால் அறிய முடிகிறது. வாழ்க்கையில் ஒரு பாகமே பெண்ணாகின்றாள். பெண்மையைப் பெருமைப் படுத்திப் பேண வேண்டியது ஆடவர்க்கழகு; அழகுக்கு அழகு.

இத்தகைய நெறிகண்ட இந்த நாட்டில்தான் பெண் இரண்டாவது நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளாள். அது மட்டுமா? வலிமைமிக்க ஆணை இன்று பெண் சுமக்கின்றாள். வரதட்சணைக்கு என்ன பொருள்? பெண், ஆணுக்குப் பொருளாதாய வாழ்வும் அளிக்க வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாக்கப்படுகிறாள். பல வீடுகளில் பெண் உழைத்தே ஆண் சாப்பிடுகின்றான். இது கேவலம் இல்லையா? பெண்மை, பெண்மையாகவே பேணப் பெறுதல் வேண்டும். குழையணிந்த காதினையுடைய இறைவன் ஊர்ந்து வரும் எருது இளமையுடைய ஏறு! ஏறு-உழைப்பின் சின்னம். இறைவன் திருநீறணிந்த திருமேனியுடையவன். இறைவன் கடையூழிக் காலத்தில் இன்ப வெறிக் கூத்தியற்றிப் படைப்பைச் செய்கின்றான். அப்படி ஆடும் பொழுது ஏற்படும் புழுதியே இறைவன் திருமேனியில் படிந்து திருநீற்றுக் கோலம் தருகிறது. திருநீற்றுக் கோலம். 'அழி வின்மையை நினைவூட்டுகிறது. அழிவிலாதன எல்லாம் தூய்மையானவை என்ற படிப்பினையையும் தருகிறது. இறைவனை நமக்குத் தலைவன் என்று ஆரூரர் அருளிச் செய்துள்ளார். இந்த உலகில் பலர், பலரைத் தலைவர் என்று கூறுகின்றனர். ஆதலால் இறைவன் ஒருவனே நமக்குத் தலைவன் என்று அருளிச் செய்துள்ள பான்மையை அறிக.

## ஆவணங் காட்டி ஆட்கொண்டவன்

திருவாரூரில் மகிழ்வோடு வாழ்ந்திருந்த ஆரூரர், மற்ற தலங்களிலும் எழுந்தருளியுள்ள இறைவனைத் தொழ எண்ணி யாத்திரையைத் தொடங்குகிறார். ஆரூரருக்கு ஆன்மநாயகர் ஆரூரில் எழுந்தருளியுள்ளபுற்றிடங் கொண்டா ரேயாம். ஆதலால் புற்றீசரிடம் அருள்விடை பெற்றே மற்ற திருத்தலங்களுக்குப் பயணம் மேற்கொள்கின்றார். ஆரூர ருடன், ஆரூரருக்குப் பணி செய்யும் ஏவலர்களும் உடன் வருவதைப் "பரிசனமும் உடன்போத" என்றருளிச் செய்து

விளக்குகின்றார். 'பரிசனமும் உடன் வருவதை' விதந்து கூறியது உலக வாழ்க்கையில் முற்றும் சிறந்த துணையாக அமையும் ஏவலர்கள் அமைவதில்லை என்பதை உணர்த்தவே! அதனாலேயே ஆரூரருக்கு இறைவனே தண்ணீரும் சோறும் தர வேண்டி வருகிறது; திருவிளமர் திருப்பள்ளி முக்கூடல் முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு திருநள்ளாறு சென்றடைகின்றார்.

திருநள்ளாறு நம்பிக்கை ஊட்டக்கூடிய திருத்தலம்; அரசன் நளனைப் பற்றிய துன்பம் விலக்கிய திருத்தலம்; இன்றும் துன்புறுவோர் நம்பிக்கையுடன் வழிபடும் திருத்தலம். திருநள்ளாற்றில் சுந்தரர் சிலநாள் தங்கி வழிபட்டார். திருநள்ளாற்றுப் பதிகத்தில் ஆரூரர் தமது வரலாற்றையே அகச் சான்றாக வைத்துப் பாடுகின்றார்.

"கற்ப கத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுத லானைச்
சொற்ப தப்பொருள் இருள்அறுத் தருளுந்
தூய சோதியை வெண்ணெய் நல்லூரில்
அற்புதப் பழ ஆவணங் காட்டி
அடியனா என்னை ஆளது கொண்ட
நற்ப தத்தைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே!"

(ஏழாம் திருமுறை 68–6)

என்பது ஆரூரர் திருப்பாடல்.

ஆரூரர் வாழ்ந்தவர்; வாழ ஆசைப்பட்டவர்; ஆரூரரது ஆசைகள் தீர அள்ளிக் கொடுத்தவன் இறைவன். ஆதலால் "கற்பகம்" என்றார். பொன் எண்ணிக் கொடுத்தால் போதாது. அள்ளிக் கொள்ளும் மலை என்ற கருத்தில் "கனகமால் வரை" என்றார். காமத்தைக் கடிந்த நெற்றிக் கண்ணுடைய தலைவன். சங்க காலத்தில் 'காமம்' என்பது மங்கலச் சொல். காமம்–விருப்புறுதல்'. வாழ்க்கையை இயக்கும் விசையே

காமம்தான்! பௌத்த, சமணச் சார்பு தமிழர்க்குக் கிடைத்த பிறகு "காமம்" தவறானது என்ற கருத்து உருவாகியது. உயிரியல் சாத்திர முறைப்படி விருப்புறுதலும் துய்த்தலும் தவிர்க்க இயலாதது. இறைவனே உயிர்க்குத் துணையாயிருந்து துய்ப்பிக்கின்றான் என்பதே தமிழர் கொள்கை. சொல், பொருள் உணர்தலுக்குத் தடையாக இருக்கும் ஆணவத்தினை அறுத்தருளுபவன் இறைவன். தன்னைத் திருவெண்ணெய் நல்லூரில் பழைய ஆவணங் காட்டி ஆண்ட நிகழ்ச்சி நினைவு கூரப்பெறுகிறது. திருநள்ளாற்றிலிருந்து திருக்கடவூர் வந்தடைகின்றார். திருமயானம் என்ற திருத்தலத்தையும் வணங்குகிறார். திருக்கடவூரும், திருமயானமும் ஒரே தலமென எண்ணித் தொழக்கூடிய பதிகளாகும். மயானத்தை, திருக்கடவூர் மயானம் என்றும் கூறுவர்

## திருக்கடவூர் சிறப்பு

திருக்கடவூர் புகழ் பெற்ற திருத்தலம். காலனைக் காலால் உதைத்து மார்க்கண்டேயருக்கு வாழ்வளித்த திருத்தலம். இன்றும் சாகாமல் வாழ ஆசைப்படுவோர் கடவூர் சென்று ழிபடுவர். காலனைக் காலால் காய்ந்த காலசங்கார மூர்த்தியாக எழுந்தருளும் திருமேனியில் எழுந்தருளியுள்ளார். இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள அபிராமியும் கண் கண்ட தெய்வம். அபிராமி அந்தாதி நாளும் ஓதுதல் நற்பயனைத் தரும். கங்கு கரையற்று, அருளும் அன்னை இந்த அன்னை! இத்திருத்தலத்தின்தான் முதன் முதலில் நமது சமயப்பணி-திருக்கோயிற்பணி கட்டளைத் தம்பிரான் என்ற பெயரில் தொடங்கியது. அன்னை அபிராமியின் அருளால் யாதொரு குறையுமில்லாமல் வாழ்க்கைப் பயணம் நடந்து கொண்டிருக்கிறது. அதுமட்டு மல்ல, நமது வாழ்க்கையில் திருக்கடவூர் மயானம் நினை வகலாத் திருத்தலமாகும். குன்றக்குடி ஆதீனத்திற்குப் பட்டம் கட்ட ஒருவர் தேவை. அருளும் பொருளும் நிறைந்த நிறுவனங்களுக்கே பொறுப்பேற்க ஆள்தேடும் அளவுக்கு

அவல நிலை, நமது சமயத்திற்கு நேர்ந்துள்ளமை வருந்தத்தக்கது. நம்மை அழைத்தனர். நாம் உடன்படவில்லை. நம்மை கடத்திக் கொண்டு வர முயன்றனர். அவர்கள் முயற்சி தோற்றுப் போயிற்று. பின் மூலையில் இருந்த நம்மை முற்றத்தில் கொண்டு வந்து விட்ட கயிலைக்குருமணி அவர்களை அணுகிக் கேட்டனர். குருமணி அவர்களிடமும் நாம் உடன்படவில்லை கயிலை குருமணி அவர்களுக்கு, குன்றக்குடி ஆதீனத்தைத் காக்கும் கடமை உணர்வு, நம்மைப் பிரிய இயலாப் பாசம், இவ்விரண்டிற்கும் இடையே ஏற்பட்ட அறச் சங்கடம்! சிந்தித்தார்கள். திருமுறைகளில் உறைப்புக் கொண்ட குருமணி அவர்கள் திருமுறைகளையே துணை யாகக் கொண்டு முடிவெடுக்கத் திருவுள்ளம் கொண் டார்கள்.

## திருக்கடவூர்த் திருப்பதிகம்

கயிலைக் குருமணி அவர்கள், நாள் பூசையில் திருமுறைகளில் கயிறு சார்த்தினார்கள். திருக்கடவூர் மயானத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருப்பதிகமே கிடைத்தது. பதிகத்தின் திருக்காப்புப் பாடலில்

“விண்ணோர் தலைவர் வெண்புரிநூல்
மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர்
கால காலர் கடவூரர்
எண்ணார் புரமூன் றெரிசெய்த
இறைவர் உமையோ ரொருபாகம்
பெண்ணா ணாவர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே”

(ஏழாம் திருமுறை 53–2)

என்ற திருப்பாடல் கிடைத்தது. திருப்பதிகத்தில் “விண்ணோர் தலைவர்” என்ற குறிப்புடைய பாடல்

இருந்தமையால் நாம் குன்றக்குடிக்கு வருவது உறுதிப்பட்டது. இத்திருத்தலத்தில் அப்பரடிகள் அருளிச் செய்த ஐந்தாம் திருமுறையில்,

"அரவு கையின ராதி புராணனார்
மரவு சேர்கட வூரின் மயானத்தார்
பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர்
பிரமன் மாற்கும் பெருமா னடிகளே"

–(ஐந்தாம் திருமுறை 38–8)

'என்ற பாடலிலும் 'பணி கொள்வர்' என்று வருவதும் அறியத் தக்கது. நாமும் பொதி சுமக்கும் மாட்டின் நிலையில் உடன்பட்டோம்.

"கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்னிசை
கண்டதுண்டோ?
எனக்கும் உடற்கும் எனதிச்சையோ இணங்கார் புரத்தைச்
சினக்கும் கமலையுள் ஞானப்பிர காச சிதம்பர இன்(று)
உனக்கிச்சை எப்படி அப்படியாக உரைத்தருளே!"

என்பது குருஞான சம்பந்தர் வாக்கு. இந்த மனநிலையில் பொதி சுமக்கும் மாடு விருப்பு-வெறுப்பின்றித் தன் கழுத்தைக் கொடுப்பது போல நாமும் பொறுப்பேற்க லாயிற்று.

## மரு ஈரத்தமிழ்மாலை

ஆரூரர் திருக்கடவூரில் எழுந்தருளியுள்ள இறைவனை, "மருஈரத் தமிழ் மாலை" பாடிப் பரவினார். இந்தப் பதிகத்தைச் சேக்கிழார் "மருஈரைத் தமிழ் மாலை" என்று போற்றுகின்றார். ஏன்? இந்தப் பதிகத்தின் பாடல்கள் ஒவ்வொன்றின் ஈற்றடியிலும் "என்னமுதே எனக்கார் துணை நீயலதே" என்று கேட்கின்றார். இறைவனைத் தவிர வேறு துணை-பற்றுக் கோடில்லாமையை உறுதியும், ஏக்கமும்

கலந்த நிலையில் அருளிச் செய்கின்றார். இப்பதிகத்திலேயே தன்னுள் இறைவன் புகுந்தமையை நினைந்து பாடுகின்றார். அதேபோழ்து இறைவன் வெளியே போகாமல்-உள்ளத்தே பேணித்தாம் கொண்டமையை "என்னுயிருட் புகுந்தாய்-இன்னம் போந்தறியாய்" என்று அருளிச் செய்துள்ளார். இந்தப் பதிகத்தில் அடைக்கலம் தரும் உணர்வும், துணையாய் அமைய வேண்டும் என்ற வினாவும் நின்னைத் தவிர துணைவேறல்ல என்ற நிலையும் ஈரத்தன்மை உடைய கருத்துக்கள்.

## திருநின்றியூரில்

பின் திருவலம்புரம் வணங்கி, திருச்சாய்க்காடு தொழுது திருவெண்காடு பணிந்தேத்தித் திருநின்றியூர் போய்ச் சேர்ந்தார். திருநின்றியூரில் நம்பியாரூரர் சிலநாள் தங்கி யுள்ளார். அப்போது "திருவும் வண்மையும்" என்று தொடங்கும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். இத்திருப் பதிகத்தின் பொருளடைவு நெஞ்சு நெகிழச் செய்வது; அன்பினால் கரைந்துருகச் செய்வது. இத் திருப்பதிகம்,-இறைவன் ஆட்கொள்ளத் தக்கவரை ஆட்கொள்ள நிகழ்த்திய திருவிளையாடல்கள் பலவற்றைத் தொகுத்து அடைவு செய்து பாடியுள்ள பதிகம்; ஒரு அருமையான பதிகம். இறைவன் பலரை ஆட்கொண்டருளிய செய்திகள் கேட்டு, ஆரூரரும்- "ஆட்கொள்ளப் பெறுவேன்" என்ற எண்ணத்தில் வந்ததாக அருளியுள்ளார்.

## செப்பரிய புகழ் நீடூர்

ஆரூரர், திருநின்றியூர் வணங்கி மகிழ்ந்து மேலும் யாத்திரையைத் தொடங்குகின்றார். யாத்திரையில் திருப்புன் கூரை நோக்கிப் பயணமானார். திருப்புன்கூரை நோக்கிச் செல்லும் பொழுது அண்மையில்-வழியில் இருந்த நீடூர் திருத்தலத்தைச் சென்று பணியாது சென்றார். பொதுவாக

எல்லாத் திருத்தலங்களிலும் இறைவன் எழுந்தருளியிருக்கின்றான்! ஆயினும் ஆரூரர் நீடூருக்குச் சென்று வழிபாடியற்றினால் நீடூருக்குப் பெருமை சேரும்! நீடூர் மக்கள் நலம்பெறுவர் என்ற திருக்குறிப்பில் நீடூருக்கு வரும்படி அழைக்கின்றார்! ஆரூரரும் இறைவனின் அழைப்பை ஏற்று நீடூர் செல்கின்றார். சேக்கிழார் "செப்பரிய புகழ் நீடூர்" என்று பாராட்டுகின்றார்.

நீடூரின்கண் இப்பொழுது நமது சமய மரபினர் வாழ்நிலை எண்ணிக்கை குறைந்துள்ளது. முகம்மதியர்கள் நிறையப் பேர் வாழ்கின்றனர். ஹாங்காங் முதலிய நாடுகளில் சென்று பொருள் ஈட்டி நீடூரின் புகழ் வளர்க்கின்றனர். நீடூரைச் சார்ந்த திரு. அய்யூப்....ஹாங்காங்கில் வாழ்கிறார். நல்ல அன்பர்; விருந்தோம்பல் இயல்பினர். நாம் ஹாங்காங்கிற்கு 1982ஆம் ஆண்டில்சென்ற பொழுது இவருடைய இனிய அன்பில் மூழ்கும்பேறு கிடைத்தது.

திருநீடூரில் அருளிச் செய்த பதிகத்தை, "மெய்ப்பொருள் வண்டமிழ்மாலை" என்று சேக்கிழார் சிறப்பித்துப் பாராட்டுகின்றார். ஏன்? இறைவன் கற்ற கல்வியிலும் இனியான்! குற்றமொன்றும் இல்லாத அடியார்கள் எளிதில் இறைவனை அடையலாம். மாய மனம் கெடுத்து, மனம் கொடுத்து, மனத்துள் அறிவாக நின்றருள் செய்வான்! துன்பத் தொடக்கிலாததே இன்பம் என்றும், உயிர்களின் பிறப்பு, வினைகளியற்றல், வினைப்பயன் நுகர்தல், இன்ப அன்பு அடைதல் ஆகியவற்றை முறையாக வகுத்தும் தொகுத்தும், கூறுதலின் "மெய்ப் பொருள் வண்டமிழ்மாலை" என்றார். திருநீடூரை வணங்கி திருப்புன்கூரை யணைந்து வழிபாடு செய்து கொண்டு திருக்கோலாக்காவைச் சென்றடைகின்றார்.

## திருக்கோலக்கா

திருக்கோலக்கா இறைவன் ஆரூரருக்கு எதிரில் வந்து காட்சி தருகிறார். ஆரூரர் திருக்கோலக்காவில்

எழுந்தருளியுள்ள இறைவன், திருஞான சம்பந்தர் கைகளால் தாளம் ஒற்றிப் பாடியதைக் கண்டு இரங்கி பொற்றாளம் கொடுத்தருளியதை நினைந்துருகிப் பாடுகின்றார்! இதனால் தமக்கும் இரங்கியருளுவார் என்று பாடியது, திருக்குறிப்புப் போலும்; திருக்கோலக்காவில் அருளிச் செய்த பதிகத்தில் தான்,

"நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈத்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்கணன்றனை என்கணம் இறைஞ்சும்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே!

(ஏழாம் திருமுறை—642)

என்று திருஞான சம்பந்தரைப் பாராட்டுகின்றார். திருஞான சம்பந்தர் சிவநெறியை வளர்த்தவர்; பரப்பியவர், ஆயினும் ஆரூரர் "தமிழ் பரப்பிய ஞானசம்பந்தன்" என்று சொல்வதன் பொருள் என்ன?"

## தமிழே சைவம்! சைவமே தமிழ்

'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்" என்றருளிய திருப்பாடல் படித்துப் படித்துப் பயன்பெற வேண்டிய திருப்பாடல். தமிழ் வளர்ந்த ஒரு மொழி. உலக மொழிகள் பலவற்றுக்கும் எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமே இலக்கணம் உண்டு. ஆனால் தமிழ் மொழியில் தமிழ் மொழி பேசும் மக்களின் வாழ்க்கைக்கும் இலக்கணம் உண்டு. தமிழர் பன்னெடுங் காலத்துக்கு முன்பே சமயநெறி நின்றனர். தமிழ் ஒரு ஞானமொழி; இறைவனே ஆய்வு செய்து வளர்த்த மொழி; தமிழைப் படிப்பதில், தமிழ்ப்

பாடல்களைக் கேட்பதில், தமிழை வளர்ப்பதில் சிவபெருமானுக்கு அளவிறந்த ஆர்வம் உண்டு.

மனிதகுல வரலாற்றியல் படி ஓர் இனத்திற்கு, சிந்தனையைத் தூண்டி வளர்ப்பது தாய் மொழியே! அறிவை வளர்ப்பதும் தாய் மொழியேயாம்; சமய ஞானத்தை வளர்ப்பதும் தாய் மொழியேயாம். உலகத்தில் எந்த ஒரு இனத்திற்குமுரிய சமயமும் அயல் மொழியில் தோன்றிய தில்லை. அவ்வாறு தோன்றியதாக வரலாறு இல்லை. சமயங்கள் சில மத மாற்றங்கள் மூலம் அயலினத்தில் பரவியிருக்கலாம். நமது மொழி தமிழ்; நமது சமயம் சிவநெறி; நமது சமயம் சம்ஸ்கிருதத்தையும் அம்மொழி வழிப் பட்ட வாழ்க்கை முறைகளையும் திணிக்கும் இந்து சமயமாக இருத்தல் இயலாது. நமது சமயத் தத்துவ ஞானம் காலங் கடந்த பழமையுடையது. பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியதாக விளங்குவது. தமிழே நாகரிகம்; நாகரிகமே தமிழ்; தமிழே சைவம்; சைவமே தமிழ்! அதனாலன்றோ சேக்கிழார் "செழுந்தமிழ் வழக்கு அயல்வழக்கின் துறை வெல்ல" என்றருளிச் செய்தார். இன்றோ நமது சமயத்தில் தமிழ், இரண்டாம் நிலைக்குத் தள்ளப் பெற்று சமஸ்கிருதம் முதல் நிலையை அடைந்திருக்கிறது. இது வாய்மைக்கும் வரலாற்றுக்கும் பொருந்தாத நிலை. தமிழ்மொழி வழிபாடு தமிழருக்குப் பிறப்புரிமையாகும். திருக்கோயில்களில் தமிழும் தமிழ் மரபுகளும் ஆட்சி செய்ய வேண்டும்.

திருஞானசம்பந்தருடைய பண்ணிசைப் பாடலுக்கு இரங்கி உலகோர் காணப் பொற்றாளம் தந்தருளியவன் இறைவன். திருஞான சம்பந்தருக்கு இறைவன் அருளிச் செய்ததை நினைத்த பொழுது தனக்கு, திருக்கோளில் நெல்மூட்டை எடுத்துக் கொண்டு வந்த பெருங்கருணைத் திறனும் நினைவிற்கு வருகிறது. அந்நிகழ்ச்சியை நினைந்து பாடுகின்றார்.

## பொதிசோறும் குளிர்நீரும் கொடுத்தபிரான்

திருக்கோலக்காவை வணங்கி மகிழ்ந்த பிறகு சீகாழி என்று போற்றி வணங்கிக் கொண்டு திருக்குருகாவூர் செல்கின்றார். சுந்தரருக்குத் தோழன் இறைவன். தன்தோழன் நம்பி ஆரூரர் பசித்து வருந்திய நிலையில் வருவதை அறிந்து, தண்ணீரும் பொதி சோறும், கொண்டு போய் வைத்துக்கொண்டு ஆரூரர் வரும் வழியில் எம் பெருமான் காத்திருக்கின்றார். ஏன்? பெருமானுக்கு இரட்டைப் பொறுப்பு! ஒன்று, தோழர் சுந்தரரைப் பாதுகாப்பது. பிறிதொன்று பரவையாரின் கணவரைக் காப்பது! பெருமானே முன்னின்று பரவையாரிடம் தூது போய்த் திருமணம் செய்து வைத்தார். அந்த வகையில் சுந்தரருடைய வாழ்க்கைத் துணைநலமாகிய பரவையாருக்கு நலம் செய்து மங்கல நாணைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பைச் சிவபெருமான் ஏற்றுக் கொண்டிருக்கிறார். சமய வாழ்க்கையில் இறைவனுக்கும் ஆன்மாவிற்கும் தனித்தனியே கடமைகளும் பொறுப்புக்களும் உண்டு. இறைவன் நம்பியாரூரர் வரும் வழியில் இத்தண்ணீர்ப்பந்தல் இருக்கிறது. தண்ணீரும் பொதிசோறும் கொண்டு வந்து காத்திருக்கிறார். உண்பவர்கள் காத்திராமல் உண்பிக்கப் பெறுதல் வேண்டும் என்ற மரபு அறிக. தண்ணீர் என்று வாளா கூறாமல் "உண்ணீர்" என்றார். அடுத்து வரும் பாடலில் உண்ணீர் அமையும் பாங்கு கூறப்பட்டுள்ளது. "ஏலநாறுங் குளிர் தண்ணீர்" என்று கூறப்படுதலறிக. குளிர்ந்த நீரே குடிக்கத் தக்கது. "குளிர்ந்த" என்பதால் கொதிக்க வைத்துக் குளிர்ந்த தண்ணீர் என்று பொருள் கொள்ளற்க; குளிர்ந்த நீரே உடலுக்கு நல்லது 'உண்ணீர்' என்பது உண்ணப் படுதலுக்குரிய தண்ணீர் என்று பொருள் தருகிறது. அதாவது உண்பதற்குத் தகுதியுடைய தண்ணீர். எல்லாத் தண்ணீரும் உண்ணக் கூடியதல்ல. "உண்ணீர்" என்று தண்ணீரை முதலிற் கூறியது பசியினும் நீர்வேட்கையே முதலில் தணிப்பதற் குரியது என்பதறிய! நீர்வேட்கை தணியாமல் உணவு

உண்பது உடல் நலத்திற்குக் கேடு. தாமே விரும்பி வலிந்தாட் கொண்ட நம்பியாரூரரைப் பாதுகாக்கக் குருகாவூர் அமர்ந் தருளும் இறைவன் காத்திருந்தார். தம்பிரான் தோழரும் திருத்தொண்டர்களுடன் தண்ணீர்ப் பந்தலையடைந்து உட் புகுந்தார்.

வேதியர் வடிவில் நின்றருளும் இறைவன்பால் இனந் தெரியா ஈர்ப்பில் தம்பிரான் தோழர் இறைவனருகில் சென்று "சிவாய நம" என்று பேசி அமர்கின்றார். அதாவது பழைய காலத்தில் ஒருவரையொருவர் சந்திக்கின்றபோது முதலில் "சிவாய நம" எனச் சொல்வது மரபு. இப்போது இந்த மரபைச் சைவத் தமிழ் மக்கள் கடைப்பிடிப்பது நல்லது. ஒருவரை ஒருவர் சந்திக்கும் பொழுது "சிவ சிவ" என்று கூறலாம். வேதியர் (சிவம்) நம்பியாரூரருக்குப் பொதி சோறளிக்கின்றார். நம்பியாரூரர் யாண்டும் எளிதில் உண்பவரல்லர். ஆனாலும் ஈண்டு விலக்க இயலாது என்று கருதி வாங்கி உண்கின்றார். சுந்தரர் சிவச்சிந்தனையே தொழிலாகக் கொண்டவர். தண்ணீரைக் குடிக்கும் பொழுதும் இறைவன் திருவருளைச் சுவைத்து அனுபவிப்பது போல் குடித்தாராம். இறைவன் நாமத்தை உளம் நிறைந்து வழியும் பெருகிய அன்பால் வாழ்த்தி உண்கின்றார். ஈண்டு அவ்வுணவை விலக்கா மைக்குக் காரணம் சிவம் தருவது. அடுத்து, பசியின் கொடுமை. தம்பிரான் தோழருடன் அடியார்கள் மற்றும் பசித்து வந்தோர் எல்லோரும் உண்டார்கள். உண்டு முடிந்த பின் ஆரூரர் ஓய்வாகக் கண் துயின்றார். உண்டபின் உறங்கலாம்-உறங்கக் கூடாது என்று இரு வேறு கருத்துள்ளது.. தமது நாட்டு மரபு பகலில் உண்ட பின் உறங்கக் கூடாது என்பது. மேலை நாட்டார் கருத்து உறங்க வேண்டும் என்பது. பகலில் ஒரு மணி நேரம் (பகல் 1 மணிமுதல் 2 வரை) உறங்குவது பல மணி நேரம் உறக்கம் கொண்ட பயனைத் தரும் என்று கூறுகின்றனர். நமது மரபிலும் பகலில் இவ்வாறு உறங்கும் பழக்கம் இருந்திருக்கிறது என்பதை இதனால் அறிய

முடிகிறது. நம்பியாரூரர் உறங்கும் பொழுது வேதியர் மறைந்து விட்டார்; தண்ணீர்ப் பந்தருடன் மறைந்து விட்டார். நம்பியாரூரர், துயில் நீங்கித் திருக்குருகாவூர் வெள்ளடை சென்றடைகின்றார்.

திருக்குருகாவூர் வெள்ளடை என்ற திருத்தலம் இன்று திருக்கடவூர் என்ற பெயரில் வழங்கப் பெறுகிறது. இறைவன் பெயர் வெள்விடைநாதர். வெள்ளடை என்பது தத்துவ நிலையில் பரமாகாசத்தைக் குறிக்கும். "வேதனை தீர்தரு வெள்ளடை" என்பது திருமந்திரம்.

இறைவன் அளித்த சோறுண்டு உறங்கி விழித்த நிலையில் தண்ணீர்ப் பந்தரைக் காணோம்! இத் திருப்பதிகத்தில் இறைவன் பசியால் வருந்திய ஆரூரனா ருக்குப் பொற்சோறளித்துக் காப்பாற்றியதை ஆருரர் நன்றி உணர்வுடன் பாடிப் பரவுகின்றார் "ஆவியை போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்" என்றும் "பாடுவார் பசி தீர்ப்பாய்" என்றும் அருளியுள்ளமை அறிக. சுந்தரர் உலகியல் வாழ்க்கையை முழுதுற வாழ்ந்தாலும் இறைவனுடன் இரண்டறக் கலந்து நின்று இறைவன் திருவருளைத் துய்த்து அனுபவித்தார்

"பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற்
சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கருஇருட் சுடரொப்பாய்
மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே."

(ஏழாம் திருமுறை–294)

என்பது சுந்தரர் திருப்பாடல். பண்ணிடைத் தமிழ் செவிப்புலனுக்கு இன்பம் தருவது; பழந்தினிற்சுவை நாவிற்கும் உடலுக்கும் இன்பம் தருவது; கண்ணிடை மணி, உறுதியுணர்த்துவது. கண்ணிடைமணி என்றதால் உயிரின் கண்மணியுள் நின்று இறைவனைக் கண்டு மண்ணில்

கு·IX·18.

வாழும்பொழுது இடர்கள் வாராமல் காத்து நிற்கும் அருள் திறனை ஆரூரர் நினைந்துருகிப் பாடுகின்றார்.

வெள்ளடைத் தலைவா! என் மரணத்தைத் தவிர்த்து என்னை ஆட்கொண்டருளிய தலைவா! அடியார்களின் துன்பத்தை இறைவன் ஒருபோதும் தரியான் என்பதை உணர்த்த "போந்தனை தரியாயே!" என்றார். நம்பியாரூரர் நன்றிக் கட்டுப்பாட்டுணர்வுடன் சாவே வந்தாலும் நின் கருணையை மறக்ககில்லேன் என்று திருவருள்பால் தாம் கொண்டுள்ள கடைப்பிடியை உணர்ந்துகின்றார்.

இறைவன் தோலுடுத்து உழல்கிறான். ஆனால் நம்பியாரூரருக்குப் பொன், துகில் முதலியன தந்தருள் செய்கிறான். இறைவன் உயிர்கள் மாட்டுக் கருணையுடன் பொன்னும், மணியும் தந்து போகத்தில் புணர்த்தி வாழ்வித்தருள்கின்றனன் என்ற சைவ உண்மை உணர்த்தப் பெறுகிறது. திருக்குருகாவூர் வெள்ளடையில் எழுந்தருளி யுள்ள இறைவனை, இன்னமுதைச் சுந்தரர் தம் கண்களால் பருகி அனுபவித்தார். திருவருள்-திருவருளின்பம் நுகர்ச்சி யாதலால் கண்களால் பருகியதாகக் கூறினார். பெருமானை உள்ளத்தே நாடி போக நிலையில் அனுபவித்து வரும் பெருங்காதலுடைய நம்பிகள், பெருகிய அன்புடன் இறைவனைத் தொழுது, சூழ்ந்துவந்த தொண்டருடன் திருக்குருகாவூர் வெள்ளடையில் தங்கி வாழ்ந்தார். இத்திருத்தலத்தில் 'பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே' வணங்கி வந்துள்ளார். இந்தத் திருப்பதிகம் கிடைத்திலது. சில நாள் திருக்குருகாவூர் வெள்ளடையை வணங்கி மகிழ்ந்த பிறகு இறைவன் விருப்புடன் எழுந்தருளியுள்ள பல திருத்தலங்களையும் வணங்கிக் கொண்டு திருத்தில்லையை அடைந்தார்.

## திருக்கழிப்பாலை

இத்த யாத்திரையில் தென் திருமுல்லைவாயில், திருமயேந்திரப் பள்ளி, திருநல்லூர் பெருமணம் முதலிய

திருத்தலங்களை வழிபட்டிருக்கக் கூடும் என்று கருதப் பெறுகிறது. ஆனால் சேக்கிழர் 'கழிப்பாலை தொழுதேத்தி" என்று கூறுவதால் திருக்கழிப்பாலை என்ற திருத்தலத்தை வணங்கிச் சென்றுள்ளார். திருக்கழிப்பாலை என்ற திருத்தலம் இருந்தது. இந்தத் திருத்தலத்தை கொள்ளிடம் ஆற்றின் வெள்ளம் கொண்டு போய்விட்டது. இத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி, இப்போது சிவபுரி திருக் கோயிலில் எழுந்தருளச் செய்யப் பெற்றுள்ளது. திருக்கழிப் பாலையில் நம்பியாரூரர் அருளிச் செய்த திருப்பதிகம் மிகவும் அருமையானது. இறைவனின் திருவிளையாடல்கள் பலவற்றையும் வியந்து பாராட்டிப் புகழ்ந்து பாடிய பதிகம் இது. தத்துவ விளக்கங்களும் நிறைந்த பதிகம் இது.

## கண்டம் கறுத்தவன்

நம்பியாரூரருக்கும் இறைவனுக்கும் உள்ள உறவுகள் விரித்துரைக்கப் பெறும் பதிகம் இது. உயிர்கள் தீவினையில் கிடந்துழன்றாலும் இறைவன் வந்து உடன் எடுத்தாள மாட்டான் என்பது முதற்பாட்டின் கருத்து. வினை, துய்த்துக் கழிக்கப் பெற வேண்டியது. வினைப்போகம் அழியும் வரையில் இறைவன் மருந்துண்ணும் குழந்தைக்குத் தாய்போல நின்று ஆட்கொள்கிறான். இது பாசம் சேர்ந்த உலகியல் வாழ்நிலை. இறைவனுக்கு ஓரூர் இல்லை. ஆதலால், ஆரூரர் எங்கிருந்து அழைத்தாலும் ஆங்கு இறைவன் சென்று ஆட்கொள்வான்! ஆட்கொண்டருளியது மட்டுமின்றி இறைவன் நம்பியாரூரருடன் நின்றருளி ஆட்கொள்பவன். இறைவன் தனது ஆட்கொள்ளும் திறத்தில் ஒறுத்தலும் உண்டு; பொறுத்தலும் உண்டு. ஆனால் முடிவாக இறைவன் அருளுதலையே தன்மையாக உடையவன் என்பதைப் புலப்படுத்த "கண்டங் கறுத்தாய்" என்றார்.

*ஒறுத்தாய் நின்னருளில் லடியேன்பி ழைத்தனகள்*
*பொறுத்தாய் எத்தனையும் நாயேனைப்*
*பொருட்படுத்துச்*

*செறுத்தாய் வேலைவிடம் மறியாமல் உண்டுகண்டங்*
*கறுத்தாய் தண்கழனிக் கழிப்பாலை மேயானே!*

(ஏழாந் திருமுறை–231)

என்பது திருப்பாட்டு. திருக்கழிப்பாலையில் எழுந் தருளியுள்ள பழிசேரில் புகழானைப் பணித்தேத்தித் தில்லை நகருக்குப் பயணமானார்.

## பெரியோனுக்கருளிய பெரியோன்

நம்பியாரூரர் திருத்தில்லையை மூன்றாவது முறையாக வழிபட்டார். தில்லை நகரில் பல ஆண்டுகள் தங்கி வணங்கினார். தில்லையின்மீது ஆரூரருக்குப் பெருமதிப்பு உண்டாதலின் புறத்தே வேறொரு பதியில் தங்கினார் என்று சிவக்கவிமணி கூறுவார். தில்லையில் பல பொழுதுகள் வணங்கி மகிழ்ந்த நிலையில் திருத்தினைநகர் என்ற திருத் தலத்திற்கு வந்து சேர்ந்தார்.

இன்று தீர்த்தனகிரி என்று விளங்கும் ஊர் 10ஆம் நூற்றாண்டில் ஆரூரர் காலத்தில் திருத்தினைநகர் என்று பெயர் பெற்றிருந்தது. கடலூர் சிதம்பரம் சாலையில் உள்ள சிற்றூர். புதுச்சத்திரம் புகைவண்டி நிலையத்தின் அண்மை யில் இருக்கிறது. இத்திருத்தலம் புதுமை விளைவித்தது; புரட்சி பூத்தது. பள்ளர் வகுப்பைச் சேர்ந்த பெரியான் என்ற ஒருவன் உழுதொழிலைத் தொழிலாக உடையவன். ஒரு நாள் பள்ளன் பெரியான் உழுது கொண்டிருக்கும் பொழுது பெருமான், ஜங்கமர் திருக்கோலத்தில் வந்து உணவு கேட்கிறார். பெரியா னிடத்தில் அப்போது கையில் உணவு இல்லை. ஊருக்குள் உணவு எடுத்துவரச் சென்றான். பெரியான் வருவதற்குள் அவன் உழுத நிலத்தில் தினை விளைந்துவிட்டது. ஜங்க மரைக் காணோம். எல்லாம் இறைவனின் திருவருள் செயல். பள்ளன் பெரியான் சிலை திருக்கோயிலில் இருக்கிறது. திருத்தினை நகருக்கு ஆரூரர் வந்து வணங்கி மகிழ்ந்தார். பாடியருளிய பதிகங்கள் கிடைக்கவில்லை.

## ஆவியிலும் அடைவுடையார்

திருத்தினை நகரிலிருந்த நிலையில் ஆரூரருக்குத் திரு நாவலூர் நினைவுக்கு வருகிறது-கருத்திற்கு வருகிறது! பிறந்த மண் அல்லவா? எல்லோருக்கும் அவரவர் பிறந்த மண்ணின் மீது ஒரு தனி விருப்பம் இருப்பதுண்டு. பலகாலும் ஓடி விளையாடிப் பழகிய நிலமல்லவா? இதற்கு ஆரூரரும் விதி விலக்கல்லர். திருநாவலூர் செல்லும் வழியில் திருமாணிகுழி, திருப்பல்லவ நகரம், திருமுண்டீச்சரம் திருக்குணபரவீச்சுரம், திருவதிகைவீரட்டம், திருவாமூர், சித்தவடம், திருமணம் வந்த புத்தூர் ஆகிய திருத்தலங்கள் வழியே திருநாவலூர் வந்தணைந்தார். திருநாவலூரின்கண் வாழ்வோர் மிக்க மகிழ்ச்சியோடு ஆரூரரை வரவேற்கின்றனர். ஆரூரர் திருநாவலூருக்கு வரும் நாள் "பெருவாழ்வு" வரும் நாள் என்று எண்ணி மகிழ்ந்து வரவேற்றனர். வரவேற்பில் உழவர்களும், தொண்டர்களும் கலந்து கொண்டனர். ஆரூரர் திரு நாவலூரில் எழுந்தருளியுள்ள ஆவியினும் அடைவுடையார் அடிக்கமலம் தொழுது வணங்குகின்றார். திருப்பதிகம் பாடியருளினார். ஆவியிலும் அடைவுடையார் என்பதற்கு, ஒருவர்க்கு அவர்தம் உயிர்நிலை செய்யும் உதவியிலும் மிகக் கூடிய உதவியைச் செய்யும் இறைவர் என்பது கருத்து. அதனால் இறைவனைச் சார்பாகக் கொண்டொழுகுதல் பயனுடைய வாழ்க்கை.

திருநாவலூர் வந்து சேர்ந்த நம்பி ஆரூரர் தமிழ்ப்பதிகம் ஓதி வழிபாடு செய்தார். இத்திருப்பதிகம் சிறந்த பொருட் செறிவு உடையது. இத்திருப்பதிகத்தில் நம்பி ஆரூரர் தமது வரலாற்றைப் பற்றி விவரித்துப் பாடுகின்றார். திரு வெண்ணெய் நல்லூரில் இறைவன் ஆட்கொண்ட வரலாறு எடுத்துக் கூறப்பெறுகிறது. திருவெண்ணெய் நல்லூர்த் திருக் கோயிலில் உள்ள நாட்சபையில் ஆவணங்காட்டி ஆட்

கொள்ளப் பெற்றார் என்ற செய்தி தெளிவாக ஐயத்திற்கிட மின்றி எடுத்துக் கூறப்பெற்றுள்ளது.

"நாட்சபைமுன்
வண்மைகள் பேசிட வன்றொண்டன்
என்பதோர் வாழ்வுதந்தார்"

"வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்டார்"

என்ற பதிகத்தின் வரிகள் நினைவில் கொள்ளத்தக்கன. நம்பியாரூரர் பல நாள் திருநாவலூரில் தங்கி வழிபட்டார். திருநாவலூரிலிருந்து திருக்கழுக்குன்றத்திற்குப் பயணம் செய்தார்.

திருக்கழுக்குன்றம், செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஓர் அழகிய சிற்றூர். மலைமீது திருக்கோயில் இருக்கிறது. மாணிக்கவாசகர் திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளியுள்ள அம்மை அப்பர் மூர்த்தியைத் "தொன்மைக்கோலம்" என்று புகழ்ந்துரைக்கின்றார்.

"தோலும் துகிலுங் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசும் சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

என்பது திருவாசகம். தமிழ்நாட்டு வரலாற்றில், தொன்மைக் காலத்தில் அம்மையப்பர் திருமேனியை வழிபடுந் திருமேனி யாகக் கொண்டொழுகு வந்திருக்கின்றனர்.

ஐங்குறுநூற்றில்,

"நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே"

என்ற பாடலும் ஒப்பு நோக்கத்தக்கது.

## பிச்சையெடுத்த பெருமாள்!

திருக்கழுக்குன்றத்தில் நம்பியாரூரர் பலநாள் தங்கியிருந்து வழிபாடு செய்தார். அதன்பின், உள்ளத்தில் வளர்ந்த சிவஞானப் பெருக்கு உணர்வில் திளைத்த வண்ணம் திருக்கச்சூரைச் சென்றடைந்தார். திருக்கச்சூர், வரலாற்றுப் புகழ்மிக்க திருத்தலம். சமூக விஞ்ஞானம் வெளிப்பட்டு ஒழுக்கமாகச் செயற்பட்ட திருத்தலம்.

திருக்கச்சூர், ஊர்ப்பெயர்: திருத்தலத்தின் பெயர் திரு ஆலக்கோயில். தலமரம் '(தலவிருக்ஷம்) ஆலமரம், ஆதலால் ஆலக்கோயில் என்று பெயர்பெற்றது. இறைவனின் பெயர், 'விருந்திட்ட நாதர்'. அம்மையின் பெயர் உமையம்மை. இங்கு தியாகராசர் சன்னதியும் உண்டு. இத்திருக்கோயிலில் மூன்றாம் குலோத்துங்கனின் ஆட்சியில் அமைத்த ஒரு கல்வெட்டில், திருக்கோயிலில் "அறிஞர் அவை" இருந்தது தெரியவருகிறது. இது ஒரு நல்ல மரபு. இப்போது இல்லை. திருக்கோயில் வளர்ச்சியில் பெரிதும் ஆர்வம் காட்டும் மாண்புமிகு அமைச்சர் ஆர். எம். வீ. அவர்கள் இத்துறையில் கவனம் செலுத்துவது நல்லது. திருக்கோயிலுக்கு மேற்கே மருந்துமலை, (ஔஷத கிரி) என்ற பெயரில் ஒரு மலை இருக்கிறது. இங்கு விருந்திட்ட ஈசர் பெயரில் சன்னிதி விளங்குகிறது. நம்பியாரூரர், திருஆலக்கோயிலில் எழுந்தருளி யுள்ள இறைவனை தமக்கு இன்னமுதாய் விளங்கிய பெருமானை அன்புருக வழிபாடு செய்து புறம் போந்தார். இப்படி வந்தநேரம் நண்பகல் பொழுது; உணவருந்தும் நேரம். ஆரூரருக்குப் பசி. திருவமுது ஆக்கித்தரும் பரிசனமும் வந்து சேரவில்லை. பசித்துன்பத்துடன் திருக்கோயிலின் முன்றிலில் நம்பியாரூரர் அமர்ந்திருந்தார். சேக்கிழார் இந்த இடத்தில் நயத்தக்க நகைச்சுவையுடன்,

> *"தணைந்தபசி வருத்தத்தால் தம்பிரான் திருவாயில்*
> *புணர்ந்தமதிற் புறத்திருந்தார். முனைப்பாடிப்*
> *புரவலனார்"*

என்று கூறுகின்றார். "புரவலரும்" பசியால் வருந்தும் நிலை. அதுவும் தன்னேரில்லாத தலைவன் தம்பிரான்தன் திரு வாயிலில்! மலையின்மேல் எழுந்தருளியிருக்கும் இறைவன் மருந்தீசன்! ஆம்! பசியும் பிணியேயாகும்! பசிப்பிணிக்குரிய உணவும் மருந்தேயாகும்! உணவளிக்கும் ஈசன் மருந்தீசன்!

வன்றொண்டரின் பசி பொறாத இறைவன், உடனே முன்பு இருந்த பலி ஓடு நீத்துத் திருவோடு ஏந்திப் புறப்பட்டு ஆரூரரை வந்தணுகினார். தாம் சோறு இரந்து கொண்டு வருவதாகக் கூறி எங்கும் போகாது, தாம் வரும்வரை அங்கேயே இருக்கும்படி சொல்லிவிட்டு இல்லங்கள் தோறும் சென்று சோறும் யாசித்தார்! இறைவன் இரந்துதான் ஆரூரரின் பசிநீக்க வேண்டுமா? வேறு வழியில்லையா? நூறாயிரம் வழிகள் உண்டு! ஆனால் இரந்தூட்டும் வழியே மிகமிகப் பயனுடைய படிப்பினையைத் தரும்வழி! தமக்கு அன்புபட்டவர் துயரினை இரந்தாகிலும் மாற்றுவதே அறம்; சால்பு கடமை நிறைந்த பெருவாழ்வு என்பதனை உணர்த்த இதனினும் சிறந்த வழி ஏது? இறைவன் இரந்து சேர்த்த உணவை ஆரூரர் முன் கொண்டுவந்து கொடுத்தான்! ஆரூரர் அந்தணாளரின் திறம் நினைந்து தொழுது வணங்கி வாங்கினார்! வாங்கிய திருவமுதைத் தமது திருக் கூட்டத்தினருடன் உண்டுகளித்தார்! அந்தப் பொழுதில் திருவமுது கொண்டுவந்தருளிய அருகிருந்த அந்தணாளரைக் காணவில்லை! ஆரூரர் அமுதளித்தவன் இறைவன் என்று உணர்ந்து இறைவன் தன் பொருட்டாக வீடுகள்தோறும் இரந்துவந்து ஊட்டிய அளப்பிலாக் கருணையை நினைந்து நினைந்து உருகிப் பாடுகின்றார்.

"கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக்
கண்டால் அடியார் கவலாரே
அதுவே யாமா றிதுவே கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே!"

என்றும்,

*"கச்சேர் அரவொன் றரையில் அசைத்துக்*
*கழலும் சிலம்பும் கலிக்கப் பலிக்கென்(று)*
*உச்சம் போதா ஊரூர் திரியக்*
*கண்டால் அடியார் உருகாரே!"*

என்றும்,

*"காதல் செய்து களித்துப் பிதற்றிக்*
*கடிமா மலரிட் டுனையேத்தி*
*ஆதல் செய்யும் அடியார் இருக்க*
*ஐயங் கொள்ளல் அழகியதே!"*

என்றும் வரும் திருக்கச்சூர்த் திருப்பதிகப் பகுதிகள் நம்பியாரூரரின் வரலாற்றுக்குரிய அகச்சான்றுகள்.

இந்த வரலாற்றின் மூலம் பெறக்கூடிய படிப்பினை, பசி ஒரு பிணி; கொடிய பிணி; பசி நீங்கி வாழ்ந்திடச் சோறளிப்பது வாழ்வியல் ரீதியான கடமை - அறம் என்பதாகும். இந்தப் பணியை இறைவனே மேற்கொண்டு செய்தது, சைவத் தமிழுலகம் படிப்பினை பெற்றுக் கொள்ளவேயாம்! ஆனால் படிப்பினை கிடைத்ததா? இன்றைய சமய உலகு என்ன செய்கிறது? புதுப்புதுப் புனைவு களை - சடங்குகளை இயற்றுகிறது! பிரச்சாரம் பலமாகச் செய்கிறது! ஆனால் எங்கேயும் தொண்டினைக் காணோம்; திருத்தொண்டினையும் காணோம்.

ஒருவரின் துன்பம் நீங்கினால் மட்டும் போதாது! துன்பநீக்கப் பணி, விலைப்பாடும் அருமைப்பாடும் உடையது என்று உணர்தல் வேண்டும். அதனால் நினைப்பின் அளவிலேயே காரியங்கள் ஆற்றவல்ல இறைவன் வீதிதோறும் நடந்து, மனைதோறும் சென்று இரந்து வருகின்றான். இத்தகு நிகழ்வுகளே, அன்பைத் தூண்டி இயக்கும். இன்று இதுபோன்ற நிகழ்வுகளைக் காண இயலவில்லை. மாறாகப் பசுத்தோல் போர்த்த புலிகள் போன்று களவும், சூதும்

செய்பவரும் மனித நேயத்திற்கு எதிரான சுரண்டும் நெறி நிற்பவர்களுமே உலகில் மிகுந்து காணப்படுகின்றனர். இன்று சமய உலகின் பணியாளர்கள், தொண்டர்கள் என்போருக்கு உடைமைகள் உள்ளன, ஏன்? உடைமைப் பற்று பெருகிச் சிவச் சிந்தனையும் தொண்டார்வமும் அருகி வருகின்றது. உண்மையான பத்திமை உணர்வு இருப்பின் என்றும் வரலாறு பொய்யாவதில்லை; பொய்த்துப் போவதில்லை; இன்றும் நிகழக்கூடியதே!

வரலாறு மாறலாம்; மாறும். மாறுதல், வளர்ச்சியின் பாற்பட்டதே! அழிவதன்று! இங்ஙனமின்றி வரலாறு தொடராக நிகழவில்லை என்றால் வரலாற்றின் உயிர்ப்புத் தன்மையைப் பாதுகாக்கும் திறமை வாழ்வோருக்கு இல்லை என்றே கருதவேண்டும். உயர் ஆற்றல்களையும் இயக்கும் மனிதன் உயிர்ப்புடன் வாழ்ந்தால் நடக்க இயலாதது என்று ஒன்றும் இல்லை.

திருக்கச்சூரிலிருந்து நம்பியாரூரர் பயணமாகி, திருமுக்கூடல் திருவில்வம், திருமாகறல், திருக்குரங்கணில் முட்டம் முதலிய திருத்தலங்களை வழிபட்டுக் கொண்டு, காஞ்சிபுரம் சென்றடைந்தார். காஞ்சிபுரம் செந்தமிழ் வரலாற்றிலும் புகழ் பெற்றுள்ள இடம். நம்முடைய தலைமுறையிலும் தமிழினம்-தலைநிமிந்து வாழத் தொண்டு செய்து புகழ்பெற்ற பேரறிஞர் அண்ணா பிறந்து வளர்ந்து புகழ் பெற்றது இந்தக் காஞ்சிபுரத்தில்தான். அண்ணா அவர்கள் அனைத்தையும்விட தமிழின ஒருமைப்பாட்டையே மிகுதியும் விரும்பினார்; வலியுறுத்தினார்; வாழ்ந்து காட்டினார். அண்ணாவின் சிறந்த நினைவு தமிழின ஒருமைப்பாடேயாகும். "பாட்டினில் அடங்காத காஞ்சியின் பெருமை" என்று கந்தபுராணம் போற்றும். "அவ்வூர் தன்னை (காஞ்சிபுரம்) எண்ணினும் கேட்பினும் சொல்லினும் வணங்கினும் பேரின்ப வீடெவர்க்கும் நல்குமே" என்று மாதவச் சிவஞானமுனிவர் காஞ்சிபுரத்தைப் பாராட்டுவார்.

காஞ்சிபுரம் என்பது உலகியல் வழக்கு; கச்சி ஏகம்பம் என்பது திருமுறை வழக்கு. மீண்டும் கச்சி ஏகம்பம் என்ற வழக்கையே நடைமுறைக்குக் கொண்டு வருதல் நல்லது.

திருக்கச்சி ஏகம்பம் ஐம்பூதத் திருத்தலங்களுள் ஒன்று. அதாவது மண் (பிருதிவி) திருத்தலம் என்பர். திருத்தல வெண்பா பாடியருளிய ஐயடிகள் காடவர்கோன் ஆண்ட திருத்தலம். நம்பியாரூரர், அம்மையப்பன் கருணையால் இடக்கண் பெற்ற திருத்தலம். மற்றும் திருக்குறிப்புத் தொண்டர், சாக்கியநாயனார் முதலானோர் வாழ்ந்து, தொண்டு செய்த திருத்தலம். இங்கு எழுந்தருளியுள்ள அன்னையின் திருப்பெயர் காமாட்சி. அன்னை காமாட்சி அண்ணலைப் பூசித்த திருத்தலம்; முப்பத்திரண்டு அறங்கள் இயற்றிய திருத்தலம்; எண்ணற்ற ஆலயங்கள் நிறைந்த திருத்தலம். கந்த புராண ஆசிரியர் கச்சியப்ப சிவாச்சாரியார் வாழ்ந்து கந்தபுராணம் இயற்றி அரங்கேற்றியதும் இத்திருத்தலமேயாம்.

இத்திருத்தலத்திற்குக் கற்கக் கற்கச் சுவையமுதூறும் வகையில் புராணம் இயற்றியுள்ளார் மாதவச் சிவஞான முனிவர். காஞ்சிப் புராணம் ஒரு நல்ல தமிழ் நூல்; தத்துவங்களை எளிதில் விளக்குவது. காஞ்சிபுரத்தின் சிறப்புகளுள் முதன்மையானது, அன்னை உமையே சிவத்தைப் பிரிந்து வந்து இங்குப் பூசித்ததாகும். அன்னை காஞ்சிபுரத்தில் பெருமானை நினைந்து பூசித்துத் தவம் இயற்றிக் கொண்டிருந்தார். நாள்தோறும் கம்பமாநதியில் மணலில் சிவலிங்கம் அமைத்து வழிபாடு செய்துகொண்டிருந் தார். எதிர்பாராமல் ஒருநாள் கம்பமாநதியில் வெள்ளப் பெருக்கு வந்தது. வெள்ளத்தில் சிவலிங்கம் அழியாமல் பாதுகாக்க அன்னை சிவலிங்கத்தை அணைத்துக் கொள்கிறார். வெள்ளம் வற்றுகிறது. பெருமான் திருமேனியில் வலையல் அடையாளங்கள் இன்னும் காணலாம். அடுத்து காஞ்சிபுரத்துக்கு ஏற்பட்ட பெருமை; பல்லவப் பேரரசின்

புகழ்மிக்க தலைநகரமாக விளங்கியதாகும். வடமொழியையும் தமிழையும் வளர்த்த நகரம்; சிறந்த பல்கலைக் கழகங்கள் விளக்கமுற இருந்த நகரம். அப்பரடிகள் வரலாற்றில் திருப்பு மையத்தை உருவாக்கிய திருத்தலம். இத்தகைய காஞ்சிபுரம் தமிழின வரலாற்றில் புகழ் பெற்ற நகரம்.

இங்ஙனம் பழங்காலத் தொட்டு இன்றுவரை புகழ் பெற்று வளர்ந்து வருகின்ற, காஞ்சிபுரத்திற்கு கச்சி ஏகம்பத்திற்கு நம்பியாரூரர் எழுந்தருளினார். நம்பியாரூரர் தம் வாழ்வில் திருவெண்ணெய்நல்லூரில் நிகழ்ந்த நிகழ்வு களை நினைந்து பாடுகிறார். திருவெண்ணெய் நல்லூர் இறைவனையே கச்சி ஏகம்பத்தில் பெற்றதாக நினைந்துருகி வழிபடுகின்றார். கச்சிமாநகர் மக்கள் நம்பியாரூரரை எதிர் கொண்டழைத்து வருகின்றனர். காஞ்சிபுரத்தில் நம்பியாரூர ருக்கு நடந்த வரவேற்பில்-வரவேற்பு மங்கலப் பொருள் களாகச் சிலவற்றைச் சேக்கிழார் எடுத்துக் கூறுகிறார். மணித்தோரணம், நிறைகுடம், நிறைவிளக்கு, தூபம், கொடி முதலியன கொண்டு வரவேற்கின்றனர். திரண்டு வந்த அடியார் திருக்கூட்டத்தினருடன் திருக்கோயில் நண்ணி னார்; திருக்கோபுர முன்றிலிலேயே திருமேனி நிலந்தோய வணங்கி மகிழ்ந்தார்.

ஏகம்பநாதர் புண்ணியமூர்த்தி; அப்பரடிகள் தமது அருமையான தமிழால் ஏகம்பத்தில் உறை இறைவனை வாழ்த்திப் பாடியுள்ள பாடல்கள் நெகிழ்வைத் தரவல்லன. நம்பியாரூரர் ஏகம்பநாதரை நினைந்துருகிப்பாடி வழி பட்டார். கண்ணிழந்து துன்புறு நிலையில் கண் வேண்டிப் பாடுகின்றார். நம்பியாரூரர் அருளிய பதிகத்தில் பாடல் தோறும் அம்மை பூசித்த வரலாற்றை நினைந்துருகிப் பாடுகின்றார்.

"எள்க லின்றி இமையவர் கோனை
ஈச னைவழி பாடுசெய் வாள்போய்

*உள்ளத் துள்கி உகந்துமை நங்கை*
*வழிபடச் சென்று நின்றவா கண்டு*
*வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி*
*வெருவியோ டித்தழு விவெளிப் பட்ட*
*கள்ளக் கம்பனை எங்கள்பி ரானைக்*
*காணக் கண்அடி யேன்பெற்ற வாறே."*

(சுந்தரர் – திருக்கச்சி. பா. 10)

என்ற பாடல் நினைந்தின்புறத்தக்கது. இத்திருப்பதிகத்தில் பாடல்தோறும், "கம்பன் எம் மானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே" என்று பாடியருளியுள்ளார். இதனால், நம்பியாரூரர், இத்திருத்தலத்தில் ஒற்றைக் கண்ணை–இடக்கண்ணை அம்மையின் திருவருளால் பெற்றார் என்ற வரலாறு உணரப்படுகிறது. இத்திருத்தலத்தில் அம்மையின் தண்ணருள் நிறைந்து விளங்கியதால் இடக்கண் என்றும் உய்த்துணர்தல் இனிய இன்பமாகும்.

## மாறா விருப்பிற் புறம் போந்தார்

நம்பியாரூரர் காமக்கோட்டம் தொழுது வணங்கிய பின் திருமேற்றளிச் சென்று பதிகம் அருளிச் செய்து வழிபாடு செய்கின்றார். காஞ்சிநகரத்தில் மட்டும் பல திருக்கோயில்கள் உண்டு. இதில் திருக்கச்சிமேற்றளி ஒன்று. இத்திருத்தலத்தில் அருளிச் செய்துள்ள பதிகத்தினைச் சேக்கிழார் "பாரார் பெருமைத் திருப்பதிகம்" என்று பாராட்டுகின்றார். இறைவனை வணங்கி அந்த மெய்யுணர்வைத் துய்ப்பதில் மாறாத விருப்பங்கொண்டுள்ளார் நம்பியாரூரர். அவர் "மாறா விருப்பினொடு திருக்கோயிலுக்கு வெளியே வருகிறார்" என்பது அறியத்தக்கது.

வன்தொண்டர் திருக்கச்சி மேற்றளி தொழுது பாடிய திருப்பதிகம் நிறைந்த பொருளுடையது. தத்துவ விளக்கங்கள் பொதிந்துள்ள பதிகம். இறைவழிபாட்டில் நினைப்பே

தொன்மையானது; சிறப்பானது. இறை நினைப்பினைப் பெறவும் நினைப்பினை இழக்காது திரும்பப் பேணவும் பாதுகாக்கவுமே சடங்குகள். இன்றோ நினைப்பொழிந்த சடங்குகளே மிகுந்துள்ளன. இறைவன், நினைப்பில் உறவு கொள்ள வேண்டியவன். நாம் நினைத்தவுடனேயே நாம் நினைக்கின்ற வடிவுடன் நமது உள்ளத்தில் இறைவன் விரைந்து எழுந்தருள்வான். வன்தொண்டர் இந்தப் பதிகத்தில்,

> "நுந்தா ஒண்சுடரே நுனையே நினைத்திருந்தேன்
> வந்தாய் போயறியாய் மனமே புகுந்துநின்று
> சிந்தா யெந்தைபிரான் திருமேற் றளியுறையும்
> எந்தா யுன்னையல்லால் இனியேத்த மாட்டேனே"

என்பது ஒரு பாடல்.

## வந்தாய் போயறியாய்

வன்தொண்டர் திருக்கச்சி மேற்றளியில் எழுந்தருளி யுள்ள இறைவனை நினைத்தார். இறைவனும் வன்தொண்டர் மனதிற்குள் புகுந்தார். இங்ஙனம் வன்தொண்டர் மனதிற்குள் புகுந்த இறைவன் திரும்ப வெளியே போனதில்லை. ஆம்! பிரிவினை அறியாததுதானே இறைத் தத்துவம். ஓரோவழி தொடர்பு கொண்டு உறவுகளில் இடையறவு ஏற்படுவது விலங்கியல்பு; உறவினைப் பேணல் மானுட இயல்; என்றும் எந்தச் சூழ்நிலையிலும் பிரியாதிருத்தல் இறையியல். நாம் நரகம்புகினும் இறைவன் உடனிருப்பன். இதனை விளக்க "வந்தாய் போயறியாய்" என்றார். இறைவன் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொள்பவன் அல்லவா?

வன்தொண்டர் தமது வரலாற்றுக் குறிப்புகளையும் இந்தப் பதிகத்தில் எடுத்துக் கூறியுள்ளார். வன்தொண்டர் இறைவனிடம் கேட்கக் கூடியன எல்லாம் கேட்டுப் பெற்றேன் என்று கூறுகிறார். பொன், மணி, பொருள்கள்,

மனைவியர் ஆகிய அனைத்தையும் இறைவனிடம் கேட்டுப் பெற்றார் என்பதைக் "கேட்பதெல்லாம் கேட்டேன்" என்று கூறுகிறார். இதில் ஆரூரர் உணர்த்த நினைப்பது தாம் வாழ்தலுக்கு உரியவற்றைக் கேட்பதெல்லாம் கேட்டேன் என்றார். கேட்கக் கூடாதென எதுவும் கேட்கவில்லை என்றார்.

இந்த மானுடவாழ்க்கை, உய்தியைக் குறிக்கோளாக உடையது. உடலால் வாழ்ந்துதான் உய்தியை அடைய வேண்டியிருக்கிறது. ஆதலால் உடம்பொடு கூடிய வாழ்க்கை துய்த்து மகிழும் வாழ்க்கை இன்றியமையாதது. உயிர்கள் துய்ப்பனவாய் அமைந்துள்ள பொருள்களே உய்வைத் தரத்தக்கன. துய்ப்பனவெல்லாம் துய்த்து வேட்கை தணிந்துழித் துறவுள்ளம் தொடர்கிறது. பிறவாமை வேண்டிப் பெறும் உணர்வு கால்கொள்கிறது. வன்தொண்டர் கேட்பதெல்லாம் கேட்டுத் துய்த்தபிறகு பிறவாமை கேட்கும் நிலைக்கு உயர்ந்துவிட்டார்.

இறைவனுக்குக் குறிக்கோள் உயிர்களுக்கு உய்தியை வழங்குதல்; இன்ப அன்பினை வழங்குதல். உயிர்களுக்குக் குறிக்கோள் இறைவனை நாடி உய்தி பெறுதல். இன்ப அன்பினில் திளைத்தல். குறிக்கோள் தழுவியவர்கள் குறிக் கோளை எந்தச் சூழ்நிலையிலும் அடைய முயற்சி செய்வர்; அடைவர்; இறைவனுக்கு ஆரூரரை ஆட்கொண்டருளுவது குறிக்கோள். அதனால் ஒரோவழி நம்பியாரூரர் மறந்தாலும் இறைவன் நம்பியாரூரரை மறப்பதில்லை. இறைவன் ஏதாவதொரு யுக்தி மூலம் ஆரூரர் மனத்துள் புகுந்து நின்றருள் செய்பவர், நமது வாழ்க்கையில் என்றும் தப்பாது நின்றின்பம் பயப்பதால் இறைவனுக்கு மெய்ப்பொருள் என்றொரு திருநாமம் உண்டு.

வன்றொண்டர் இறைவன் திருவருளைப் பெற்று மகிழும் நிலையில் "என்னால் என்ன குறை" என்றே

வியந்தோதுகின்றார். யாதொரு குறையுமில்லை என்பது கருத்து.

## ஆரூரான் அடியான்

உயிர்கள் மேற்கொண்டுள்ள வாழ்க்கைப்பயணம் 'கருவூரில்' தொடங்குகிறது. இன்பபுரியில் முடிகிறது. ஒரே பயணமாக இடைச் சுற்றின்றி முடிந்தால் நல்லது. பலருடைய வாழ்க்கை அங்ஙனம் முடிவதில்லை. செத்துப் பிறக்கும் தொழிலுக்கே இரையாகியவர்கள் எண்ணிக்கையே மிகுதி. இவர்கள் தாயர் உலகத்திற்கும் இடுகாட்டு எரியூட்டும் தொழிலாளர்க்கும் ஓயாது வேலை கொடுப்பவர்கள்; இரங்கத் தக்கவர்கள்; ஏன் இந்த அவலம், நல்ல துணையை நாடி அடைவதில்லை. உயிர்களின் வாழ்க்கைப் பயணத் திற்குத் தனித் துணையாக விளங்கக்கூடியவன் இறைவனே யாம். மற்றவர் துணையெல்லாம் தொடர்ந்து வருபவை அல்ல. பலர் ஆசைகளின் காரணமாகப் பிரிந்து விடுவர். தன்னலந் துறந்து அன்பு பொழிந்த தாயும் செத்துப் போகிறாள். சிலர் அவர் தம் குறை காரணமாக நமக்கும் குறையுடைய வழியே காட்டுவர். இறைவன் ஒருவனே தன்னலம் இல்லாதவன். அதனால் அவன் கவனம் எல்லாம் நம்பாலதாகவே அமையும். இறைவன் திருவருளே குறைவிலா நிறைவு. ஆதலால் இறைவன் ஒருவனே குறையற்ற வழிகாட்ட இயலும். ஆதலால் இறைவனே உயிர்களுக்குற்றத் துணை, தனித்துணை என்று கூறி ஆற்றுப்படுத்துகின்றது இந்தப் பதிகம். இத் திருப்பதிகம் தன்னை ஆட்கொண்டருளிய ஆரூரருக்கே தான் வழியடிமை கொண்டிருப்பதை விளக்க 'ஆரூரரன் அடியவன்' என்று வியந்து கூறுவது அறிக.

## தோழமைத் திறனும் அடிமைத் திறனும்

திருக்கச்சிமேற்றளியைத் தொழுது மகிழ்ந்த நம்பி யாரூரர் பயணத்தைத் தொடர்கிறார். கச்சியேகம்பத்திற்குச்

சிறிதுதொலைவில் உள்ள திருவோணக்காந்தன்தளி என்ற திருத்தலத்திற்குச் செல்கிறார். ஓணன், காந்தன் என்கிற இரண்டு அசுரர்கள் பூசித்த திருத்தலமாதலால் அவர்கள் பெயரிலேயே இத்திருத்தலம் விளங்கி அழைக்கலாயிற்று. இந்த வரலாற்றால் பழங்காலத்தில் எல்லோரும் திருக் கோயிலில் இறைவனைப் பூசிக்கின்ற உரிமை பெற்றிருந்தனர் என்பது தெரியவருகிறது. இரண்டு மூர்த்திகள் ஒரே திருக் கோயிலுக்குள் அமைந்துள்ளன.

இத்தலத்தில் நம்பியாரூரர் அருளிச்செய்த பதிகம், நலம் பல உடையது. தோழமைத்திறமும் அடிமைத்திறமும் ஒருசேர விளங்கத்தக்க வகையில் பதிகம் அமைந்துள்ளது; அருமை யுடையது. தோழமைத் திறத்தைக் கேலிப்பேச்சுக்களாலும் அடிமைத்திறத்தை ஏவல்கேட்பதாலும் அறியலாம். தோழமை யுடையாரில் பலர், தோழமையின் பாற்பட்ட சலுகையால் அடிமைத்திறம் அறியார்; அடிமைத்திறம் காட்டமறுப்பர். ஆனால் நம்பியாரூரருக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு தோழமை வழிப்பட்டதேயாம். ஆனாலும் நம்பியாரூரர், இறைவனுக்கு அடிமைத்திறம் பூண்டொழுகுவதிலும் சிறந்து விளங்கினார். நம்பியாரூரர் கொண்ட அடிமைத்திறம் பெருகும் அடிமைத்திறமாகும். அதாவது, அடிமை பூண்பதில்கூட சோர்வு படாமை என்றறிக. "கையிலொன்றும் காணமில்லை" என்பது, நம்பியாரூரரின் வறுமை நிலையைக் காட்டுகிறது. அதாவது காசு ஒன்றும் கையில் இல்லாத நிலை. பூசையின் மரபுகூறி காணம் இல்லை என்றதால் பூசனை செய்யப் பொருள் வேண்டும் என்பதாயிற்று. இறைவழி பாட்டில் ஈடுபட்டால் ஐம்பொறிகளும், ஐம்புலன்களும் ஒத்துழைக்கும்; குற்றேவல் செய்யும். பூசையில் ஈடுபடுத்தப் பெறாத பொறிகள், புலன்கள் துன்பக்குழியில் வீழ்த்தும் என்பது உண்மை.

இத்திருப்பதிகத்தில் உள்ள அனைத்துப் பாடல்களுமே நாள்தோறும் ஓதத்தக்கன; நயமுடையன.

தி. IX. 19.

*"பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்*
*பேணி உம்கழல் ஏத்து வார்கள்*
*மற்றோர் பற்றிலர் என்றி ரங்கி*
*மதியு டையவர் செய்கை செய்யீர்*
*அற்ற போழ்தும் அலந்த போழ்தும்*
*ஆவற் காலத் தடிகேள் உம்மை*
*ஒற்றி வைத்திங் குண்ண லாமோ*
*ஓண காந்தன் தளியு ளீரே"*

*"பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்*
*பேணி உம்கழல் ஏத்துவார்கள்"*

என்ற அடிகள் பன்முறை படித்தின்புறத்தக்க அடிகள்.

வாழ்க்கையில் நட்பு முதலிய உறவுகள் தவிர்க்க இயலாதன. வாழ்க்கையின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டுக்கும் உறவுகள் தேவை. இந்த உறவுகள், உறவுகளுக்காகவே என்று அமையுமானால் பெரிதும் சிறந்து விளங்கும். அங்ஙனமின்றி யாதானும் ஒன்றை எதிர்பார்த்து நட்பும் உறவும் கொள்ளின் இத்தகு நட்பும் உறவும் வணிகமாகி விடும். அதாவது, இலாப நோக்குடையதாக அமைந்துவிடும். "இலாபம்" என்ற சொல்லே கொச்சைத்தனமானது. இலாப நோக்கு, தன்னலமே நாடும். மற்றவர் நலம் பற்றிக் கவலைப்படாது. இத்தகையோர் தாம் விரும்பிய ஒன்றினையடையும்போது மகிழ்வர், நட்பினைப் பேணுவர். யாதானும் ஒரு காரணத்தால் விரும்பியதைப் பெறாதபோழ்து பிரிவர்; நெஞ்சிற்பிரிவர்; காழ்ப்பும் பகையும் கொண்டு தீமையும் செய்வர்.

நட்பு, உறவுகள் விலைமதிக்க ஒண்ணாதன. இவை வாழ்க்கையின் இணையற்ற குறிக்கோளை அடையத் துணைசெய்வன; ஆக்கம் பயப்பன; இறைவனை உறவாகவும் நட்பாகவும் கொண்டு வாழ்தல் தமிழ் மரபு. அச்சம் வழிப்பட்ட நிலையிலோ விருப்பங்களுக்காட்பட்ட

நிலையிலோ இறைவனை வணங்குதல் பயன்தராது. இறைவனைப் பற்றுதலில் தெளிவும் உறுதியும் வேண்டும். வாழ்க்கையில் ஒருவர்தான் உற்ற துணையாக அமைய இயலும்; முடியும். அந்த ஒருவன் இறைவன் என்று உணர்ந்து அவனைப் பற்றி நட்புப் பாராட்டுதல் அடியவர் இயல்பு. இறைவனிடம் அடியவர் கொள்ளும் நட்பு, தன்னல விழைவினால் அன்று. அடியவர்கள் இறைவனிடத்து நட்புரிமை கொண்டாடுதலுக்குரிய காரணம் இறைவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பது. உயிர்களின் உய்தி கருதி இறைவனின் கருணையினால் இயற்றப் பெறும் ஐந்தொழில் இயக்கத்தில் வாழும் உயிர்க்குலத்திற்குத் தொண்டு செய்தல் வாழ்க்கையின் குறிக்கோள். இக்குறிக்கோளினை அடைய இறைவனைத் துணையாகக் கொள்வதே நோக்கம். இறைவன் மாட்டு அன்பு செய்தலே, வாழ்க்கையின் குறிக்கோளான பிறகு, இறைவனிடம் எதை எதிர்பார்ப்பர். ஒரோவழி விரும்பிக் கேட்டாலும் அவனுக்காட்படும் நிலையையே விரும்பிக்கேட்பர்; இறைவன் குறிப்பறிந்து தொண்டு செய்யும் வாய்ப்பையே விரும்புவர். ஆதலால் அடியவர்கள் வாழ்க்கையில் பெற்றது. பெறாதது என்ற கணக்கும் இல்லை; அவ்வழிப்பட்ட துன்பமும் இல்லை. அடியவர்கள் இறை வனைத் தவிர வேறொன்றைப் பற்றாகவும் கொள்ள மாட்டார்கள். இங்ஙனம், முற்றாக இறைவனையே நம்பி - சார்ந்து வாழ்க்கை நடத்துபவர்கள் அல்லற் படுத்தக் கூடாது. இறைவனைத் தவிர வேறு ஒரு களைகண்ணும் இல்லாது அலந்தார் போல வாழும் அடியார்களை இறைவன் காப்பாற்ற வேண்டும்; சோறும் கூறையும் தந்தருள வேண்டும். ஆனால் இறைவன் அப்படிச் செய்யும் "புத்திசாலியாக" இல்லை என்பது நம்பியாரூரர் கருத்து. ஆம்! இறைவன் அடியவர்களின் அன்பில் குளிப்பவன். அடியவர்களுடைய அன்பை நுகர்ந்து அனுபவிப்பதில் பித்துப்பிடித்தலைபவன். படும் துயரம் அதிகமாகும்பொழுது எல்லாம் அடியவர்கள்

மேலும் அன்பில் வளர்கிறார்கள். அடியவர்களுடைய அன்பு அனுபவத்தில் மூழ்கித் திளைக்கும் இறைவன், அடியவர்கள் துன்பத்தைத் துடைப்பதை மறந்து விடுகின்றான். அதனால் "மதியுடையவர் செய்வ ; செய்யீர்" என்றார். நம்மைச் சார்ந்தாரே நம்முடன் ஒன்றிக் கிடப்பாரின் துன்பத்தை மாற்றுதல் வாழ்வியல் கடமைகளுள் தலையாயது என்ற - உண்மை உணர்த்தப் படுகிறது. துன்பம் மிகுதியாக மிகுதியாக அன்பு குறைகிறது. வாழ்ந்திடல் வேண்டும் வேண்டும் என்ற உணர்வு மேலோங்குகிறது. அதனால் வாழ்க்கையின் மிகமிக விழுமிய பொருளைக்கூட ஒற்றி வைத்து உண்ணவிரும்புவது தவிர்க்க இயலாதது. அதுபோல அடியவர்கள் இறைவனை ஒற்றிவைத்து உண்ண அனுமதிக்கப்படுவது. அழகோ என்று கேட்கிறார். இறைவனை ஒற்றி வைத்தல் என்றால் என்ன? இறைவனுக்கு ஆட்படுதலுக்குப் பதில் சிறு தேவதைகளுக்கு ஆட்படுதல் ஆகும். இப்போது பலர் இறைவனுக்கு அன்பு காட்டி ஆட்படுவதற்குப் பதில் "சனியனுக்கு" அல்லவா ஆட்பட்டுள்ளனர். சனியனுக்கு "ஈஸ்வரன்" பட்டத்தைச் சேர்த்து 'சனி ஈசுவரன்' என்று கூறுகின்றனர். இதுமுறை யன்று. "சென்று சிறுதெய்வங்கள் பால் சேர்வோமல்லோம்" என்றார் அப்பரடிகள்.

"ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்
வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே"

என்றார். திருஞானசம்பந்தர். ஆதலால் பரசிவமே கடவுள். பரசிவமே தனக்குவமை இல்லாத தலைவன் - வாலறிவன் என்று தெளிந்து துணிந்து வாழ்த்தி வாழ்தலே சமய வாழ்க்கை - சைவவாழ்க்கை என்பது இந்தப் பாடலின் சிறந்த பொருள்.

திருஓணக்காந்தன்தளியில் நம்பியாரூரர் அருளிய பதிகம் முழுதும் இறைவனுடன் நம்பியாரூரர் கொண்டிருந்த அன்புரிமை பற்றியதேயாம். இந்தப்பதிகம் நம்பியாரூரர் இறைவனிடத்தில் கொண்டிருந்த தோழமைத் திறத்தினை வெளிப்படுத்துகிறது. திருஓணக் காந்தன்தளி இறைவனைத் தொழுது வணங்கி மகிழ்ந்த பொழுது, இறைவன் அருகில் உள்ள புளியமரத்தில் ஒளிந்திருந்து புளியங் காய்களைப் பறித்து ஆரூரருக்கு அருளியதாகவும், அவை பொற்காசு களாய் ஆயின என்றும் ஒரு மரபு வழி வரும் வரலாறு உண்டு.

திருஓணக்காந்தன் தளியை வணங்கி மகிழ்ந்த நம்பியாரூரர் அடுத்து திருக்கச்சி அநேக தங்காவதம் வணங்கி, திருக்கச்சியை நினைந்தவாறே அமர்ந்திருந்தார்.

## பனங்காட்டூரின் பரமனை ஏத்தினார்

திருக்கச்சியில் தங்கியிருந்த நம்பியாரூரர் மீண்டும் திருத்தல வழிபாடுகளை விரும்பிப் பயணம் செய்யலானார். திருக்கச்சியிலிருந்து திருப்பனங்காட்டூர் என்ற திருத்தலத் திற்குச் சென்றார். இந்த ஊர் வன்பாக்கம் என்ற ஊருக்கு அருகாமையில் இருப்பதால் திருவன்பார்த்தான் பனங் காட்டூர் என்று பெயர்பெற்றது. இப்பொழுது திருப்பனங்காடு என்று பெயர்பெற்று விளங்குகிறது. இத் திருத்தல மரமும் பனைமரமேயாம். அகத்தியர், புலத்தியர் பூசித்த தலம் இது. இத் திருத்தலப் பதிகம் மிகவும் அருமையானது. நம்ம னோரைத் தெளிவித்து ஆற்றுப்படுத்தும் தகைமையுடையது. ஒவ்வொரு பாடலிலும் நம்மனோரின் சார்பும், உணர்வும், அறிவும் திருவன்பார்த்தான் பனங்காட்டூரில் எழுந்தருளி யுள்ள நாயகனே என்று எடுத்துக் கூறுகின்றார். அன்பு நாயகன் திருவடியைப் பற்றிக்கொண்டு உய்யுமாறு உணர்த்தும் அற்புதமான பாடல்கள் அவை. காலன், காலத் திற்குத் தலைவன்; காலத்திற்குரிய முதல்வன். இது உண்மை. ஆயினும் காலனுடைய காலம் பற்றி நிற்கும் முதன்மை, சிவம்

அருளியது என்று உணர்த்துகின்றார். காலனுடைய கால முதன்மைகூடப் பெருமானால் பறிக்கப்பெற்று, திரும்ப அளித்த வரலாற்றை நினைவூட்டுகின்ற பாடல் இப்பதிகத்தில் உண்டு.

*"மெய்யன்வெண் பொடிபூசும்*
*விகிர்தன் வேதமுதல்வன்*
*கையின்மான் மழுவேந்திக்*
*காலன்கா லம்மறுத்தான்*
*பைகொள்பாம் பரையார்த்த*
*படிறன்றன் பனங்காட்டூர்*
*ஐயன்எங் கள்பிரானை*
*அறியாதார் அறிவென்னே!*

(ஏழாந்திருமுறை—878)

இப்பாடல் கற்றுணரத்தக்க பாடல். இறைவன் மெய்யன்; வெண்பொடி பூசும் விகிர்தன். பொய்க்கு எதிர்மறை மெய். மெய் என்பது உண்மை. உண்மையாவது உள்ளது. என்றும் உள்பொருள் இறைவன் என்றும் உள்ளவன் தோற்றமும் ஈறும் இல்லாதவன்; பிறப்பும் இறப்பும் இல்லாதவன்; இவனே பிறவாயாக்கைப் பெரியோன். இறைவன் சிவபெருமான். யாதொரு அந்தமும் இல்லாதவன் என்பதனை உணர்த்துவதே வெண்பொடியாகிய திருநீறு. கடையூழிக் காலத்தில் உலகம் ஒடுங்கும். ஆன்மாக்களும் இளைப்பாறுதல் கருதி ஒடுக்கப்பெறும். இந்தக் கடையூழியில் திரும்ப உலகைத் தோற்றுவித்தருளவே இறைவன் கடையூழிக் கூத்தாடுகின்றான். இந்தக் கடையூழிக் கூத்தில் எழும் புழுதியே திருநீறு என்பது கருத்து. ஆதலால் காலதத்துவத்தின் தலைவன் சிவமே. சிவம்தான் காலனுக்குக் காலமுதன்மையைத் தந்தருளினன் என்ற கருத்து அறியத்தக்கது.

ஆரூரர், திருமாற்பேறு, திருவல்லம் ஆகிய திருத்தலங்களை வழிபட்டுக்கொண்டு திருக்காளத்திக்குச்

சென்றார். திருமாற்பேறு, திருவல்லம் ஆகிய திருத்தலங்களில் நம்பியாரூரர் அருளிச் செய்த பதிகங்கள் கிடைக்கவில்லை. சேக்கிழார், திருக்காளத்தியை நம்பியாரூரர் நண்ணிய வரலாற்றை எடுத்த தமிழில் அன்புருகப்பாடத் தொடங்குகின்றார்.

*"தடுக்க லாகாப் பெருங்காதல்*
*தலைநின் றருளுங் கண்ணப்பர்*
*இடுக்கண் களைந்தாட் கொண்டருளும்*
*இறைவர் மகிழ்ந்த காளத்தி*
*அடுக்கல் சேர அணைந்துபணிந்*
*தருளால் ஏறி அன்பாறு*
*மடுப்பத் திருமுன் சென்றெய்தி*
*மலைமேல் மருந்தை வணங்கினார்."*

(ஏயர்கோன். 4. 196)

## மலைமேல் மருந்து

நம்பியாரூரர் திருக்காளத்தியை அடைந்து வணங்கும் காட்சி.

*"தடுக்க லாகாப் பெருங்காதல்*
*தலைநின் றருளும் கண்ணப்பர்*
*இடுக்கண் களைந்தாட் கொண்டருளும்*
*இறைவர் மகிழ்ந்த காளத்தி*
*அடுக்கல் சேர அணைந்துபணிந்*
*தருளால் ஏறி அன்பாறு*
*மடுப்பத் திருமுன் சென்றெய்தி*
*மலைமேல் மருந்தை வணங்கினார்"*

(ஏயர்கோன் 4. 196)

கண்ணப்பரின் மாட்சி இப்பாடலில் உணர்த்தப் பெற்றுள்ளது. கண்ணப்பர் காளத்தியப்பரிடம் காட்டிய

அன்பு, எவராலும் தடுத்து நிறுத்த இயலாதது. எந்தச் சூழ்நிலையிலும் கண்ணப்பரின் அன்பு தடைப்படவில்லை. கண்ணப்பரின் பெருங்காதலின் முன் எதுவும் நிற்க இயல்ாது. கண்ணப்பரிடம் வளர்ந்த பெருங்காதல் அருளாக வளர்ந்தது.

காளத்தி இறைவன் கண்ணப்பரின் இடுக்கணைநீக்கி ஆட் கொண்டருளினன். திருக்காளத்தியில் கண்ணப்பருக்கு ஏது இடுக்கண்? காளத்தியப்பனுக்கல்லவா இடுக்கண் வந்துற்றது! ஆம்! காளத்தி இறைவன் கண்ணில் உதிரம் கொட்டியது! கண்ணப்பருக்கு ஏது இடையூறு! காளத்தி இறைவனின் கண்களில் குருதி கொட்டியதைக் கண்ணப்பர் தமக்குற்ற இடராக எடுத்துக் கொண்டார்! பிறர்க்குற்ற இடரைத் தமக்குற்ற இடராக எடுத்துக் கொண்டு தீர்வுக்கு முயல்வது உயர்சால்பு. கண்ணப்பர் அத்தகு உயர்சால்புநெறி நின்றவர். கண்ணப்பர் நிறைநலஞ்சான்ற அன்பு பெற்று வளரக் காளத்தி இறைவன்கண்ணில் குருதி கொட்டுகிறது. கண்ணப்பரின் மாறிலா அன்பில் காளத்தியப்பர் மகிழ்ந்துறையும் காளத்தியை நம்பியாரூரர் அணைந்தார். கண்ணப்பரின் அன்பில் நனைந்தமலையில், கண்ணப்பரின் அன்பொடு நம்பியாரூரரின் அன்பு காலந்து ஆறாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. நம்பியாரூரர் இந்த ஈறிலாத அன்பில் நனைந்தவாறு காளத்தி மருந்தை வணங்கினார். காளத்தி இறைவன் கண்ணப்பரின் இடுக்கணுக்குப் பரிவு நிறைந்த மருந்து. நம்மனோரின் ஆணவம் சார்ந்த பிறவிக்கு மருந்து. காளத்தி இறைவன்மீது நம்பியாரூரர் "செண்டாடும்" என்று எடுத்துப் பதிகம் பாடிப்பரவினார்.

## தவசீலரான தம்பிரான் தோழர்

நம்பியாரூரர் திருக்காளத்தியில் எழுந்தருளியுள்ள கணநாதப் பெருமானை வணங்கி மகிழ்ந்து "செண்டாடும்" என்று தொடங்கும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். இத்திருப்பதிகத்தில் "சீரார் தமிழ்" என்று நம்பியாரூரர்

குறிப்பிடுகின்றார். ஆம்! சிறப்புப் பொருந்திய தமிழ்; சிறப்பினைத் தரும் தமிழ். வீடு பேற்றிற்குச் சிறப்பு என்றும் கூறுதல் தமிழ்மரபு. திருக்காளத்தியைக் "கண்டார் காதலிக்கும்" திருத்தலமெனப் போற்றிப் பரவுகின்றார்! கண்ணப்பரின் அனுபவம், கண்டதும் காதலித்த அனுபவம்தானே!

சைவத் தமிழ்மரபு ஒரு கடவுள் வழிபாடு என்பதனை உணர்தல் நல்லது. நால்வர், நாயன்மார்கள் சிவ பெருமானையே போற்றி வணங்கியுள்ளனர். சுந்தரர் திருக்காளத்திப்பதிகத்தில், "உன்னையல்லால் உகந்தேத்த மாட்டேன்" என்று உறுதிபடக் கூறுவது ஓர்க! இந்தப் பதிகம் முழுவதும் இந்தக் கருத்தை வலியுறுத்துகின்றார். ஏன்? நம்பியாரூரர் நாடு சுற்றியவர்; ஆகமங்கள் வந்து புழக்கத்திலிருந்த காலம்! கடவுள் என்ற பெயரில் பல்வேறு மூர்த்தங்கள் வழிபாட்டுக்கு வந்து நடை முறையில் இருந்த காலம்! ஆயினும், நம்பியாரூரர் சிவபெருமானைத் தவிர, வேறொருவழிபடும் பொருளை அறியார். என்னே உறுதி! இன்று நம்பியாரூரருடைய இந்த உறுதி இல்லை. அதனால் கடவுள் வழிபாட்டிற்குக் காலம் கூடுதலாகச் செலவாகிறது. அதே போழ்து உறுதியின்மையால் பயனும் இல்லாமல் போகிறது. ஆயிரம் ஆயிரம் திருமேனிகள் இறைவனுக்கு இருக்கலாம். ஆயிரம் கணநாதன் நம்பியாரூரருக்கு ஞானாசிரியனாக, ஞானமாக, நெறியாக, தோழமையாக விளங்கிய அருட்பெருக்கினை வாழ்த்தி மகிழச் சேக்கிழாரால் முடிந்தது.

நம்பியாரூரர், திருக்காளத்தியிலிருந்த படியே, வடபுலத்தில் உள்ள சீர்ப்பருப்பதத் திருத்தலத்தையும் திருக் கேதாரத் திருத்தலத்தையும் நினைந்து போற்றிப் பதிகம் பாடியருளினார். வடபுல வெல்லை அரணாக உள்ள இமயமலைச் சாரலில் விளங்கும் திருத்தலங்கள் திருச்சீர்ப் பருப்பதமும் திருக்கேதாரமுமாகும். இத்தலங்கள் இயற்கை

வளங்கள் பலவற்றாலும் நிறைந்து விளங்கித்தோன்றுவன. திருக்கேதாரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைப் போற்றிப் புகழ்ந்த பதிகத்தில் வாழ்க்கை யுண்மைகள் பலவற்றை நம்பியாரூரர் எடுத்தோதுவது சிறப்பாக உள்ளது.

இந்த வாழ்க்கை நிலையில்லாதது. நிலையில்லாதன வற்றைக் கொண்டு நிலையாயின பெற வேண்டும் என்பது ஆன்றோர் அறிவுரை. பிறவிக் கடலைப் பாழாக்குவானேன்? ஆழ்கடல் கூட முத்து விளைவிக்கிறது; மழைவளம் தருகிறது. பிறவிக் கடல் யாதொரு பயனுமின்றிப் பாழாகப் போனால் நியாயமா? தரிசாகப் போட்ட நிலத்தில் என்ன விளையும்? அதுபோலவே வாழுங்காலத்தினைப் பயன்படுத்தாமல் தரிசாகப் போட்டால் ஏது பயன்? காலத்தை வீணாக்காது அறம் செய்தல் வேண்டும். தமக்கு முன்னர்த் தமிழ் மறை அருளிய இருவர்க்கும் தம்மை அடித்தொண்டன் என்று செந்தமிழ்ச் சுந்தரர் அருளும் எளிமையை எண்ணுக! திருக்காளத்தியிலிருந்து பயணம் செய்யத் தொடங்கித் திருத்தலங்கள் பலவற்றையும் வணங்கிக் கொண்டு இவ்வையகத்தில் சிவலோகம் என்று புகழ் பெற்று விளங்கும் திருவொற்றியூர் என்னும் திருத்தலத்தை நம்பியாரூரர் அடைந்தார்.

இத்திருத்தலத்தில் சுந்தரருக்கு மங்கல முறையில் வரவேற்பளித்தனர். சுந்தரர், மக்கள் விரும்பும் தொண்டர் மட்டும் அல்லரே! மக்கள் விருப்பத்தில் ஏது நிலைப்பாடு? நற்றமிழ் ஆரூரர், "பிரானார் விரும்பும் திருத்தொண்டர்" என்று சேக்கிழார் அருளிச் செய்துள்ளமை உணர்ந்து அனுபவித்தற்குரிய செய்தி! திருவொற்றியூர்த் திருத்தலத்தில் ஆரா அன்பினில் ஆரூரர், ஊனும் உயிரும் கரைந்துருக வழிபட்டார் என்ற சேக்கிழார் வாக்கின் வழி, திருக்கோயில் வழிபாடு நிகழ்த்தப் பெற வேண்டிய வழிமுறை உணர்த்தப் பெறுகிறது. திருவொற்றியூரில் நம்பியாரூரர் தவசீலராகிறார்! சுந்தரரின் அறிவு, சுந்தரரின் வசத்தில் நில்லாமல்

சிவானுபவத்தின் வசப்பட்டு அன்பு மீதூர விளங்கியது. திருவொற்றியூரிலேயே தங்கி, காலந்தோறும் வழிபட்டு வந்தார். திருவொற்றியூரிலேயே தங்கியருளினார்! இறைவனுக்கு ஏற்ற இடம் திருவொற்றியூரே என்று அருளிச் செய்துள்ளார். திருவொற்றியூரில் இரண்டு பதிகங்கள் அருளிச் செய்துள்ள பாண்மையை அறிக.

திருவொற்றியூர் திருத்தலத்தில். நம்பியாரூரரின் வரலாறு வளர்கிறது; ஒரு திருப்பு மையத்தைப் பெறுகிறது. திருவொற்றியூரிலிருந்து தான் சுந்தரரின் வாழ்வு தொடர்கிறது என்று சொல்லும் அளவுக்கு நிகழ்வுகள் அமைந்துள்ளன.

## ஒற்றியூரில் சங்கிலியார்

நம்பியாரூரரின் வரலாறு திட்டமிட்ட வரலாறு என்பதை உணர்தல் அவசியம். திட்டமிட்டதில் சாதி, குல அமைப்பு மரபுகள் பின்பற்றப்படாமையால் பழையன கழிதல் வேண்டும், புதியன புகுதல் வேண்டும் என்ற நியதியே நம்பியாரூரரின் வரலாற்றுக்கு நோக்கம் என்பது தெளிவு.

அமரர் உலகத்து அநிந்திதையார் திருஒற்றியூரில் நாலாம் குலத்தில் திருவவதாரம் செய்தார் என்பது சேக்கிழார் வாக்கு. நாலாம் குலம் எது? பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய குலமரபுகளையே இன்று பலரும் எண்ணுகின்றனர்; எழுதுகின்றனர்; பேசுகின்றனர். பிராமணர் முதலிய நான்கு வருணம் ஆகிய மரபு, அயல் வழக்கு; தமிழ்மரபன்று; தமிழர் நெறியும் அன்று. இங்கு சேக்கிழார் "நாலாங்குலம்" என்றது தமிழ்மரபு வழியிலேயேயாம். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைக் குலமே தமிழ்மரபு அநிந்திதையார் நாலாவது குலமாகிய வேளாண் மரபில்–குலத்தில் வந்துதித்தார்.

சேக்கிழார், வரலாற்றை விரைவாக நடத்துகிறார். சங்கிலியார் பருவம் தோறும் முறையாக வளர்ந்து நங்கையாகிறார். மணப்பருவம் வந்துவிட்டது. பெற்றோர்கள் திருமணப்பேச்சில் ஈடுபடுகின்றனர். சங்கிலியாருக்குத் திருமணப்பேச்சு பிடிக்கவில்லை. சங்கிலியார் தமது பெற்றோர்களிடம் தமக்கு ஈசன் திருவருள் பெற்ற ஒருவரே கணவராதலுக்கு உரியவர், தாம் ஈசன் திருவருள் பெற்ற ஒருவருக்கே வாழ்க்கைத் துணை நலமாக அமைய இயலும் என்பதைத் தெளிவுறுத்தினார். அதோடு அமையாது திருஒற்றியூர்த் திருத்தலத்திலிருந்து சிவபெருமான் வேட்டு நிற்கும் பணியில் ஈடுபட விரும்புவதையும் கூறினார். மகள் பேசவந்தவர்களிடம் யாது கூறுவது என்ற ஐயப்பாடு பெற்றோர்களுக்கு! சங்கிலியார் கூறுவதை அப்படியே சொல்வதும் நாகரிகமன்று. வருத்தம் வாராமலும் சொல்ல வேண்டும் என்ற சிந்தனைகள் அலை மோதுகின்றன. விடை சொல்வது பெரிதல்ல. தீமை பயக்காதவாறு சொல்ல வேண்டும் என்பதே முக்கிய செய்தி. ஏதம்-உறவினர்கள் பழகுபவர்களிடம் ஏற்படும் பிணக்கும் அதனால் வரக்கூடிய கேடுகளும் ஆம்! இந்தக் காரணத்திற்காக உண்மையை உள்ளவாறு சொல்லாமலும் இருக்கலாம். "புரை தீர்ந்த நன்மை" என்ற திருக்குறள் நெறி உணர்க. இத்தகு இடர்ப்பாடு களையும் சங்கிலியாரை மணம் பேச வந்தோர் துன்புற்ற நிகழ்வுகளையும் கண்ட சங்கிலிநாச்சியாரின் பெற்றோர் சங்கிலி நாச்சியாரை திருவொற்றியூரில் கன்னிமாடம் அமைத்து அந்தக் கன்னிமாடத்தில் இருக்கச் செய்வதென்று துணிந்தனர்; முன் வந்தனர். திருவொற்றியூரார் இசைவுடன் வசதிகள் பலவும் உடைய கன்னிமாடம் அமைக்கப்பெற்றது. கன்னிமாடத்திற்குத் தேவைப்படும் பொருள்களும் தொகுத்து வைக்கப்பெற்றன. முறையான காப்பு வசதிகளுடன் அமைந்த கன்னிமாடத்தில் சங்கிலிநாச்சியார் ஈசருக்கேற்ற பணி

*விரும்பி, தங்கித் தவம் செய்ய ஒருப்பட்டார். தந்தையும், தாயும் சங்கிலி நாச்சியாரை வணங்கி விடை பெற்றனர்.*

## சங்கிலியார் திருமணம்

*சங்கிலி நாச்சியார் திரு ஒற்றியூரில் திருமாலைப் பணிவிடை செய்து தவம் செய்கிறார். திருஒற்றியூருக்கு வந்த நம்பியாரூரர் திருக்கோயிலுக்குள் சென்று வணங்கி மகிழ்கின்றார். அன்றைய திருக்கோயில்களில் தொண்டு செய்யும் தொண்டர்கள் நிரம்பியிருந்தனர் என்று தெரிய வருகிறது. "தொண்டு செய்வார் திருத் தொழில்கள் கண்டு தொழுது" என்ற சேக்கிழார் வாக்கு பண்டைய மரபினை நினைவூட்டுகிறது. தொண்டு செய்வார் திருக் கோயிலுக்குள் யாண்டும் பரவித் தம் தம் நிலைக்கேற்பத் திருத்தொண்டுகள் செய்து வந்தனர். திருக்கோயில் வணங்கிச் செல்வோர் திருக்கோயிலில் செய்யப்பெறும் திருத்தொண்டுகளையும், திருத்தொண்டர்களையும் தொழுது செல்லுதல் மரபு. நம்பியாரூரரும் நல்லூழ் வந்து கூட்ட திருமாலை மண்டபம் போந்தருளினார். அங்குத்தவ அரசர், தவச்செல்வி சங்கிலி யாரைக் கண்டார்.*

*நம்பியாரூரர் மனம் காதல் வழிப்பட்டது. இக் காதலின் சான்றாண்மை குறித்து ஆய்வு செய்து கொள்கின்றார் நம்பியாரூரர்; தம் நிலை உணருகின்றார். அருளால் அடைந்த பிறவியை எண்ணுகின்றார். நம்பியாரூரர் காதல் வழிப்பட்ட வருத்தத்திற்கு ஆளானார் ஆயினும் சங்கிலியார் மேற் கொண்டுள்ள தவத்தால் அவரை எளிதில் அடையத்தக்க தாயில்லை. நம்பியாரூரர் திருஒற்றியூர் ஈசன்பால் கேட்டுப் பெறத் துணிந்தார். திருஒற்றியூர் ஈசனிடம் "சங்கிலியைத் தந்து என்வருத்தம் தீரும்' என்று விண்ணப்பித்தார்.*

*நம்பியாரூரர் வருத்தம் தீர்த்தருளுவது திருஒற்றியூர் இறைவனது கடமை. சங்கிலியார் முன் இறைவன் தோன்றி*

நம்பியாரூரரை அறிமுகப்படுத்துகின்றார். இறைவன் சங்கிலி யாரின் திருமனைக்கு எழுந்தருளி வந்திருப்பது அவர் தவத் திற்கு வரம் கொடுக்க அல்ல. நம்பியாரூரருக்கு மணம்பேச வந்துள்ளார். ஆயினும் சங்கிலியார் தவத்தின் அருமையினை உணர்த்துவான் வேண்டி 'சாருந்தவத்துச் சங்கிலி கேள்!' என்று இறைவன் தொடங்குகின்றார். தவத்தின் செல்வம் சங்கிலி நாச்சியார். இறைவன் நம்பியாரூரரை அறிமுகப் படுத்தும்பண்பு கவனிக்கத் தக்கது. சங்கிலியாரை மணம்புரிய விரும்பும் நம்பியூரர் மேருமலையின் மேம்பட்ட தவத்தினை யுடையவர். திருஒற்றியூரிலுள்ள ஈசனிடம் நிறைந்த அன்புடை யவர். திருவெண்ணெய் நல்லூரில் நம்மால் ஆட்கொள்ளப் பட்டவர். உன்னைத்தருமாறு என்னை இரந்து நிற்கிறார். இரப்பார்க்கொன்று ஈவதே மரபு. சங்கிலி நம்பியாரூரருடன் மணம் செய்து கொள்வாயாக என்றார்! தமிழர் மரபில் தவமும் திருமணமும் மாறுபட்டதன்று என்பது நம்பியாரூரர் வரலாறு. மாயவாதம், பௌத்தம், சமணம் முதலிய சமயங்கள் தமிழகத்தில் பரவி மானுட வாழ்க்கையைக் கொச்சைப் படுத்தின. காதல் மனையற வாழ்க்கையை இகழ்ந்தன. இந்த வழக்கு செழுந்தமிழ் வழக்கிற்கு மாறானது. செழுந்தமிழ் வழக்கைத் தமிழகத்தில் நிலைபேறு கொள்ளச் செய்யவும், காதல் மனைவாழ்க்கைத் தமிழகத்தில் நிலைபேறு கொள்ளச் செய்யவும், காதல் மனைவாழ்க்கை மரபு வளரவும் திருவுள்ளம் பற்றிய இறைவன் நடத்திய திருவிளையாடலே நம்பியாரூரர் வரலாறு. சங்கிலியார் உடன்படுகின்றார். பெண்மைக்கே உரிய வகையிலும் தமிழ் நாகரிக வரம்பு நிலை உணர்த்தும் வகையிலும் திருவாரூரில் நம்பியாரூரர் பெரு விருப்பம் கொண்டவர் என்பதை ஈசன் அறிந்தருளுவது நல்லது என்று உணர்த்துகின்றார். ஆம்! பரவையாரும் பரவையாரைத் தந்தருளியவனும் உறைவது திருவாரூர் அல்லவா? திருஒற்றியூர் ஈசன் சங்கிலியாரின் குறிப்புணர்ந்து நின்னைப் பிரியா வகையில் சபதம்

*செய்வான் நம்பியாரூரன் என்று உறுதி கூறுகின்றார். என்னே ஈசன் திருவிளையாடல்.*

*திருஒற்றியூரையும், சங்கிலியாரையும் பிரியாமல் நம்பியாரூரர் வாழ்ந்தால் பரவையார் நிலை என்னாவது? இல்லை! இல்லை. "உன்னை இகந்து போகாமை" என்பது தான் இறைவனருளிய உறுதி மொழி. நம்பியாரூரர் சபதம் செய்ய ஒருப்படுகின்றார். ஆயினும் உண்மையான சபதமாக அல்ல. சபதம் செய்யும் பொழுது சந்நிதியில் இறைவன் இருக்காது, இடம் பெயர்ந்து மகிழ மரத்தடியின் கீழ் எழுந்தருள வேண்டும் என்று வேண்டுகிறார். தமக்கு அன்பு பட்டார் பாரமும் பூணும் தன்மையுடைய ஈசன் இதற்கும் உடன்படுகின்றார். ஆனால், சங்கிலியாரிடம் "மகிழின் கீழ் சபதம் கேள்" என்று உணர்த்தி விடுகிறார். சங்கிலியாரிடம் குறிப்பில் உணர்த்தியதை பெருமான் நிறைவேற்றித் திருமணம் செய்வித்தருள்கின்றார்.*

## மகிழின் கீழ் சத்தியம் – சரியா?

*நம்பியாரூரர், இறைவன் முன்னிலையில் இறைவன் சந்நிதியில் சத்தியம் செய்ய முன் வராமையை எண்ணுக. ஆம்! மானுடவியல் குற்றங்கள் மிகுதியும் உடையது, வழுக்கி விழும் நிகழ்வுகளே வாழ்க்கையில் மிகுதி. 'மனிதம்' என்ற பெயரே 'நிறைவு பெறாமை' என்று பொருளாகும் என்பார் லெராய் பிரௌன்லோ* (Leroy Brownlow) *மனிதத்தின் பாவ மன்னிப்புகளிலேயே கடவுளின் புகழ் இருக்கிறது. ஆதலால் இறைவன் சந்நிதியில் இறைவன் பெயரால் சத்தியம் செய்வதை விரும்பாமல் கருவறையைவிட்டு மகிழின் கீழ் இருக்குமாறு இறைவனை வேண்டுகிறார். நபிகள் மதினாவில் மசூதியின் திசை நோக்கிக் கால் நீட்டித் தொழுததை மக்கள் ஆட்சேபித்துள்ளனர். அதற்கு நபிகள் இறைவன் இல்லாத திசையைக் காட்டியருளும்படி கேட்டதாக ஒரு வரலாறு உண்டு. எள்ளில் எண்ணெய்போல் இறைவன் எங்கணும்*

எழுந்தருளியிருக்கின்றான் என்பதே கடவுட் கொள்கை; தத்துவம். கருவறையை விட்டு மகிழின் கீழ் இருக்க இறைவன் ஒருப்பட்டால் கருவறையில் கடவுள் இல்லையா? இது தத்துவமுரண்பாடு இல்லையா? தத்துவ முரண்பாடு இல்லை. மின்விளக்குகளின் பிளக்கில் மின்சாரம் இருக்கிறது. ஆனாலும் பொத்தானை அழுத்தினால்தான் மின்சாரம் இருப்பது காட்சிக்குப் புலனாகும். வான்வெளியில் ஒலியலை இருப்பது உண்மை. ஆனாலும் வானொலிப் பெட்டியை இயக்கினாலே ஒலி செவிப்புலன் நுகர்வுக்கு வரும். அது போல எல்லா இடத்திலும் இறைவன் இருப்பது உண்மை; ஆயினும் ஆன்மாக்களின் அனுபவத்திற்கு வராமல் உள்ளீடாக இருக்கும். திருக்கோயில் கருவறையில் எழுந்தருளி யுள்ள திருமேனியில் இறைவன் பலகாலும் பலரும் அரற்றி அழுதமையால் எப்போதும் வெளிப்பட்டு நிற்பான். வானொலி நிலைய ஒலிபரப்பு அறைக்குள் ஒலி நிறைந் திருப்பது போல, மின்சார உற்பத்தி கேந்திரத்தில் இடையீடில் லாது மின்சாரம் ஒளிபரப்புவது போல. ஆதலால், சுந்தரர் ஆன்மாக்களுக்கு எளிதில் அனுபவத்திற்கு வரும் திருக் கோயில் கருவறையை விட்டு மகிழின்கீழ் இருக்கும்படி இறை வனைக் கேட்டுக்கொண்டார். ஆனால் இறைவனே நம்பியாரூரரை வல்வினைகளுக்கு ஆட்படுத்தி அவரிடம் தோழமைப் பண்பினைத் திறம்பட வளர்க்கத் திருவுளம் கொண்டு சங்கிலியாரிடம் உள்ளதைக்கூறி மகிழின்கீழ் சத்தியம் செய்யும்படி கேட்குமாறு தூண்டினார்.

மகிழின் கீழ் எழுந்தருளியுள்ள இறைவன் முன்னிலை யில் நம்பியாரூரர் சத்தியம் செய்தமையை, சங்கிலியார் நினைத்து வருந்துகின்றார். திருக்கோயில் இறைவன் முன்னால், இறைவன் பெயரால் சத்தியம் செய்வது மரபன்று. ஏற்றுக்கொள்ள இயலாது என்பது தமிழ்நூற் கொள்கை. தமிழ்மரபு இது என்பதால் சட்டமன்றங்களில் கடவுள் பெயரால் உறுதியெடுப்பது விரும்பத்தக்கதன்று. அரசியல்–

ஆட்சியியல் என்றால் முற்றிலும் உண்மை, நேர்மை, சாத்தியமல்ல. அதுவும் ஜனநாயக அரசியலில் நூற்றுக்கு நூறு உண்மையும் நேர்மையும் காண்பது இயலாது. மக்கள் நலங்கருதி நெகிழ்ந்து கொடுக்க வேண்டிய நிலைகள் ஏற்படும். அப்பொழுது சத்தியம் மாறுபடும். ஆதலால் எடுத்ததற்கெல்லாம் கடவுள் பெயரால் சத்தியம் செய்வது கூடாது; வரவேற்கத்தக்கதுமன்று என்பதை நம்பியாரூரர் செய்கையும் சங்கிலியார் வருத்தமும் உணர்த்துவது ஓர்க.

சங்கிலியார் திருமணம் நடந்து விட்டது. நல்ல காதலர்களாக - அருள் நலங்கனிந்த காதலர்களாக நம்பியாரூரரும் சங்கிலியாரும் மகிழ்ந்து வாழ்கின்றனர். காதற்கிழத்தியுடன் இனிது வாழ்தலைப் பிற்காலத்தில் நுழைந்த அயல் வழக்கின் வழி சிற்றின்பம் என்று இகழ்ந்து கூறுதல் மரபாயிற்று! இது தவறு. எங்கு வாழ்கிறார்கள்? எந்நெறியில் வாழ்கிறார்கள்? என்பதல்ல ஆய்வு. எப்படி வாழுகிறார்கள்? என்பதே முக்கியம். காதலிற்சிறந்து தோய்ந்து மகிழ்ந்து வாழ்ந்த நம்பியாரூரரை "பேரின்பம் இனிதமர்வார்" என்று சேக்கிழார் உணர்த்துவது அறிக.

வினைப்போகம் துய்த்தல் தவிர்க்க இயலாதது மட்டுமன்று; அறமும் கூட. ஆனால் அந்த வினைப் போகத்தைப் பொறியின்பத்தைச் சார்ந்து திருவருள் சிந்தனை யின்றி அனுபவித்தால் வினை வளரும். ஒருபோதும் வினை நீக்கம் வராது. வாழ்வின்பயணத்தில் இறுக்கமான பற்று குறைந்து மக்கள் பாலும் பக்தியின் பாலும் நெகிழ்ந்த நிலை யில் துய்த்தல் அருள் நெறி சார்ந்த அறமாகும் என்பது தமிழ் நெறி என்று உணர்த்துவது நம்பியாரூரர் வரலாற்றின் நோக்கம். எத்தகைய இன்பத்தில் தோய்ந்து வாழ்ந்தாலும் பழைய நினைவுகள் அகலா. பிடிவாதமாகச் சில நாள் மறக்கலாம். ஆனால் முறையான காலங்கள் வந்து புதிய அனுபவங்களின் அழுத்தம் குறைந்து மறந்துபோன பழைய

௫.IX.௨௦.

அனுபவங்களின் நினைவுகள் மேலோங்கி வரும். இதுவே வாழ்க்கையின் நியதி.

நம்பியாரூரருக்குப் பரவையாரை அறிமுகப்படுத்தித் தோழமையாக இருந்து திருமணம் செய்து தந்தருளிய திருவாரூர் இறைவன் கருணைத் திறத்தை எளிதில் மறக்க இயலுமா? திருவாரூர் நினைவு வருகிறது. திருவாரூர் திருவீதி விடங்கப் பெருமான் திருவிழா மண்டபத்தில் காட்சி தருகிறார்; அவர் திருமுன்பு பரவையார் பண்ணின் இசை பாடி நடனமாடும் இனிய காட்சியை அகக்கண்ணால் காண்கிறார். அனுபவ ஆர்வமும் முகிழ்க்கிறது.

## உளோம் போகீர் என்றான்!

திருவாரூர் நினைவு சுந்தரருக்கு மேலோங்கியது; திருவாரூர் இறைவனைப் பிரிந்து வாழும் நிலையை நினைந்து வருந்துகின்றார். வாழ்க்கையின் குறிக்கோள் பத்திமை; பிறி தொன்று அடிமைத்தன்மை. இவ்விரண்டையும் இழந்த நிலையை நினைந்து வருந்துகின்றார். திருவாரூர் இறை வனைப் பிரிந்திருக்க இயலாத மனநிலையைப் பெற்றார். தமது தவறுகளுக்கெல்லாம் உடந்தையாய் இருந்தருளிய இறைவனின் தண்ணருளை நினைந்து நினைந்து உருகு கின்றார்.

ஆம்! தோழமை என்பது என்ன? தோழன் தோழன் தான்! தோழனின் தவறுகளைத் தோழன் விமரிசனம் செய்ய மாட்டான்; மற்றவர்களிடம் தோழனின் தவறுகளைக் கூறமாட்டான். தோழன் தவறுகளுக்குத் தண்டனை தரமாட்டான்; துச்சமாக நினைக்கமாட்டான்; உபதேசம் செய்யமாட்டான்! ஏன் ஒரோவழி துரிசுகளுக்கு உடந்தையாகக் கூடப் போவான். பின் உற்றகாலம் வந்துழி, தாயிற்சிறந்த தயாவுடனும் மருத்துவரின் பரிவுடனும் குற்றத்திலிருந்து தோழனை மீட்க முயற்சி செய்வான். தாம்

செய்த துரிசுகளுக்கு எல்லாம் இறைவன் தோழமை நிலையில் உடந்தையாக இருந்ததை நம்பியாரூரர் நினைந்து நினைந்து உருகிப்பாடுகின்றார். திருவாரூர் தொழும் விருப்பம் கனிந்து மேலோங்குகிறது.

ஒருநாள் திருவொற்றியூர் இறைவனை வணங்கிக் கொண்டு, திருவொற்றியூர் விட்டகன்று திருவாரூர் செல்லும் பயணத்தைத் தொடங்கினார். திருவொற்றியூரினின்றும் பிரிவதில்லை என்ற சபதத்தை மறந்தார்; சபதம் வேலை செய்தது. கண்கள் இரண்டும் ஒளி மழுங்கின; ஒளி குறைந்தன. செய்வதறியாது சுந்தரர் மூர்ச்சித்து நின்றார்; திகைத்தார். சபதத்தால் இது நிகழ்ந்தது என்று உணர்கின்றார். எந்தநிலையிலும் சிவமே தனித்துணை! நம்பியாரூரர் உடன் பாடத் தொடங்குகின்றார். இத்தருணத்தில் பாடிய திருமுறைப் பாடல்கள் அற்புதமானவை.

"அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவும் நான்படற் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்ப னாகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெய ரல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே."

(ஏழாந்திருமுறை 550)

"இறைவா! திருவொற்றியூர் உறையும் இறைவா! கிராமப்புறங்களில் ஆட்டுப்பால் கறப்பார்கள். அப்போது அந்தப் பாலில் ஆட்டுப் பிழுக்கை விழுந்துவிடும். ஆட்டுப் பிழுக்கை விழுந்தமையின் காரணமாக அந்தப் பாலை யாரும் தூக்கி ஊற்றி விடமாட்டார்கள். பாலில் விழுந்த பிழுக்கையை எடுத்து எறிந்து விட்டுப் பாலைப் பயன்

படுத்துவார்கள். இதுவே உலக வழக்கு! அதுபோல் ஒற்றியூர் இறைவா, நீ ஏன் எனக்கருள் செய்யக்கூடாது? அழுக்குடம் புடன் உன் சந்நிதி அடைந்தேன். நான்பிழைகள் செய்தது, செய்வது உண்மை. ஆயினும் நின் திருவடியை மறக்கும் பிழையை நான் செய்ததில்லை. வாழ்க்கையில் வழுக்கி வீழ்ந் தாலும் உன்னுடைய திருநாமத்தை மறந்ததில்லை. ஒற்றியூர் இறைவா! என்னுடைய கண் நோய்க்கு ஒரு மருந்து கூறு!" என்று ஊன் உருக; உயிர் உருகப் பாடியருளுகின்றார் நம்பியாரூரர். உலக வழக்கினை ஒத்தே சிந்திக்கின்றார். நம்பியாரூரர் கண்களை இழந்தது சபதம் மீறியதற்காகத்தான்! ஆனால் நம்பியாரூரரோ சங்கிலிக்காகப் பரிந்து கண்களை இறைவன் பறித்துக் கொண்டதாகக் கூறுகின்றார். மீண்டும் திருவடிப் பிழையா நிலையை எடுத்து வற்புறுத்துகின்றார். இந்தப் பதிகம் முழுதும் உறவும் உரிமையும் இணைந்து குரல் கொடுக்கும் பாடல்கள்தான். கண்ணொளி இழந்தார். ஆனால் ஆன்ம ஒளி இழக்கவில்லை. திருவாரூர் காணும் வேட்கை தணியவில்லை. சாலைவழிச் செல்வோர் வழிகாட்ட திருவாரூர்ப் பயணத்தைத் தொடங்கிவிட்டார். வழியில் திருமுல்லைவாயில் திருத்தலத்தை அடைகின்றார். திருமுல்லைவாயிலில் பாடியருளிய பதிகத்திலும் சங்கிலிக் காக இறைவன் கண்களைப் பறித்துக்கொண்டான் என்றே பாடுகின்றார். திருநெடுவெண்பாக்கம் செல்கின்றார். நம்பியாரூரருக்கு ஆற்றாமை மீதூர்கிறது. ஆதலால் நெடு வெண்பாக்கத்தில் பாடிய பதிகத்தில் இறைவனை நோக்கி, "நீர் மகிழ்ந்து கோயிலுக்குள் இருக்கிறீர் அல்லவா?" என்று வினவுகின்றார். இறைவன் திருவுளங் கொண்டு ஊன்றுகோல் ஒன்றருள்கின்றான். ஆயினும் இறைவனிடமிருந்து ஊன்று கோல் தான் கிடைத்தது. இணக்கமான எதுவும் கிடைக்க வில்லை. பகைவன் போல "உளோம் போகீர்" என்றான். ஊன்றுகோல் கிடைத்த மகிழ்ச்சியில் நம்பியாரூரர் "பிழையுளன பொறுத்து அருள்வர்" என்று பாடினார்.

## கண் பெற்றார் சுந்தரர்!

நம்பியாரூரர் திருவெண்பாக்கத் திறைவரிடம் வேண்டியது கண். ஆனால், அவர் தந்ததோ ஊன்றுகோல்! நம்பியாரூரர் இறைவனின் கருணையை - கருணையின் பற்றா அளவை நினைந்து ஆறுதல் அடைகின்றார். வெண்பாக்கத்திலிருந்து பழையனூர் வழியாகத் திருவாலங் காடு செல்கின்றார். பின், திருவூறல் பணிந்து கொண்டு காஞ்சி மாநகரம் சென்றடைகின்றார்.

காஞ்சிக்கு நம்பியாரூரர் வந்தடைந்ததை,

> "தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தில்
> ஊனில்வளர் உயிர்க்கெல்லாம் ஒழியாத
> கருணையினால்
> ஆனதிரு அறம்புரக்கும் அம்மைதிருக் கோயிலின்முன்
> வானில்வளர் திருவாயில் வணங்கினார்
> வன்றொண்டர்"

என்று சேக்கிழார் கூறி விளக்குகின்றார். "தேனிலவு", "காமக்கோட்டம்" இவற்றை அறிந்து மகிழ்க. அடுத்து, "ஊனில் வளர் உயிர்கள்" என்றதால் ஊனும் உயிரன்று என்ற கொள்கையை உணர்த்தியவாறாயிற்று. உயிர்கள் வளர ஊனுடம்பு சாதனம்! உயிர்கள் வளர்வதால் ஊனுடம்பு பேண வேண்டியதாயிற்று என்பதை உணர்க! ஊனில் வளர் உயிர்கள் வளர அன்னை காமாட்சி அறம் செய்கிறாள்! அறம் செய்து கொண்டே இருக்கிறாள்!

காஞ்சித் திருக்கோயிலில் அடியார்கள் வழிபாட்டுக்குக் காத்து நிற்கின்றனர். அவர்களுக்குப்பின் நம்பியாரூரரும் நின்று வழிபடுகின்றார்! ஒழுங்கு வரிசை இன்றுவந்ததல்ல. தமிழர்களிடத்தில் பழங்காலத் தொட்டும் இருந்து வரும் முறை.

காஞ்சிக் காமக்கோட்டத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் முன் நம்பியாரூரரைப் புகழ்தல் மூலம் அன்பு செய்ய வேண்டிய கடமைப் பாட்டினை உணர்த்துகின்றார். பாற்கடலைக் கடைந்த பொழுது எழுந்த நஞ்சினை உண்டு கண்டத்தில் அடக்கி அமரர்களுக்கு வாழ்வளித்தவன் இறைவன்! அதனாலேயே இறைவனுக்கு நீலகண்டன் என்ற பெயர் பெருவழக்காக வழங்குகிறது.

"விண்ணாள்வார் அமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா கச்சிஏ கம்பனே! கடையானேன்"

என்கிறார் ஆரூரர்.

விண்ணோர்களுக்கு அருள் செய்த நீ எனக்கு அருள் செய்யாதது ஏன்? என்கிறார். அடுத்து நம்பியாரூரர் தன்நிலை விளக்கம் ஒன்று தருகிறார். அதாவது அவர் பிழைசெய்தது உண்மை. அந்தப்பிழையை எண்ணித்திட்டமிட்டுச் செய்ய வில்லை என்பதை "எண்ணாத பிழை பொறுத்து" என்று பேசுகிறார்; கண் தந்தருளும்படி வேண்டுகிறார்.

காஞ்சியில் எழுந்தருளியுள்ள இறைவன். மங்கை தழுவக் குழைந்தவர். திருவருட் சக்தியாகிய அம்மையின் ஆதரவால் இடது கண் கிடைக்கிறது. அடுத்து நம்பியாரூரர்க்குத் திருவாரூர் செல்லும் ஆர்வம். திருவாரூர் செல்லும் வழியில் திருவாமாத்தூர் வந்து சேர்கின்றார். திருவாமாத்தூர் இறைவனை வணங்கி மகிழ்ந்து சான்றோர் வளர் தொண்டைநாடு கடந்து சோழவளநாடு வந்தணை கின்றார். திருவாவடுதுறையை வணங்குகின்றார். திருவாவடு துறையில் ஒரு கண் இல்லாத குறையை நினைந்து வருந்திப் பாடுகின்றார்! இறைவா! எனக்கேது உறவு? நின்னையல்லால் உறவு ஏது? என்று கூறித் தாழ்ந்து பணிகின்றார். கண்ணில் நோய் ஒன்றும் சுந்தரரைப் பற்றி யிருக்கிறது. "புதிய நோய்" என்று சேக்கிழார் கூறுவதால் அதுவந்த நோய் என்று உணர முடிகிறது. திருத்துருத்தியில் எழுந்தருளியுள்ள இறைவனை

நோய் நீக்கியருளுமாறு வேண்டுகின்றார். இறைவனும் வட குளத்தில் குளிக்கச் சொல்கின்றான். நம்பியாரூரரும் திருத்துருத்தி வடகுளத்தில் நீராடி வந்தடைந்த நோய் நீங்கி எழுகின்றார். திருவாரூருக்குப் பயணம் தொடர்கிறது.

நம்பியாரூரருக்கு ஈடுபாடு மிகுதியும் உடைய திருத்தலம் திருவாரூர். ஏன்? திருவாரூர் இறைவன் தானே பரவையாரை மணம் முடித்துக் கொடுத்தார். நம்பியாரூரரின் அகத்திலும் கண்ணிலும் திருவாரூரே இடம் பெற்றிருந்தது. திருத்துறையிலிருந்து திருவாரூர்க்குப் பயணமானார்.

நம்பியாரூரர் இன்புறு நலன்கள் பல நாடினும் திருவருளை மறப்பதில்லை என்பதைச் சேக்கிழார், "திருவருள் மறவாது" என்று கூறி விளக்குகிறார். நம்பியாரூரர் தொண்டர்களுடன் கூடி இறைவனைப் பாடிப்பரவுவதால் தொண்டர்களுக்கும் பயன்; நம்பியாரூரரின் அன்பும் பெருகி வளர்கிறது. இந்தப் பெருகிய அன்புடன் மாலை நேரத்தில் திருவாரூர்க்குள் புகுகின்றார். முதலில் திருவாரூர் பரவையுண் மண்டளித் திருக்கோயிலை வணங்கி மகிழ்கின்றார். இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர் தூவாயர். அதாவது தூயவாயினை உடையவர். இறை வனுடைய திருவாய்க்கு என்ன தூய்மை?

ஒரு காலத்தில் திருவாரூரையே அழிக்கத்தக்க அளவுக்குக் கடற்கோள் நிகழ்ந்தது. அப்போது அந்தக் கடல் நீர் முழுவதையும் குடித்துத் திருவாரூரைக் காப்பாற்றியதால் தூய வாயாயிற்று! தூய்மைக்கு இலக்கணம் நீராடலும், நறுமணம் பூசுதலும், புலாலுண்ணாமையும் மட்டுமல்ல; பலகாலும் உண்மாமல் பல நூறு ஆண்டுகள் வாழ்ந்தாலும் அது நோன்பாகாது! விரத சீலர் அவ்வளவுதான்! அதனால் பயன் என்ன? ஆனால் உண்மையான நோன்பு பிறருக்கென்று முயல்வதுதான்! தூய்மை என்பது பிறர்க்கு எழும் தீமையைத் தாம் ஏற்றுக் கொள்ளுதல் என்பது தான்!

பரவையுண் மண்டளித் திருக்கோயிலை வணங்கி மகிழ்ந்து திருவாரூர் மூலட்டானத்து இறைவனை வணங்க

வருகிறார் நம்பியாரூரர். திருமூலட்டானத்திற்கு நம்பியாரூரர் வரும்நேரம், அர்த்தசாம வழிபாட்டு நேரம்! திருக்கோயில் பூசைகளிலேயே அர்த்தசாம வழிபாடு சிறந்தது! ஏன்? வேண்டிய வேண்டியாங்கு எய்தலால்! அப்பன் அருட் சக்தியுடன் கூடப் போகும் காலம் அல்லவா? நம்பியாரூரர் முன்பு திருவாரூருக்கு வந்த இன்ப அனுபவம் வேறு. இப்போதைய அனுபவம் துன்பம் கலந்தது. கடவுளிடத்து மானிடப்பெண் நயந்த குறிப்புடைய "குருகு பாய" என்று பாடித் தொழுதார். அடுத்து, "மீளா அடிமை" எனத் தொடங்கும் அற்புதமான பதிகத்தைப் பாடியருளினார். இந்தப் பதிகம் ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கும் பதிகம். இப்பதிகத்தில் வலக் கண்ணைத் தந்தருளுமாறு வேண்டுகிறார். நம்பியாரூரரின் ஒருமைநிலை இப்பதிகத்தில் தெரிகிறது. கடவுள் வழிபாட்டுக்கு ஒருமை நிலை வேண்டும். இன்று ஒரு கடவுள், நாளை ஒரு கடவுள் என்று தொழக் கூடாது. இதனை,

> "மீளா அடிமை உனக்கே ஆளாய்ப்
> பிறரை வேண்டாதே!"

என்று தன்னிலை விளக்கமாகத் தந்துள்ளார். இந்தப் பதிகத்தில் நம்பியாரூரருக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு புலப்படுத்துகிறது. "வாழப் பிறந்த அடியார்கள்! உனக்குத் தொழும்பராகத் தொண்டு செய்பவர்கள். அவர்கள் படும் துன்பத்தை வாய் திறந்து உன்னிடத்தில் சொன்னாலும் தீர்வு காண்பதில்லை. சொல்லாமலே உதவிசெய்யக் கடமைப் பட்டவன் நீ! ஆனால், நீயோ சொல்லியும் உதவிசெய்வ தில்லை. இதுதான் இயல்பா? நீ மட்டும்தான் வாழ வேண்டுமா? வாழ்ந்து போ! போ" என்று உரிமையோடு ஏசுகிறார்.

அடுத்த பாடலில், "திருவாரூர் இறைவா! நான் விரும்பியபடியே உன்னிடத்தில் ஆட்பட்டேன்! என்னைப் பூரணமாக ஒப்படைத்து விட்டேன்! நீ என்னை விற்க

முடியும்! ஒத்திவைக்க முடியும்! உனக்குநான் ஆட்பட்ட குற்றத்தை தவிர வேறு ஒரு குற்றமும் செய்ததில்லை! என் கண்களைப் பறித்துக் குருடாக்கினாய்! ஏன் குருடாக்கி னாய்? உனக்கே பழி. மற்றொரு கண்ணைத் தந்தருள்க! அப்படித்தர விருப்பமில்லையாயினும் ஆகுக! நீ வாழ்ந்து போ! திருத்துருத்தியில் உறையும் ஈசனே! திருப்பழனத்தை ஊராகக் கொண்டவனே! திருச்சோற்றுத் துறையை ஆள்பவனே! ஆயினும், இறைவா! உனது நிலையான இடம் திருவாரூர்தான்! இறைவா, உனக்கு எத்தனை திருத்தலங்கள் இருந்தும் என்? அடியார்கள் மனமே உனக்குச்சிறந்த இருப்பிடம்! அடியார்கள் மனமே உனக்குத் திருக்கோயில்! சொல்லித் தெரிய வேண்டியதில்லை! ஆயினும், ஏன்? உன்பால்மிகவும் அன்புடைய அடியார்கள் அவர்களுடைய துன்பத்தைச் சொன்னாலும் தீர்த்து வைப்பதில்லை! அது மட்டுமா? உனது கோட்பாடே விரோதமாக இருக்கிறது! இப்பிறப்பில், இம்மண்ணில் அடியார்களை வருத்துவது, மறுமையில் இன்பம் தருவது என்று கொள்கை வைத்திருக் கிறாய்! இதுதான் உனது கொள்கையாயின் வாழ்ந்து போ" என்று பாடுகிறார்.

பொதுவாகச் சமயநெறிகள் மறுமை நோக்கியன வாகவே அமைந்துள்ளன; ஆற்றுப்படுத்துகின்றன. "இந்த உலகத்தில் துன்புறுகிறவர்கள் அடுத்த உலகத்தில் பாக்கிய வான்கள்" என்று விவிலியம் கூறும். இந்தக் கொள்கை இன்று விவாதத்திற்குரிய பொருளாகிவிட்டது,

> "செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம்
> சேர்ந்திடலாம் என்றே எண்ணியிருப்பார் பித்த
> மனிதர்"

என்பார் பாரதியார். இந்த உலகத்தில் துன்புறுதலால் மறு உலகத்தில் இன்புறுதல் என்ற மதக்கோட்பாட்டு வழிதான் சாதி ஆதிக்கமும், சுரண்டும் பொருளாதார ஆதிக்கமும் கால் கொண்டுள்ளன. நம்பியாரூரர் இந்தக் கொள்கையை இந்தப்

பாடல் வழி மறுக்கிறார். இவரே, "இம்மையே தரும் சோறும் கூறையும்" என்று அருளியுள்ளமையும் அறிக. சித்தாந்த சிவநெறியைப் பொறுத்தவரையில் இம்மை நலன்கள் புறக்கணிக்கப்படுவதில்லை. இம்மையிலேயே முத்தராகக் கூட ஆகலாம். அவர்கள் தான் சீவன்முத்தர். "மதுரையில் இம்மையே நன்மை தருவார் கோயில்" என்று ஒரு திருக்கோயிலும் இருக்கிறது.

இந்தப் பதிகம் மேலும் மேலும் பல தன்மைகளை, உண்மைகளை விளக்குவனவாய் அமைந்துள்ளன.

*பிரிவு, தீது! பேயொடு பழக்கம் ஏற்பட்டு விட்டது! பழகும் பொழுது பேயின் இயல்புகளும் புலனாகின்றன. அது பேய் என்று தெரிந்த பிறகும் பிரியக்கூடாது. பேயுடன் கூட இருப்பதைவிட, பேயைப் பிரியும் பொழுது அதிகத் தீமை ஏற்படும். இறைவா! நான் என்ன செய்ய? விளக்க முடியவில்லை. ஒருவன் கனியை விரும்புகின்றான்; ஆனால் கனி கிடைக்கவில்லை. காய் கிடைத்தது. அதனால் கனி கிடைக்கவில்லையே என்று கவலைப்படக்கூடாது. காயை ஏற்றுக் கொள்ள வேண்டும். திருவாரூர் இறைவா! நான் நாய் போல உன் கண்ணில்படுமாறு திரிகின்றேன்! நானே உமக்கு ஆட்பட்டவன்! ஏன் வாய் திறந்து ஒரு வார்த்தை கூறக்கூடாதா? போனால் போகட்டும்! வாழ்ந்து போவீர்! உமக்கே பழி! என்று பலப்பலவாக நட்புரிமையினால் பாடினார்; பரவினார்; ஏசினார்.*

இந்தப் பதிகத்தை கேட்டருளிய திருவாரூர்ப் புற்றீசர், வலக் கண்ணைக் கொடுத்தருளினன்! இப்பதிகத்தினைத் தொடர்ந்து ஓதின் கண்ணொளி பெறலாம் என்பது இன்றும் உள்ள நம்பிக்கை.

திருவாரூர் வந்த நம்பியாரூரர் திருக்கோயில் வழிபாட்டுக்குச் செல்கிறார். அவருடன் வந்த பணியாட்கள் மாளிகைக்குச் செல்கிறார்கள் செய்தி கூற; செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய! ஆனால், பரவையார் மாளிகைக்குள் நுழைய முடியவில்லை. புறத்தேயே நிற்கிறார்கள்!

பரவையாரைச் சமாதானம் செய்யப்பெரிதும் முயற்சி செய்தனர். ஒன்றும் பலன் கிடைக்கவில்லை.

பரவையாரின் புலவி நீக்கத்திற்குத் தம்மைச் சார்ந்த முயற்சிகள் பயன் தரவில்லை. நம்பியாரூரர் தனித்து இருந்து சிந்தித்தார். சிந்தனையின் முடிவு தன் தலைவன் சிவபிரானையே தூது அனுப்புவது' என்பதாயிற்று. வினையின் பயனாக இணைந்த பரவையாரின் புலவி தணிக்கத் திருவுள்ளம் கொள்ளும்படி இறைவனை வேண்டு கிறார். இறைவனும் நம்பியாரூரர் முன் எழுந்தருளினன்.

"இறைவா, குற்றத்தில் அகப்பட்டு ஆழ்கின்றேன். என்னை எடுத்தாள வேண்டும்" என்று வேண்டி நின்றார்; "இறைவா! தியாகேசா! நான் சங்கிலியை மணமுடித்து வாழ்ந்த நிகழ்வுகளைப் பரவை அறிந்து வைத்திருக்கிறாள். அதனால் என்மீது வெறுப்பு! என்னைப் பார்த்தால் உயிரை விட்டு விடுவதாகக் கூறுகிறாள்! இறைவா! நான் உனக்கு அடிமை! நீ எனக்குத் தோழன்! இது உண்மையானால் இப்போதே இந்த இரவிலேயே பரவையின் புலவி தீர்த்து வருக!" என்று வேண்டினார். தியாகேசனும் தூது போக உடன்பட்டுத் தூது போனான்.

இறைவன் அன்பர் துயர்நீக்கும் இயல்பினன். அமரர்களுக்கு அமுதை வழங்கத் தான் நஞ்சுண்டு "நீலகண்டன்" என்ற பெயரைப் பெற்றவன். அமரர்களும் முனிவர்களும் நம்பியாரூரர் மனமும் தொடரப் பரவையார் திருமாளிகை நோக்கி நடந்தனன். திருவாரூரில் பரவையார் வாழ்ந்த பகுதி சிவலோகம் போலக் காட்சியளித்தது. சிவன் எம்பிரான் திருவடிகளில் அணிந்துள்ள சிலம்பு ஒலி செய்கிறது. இறைவன் திருவடிகளைத் தேடித் தேடிக் காண முடியாமல் எய்த்துக் களைத்துப்போன நான்முகனையும் திருமாலையும் சிலம்பொலி அழைக்கிறது. "வருக! வருக! பரவையார் வீட்டிற்கு வருக! எளிதில் சிவபெருமான்

திருவடிகளைக் காணலாம்" என்று சிலம்பொலி அழைப்பதாகத் செந்தமிழ்ச் சேக்கிழார் அருளும் நயம் படித்து அனுபவிக்க வேண்டிய பகுதி.

பரவையாரின் திருமாளிகைமுன் சிவபெருமான் வந்து சேர்ந்தான். தம்முடன் வந்தாரை யெல்லாம் பரவையார் மாளிகைக்குச் சற்று தூரத்தில் நிற்குமாறு பணித்துச் சிவபெருமான், சிவவேதியன் திருக்கோலம் கொண்டான்! பரவையார் மாளிகையை நண்ணினான். பரவையாரின் மாளிகை வாசற்கதவு சாத்தியிருந்தது. சிவவேதியன் கதவைத் தட்டினான். 'பாவாய்' - என்று பரிவுடன் அழைத்துக் கதவைத் திறக்கும்படி வேண்டினான். பரவையார் கண் துயிலாநிலையில் இருந்தார்; கதவைத் தட்டி அழைத்தவர் சிவவேதியராக இருப்பார் என்று துணிந்தார். கதவைத் திறந்து, சிவவேதியரை வரவேற்று அழைத்துச் சென்றார். "ஐய! இறைவன் எழுந்தருளியது போலக் காட்சி! ஐயன்மீர்! இங்கு எழுந்தருளியது எதற்கு?" என்று பரவையார் கேட்டார்.

சிவவேதியர் "நான் சொல்வதை நீ மறுக்காது ஏற்றுச் செய்ய உடன்பட்டால் சொல்லலாம்" என்றார். அதற்குப் பரவையார் புத்திசாலித்தனமாக, "ஐய, நீர் விரும்புவதை அருளிச் செய்தால், அது எனக்கு இசைவாக இருக்குமானால் செய்யலாம்" என்றார். சிவவேதியர் "நம்பியாரூரர் இங்கு வரவேண்டும்" என்றார். பரவையார் "பங்குனி உத்திரத்திற்கு வந்திருந்தார். பின் என்னைப் பிரிந்து சென்றார். பிரிந்து சென்றவர் திருவொற்றியூரை அடைந்து ஆங்குச் சங்கிலியாருடன் தொடர்பு கொண்டார். சங்கிலியாருடன் இணைந்து வாழ்ந்தார். சங்கிலியாருடன் வாழ்க்கை நடத்தும் ஒருவர் இங்கு என் வீட்டிற்கு வர என்ன நியாயம் இருக்கிறது? சிவபெருமானே ஆயினும் இதற்கு வரலாமா? அதுவும் நள்ளிருளில் வரலாமா? நிரம்ப அழகுதான் என்றார்!" சிவவேதியர் திருக்கோலத்தில் இருந்த பெருமான் பரவையாரின் பேச்சைக் கேட்டு மனத்திற்குள் சிரித்துக்

*கொண்டார். ஆயினும் தம் நிலையைக் காட்டவில்லை. தம்முடைய தன்னேரிலாத தோழர் நம்பியாரூரர் வேட்கையினால் மனம் வெதும்பித் துன்புறுதலைக் காண விரும்பினார். இதுவும் பெருமானுக்கு விளையாட்டுப் போலும்! ஆதலால், பரவையார் மறுத்த செய்தியை எடுத்துக் கொண்டு நம்பியாரூரரை வந்தணைந்தார்.*

*நம்பியாரூரர் பரவையாரின் புலவி நீக்கப் பிரானாரை அனுப்பிய செயலை எண்ணி வருந்துகின்றார். ஆயினும் வேட்கை மீதூரத் தலைவன் - பிரானார் பரவையாரின் இசைவு பெற்று வருவார் என்று நம்பிக் காத்திருந்தார். பிரானார் பரவையாரின் மனையில் என்ன செய்திருப்பார்? எந்தை பிரானாரைக் கண்டபின் பரவை மறுக்கமாட்டார். பிரானாருக்கு என்னுடைய தூய அன்பு தெரியும். ஆதலால் பரவையாரின் புலவி தீர்த்தன்றி வரமாட்டார் என்று நம்பியாரூரர்? திடமாக நம்புகின்றார். பிரானார் வரும் வழியில் நம்பியாரூரர் வரவேற்கச் செல்வார். பிரானார் வராமையைக் கண்டு மீண்டு வருவார். அழிந்த நெஞ்சுடன் மயங்கி நிற்பார். சோர்வுடன் நிற்பார். நெற்றிக்கண் உள்ள பிரானார் காலந்தாழ்த்த மாட்டார் என்று மீண்டும் எழுவார். காமவேளின் மலரம்புகளின் தாக்குதலினால் ஒதுங்குவார்; துன்புற்றார்; துயருற்றார்.*

*பிரானார் பரவையார் இல்லத்திலிருந்து திரும்பும் பொழுது பிரானார் திருக்கோலத்துடனேயே வருகிறார். எங்கு பார்த்தாலும் ஒளிக்கதிர் வீச்சு! இரவு பகல் போலக் காட்சியளிக்கிறது. பிரானாரை நம்பியாரூரர் எதிரணைந்து வரவேற்றார். அணை கடந்த ஆற்று வெள்ளம் போல் பிரானார் முன் சென்றார்; அளப்பில் களிப்புடன் நின்றார்; பிரானாரை வணங்கினார்; புன்முறுவல் பூத்தார். பிரானார் விளையாட்டை உணராத நிலையில் நம்பியாரூரர் பரவையாரிடம் இசைவு பெற்று வந்திருப்பார் என்று நம்புகிறார்.*

சேக்கிழார் அருளிச் செய்த பெரியபுராணம் மக்கள் காப்பியம்; வாழ்க்கை நூல்! கடவுளை வாழ்த்துப் பொருளாக மட்டுமல்லாமல் வாழ்வுப் பொருளாக்கிக் காட்டிய பெருமை சேக்கிழாருக்கே உண்டு. இறைவன், சுந்தரர்-பரவையார் புலவி தீர்த்தருளிய கருணைத் திறனுக்கு ஈடு ஏது? இணை ஏது? பெருமானுடைய கருணைத் திறத்தை வியந்து போற்றிய நிலையில் சுந்தரரும் பரவையாரும் சிந்தை ஒன்றி, உயிர் ஒன்றாகி வாழ்ந்தனர். இறைவன் இங்ஙனம் எளிவந்த கருணையுடன் தூது நடந்தமையைத் தீவிர பக்தர்கள் ஏற்பார்களா? 'புனிதம்' என்ற பெயரால் சமூகத்திலிருந்து கடவுளை விலக்கி வைப்பவர்கள் அன்றும் இருந்துள்ளனர். இன்றும் உள்ளனர். சமூகத்திலிருந்து விலகுவதுதான் புனிதம் என்றால் அந்தப் புனிதம் எதற்காக? அந்தக் கடவுள்தான் எதற்காக?

சுந்தரருக்காக, அதுவும் ஒரு பெண் பொருட்டு, இறைவன் திருவாரூர்த் தெருவில் கழுகுகளும் உறங்கும் நள்ளிரவில் நடந்து உழன்ற செய்தியை ஏயர்கோன் கலிக்காமர் என்பவர் தாங்கிக் கொள்ள இயலாமல் பொருமினார்; ஆத்திரப்பட்டார். எந்தக் காரியத்திற்கு இறைவனைத் தூதனுப்புவது? இதற்கு நெறிமுறை இல்லையா? ஒரு பெண்ணின் புலவி தீர்க்க, இறைவனைத் தூதனுப்பிய சுந்தரரும் தொண்டர்தானா? ஐயோ, பாவம்! தாங்கிக்கொள்ள இயலாத பிழையை, செவியால் கேட்ட பிறகும் ஏன் நான் சாகவில்லை? என்றெல்லாம் வெகுண்டு பேசுகிறார் கலிக்காமர். "அடியார் துன்பம் பொறாமல் இறைவன் எளிவந்தாலும் இறைவனைத் தூது அனுப்பலாமா? கொஞ்சமும் மனநடுக்கமின்றி இந்தப் பாவச் செயலைச் செய்தவனை நான் என்று காண்பேன்? ஒரு பெண்ணின் பொருட்டு-காமத்தால் தூண்டப் பெற்று ஆளுடைய சிவனைத் தூதனுப்பியவனை நான் நேரில் காண்பேனாகில் விளைவது வேறு" என்று வெகுண்டார்.

கலிக்காமரின் சினம் சுந்தரருக்குத் தெரிய வந்தது. சுந்தரரும் கலிக்காமர் கருத்துக்கு-கலிக்காமரின் சினத்துக்கு உடன்படுகிறார். சுந்தரர் தன் பிழையை உணர்கிறார். இனி இதற்கு என்ன தீர்வு? ஆளுடைய சிவனிடமே தீர்வுக்குரிய வழி காட்டும்படி வேண்டுகிறார்.

ஆளுடைய சிவனின் இயல்பு, பிரிந்தவரைச் சேர்த்து வைத்தல்தான்! ஏயர்கோன் கலிக்காமரும் சுந்தரரும் நட்புரிமை பூண்டுவாழ வேண்டும் என்று ஆளுடைய சிவன் விரும்புகின்றான். ஏயர்கோன் கலிக்காமருக்குச் சூலை நோய் வருகிறது. தவறு செய்கிறோமோ என்ற உணர்வு-நெஞ்சில் நடுக்கம். சுந்தரருக்கு அறவே இன்றி எங்ஙனம் செய்யத் துணிவு வந்தது? தீவினை செய்ய அஞ்சும் இயல்பு இயற்கையானது. அந்த இயல்பையும் சுந்தரர் இழந்தது எப்படி? ஆட்கொண்டருளும் சிவனை, தம்பிரானைத் தூதுவிடுதலே பிழை! அதுவும் பெண்பால தூது அனுப்பினார் என்பது பெரும்பிழை. பிழை மட்டுமல்ல. பழியும் கூட இந்த தூதுப் பணியை மற்றவரைக் கொண்டும் செய்து முடித்திருக்கலாம். அப்படி முடிப்பதற்குரிய ஆளும் கிடைக்கவில்லை போலும்! ஆட்கொண்டருளும் சிவனுக்கு அடியார்கள் பஞ்சம் போலும்! கலிக்காமரின் சினம் எண்ணெய் வழிப்பட்ட எரிபோல வளர்கிறது. ஆட்கொண்டருளும் சிவனுக்கு, அவன்றன் புகழுக்கு இழுக்குத்தேடிய செய்தி கிடைத்த போதே சாதல்வேண்டும் அல்லது பழிச்செயல் செய்தவரைக் கொல்ல வேண்டும். இல்லாமற்போனால் தன்னைத்தானே மாய்த்துக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் கலிக்காமர் எண்ணுகிறார்.

இச்சூழ்நிலையில் சூலைநோய் வருகிறது. சூலை நோயால் வருந்துகின்றார். ஆட்கொண்டருளும் சிவன், நம்பியாரூரர் வந்து சூலைநோய் தீர்ப்பர் என்று உணர்த்துகின்றார். நம்யாரூரரும் வருகின்றார். நம்பியாரூரர் தன்னைக் காணவரும் செய்தி, கலிக்காமருக்கு உவப்பாக

இல்லை. மேலும் சினம் வளர்கிறது. நம்பியாரூரரைக் காணவும் அவர்வழி சூலை நோய் தீர்தலையும் கலிக்காமர் விரும்பவில்லை. சூலையால் வருந்தும் குடலைக் கிழித்துக் கொண்டார். உயிர்ப்போராட்டம் வந்துவிட்டது. கலிக் காமரின் மனைவி கலிக்காமரின் உடலை ஓரிடத்தில் பத்திரப்படுத்திவிட்டு நம்பியாரூரரை முறையாக வரவேற்கும் முயற்சியில் ஈடுபடுகின்றார். துக்கமும் துயரமும் நிறைந்த நிகழ்ச்சிகளைக் கூட மறந்துவிட்டு அல்லது தாங்கிக் கொண்டு, அடியார்களை வரவேற்று உபசரிக்கும் பண்பு மேவி வளர்ந்திருந்தமையைப் பெரியபுராணத்தில் பல வரலாறுகளில் காணமுடிகிறது.

நம்பியாரூரர் கலிக்காமர் இல்லம்வந்து சேர்ந்தார். கலிக்காமரை வருத்தும் சூலையிலிருந்து மீட்டு அவருடன் தங்கியிருக்க விரும்புவதை நம்பியாரூரர் புலப்படுத்துகின்றார். கலிக்காமரின் மனைவி "தீதிலர்; பள்ளிகொண்டுள்ளார்" என்கிறார். தீதிலையானாலும் நம்பியாரூரர் மனம் தெளிவு கொள்ளவில்லை. கலிப்பகையாரைக் காண விரும்புகிறார். கலிக்காமர் கிடத்தப்பட்ட இடத்திற்கு நம்பியாரூரர் அழைத்துச் செல்லப்பெறுகிறார். அங்கு கலிக்காமர் இரத்தம் சொட்டச்சொட்ட உயிர் பிரிந்த பிணமாய் கிடந்ததைக் கண்டார். கலிக்காமர் நிலையைக் கண்ட நம்பியாரூரர் தம்மை மாய்த்துக்கொள்ள முற்படுகின்றார். கலிக்காமர் உடலிற் கிடந்த வாளினை எடுத்துத் தமது உடம்பில் பாய்ச்சிக் கொள்ள நம்பியாரூரர் முயன்றபோது ஆளுடைய சிவத்தின் அருளால் கலிக்காமர் எழுந்து நம்பியாரூரர் கையிலிருந்து வாளைப்பிடுங்கி, நம்பியாரூரரின் தற்கொலை முயற்சியைத் தடுக்கின்றார்; வன்தொண்டர் வீழ்ந்து வணங்குகின்றார். கலிக்காமரும் வணங்குகின்றார். நம்பியாரூரரும் கலிக்காமரும் இடைவிடா நண்பராயினர்.

# 13

# நாயன்மார்களின் அடிச்சுவட்டில்

## வேண்டுகோள்

*அருள் நெறித் தந்தை தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் சேக்கிழார் பெருமானின் திருத்தொண்டர் மாக்கதையில் சிந்தை ஊன்றித் திளைத்தவர்கள். அவர்கள் "திருத்தொண்டர் மாக்கதையில் பேசப்பெறும் திருத் தொண்டர்கள் ஆற்றிய தொண்டுநெறி நாட்டில் பரவினால் தான் நம் சமயம் மக்களிடத்தில் ஒளிபெற்றுத் திகழமுடியும்" என்று பல்லாண்டுகளாகப் பேசியும் எழுதியும் வந்திருக் கிறார்கள். இதனை அவர்களே நடைமுறைப் படுத்தியும் வருகின்றார்கள். அவர்கள், கண்ணப்ப நாயனார் திருநாளில் கண் பார்வை குறைந்தவர்களுக்குக் கண்ணாடிகள் வாங்கி வழங்கியும், திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாளில் உடல் நலக்குறைவு காரணமாக இளைத்த மாணவிகளுக்கு உயிரூட்டச் சத்துள்ள மருந்துகள் வாங்கி வழங்கியும்,*

குறிப்பு:– பரிதாபி ஆண்டு நாயன்மார்கள் திருநாள்கள் மட்டும் தேதியுடன் இதில் தரப்பெற்றுள்ளன. அடுத்த ஆண்டுகளுக்குப் பிற்சேர்க்கையில் கண்டுள்ள நட்சத் திரங்களின்படி செய்யவேண்டும். நாயன்மார் திருப்பெயர்களுக்குக் கீழே அடைப்பில் தந்துள்ள எண்கள் நாயன்மார் திருப்பெயர்வரிசையில் அந்தந்த வரிசை எண்ணுக் குரியவரின் செயற்பணியோடு தொடர்புடையன.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருநாளில் திருக்கோயில்களில் உழவாரப்பணி செய்வித்துத் திருக்கோயில்களைப் பேணியும் தூய்மை செய்வித்தும், உருத்திர பசுபதி நாயனார் திருநாளில் அடியார்களுக்கு உடைகள் வழங்கியும் இன்னும் பல நாயன்மார்களின் தொண்டு நெறிகளைச் செயல்முறைப் படுத்தியும் வந்திருப்பது தமிழ்நாடு அறிந்த செய்தியே.

தொண்டு நெறியின் விளைநிலம் சிந்தையே. தூயசிந்தை யுடையவர் என்பதை ஒருவரின் புறச்செயல்களை நோக்கியே அறியமுடிகிறது. தொண்டு, புறத்தில் வெளிப்பட்டு நிற்பது. ஆதலால், தொண்டு நெறியின் பெருமை சொல்லாமலே பெறப்படும். இத்தகு தொண்டு நெறியில் ஈடுபடுவதே உண்மையான சமய வாழ்க்கையாகும்.

இந்த வகையில் தவத்திரு அடிகளார் அவர்கள் சிந்தித்து இந்த (விரோதிகிருது) ஆண்டு மகா சிவராத்திரி நாளில் அறுபான்மும்மை நாயன்மார்களின் தொண்டுகள் அனைத்தையும் நடைமுறைப் படுத்தத் தக்கவாறு இந்த அரிய திட்டத்தை உருவாக்கினார்கள். இத்திட்டம் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம்-ஐந்து கோவில் தேவாலயங் களில் நடைமுறைப் படுத்த உருவாக்கியதாகும். எனினும், தமிழகம் முழுவதிலுமுள்ள திருக்கோயில்கள்–திருமடங்கள் இதனை ஏற்றுச் செயல்படுத்துவது நாடு தழுவிய நலத்தினை விளைவிக்கும். இந்த நோக்கத்துடனேயே இது, புத்தக வடிவமாக வெளியிடப் பெறுகிறது. திருக்கோயில்களின் அறங்காவலர்கள், இறைபணியாளர்கள், பெரியோர்கள் சமயத் தொண்டர்கள், அன்பர்கள் அனைவரும் இந்தத் திட்டத்தில் கண்டுள்ள பணிகளை மேற்கொண்டு நம் சமயத்திற்கும் சமயவழி மேற்கொண்ட மக்களுக்கும் தொண்டுசெய்து, இறைவன் திருவருட் பேற்றினை எய்தி இன்புற வேண்டுகின்றோம்.

**குன்றக்குடி,** **பதிப்பாசிரியர்.**
**11–3–1972**

# குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம்—ஐந்து கோயில் தேவாலயம்

## அறுபான்மும்மை நாயன்மார் திருநாட்களில் அவர்கள் செய்த தொண்டு நெறியை நடைமுறைப் படுத்தும் செயல் திட்டம்.

| வரிசை எண். | நாயன்மார் திருப்பெயர் | திருநாள் | அலுவல்கள் |
|---|---|---|---|
| 1. | அதிபத்த நாயனார் | ஆவணி—ஆயிலியம் | (1) திருக்குளங்களில் மீன் வளர்த்து, அந்த வருவாயைத் திருக்கோயில்களுக்குப் பயன்படுத்தும் திட்டம். |
| | | | (2) திருக்கோயில் அமைந்துள்ள வட்டத்தில் வாழும் மீனவர்கள் நலன் நாடுதல். |
| 2. | அப்பூதி அடிகள் | தை—சதயம் | (1) தண்ணீர் பந்தல் வைத்தல் |
| | | | (2) குடிதண்ணீர் வசதி செய்தல், (திருத்தலத் திருவருட்பயணம் செய்பவர்களுக்கும், திருக்கோயில் நின்று விளங்கும் ஊருக்கும், திருக்கோயில் நிலங்கள் இருக்கும் ஊருக்கும்). |
| | | | (3) குடி தண்ணீர் ஊருணிகள் தூய்மை செய்தல். |
| | | | (4) நடைமுறையில் இருக்கும் குடி தண்ணீர் வழங்கும் நிர்வாகம் பற்றிய ஆய்வு செய்தல்—சீரமைத்தல். |

| | | | |
|---|---|---|---|
| 3. | அமர்நீதி நாயனார் (50) | ஆனி–பூரம் | (1) திருக்கோயில்–திருமடங்களில் தொண்டு செய்யும் அடியார்களுக்கு உடை வழங்குதல் |
| 4. | அரிவாட்டாய நாயனார். | தை–திருவாதிரை. | (1) திருமடைப்பள்ளி தூய்மை செய்தல், பழுது பார்த்தல்.<br>(2) திருமடைப்பள்ளிப் பாண்டங்கள் (பாத்திரங்கள்).<br>(அ) சரிபார்த்தல்<br>(ஆ) பழுது பார்த்தல்<br>(இ) தேவைக்கு வாங்குதல்<br>(3) திருவமுதுத் திட்டம் சரிபார்த்தல்–சீர் செய்தல்.<br>(4) திருமடைப்பள்ளியில் பணிசெய்பவர்களுடன் கலந்துரையாடுதல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.<br>(5) இறைவனுக்குச் சிறப்புத் திருவமுது செய்வித்து வழிாடு செய்தல்–(மாவடு சேர்த்தல்). |
| 5. | ஆனாய நாயனார் | கார்த்திகை–அத்தம். | (1) இசைக் கருவிகள் (மேளம், சங்கு, மணி, நகரா, புல்லாங்குழல் முதலியன பற்றி) ஆய்தல் – சீரமைத்தல்.<br>(2) தேவைக்குப் புதியன வாங்குதல்.<br>(3) திருக்கோயில்–திருமடத்தில் இசைத் துறையில் பணிசெய்பவர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (4) இசைப் பள்ளிகளின் நடைமுறை பற்றி ஆராய்தல். |
| 6. | இசை ஞானியார் (55) | சித்திரை— சித்திரை. | (1) சமயச்சார்புடைய மகளிர் மன்றம் அமைத்தல், சங்க வளர்ச்சிக்குரியன எண்ணிச்செய்தல். |
| | | | (2) மகளிர் நலம் பேணுதற்குரியன எண்ணிச் செய்தல். |
| | | | (3) கருவுற்ற பெண்களுக்குச் சத்துணவு, நற்செய்திகள் கிடைக்கச் செய்தல். |
| | | | (4) மகப்பேறு மருத்துவ மனைகளுக்குச் சென்று திருநீறு முதலியன வழங்குதல். |
| | | | (5) குன்றக்குடி ஆதீன தேவாலய மருத்துவ மனையில் மகப்பேறு மருத்துவத் துறைக்கு வசதிகள் செய்தல். |
| | | | (6) குன்றக்குடி இசைஞானியார் மகளிர் மன்றம் ஆண்டுவிழா நடத்துதல். |
| | | | (7) குன்றக்குடி மகளிர் மன்ற உறுப்பினருடன் கலந்துரையாடுதல், விருந்தளித்தல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 7. | இடங்கழி நாயனார் | ஐப்பசி— கார்த்திகை | (1) திருக்கோயில் திருமடத்தில் தொண்டு செய்யும் அடியார்களுக்கு அமுதளித்தல். |
| | | | (2) அடியார்களுக்கு வழங்கப்பெறும் படித்தரங்கள் பற்றி ஆய்வுசெய்தல். |
| | | | (3) அடியார்களின் நலம் நாடுதல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (4) அடியார்களுடன் கலந்துரையாடுதல், விருந்தளித்தல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 8. | இயற்பகை நாயனார் | மார்கழி–உத்திரம் | (1) திருக்கோயில்களில், திருமடங்களில் பணிசெய்பவர்களில் யாராயினும் ஒருவருக்கு அல்லது பலருக்குத் திருமணம் செய்வித்தல். |
| | | | (2) திருக்கோயில்களில் பள்ளியறை, பல்லக்கு முதலியன தூய்மை செய்தல். |
| 9. | இளையான்குடிமாற நாயனார். (33) | ஆவணி–மகம் | (1) சிவபூசகர்களுக்கு–அடியார்களுக்குத் திருவமுது செய்வித்தல். |
| | | | (2) நாற்றங்கால்கள் அமைத்தல்–சீரமைத்தல்–செழிப்புண்டாக்குதல். |
| 10. | உருத்திர பசுபதி நாயனார் | புரட்டாசி–அசுபதி | (1) திருக்கோயில் திருமடத்தில் வடமொழிமறை ஓதவும் திருநாமத்தைத் தொடராக எண்ணுதல் முதலியன முறையாக நிகழவும் ஏற்பாடுகள் செய்தல். |
| | | | (2) உருத்திர செபத்திற்கு ஏற்பாடு செய்தல். |
| | | | (3) வடமொழி மறை ஓதும் அந்தணர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 11. | எறிபத்த நாயனார் (21) (36) (57) | மாசி–அத்தம் | (1) நந்தவனப் பாதுகாப்பு.<br>(2) பூக்குடலைகள் சீர்செய்தல்.<br>(3) திருமாலை கட்டும் இடம் மேடைகள் சீர்செய்தல். |

| | | | |
|---|---|---|---|
| 12. | ஏயர்கோன் கலிக்காம நாயனார். | ஆனி— இரேவதி | (1) சிவனடியாராக இருப்பவர்களுடன் எவரோடாயினும் தனிப்பட்ட முறையிலோ—ஆட்சி முறையிலோ வருத்தம் ஏற்பட்டு இருக்குமானால் அந்த வருத்தத்தை மாற்றி உடன்பாடும், உறவும் காணுதல். |
| 13. | ஏனாதி நாயனார் | புரட்டாசி— உத்திராடம் | (1) தூய வெண்மையான திருநீறு தயாரிப்புக்குத் திட்டமிடல், உற்பத்தி செய்தல்.<br>(2) திருநீறு தூய்மை செய்தல், வேண்டுவோர்க்கு வழங்குதல்.<br>(3) திருநீற்றுக் கலன்கள்—குங்குமக் கலன்கள் செய்ய ஏற்பாடு செய்தலும், தேவைப்படும் இடங்களில் அமைத்தலும்.<br>(4) திருநீற்றுத் தேவைக்குத் திட்டமிடுதல்.<br>(5) அன்பர்களுக்கு வழங்கத் திருநீற்றுப் பைகள்தைக்க ஏற்பாடு செய்தல். |
| 14. | ஐயடிகள் காடவர் கோன். | ஐப்பசி— மூலம் | (1) அன்பர்களுடன் திருத்தலப் பயணம் செய்தல். |
| 15. | கணநாதர் | பங்குனி— திருவாதிரை | (அ) 1. சமயப் பாடவகுப்பு, திருமுறைப்பள்ளி நடைமுறைகளை ஆராய்தலும், சிறப்புற நடத்தத் திட்டமிடுதலும்.<br>2. சமயப்பள்ளி வகுப்புகளுக்கும், திருமுறைப்பள்ளி வகுப்புகளுக்கும் ஆண்டு விழா நடத்துதல். |

3. திருமுறை பயிலும் மாணவ மாணவியர்களுக்குப் பரிசில்கள் வழங்கிக் கற்கும் ஆர்வத்தைத் தூண்டுதல்.

4. புதிய வகுப்புகள் திட்டமிட்டுத் தொடங்குதல்.

5. திருமுறைச் சமயப்பாடம் நடத்தும் ஆசிரியர்கள் மாணவர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், ஆசிரியர்களுக்குப் பரிசில்கள் வழங்குதல்.

(ஆ) 1. திருக்கோயில் திருமடத்தில் 'சரியைத்' தொண்டில் (திருவலகு திருமெழுக்குப் பணிப்பெண்) ஈடுபட்டிருப்பவர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், அவர்களுடைய நலனுக் குரியன நாடுதல்.

2. 'சரியைத்' தொண்டுக்கு உரிய கருவிகள் வாங்குதலும் சீரமைத்தலும், (திருவலகு, ஒட்டடைக் கம்பு, ஏணி, குப்பை தொட்டிகள், குடம், வாளி, சவுட்டுப்பு.........).

| | | | |
|---|---|---|---|
| 16. | கணம்புல்ல நாயனார். (19) (47) | கார்த்திகை– கார்த்திகை | (1) திருக்கோயில்–திருமடம் திருவிளக்கு எண்ணெய்த் தேவைக்குத் திட்டமிடுதல். |
| | | | (2) தேவைக்குரிய எண்ணெயைப்பெற இலுப்பைத் தோப்புகள் வளர்க்கத் திட்டமிடுதல். |
| | | | (3) இலுப்பைத் தோப்புகளை வளர்த்தல்–பராமரித்தல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (4) இலுப்பை வளர்ப்புப் பணியாளர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 17. | கண்ணப்ப நாயனார். | தை–மிருகசீரிடம். | (1) திருக்கோயில்–திருமடத்தில் பணியில் ஈடுபட்டிருப்பவர்களுக்குக் கண் ஆய்வு செய்தல். |
| | | | (2) தேவையானால் கண் மருத்துவம் செய்தல்–தேவைக்குக் கண்ணாடிகள் வாங்கித் தருதல். |
| | | | (3) பக்தி இயக்கத்தைப் பற்றி ஆய்வு செய்து நடவடிக்கை எடுத்தல். |
| | | | (4) வலையன் சமூக (கண்ணப்பர்குல) மக்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 18. | கலிக்கம்ப நாயனார் | தை–இரேவதி. | (1) திருக்கோயில்–திருமடத்தில் வேலைசெய்யும் கடைநிலை ஊழியர்களின் மதிப்புயரக் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| | | | (2) அவர்களுடைய சமய உணர்வு வளர்ச்சிக்கு வழி வகுத்தல். |

| | | | |
|---|---|---|---|
| 19. | கலிய நாயனார் (16) (47) | ஆடி–கேட்டை. | (1) திருவிளக்குக்குரிய எண்ணெய் வித்துக்கள் உற்பத்திக்குத் திட்டமிடுதலும், திட்டத்தின் இலக்கை அடைவதற்குரிய பணிகளை மேற்கொள்ளுதலும்.<br>(2) இலுப்பைத் தோப்புகள் வளர்த்தல்.<br>(3) ஆண்டுத் தேவைக்குரிய எண்ணெய் வித்துக்களைச் சேர்த்தல். |
| 20. | கழறிற்றறிவார் | ஆடி–சுவாதி | (1) திருக்கோயில்–திருமடத்தில் கால் நடைகள் வளர்க்கத் திட்டமிடுதல்.<br>(2) கால்நடைகள் பாதுகாப்பு.<br>(3) மயில், சேவல், கிளி ஆகியன வளர்த்தல். (திருத்தலங்களின் இயல்புக் கேற்றவகையில்).<br>(4) அவற்றின் வளர்ப்புத் தோடர்பான பணிகளில் ஈடுபட்டிருப்போர் நலம் பேணுதல், கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல்.<br>(5) திருக்கோயிற் பூசைகள் குறித்த காலத்தில் நடைபெறும் வகைபற்றி ஆராய்தல், நடைமுறைப் படுத்துதல்.<br>(6) நந்தனவனப் பாதுகாப்பும்–பராமரிப்பும்.<br>(7) நண்பருக்கு உதவி செய்தல். |

| | | | |
|---|---|---|---|
| 21. | கழற்சிங்க நாயனார் (11) (36) (57) | வைகாசி— பரணி. | (1) சிவ பூசைக்குப் பயன்படும் மலர்களை உற்பத்தி செய்யும் நந்தனவனங்களில் பிறபயிர் செய்யாதிருத்தல்.<br>(2) நந்தனவனத்தைச் செழுமைப் படுத்துதல்.<br>(3) இறைவனுக்கு நறுமண மலர்களால் மலர்முழுக்குச் செய்தல். |
| 22. | காரி நாயனார் | மாசி— பூராடம். | (1) திருக்கோயில் திருத்தல வரலாறுகள் அச்சிடுதல்.<br>(2) வரலாறு எழுதுவித்தல்.<br>(3) வழிபாட்டுப் பாடல்கள் பாடுவித்து அச்சிடுதல்.<br>(4) வழிபாட்டு நூல்கள், தல வரலாற்று நூல்கள் ஆகியவைகளின் விற்பனை வரவு செலவு பற்றி ஆராய்தல். |
| 23. | காரைக்காலம்மையார் | பங்குனி— சுவாதி. | (1) திருக்கோயில்—திருமடத்தில் மாந்தோப்பு வளர்க்கத் திட்டமிடல்.<br>(2) மாந்தோப்பு வளர்த்தலும், கண்காணித்தலும்.<br>(3) மாந்தோப்பு வளர்ப்பு—பாதுகாப்புப் பணியாளர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலம் பேணுதல்.<br>(4) இறைவனுக்கு மாம்பழம் படைத்தல். |

| | | | |
|---|---|---|---|
| 24. | குங்குலியக்கலயர் | அவணி—மூலம். | (1) திருக்கோயில்—திருமடங்களில் தூபமிடும் கலசங்கள் சீரமைத்தலும், தேவைக்கு வாங்குதலும்.<br>(2) தூபமிடப் பயன்படும் பொருள்களின் தரம் பற்றி ஆய்வு செய்தல்.<br>(3) தூபமிடும் பணியாளர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நடுதல். |
| 25. | குலச்சிறை நாயனார் | ஆவணி—அனுடம். | (1) தக்க அன்பர்களுடன் சமய வளர்ச்சிக் கருத்துக்கள் பற்றி ஆராய்ந்து திட்டமிடல்.<br>(2) தக்க சமயத் தொண்டர்களுடன் நட்புக் கொள்ளுதல்.<br>(3) சமயத் தொண்டர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.<br>(4) சமயப் பாதுகாப்பு நடவடிக்கை எடுத்தல்.<br>(5) நமது மக்கள் மதமாற்றங்களுக்குள்ளாகாமல் பாதுகாத்தல்.<br>(6) பிற மதத்துக்குப் போனவர்களை நமது மதத்திற்குத் திரும்ப அழைத்தல்.<br>(7) அருள்நெறித் திருக்கூட்ட அமைப்பை வலிமைப்படுத்துதல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (8) கள்ளிமந்தயம் அருள் நெறி உயர்நிலைப் பள்ளி நடைமுறை பற்றி ஆய்வு செய்தல். |
| 26. | கூற்றுவ நாயனார் | ஆடி–திரு வாதிரை. | (1) அம்பலக்கூத்தன் சந்நிதிகள் தூய்மை செய்தல். |
| | | | (2) அம்பலக்கூத்தன் திருமேனிக்குப் பழக்காப்பிடுதல். |
| | | | (3) திருவமுதுக்கென்று நிலங்களை ஒதுக்குதல். |
| 27. | கோச்செங்கட் சோழர். | மாசி–சதயம் | (1) திருக்கோயில்கள் பழுதுறாமல் பாதுகாக்கும் திட்டம் தீட்டுதல்–பாதுகாத்தல். |
| | | | (2) திருப்பணிகள் தொடங்குதல். திருக்கோயிலைப் பேணும் பணியாட்கள் (கொத்தனார், உழவாரம்) நலம் பேணுதல், கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல். |
| | | | (3) திருக்கோயில் காவல், திருமேனி காவல், மெய்காவல் முறை–வகைபற்றி ஆராய்தல். |
| | | | (4) மேற்படி காவல் செய்யும் ஊழியர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 28. | கோட்புலி நாயனார் | ஆடி–கேட்டை. | (1) திருக்கோயில் திருமடத்தின் தேவைக்கு நெல் சேர்த்தல். |
| | | | (2) களஞ்சியங்கள் பழுதுபார்த்தல், தூய்மை செய்தல். |
| | | | (3) திருவமுதுக்கென்று நிலங்களை ஒதுக்குதல். |

| | | | |
|---|---|---|---|
| 29. | சடைய நாயனார் | மார்கழி—திருவாதிரை | (1) திருக்கோயில் சிவாசாரியர்களுக்குத் திருமணத்திற்கு உதவி செய்தல்—திருமணம் செய்வித்தல். |
| 30. | சண்டேசுவர நாயனார். (46) | தை—உத்திரம். | (1) இறைவனுக்குப் பால் முழுக்குத் திட்டம் பற்றி ஆராய்தல்.<br>(2) பசுமடம் நடைமுறை பற்றி ஆராய்தல்.<br>(3) பசுமடம் அமைத்தல்—பசு மாடுகள் வாங்குதல்.<br>(4) பசு மடத்துப் பணியாள்களுடன் கலந்துரையாடல்—விருந்தளித்தல், பாராட்டுதல் அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.<br>(5) இறைவனுக்குச் சிறப்பான முறையில் பால் முழுக்காட்டுதல்.<br>(6) சண்டேசுவர நாயனார் சந்நிதி தூய்மை செய்தல், சண்டேசுவர நாயனாருக்குச் சிறப்பு வழிபாடு செய்தல். |
| 31. | சத்தி நாயனார் | ஐப்பசி—பூசம் | (1) பெரியபுராணம் வகுப்பு நடத்துதல்.<br>(2) பெரியபுராண விழா நடத்துதல்.<br>(3) பெரியபுராணத் தொடர்பான புத்தகங்கள் வெளியிடுதல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (4) அறுபான்மும்மை நாயன்மார்களுக்கு எண்ணெய்க் காப்பும், திருமுழுக்கும் செய்வித்துச் சிறப்பு வழிபாடு செய்தல்.<br>(5) பெரியபுராணத்தைப் பரப்பும் தொண்டர்களைப் பாராட்டிச் சிறப்புச் செய்தல்.<br>(6) பெரியபுராண மறுப்புரைக்கு மறுப்புரை எழுதி வெளியிடுதல்.<br>(7) அனுபான்மும்மை நாயன்மார் தொண்டை நடைமுறைப் படுத்திய செயல்முறைபற்றி ஆய்வு செய்தல். |
| 32. | சாக்கிய நாயனார் | மார்கழி— பூராடம். | (1) திருக்கோயில் வழிபாட்டில் நம்பிக்கை யில்லாதவர்களுக்கு நம்பிக்கை யூட்டும் வகையில் நேரடியாகத் தொடர்பு கொண்டு கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளுதல்.<br>(2) அந்த வகையில் பேசுதல்—எழுதுதல்—அரங்குகள் நடத்துதல்.<br>(3) அந்தவகையான நூல்கள் அச்சிடுதல். |
| 33. | சிறப்புலி நாயனார் (9) | கார்த்திகை— பூராடம். | (1) சிவபூசகர்களுக்கும், அடியார்களுக்கும் அமுதளித்தல்—பொருள் அளித்தல். |
| 34. | சிறுத்தொண்ட நாயனார். | சித்திரை— பரணி | (1) திருமடங்களுக்குப் பிள்ளைகள் சேர்த்தல்.<br>(2) சமய இயக்கத்துக்குத் தொண்டர்களைச் சேர்த்தல். |

(3) திருக்கோயில்–திருமடத்தின் வழிவழித் தொண்டு செய்யும் பிள்ளைகளுடன் (வயது 5 முதல் 10 வரை) கலந்து பேசுதல், நிறுவன உணர்வை வளர்த்தல், விருந்தளித்தல், அவர்களின் நலனுக்குரியன நாடுதல்.

(4) களக்காடு சீராளன் சிறுவர்பள்ளி நடைமுறைபற்றி ஆய்வு செய்தல்.

(5) சிறுவர் பள்ளி நடைமுறை பற்றி ஆய்வு செய்தல்.

35. சுந்தரமூர்த்தி நாயனார் ஆடி–சுவாதி

(1) சிவாசாரியர்களுடைய தகுதி–நிலை முதலியன பற்றி ஆராய்தல்.

(2) சிவாசாரியர்களுடன் கலந்து உரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.

(3) தமிழ் வழிபாட்டு இயக்கம் பற்றி ஆய்வு செய்து மேலும் வளர்க்கத் திட்டமிடுதல்.

(4) திருமுறை அர்ச்சனை, திருமுறைச் சாத்து முதலியவற்றை வளர்க்கப் பணி மேற்கொள்ளல்.

(5) நண்பர்களுடன் கலந்துரையாடுதல். நட்புறவை வளர்த்துக் கொண்டு செழுமைப் படுத்திக்கொள்ளுதல்.

| | | | |
|---|---|---|---|
| 36. | செருத்துணை நாயனார். (11) (21) (57) | ஆவணி— பூசம் | (1) சிவபூசைக்குரிய மலர்கள் தொடுக்கும் இடத்தில் (ஈ, எறும்பு, கொசு மொய்க்காமல்) மலர்கள் பாதுகாப்புக்குரிய ஏற்பாடு செய்தல். |
| 37. | சோமாசிமாற நாயனார். | வைகாசி— ஆயிலியம். | (1) நாள்தோறும் வேத வேள்வி (நித்யாக்கினி) செய்யும் திருக்கோயில் வேத அந்தணர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல் அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.<br>(2) அன்றையதினம் சிறந்த முறையில் வேத வேள்வி செய்யச் செய்தல்.<br>(3) திருக்கோயில்களில் உருத்திர வேள்வி. உருத்திர செபம்—சிறப்புத் திருமுழுக்கு ஏற்பாடு செய்தல். |
| 38. | தண்டியடிகள் | பங்குனி— சதயம். | (1) திருக்குளம் தூய்மை செய்தல்—திருக்கோயில் கிணறுகள் தூய்மை செய்தல்—திருக்குளம் பழுது பார்த்தல்—திருக்குளத்துக்குத் தண்ணீர் வரத்துக் கால் வெட்டுதல். |
| 39. | திருக்குறிப்புத் தொண்டர். | சித்திரை— சுவாதி | (1) (அ) பரிவட்டங்கள் இருப்பு எடுத்துச் சரிபார்த்தல். (ஆ) தூய்மை செய்தல். (இ) தூய்மை செய்யும் இடம், முறை முதலியன பற்றி ஆய்தல்.<br>(2) பரிவட்டம் தூய்மை செய்யும் தொண்டு செய்வோருடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன செய்தல். |

| | | | |
|---|---|---|---|
| 40. | திருஞானசம்பந்தர் | வைகாசி–மூலம். | (1) ஆதீன–தேவாலய மருத்துவமனை நடைமுறை பற்றி ஆய்வு செய்தல்.<br>(2) உடல் நலக்குறைவு காரணமாக இளைத்த பெண்களுக்கு–மாணவிகளுக்குச் சத்துணவு கொடுக்க ஏற்பாடு செய்தல்.<br>(3) தமிழ் வளர்ச்சிக்குரிய பணிகளில் ஈடுபடுதல்.<br>(4) திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம் வளர்ச்சி–பணி பற்றி ஆய்வு செய்தல், திட்டமிடுதல். |
| 41. | திருநாவுக்கரசு சுவாமிகள் | சித்திரை–சதயம். | (1) (அ) அப்பர் சுவாமிகள் திருமேனிக்குச் சிறப்பு வழிபாடு செய்தல்.<br>(ஆ) உழவாரத் தொண்டு செய்தல்.<br>(இ) உழவாரப் பணி செய்யும் பணியாள்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.<br>(2) (அ) திருமுறைக் கோயில்கள் அமைத்தல்.<br>(ஆ) திருமுறை ஆசிரியர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.<br>(3) (அ) திருவலகு, திருமெழுக்கு இடும் முறை கவனித்தல்–சீரமைத்தல்.<br>(ஆ) மேற்படி பணிசெய்யும் பணியாட்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (4) (அ) அப்பர் வரலாறு—திருமுறை பற்றிய கருத்தரங்குகள் நிகழ்த்துதல்.<br>(ஆ) நமது சமயத்திலிருந்து மக்கள் மதமாற்றக் கொடுமைகளுக்கு ஆளாகாமல் பாதுகாக்கத் திட்டமிடுதல்—செய்தல். |
| | | | (5) சாதி வேற்றுமைகள் அகற்றும் பணியில் ஈடுபடுதல் |
| | | | (6) நிறுவனத்தின் உடைமை பொதுமக்களின் நலனுக்குப் பயன்படும் வகையில் துப்புரவு வாழ்க்கைக்குத் திட்டமிடுதல், மேற்கொள்ளுதல். |
| | | | (7) குன்றக்குடி கிராம வீதிகளின் தூய்மைக்குரிய பணிகளை மேற்கொள்ளல். |
| 42. | திருநாளைப்போவார் நாயனார் | புரட்டாசி— உரோகிணி | (1) தீண்டாமை விலக்கல் பணிகள் செய்தல். |
| | | | (2) ஆதீன—தேவாலய நிலங்களை உழவடை செய்பவர்கள், ஊழியம் செய்பவர்கள் ஆகிய தாழ்த்தப்பட்ட மக்களுடன் திருக்கோயில் சிறப்பு வழிபாடு செய்தல். |
| | | | (3) அவர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 43. | திருநீலகண்ட நாயனார் | தை— விசாகம். | (1) திருக்கோயில்களுக்குத் திருவமுது படையலுக்கு எடுத்துச் செல்லும் கலன்கள் தூய்மை செய்தல்—தேவைக்கு வாங்குதல். |

(2) திருக்கோயில் திருமடங்களின் சார்பாளர்களின் மவைாழ்க்கை மாறுபாடின்றி நிகழும் வகையை ஆராய்தல்.

(3) கருத்து மாறுபாடு இருப்பின் உடன்பாடு செய்வித்து இன்ப உறவினை வளர்த்தல்.

(4) குடும்பத்துடன் அழைத்து விருந்து வைத்தல்—மகிழ்வித்தல்.

(5) தனிப்பட்ட வாழ்க்கையிலும், சமூக வாழ்க்கையிலும், சீலம் நிறைந்த வாழ்க்கைக்கு முயலுதல்.

44. திருநீலகண்ட யாழ்ப்பாணர் வைகாசி—மூலம்.

(1) திருமுறைப் பண்ணுக்குத் துணை இசைக் கருவிகள் இயக்குபவர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக் குரியன நாடுதல்.

(2) இயலுமாயின் அந்நாளில் துணை இசைக் கருவிகளுடன் திருமுறைப் பண்ணிசையரங்கு அமைத்தல்.

(3) திருமுறைப் பண்ணிசை யரங்கிற்குச் சிறந்த முறையில் துணை இசைக் கருவிகள் இயக்கும் ஒருவரைப் பராட்டிப் பரிசு வழங்குதல்.

| | | | |
|---|---|---|---|
| 45. | திருநீலநக்க நாயனார் | வைகாசி– மூலம் | (1) தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மதிப்புக் கிடைக்கும் வகையில் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடிச் செய்தல். |
| 46. | திருமூல நாயனார் (30) | ஐப்பசி– அசுபதி. | (1) கால் நடைகள் பாதுகாத்தல். |
| | | | (2) பாதுகாக்கும் திட்டமிடுதல். |
| | | | (3) திருமந்திரக் கருத்தரங்குகள் நடத்துதல். |
| 47. | நமிநந்தியடிகள் (16) (19) | வைகாசி– பூசம் | (1) திருவிளக்குகள் சீரமைப்பு–தூய்மை செய்தல், விரிவாக்கல். |
| | | | (2) திருவிளக்கு எண்ணெய்த் திட்டம் ஆராய்தல். |
| | | | (3) திருவிளக்கிடும் பணியாட்களுடன் கலந்து பேசுதல், விருந்தளித்தல், பாராட்டுதல் அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| | | | (4) திருவிளக்குக்குப் பயன்படும் இலுப்பை மரங்கள் வளர்த்தல். |
| | | | (5) திருக்கோயில்களில் நூறாயிரம் திருவிளக்குகள் (இலட்சதீபம்) ஏற்றுவித்தல். |
| | | | (6) திருக்கோயில்களில் தீவட்டிகள் எடுக்கும் முறை–வகை பற்றி ஆராய்தல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (7) தீவட்டி எடுக்கும் ஊழியர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| | | | (8) திருக்கோயில்களில் கைவிளக்கு எடுக்கும் முறை—வகைபற்றி ஆராய்தல். |
| | | | (9) திருக்கோயில்களில் கைவிளக்கு எடுக்கும் ஊழியர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 48. | நரசிங்கமுனையரைய நாயனார் | புரட்டாசி—சதயம். | (1) திருக்கோயில்களில் பூசை செய்யும் சிவாசாரியர்களின் குழந்தைகள் வளர்ப்பு, கல்வி, சிவாகமப் பயிற்சி, திருமுறைக் கல்வி ஆகியன குறித்து ஆராய்தல். |
| | | | (2) அந்தக் குழந்தைகளுடன் (5 வயது முதல் 15 வயதுவரை) கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டுதல். |
| 49. | நின்றசீர் நெடுமாற நாயனார் | ஐப்பசி—பரணி | (1) சிறித்தவ, இசுலாமிய சமயங்களிலிருந்து நமது சமயத்திற்கு மாறியோர் நலன் பேணுதல். |
| | | | (2) விரும்புவோரை மதம் மாற்றுதல். |
| | | | (3) நம்முடைய சமயத்தைச் சேர்ந்தவர்கள் பிறமத மாற்றத்துக்கு ஆளாகாமல் தடுக்கும் நடவடிக்கை எடுத்தல். |

| | | | |
|---|---|---|---|
| 50. | நேச நாயனார் (3) | பங்குனி– உரோகிணி. | (1) திருமடத்து அடியார்கள், திருக்கோயில்களில் பணி செய்யும் அடியார்கள் ஆகியோருக்கு உடை வழங்குதல்.<br>(2) கைத்தறியாளர்களுக் குரிய நலம் நாடுதல். |
| 51. | புகழ்ச்சோழ நாயனார் | ஆடி– கார்த்திகை. | (1) திருக்கோயில்–திருமடத்துச் சூழலில் இதர பொதுப்பணி மனைகளின் சூழலில் எல்லாரும் சிவசின்னம அணிதற்குரிய வாய்ப்புகளை உருவாக்குதல். |
| 52. | புகழ்த்துணை நாயனார் | ஆவணி– ஆயிலியம். | 1. (அ) சிவாசாரியர்களையும், ஓதுவார்களையும், மற்ற பணியாளர்களையும் தீக்கை முதலியன செய்துகொள்ளத் தூண்டுதல்.<br>(ஆ) தீக்கை செய்வித்தல்.<br>(2) சிவாகமப் பயிற்சி செய்வித்தல், குறுகியகாலப் பயிற்சி வகுப்புகள் நடத்துதல், சிறப்பாக சிவாசாரியர்களுக்குச் சமய, விசேட, ஆசிரிய தீக்கைகள் செய்வித்தல்.<br>(3) திருக்கோயிலில் மூல மூர்த்தியின் சிவ பூசைக்குரிய திட்டங்கள் ஆய்வு செய்தல்–இயன்றால், சிவ பூசகர்களை அழைத்துச் சிவ பூசை செய்வித்தல். |
| 53. | பூசலார் நாயனார் | ஐப்பசி– அனுடம். | (1) திருக்கோயில் திருமடத்துச் சூழலில் தியானம் செய்வதற்குரிய இடங்கள் அமைத்தல், சூழல் உருவாக்கல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (2) அகப்பூசை, தியான முறைகளை விளக்குதல்—செய்யத் தூண்டுதல். |
| 54. | பெருமிழலைக் குறும்ப நாயனர் | ஆடி—சித்திரை. | (1) யோகக்கலை வல்லாரைக் கொண்டு வல்லவர்களுக்கும், தக்கவர்களுக்கும் யோகக் கலை கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்தல்.<br>(2) பிராணாயாமப் பயிற்சி செய்யக் கற்றுக் கொடுத்தல்.<br>(3) யோகாசனங்கள் கற்றுக்கொடுத்தல்.<br>(4) இயலுமாயின் திருப்புத்தூர்த் திருத்தளி நாதருக்கும், பிரான்மலை மங்கை நாயகருக்கும், குன்றக்குடி காளத்தியப்பருக்கும் கயிலைப் பதிகம் ஓதிச் சிறப்பு வழிபாடு செய்தல். |
| 55. | மங்கையர்க்கரசியார் (6) | சித்திரை—உரோகிணி. | (1) திருக்கோயில் அமைந்திருக்கும் ஊர்களில் மங்கையர்க்கரசி மகளிர் மன்றங்கள் நிறுவி வழிபாட்டில் ஈடுபடுத்திப் பணிகள் குறித்து ஆராய்தல்.<br>(2) நம்மோடு தொடர்புடைய மங்கையர்க்கரசி மகளிர் மன்றங்களின் பணிகளை ஆய்வுசெய்து ஊக்கம் தருதல்.<br>(3) அருள்நெறித் திருக்கூட்டம் மாதர் பகுதி இயக்கத்தைப் பற்றி ஆய்வு செய்து வலிமைப் படுத்துதல். |

| | | | |
|---|---|---|---|
| | | | (4) சிறந்த சமயப் பற்றும் கல்வித் திறனும் உள்ள மாணவிக்கு மேற்படிப்புக்கு ஊக்கமளித்தல். |
| | | | (5) நம் பள்ளிகளில் பயிலும் பெண் குழந்தைகள் நலன்–மகளிர் பள்ளிகள் வளர்ச்சி ஆகியன குறித்து ஆராய்தல். |
| | | | (6) சமயப் பணியில் ஈடுபட்டுள்ள மகளிருக்குப் பாராட்டுச் செய்தல். |
| 56. | மானக்கஞ்சாற நாயனார் | மார்கழி– சுவாதி. | (1) திருக்கோயில் முடியெடுக்கும் இடங்கள் சீர் செய்தல். |
| | | | (2) முடியெடுக்கும் பணியாள்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 57. | முருக நாயனார் (11) (21) (36) | வைகாசி– மூலம். | (1) நந்தனவனம் அமைத்தல், வளர்த்தல், பேணுதல். |
| 58. | முனையடுவார் நாயனார் | பங்குனி– பூசம். | (1) திருக்கோயில் பாதுகாப்பிலும், அருள் நெறி இயக்கத்திலும் உறுதியாகப் பகை, துன்பம், இழப்புப் பாராமல் ஈடுபட்டவர்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல். |
| 59. | மூர்க்க நாயனார் | கார்த்திகை– மூலம். | (1) மூர்க்க நாயனார் பெயரால் பரிசுச்சீட்டு வாங்குதல், பரிசு விழுந்தால் அந்தத் தொகையைத் திருக்கோயில் பேணலுக்குக் கொடுத்தல். |

<table>
<tr><td></td><td></td><td></td><td>(2) வெளி–நிழல் விளையாட்டுப் போட்டிகள் நடத்தி, பந்தயங்கள் நடத்தி, வெற்றிபெற்ற கட்சியின் பந்தயத் தொகையைத் திருக்கோயில்களுக்குக் கொடுக்கச் செய்தல்.<br>(3) "மூர்க்க நாயனார் விளையாட்டுப் போட்டி" என்று விளையாட்டுக்குப் போட்டிக்குப் பெயர் வைத்தல்.</td></tr>
<tr><td>60.</td><td>மூர்த்தி நாயனார்</td><td>ஆடி–<br>கார்த்திகை.</td><td>(1) திருக்கோயில்களில் சந்தனத் திட்டம் சரிபார்த்தல்.<br>(2) சந்தனம் அறைவைக் கட்டை தரம் பார்த்தல்.<br>(3) மேடை–அறைவைக்கல் சீர் செய்தல்.<br>(4) இயலுமானால் சந்தனமுழுக்கு–சந்தனக் காப்புச் செய்து சிறப்பு வழிபாடு செய்தல்.<br>(5) சந்தன அறைப்புப் பணியாள்களுடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலனுக்குரியன நாடுதல்.</td></tr>
<tr><td>61.</td><td>மெய்ப்பொருள் நாயனார்</td><td>கார்த்திகை–<br>உத்திரம்</td><td>(1) நம்முடனும், நம்முடைய நிறுவனத்திடமும் கருத்து வேறுபாடு அல்லது மாறுபாடு கொண்டிருப்பவர்களுடன் உடன்பாடு கண்டு உறவு வளர்த்துக் கொள்ள முயற்சி செய்தல்.</td></tr>
</table>

<table>
<tr><td></td><td></td><td></td><td>(2) நம்முடைய திருக்கோயில்கள் மடங்களில் வழிவழி வழிபாடு செய்யும்–செய்துகொள்ளும் எந்த அன்பரோடாயினும் ஏற்பட்டுள்ள வழக்கில் விட்டுக்கொடுத்து உடன்பாடு காண முயற்சி செய்தல்.</td></tr>
<tr><td>62.</td><td>வாயிலார் நாயனார்</td><td>மார்கழி–<br>இரேவதி.</td><td>(1) சிவபூசை செய்வோர், திருக்கோயில்–திருமடங்களைச் சார்ந்து பணிசெய்வோர் ஆகியோருடன் கலந்துரையாடல், விருந்தளித்தல், பாராட்டல், அவர்கள் நலனுக் குரியன நாடுதல்.<br>(2) எல்லோரையும் சிவபூசை செய்யத் தூண்டுதல்.<br>(3) சமய–விசேட தீக்கை செய்ய ஏற்பாடு செய்தலும், பலரைச் சிவபூசை செய்யத் தூண்டுதலும்.<br>(4) பலர்கூடிச் சிவபூசை செய்ய ஏற்பாடு செய்தல்.<br>(5) சிவபூசை செய்வோருக்குப் பூசைக்குரிய கலன்கள் வழங்குதல்.</td></tr>
<tr><td>63.</td><td>விறன்மிண்ட நாயனார்.</td><td>சித்திரை–<br>திருவாதிரை</td><td>(1) தக்க சிவனடியார்களுக்குப் பாங்காக இருந்து பரிவு காட்டுதல்.</td></tr>
</table>

## அறுபான்மும்மை நாயன்மார் அடிச்சுவட்டில்

### திருத்தொண்டு நடை முறைச் செயல் குறிப்பு விதி முறைகள்.

1. *அறுபான் மும்மை நாயன்மார் திருத்தொண்டு நடைமுறைச் செயற் குறிப்பினை நடை முறைப் படுத்த ஆதீனம் அலுவலகத்தில்–வளர்ச்சித் துறையில்–ஒரு துறை அமைக்கப் பெற்று, எழுத்தர் ஒருவரும் நியமிக்கப் பெற்றுள்ளார்.*

2. *இந்தத் துறை "திருத் தொண்டு" என்று அழைக்கப் பெறும்.*

3. *ஒவ்வொரு நாயன்மார் திரு நட்சத்திரம் வருகின்ற நாளுக்கு மூன்று மாதங்களுக்கு முன்பு, அந்தந்த நாயன்மார் திருத் தொண்டைச் செயற் படுத்தக் கோப்பைத் தொடங்கி விடவேண்டும்.*

4. *நாயன்மார் திருத்தொண்டைச் செயற் படுத்துதற்குரிய அறிக்கை, அறிவிப்பு ஆகியவற்றைத் திருத் தொண்டுத் துறை, சம்பந்தப்பட்ட அலுவலகங்களுக்கு மூன்று மாதங்களுக்கு முன்பே அனுப்பிவிட வேண்டும்.*

5. *(அ) திருத் தொண்டுச் செயல் முறை சுற்றறிக்கைகளைப் பெற்றவர்கள் வாங்கிய தேதியிலிருந்து 15 நாட்களுக்குள் முறையாகப் பூர்த்தி செய்து அனுப்பிக் கொள்ள வேண்டும்.*

   *(ஆ) திருத்தொண்டுச் செயல் முறை அறிவிப்புகளின் படி செய்யத் தேவையான தொகைக்கு அறிவிப்புக் கிடைத்த தேதியிலிருந்து 15 நாட்களுக்குள் அனுமதி (சாங்ஷன்)க்கு விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.*

6. *கிளை அலுவலகங்களிலிருந்து அறிக்கைகள் வந்து தலைமையலுவலகம் சேர்ந்தவுடன் (15 நாட்களுக்குள்) படிவங்களை ஆய்வு செய்து அறிவுரைகள்*

வழங்குவதுடன், தேவைக்குரிய தொகைகளையும் அனுமதி வழங்கி விடுதல் வேண்டும்.

7. ‘திருத்தொண்டு’ தொடர்பான ஆய்வுக் கூட்டங்கள் கூடுமானவரை திருநட்சத்திர தினத்திற்கு முன்பே நடத்திவிடுதல் வேண்டும்.

8. சில நாட்கள் தொடர்ந்து செய்ய வேண்டிய பணிகளாக இருப்பின், திருநட்சத்திர தினத்தன்று நிறைவேறத் தக்க வகையில் சில நாட்களுக்கு முன்பே தொடங்கி முடிக்க வேண்டும்.

9. திருநட்சத்திர தினத்தன்று சிறப்பு வழிபாடு, பாராட்டு, விருந்து ஆகியவை நடைபெற வேண்டும்.

10. திருத்தொண்டு செயல் குறிப்புக் கூட்டங்களில் எடுக்கப் பெறும் முடிவுகளைத் தொடர்ந்து கோப்புகள் திறந்து செயல் படுத்தி நிறைவேற்றி மூன்று மாதங்களுக்குள் அறிக்கை தர வேண்டும்.

11. திருத் தொண்டுச் செயல் முறைத் திட்டம் செயலாக அமையும்படி கவனித்துக் கொள்ள வேண்டும். ஆரவாரமான விழாவாக மாறிவிடக் கூடாது. அது போலவே ஒரு புது வழிபாட்டுச் சடங்காகவும் மாறிவிடக் கூடாது. ஆனாலும், விழாப் பொலிவு இருக்கலாம்.

12. பாராட்டுக்கும், அபிவிருத்திக்கும் உரியவர்கள் அனை வரும் கலந்து கொள்ளும்படி செய்தல் அவசியம்.

13. ஆதீன அலுவலகத்திலுள்ள வளர்ச்சித் துறையில் அமைந்துள்ள திருத் தொண்டுத்துறை, இந்த அறுபான் மும்மை நாயன்மார் திருத்தொண்டுத் துறையை வழிநடத்தும் அலுவலகமே. ஆதீன-தேவாலய-சமூக கல்வித் துறைகளின் மேலாளர்கள் இதனை உண்மையில் நிறைவேற்றும் பொறுப்புடையவர்கள்.

# அறுபத்து மூன்று நாயன்மார்களின் திரு நட்சத்திரங்கள்

| மாதம் | நட்சத்திரம் | நாயன்மார்கள் |
|---|---|---|
| சித்திரை | சித்திரை | இசை ஞானியார். |
| | பரணி | சிறுத்தொண்ட நாயனார். |
| | சுவாதி | திருக்குறிப்புத் தொண்டர். |
| | சதயம் | திருநாவுக்கரசு சுவாமிகள். |
| | உரோகிணி | மங்கையர்க்கரசியார். |
| | திருவாதிரை | விறன்மிண்ட நாயனார். |
| வைகாசி | பரணி | கழற்சிங்க நாயனார். |
| | ஆயிலியம் | சோமாசிமாற நாயனார். |
| | மூலம் | திருஞானசம்பந்தர் |
| | | முருக நாயனார். |
| | | திருநீலகண்ட யாழ்ப்பாணர். |
| | | திருநீலநக்க நாயனார். |
| | பூசம் | நமிநந்தியடிகள். |
| ஆனி | இரேவதி | ஏயர்கோன்கலிக்காமர். |
| | பூரம் | அமர்நீதி நாயனார். |
| ஆடி | கேட்டை | கோட்புலி நாயனார். |
| | | கலிய நாயனார். |
| | சுவாதி | கழறிற்றறிவார். |
| | | சுந்தரமூர்த்தி சுவாமிகள். |
| | திருவாதிரை | கூற்றுவ நாயனார். |

| | | |
|---|---|---|
| ஆடி | சித்திரை | பெருமிழலைக்குறும்ப நாயனார். |
| | கார்த்திகை | புகழ்ச்சோழ நாயனார். |
| | | மூர்த்தி நாயனார். |
| ஆவணி | மகம் | இளையான்குடிமாற நாயனார். |
| | அனுடம் | குலச்சிறை நாயனார். |
| | மூலம் | குங்குலியக்கலய நாயனார். |
| | பூசம் | செருத்துணை நாயனார். |
| | ஆயிலியம் | அதிபத்த நாயனார். |
| | | புகழ்த்துணை நாயனார். |
| புரட்டாசி | சதயம் | நரசிங்கமுனையரையர். |
| | அசுபதி | உருத்திர பசுபதி நாயனார். |
| | உரோகிணி | திருநாளைப்போவார் நாயனார். |
| | உத்திராடம் | ஏனாதி நாயனார். |
| ஐப்பசி | அனுடம் | பூசலார் நாயனார். |
| | மூலம் | ஐயடிகள் காடவர்கோன். |
| | அசுபதி | திருமூலர். |
| | பரணி | நெடுமாற நாயனார். |
| | கார்த்திகை | இடங்கழி நாயனார். |
| | பூசம் | சத்தி நாயனார். |
| கார்த்திகை | மூலம் | மூர்க்க நாயனார். |
| | பூராடம் | சிறப்புலி நாயனார். |
| | கார்த்திகை | கணம்புல்ல நாயனார். |

| | | |
|---|---|---|
| கார்த்திகை | உத்திரம் | மெய்ப்பொருள் நாயனார். |
| | அத்தம் | ஆனாய நாயனார். |
| மார்கழி | பூராடம் | சாக்கிய நாயனார். |
| | இரேவதி | வாயிலார் நாயனார். |
| | திருவாதிரை | சடைய நாயனார். |
| | உத்திரம் | இயற்பகை நாயனார் |
| | சுவாதி | மானக்கஞ்சாற நாயனார். |
| தை | சதயம் | அப்பூதியடிகள். |
| | இரேவதி | கலிக்கம்பர். |
| | மிருகசீரிடம் | கண்ணப்ப நாயனார். |
| | திருவாதிரை | அரிவாட்டாய நாயனார். |
| | உத்திரம் | சண்டேசுவர நாயனார். |
| | விசாகம் | திருநீலகண்ட நாயனார். |
| மாசி | சதயம் | கோச்செங்கட் சோழ நாயனார். |
| | அத்தம் | எறிபத்த நாயனார். |
| | பூராடம் | காரி நாயனார். |
| பங்குனி | உரோகிணி | நேச நாயனார். |
| | திருவாதிரை | கணநாத நாயனார். |
| | பூசம் | முனையடுவார். |
| | சுவாதி | காரைக்காலம்மையார். |
| | சதயம் | தண்டியடிகள் நாயனார். |

# தமிழ்மாமுனிவர்
# தவத்திரு
# குன்றக்குடி அடிகளார்
# நூல்வரிசை

திருக்குறள்

இலக்கியம்

சமய இலக்கியம்

சமயம்

பொது